அனைத்திந்திய நூல்வரிசை

# சிப்பியின் வயிற்றில் முத்து

வங்க மூலம்

போதிசத்வ மைத்ரேய

வங்கத்திலிருந்து தமிழில்

எஸ். கிருஷ்ணமூர்த்தி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

வங்காளி நாவலின் காலம் 1865ம் ஆண்டு பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயாவின் 'துர்க்கேச நந்தினி'யிலிருந்து தொடங்கியது. இதன்பின் பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுதுமே பங்கிம் யுகமாகும். சிறிதும் பெரிதுமாக அவர் எழுதிய நாவல்களின் மொத்த எண்ணிக்கை பதிநான்கு. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முடிவிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தோன்றிய பல நாவல்களிலும் பங்கிம் சந்திரரின் நாவல்களின் அழுத்தமான தாக்கம் இருந்தது. ரமேஷ் சந்திர தத்தா போன்றவர்கள் முற்றிலும் பங்கிம் சந்திரரைப் பின் பற்றினார்கள்.

பங்கிம் சந்திரரின் நாவல்கள் பல வரலாற்று நாவல்களாகும். அவற்றின் கதைக் கருத்துக்களும் பாத்திரங்களும் வரலாற்றுத் தொடர்புள்ளவை. அவற்றின் பின்புலம் கடந்த கால வரலாற்றுடன் தொடர்புள்ள ராஜஸ்தானும் வங்காளமும். பாத்திரங்களில் பெரும்பாலோர் அரசர் ஜமீந்தார் இனத்தவர், அல்லது துறவி, காபாலிக வகையைச் சேர்ந்தவர். கதைப் போக்கில் அற்புத நிகழ்ச்சிகளுக்கும் பஞ்சமில்லை. பங்கிம் சந்திரர் பெரிய அளவில் மனிதர்களைச் சித்திரித்தார். அப்படிப்பட்ட பாத்திரங்களிலும் அவர் உடலிச்சைக்கும் உயர்ந்த இலட்சியத்துக்குமிடையே நேரும் மோதலைச் சித்திரித்தார். இந்த நாவல்கள் முற்றிலும் கற்பனையை அடிப்படையாகக் கொண்ட 'ரொமான்டிக்' வகையைச் சேர்ந்தவை.

பங்கிம் சந்திரரின் சமூக நாவல்களின் பாத்திரங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் வங்காளி சமூகத்தின் உயர், நடுமட்டத்து மக்களாவர். இவர்களுடைய மனப்போக்கு, பழக்க வழக்கங்கள், அன்பு, காதல், இன்பதுன்பங்கள் இந்த நாவல்களில் வர்ணிக்கப்படுகின்றன.

கதையை மேலே கொண்டு செல்வதிலும் பாத்திரங்களைச் சித்திரிப்பதிலும் மனித மனத்தின் ஆழ்ந்த இரகசியங்களை வெளிப்படுத்துவதிலும் பங்கிம சந்திரரின் அசாதாரணத்திறமை அவரது நாவல்களில் காணக்கிடைக்கிறது. அதனால் தான் பங்கிம் சந்திரர் அந்த யுகத்தின் தலைசிறந்த இலக்கிய மேதையாகக் கருதப்படுகிறார்.

பங்கிம் சந்திரருக்குப் பின் அழுத்தமான இலக்கியச் சிறப்பு வாய்ந்த நாவல்கள் படைத்தவர் ரவீந்திரர். அவருடைய நாவல்கள் ஒரு புதிய யுகத்தையே தோற்றுவித்தன. 1903 ம் ஆண்டில் அவரது 'சோக்கேர் பாலி' வெளியாயிற்று. அதற்கு முன் அவரெழுதிய 'பௌடாகு ரானீர் ஹாட்', 'ராஜரிஷி' ஆகிய இரண்டு நாவல்களிலும் பங்கிம் சந்திரரின் தாக்கம் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் அவற்றில் புதுமையும் இருந்தது. 'குடும்பத்தின் அந்தரங்கத் தன்மை' தான் இந்தப் புதுமை. இதைப் பங்கிம் சந்திரரிடம் காண முடியாது. 'சோக்கேர் பாலி'யில் ரவீந்திரர் ரொமான்டிக் கற்பனையைக் கைவிட்டு உண்மை நிலையைச் சித்திரித்தார். இந்த நாவலின் பாத்திரங்கள் வங்காளி சமூகத்தின் நடுமட்டத்தைச் சேர்ந்தவர்கள். உண்மை நிலையைச் சித்திரிக்கும் இந்தப் போக்கு ரவீந்திரரின் 'கோரா' (1909) நாவலில் மிகவும் சிறப்பாக வெளிப்பட்டது. 'கோரா'வின் ஒவ்வொரு பாத்திரமும் அந்தக் காலத்து வங்காளி சமூகத்தின் அடிப்படைப்பிரச்னைகளை வீட்டுக்குள்ளே கொண்டு செல்லும் வகையில் அமைக்கப்பட்டது. ஆகவே 'கோரா' வின் கதை வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக அமைந்துவிட்டது. ரவீந்திரர் படைப்புகளில் மட்டுமல்ல, வங்காளி இலக்கியத்திலேயே ஒரு சிறந்த இலக்கியப் படைப்பு 'கோரா'.

'கோரா' வுக்குப் பின் ரவீந்திரர் பல நாவல்கள் படைத்தார். இவை எல்லாமே உண்மை நிலையின் அடிப்படையில் வாழ்க்கையையொட்டி அமைந்தவை. ஒவ்வொரு நாவலிலும் ரவீந்திரரின் கலைத்திறமை புதிது புதிதாக வெளிப்படுகிறது. கதைப் போக்கில் பல்வேறு சமூகப் பிரச்னைகளைப் குறிப்பால் உணர்த்துவதும் அவற்றின் விளைவு எதிர்விளைவுகளைப் பாத்திரங்களின் மூலம் வெளிப்படுத்துவதும் ரவீந்திரரின் நாவல்களின் சிறப்புகளாகும். ரவீந்திரரின் நாவல்களில் போகப் போக உண்மை வாழ்க்கையின் நிகழ்ச்சிகளைக் கற்பனையின் உதவியால் காவியத் தன்மையுடன் சித்திரிக்கும் போக்கு காணப்படுகிறது. வங்காளி இலக்கிய உலகில் இந்த முயற்சி இன்னும் தனித்தன்மை வாய்ந்தது, அசாதாரணமானது.

ரவீந்திரரும் சரத் சந்திரரும் ஏறக்குறைய சம காலத்தவர் என்று தான் சொல்ல வேண்டும். ரவீந்திரர் என்னும் பெரிய மரத்தின் நிழலிலேயே சரத் சந்திரரின் நாவல் மலர்ச்சி பெற்றது. ஆயினும் சரத்சந்திரர் தம் தனித்தன்மையில் சிறந்து விளங்குகிறார். உண்மை வாழ்க்கையின் அடிப்படையில் நாவல் இயற்றுவதில் அவர் ரவீந்திரரைப் பின்பற்றினார். சரத் சந்திரரின் நாவல்களில் சமூகப் பிரச்னைகள் ஒரு குறிப்பிட்ட திசையில் உருப்பெற்றன. அவருடைய பாத்திரங்களில் பெரும் பாலானவர் தாழ்த்தப்பட்ட, சுரண்டப்பட்ட, அலட்சியப்படுத்தப் பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள். இந்நாட்டில் பெண்கள் சமூகம் மிகவும் கொடுமைக்குள்ளாகியிருப்பதால் பெண்களே சரத் சந்திரரின் நாவல்களில் முக்கிய இடம் பெறுகிறார்கள். அவருடைய பாத்திரங்கள் அநேகமாக நடுத்தர அல்லது கீழ் மட்டத்திலுள்ளவர்கள். அவருடைய நாவல்கள் அசாதாரணக் கதைச் சுவையுடையவை. அவருடைய நாவல்கள் மக்களால் பெரிதும் விரும்பப்பட்டதற்கு இதுவே காரணமாகும்.

இந்த நூற்றாண்டின் இருபதுகளில் வங்காளி இலக்கியத்தில் 'கல்லோல்', 'காலி கலம்' ஆகிய இலக்கிய கோஷ்டிகள் தோன் றன. சைலஜானந்தர், ஜகதீஷ் சந்திரர், தாராசங்கர், விபூதி பூஷண், மாணிக் பந்தோபாத்தியாயா ஆகியோர் இக்குழுக்களைச் சேர்ந்தவரே. சைலஜானந்த முகோபாத்தியாயா நிலக்கரிச் சுரங்கங்களின் பாட்டாளி மக்கள், வங்காளத்தின் 'ராட்' பகுதியைச் சேர்ந்த மக்கள் இவர்களைத் தம் நாவல்களில் நடமாடச் செய்கிறார். இக்குழுக்களைச் சேர்ந்த மற்ற பிரசித்தி பெற்ற எழுத்தாளர்கள் அசிந்திய குமார் சென்குப்தா, புத்ததேவ போஸ், பிரேமேந்திர மித்ரா, பிரபோத் குமார் சான்யால் ஆகியோர். இவர்களும் நிறைய நாவல்கள் எழுதியுள்ளனர். ஆனால் இவர்களுடைய பெரும்பாலான படைப்புகளுக்கு உந்து தலாயிருந்தது மேனாட்டு இலக்கியமாகும்.

கதைப் பொருள் விஷயத்தில் தாரா சங்கருக்கும் சைல ஜானந்தருக்குமிடையே ஒற்றுமையுண்டு. சைலஜானந்தரின் நாவல்களில் நிலக்கரிச் சுரங்கங்களில் பணிபுரியும் சாந்தால் இனத்தவரைப் பார்க்கிறோம். தாராசங்கரின் படைப்புகளில் பீர்பூம் மாவட்டத்தின் தென் கிழக்குப் பகுதியில் வாழும் மக்களின் வாழ்க்கையைக் காண்கிறோம். வெவ்வேறு இடங்களுடன் தொடர்புள்ள பரம்பரைக் கதைகள், நம்பிக்கைகள் இவற்றைத் தாரா சங்கர் நன்கு பயன்படுத்திக் கொண்டிருப்பது அவரது

தனிச்சிறப்பு. தாரா சங்கரின் பார்வையில் இதயத் தன்மை இணைந்துள்ளது. கடந்தகாலத்தின் கவர்ச்சியையும் அவர் உணர்கிறார். இவ்விஷயத்தில் தாராசங்கரைச் சரத் சந்திரரோடு ஒப்பிடலாம்.

விபூதிபூஷண் பந்தோபாத்தியாயா இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். அவர் மனித சமூகத்தை அதை விடப் பெரிய இன்னொரு சமூகத்தின் ஒரு பகுதியாகவே காண்கிறார். நாகரீக மனிதன் இயற்கையிலிருந்து வெகுதூரம் விலகி வந்துவிட்டான். ஆயினும் அவனுடைய நாடி நரம்புகளில் இயற்கையுடன் உறவு இன்னும் இழையோடுகிறது. விபூதி பூஷணின் கவிமனம் இயற்கையின் அழகில் மயங்கி வர்ணனைக் கப்பாற்பட்ட மகிழ்ச்சியில் திளைக்கிறது. இந்த மயக்கம் அவருடைய எல்லாப் படைப்புகளுக்கும் ஆதாரமாக விளங்குகிறது. ஆகவேதான் அவர் கடுமையான வறுமையை அப்பட்டமாகச் சித்திரிக்கும் போது கூட அதற்கெதிராகப் புரட்சி செய்யவில்லை. அவர் வறுமையை ஏற்றுக் கொண்டே ஏழை வங்காளியின் மகிழ்ச்சி நிரம்பிய உருவத்தை எடுத்துக் காட்டியுள்ளார். 1950 ம் ஆண்டில் காலமான விபூதிபூஷண் இறக்கும் வரையில் எழுதிக் கொண்டிருந்தார். அவர் பல உயர் தரத்து நாவல்கள் படைத்துள்ளார். இலக்கிய வயலில் அவர் சாகுபடி செய்த பயிரின் அடிப்படையே மகிழ்ச்சிதான்.

1946 முதல் 1951 ம் ஆண்டு வரை ஒரு சிலநாவல்களே எழுதி வங்காளி இலக்கியத்தில் நிலையான இடமொன்றைப் பெற்றுக் கொண்டவர் சதீ நாத் பாதுரி. அவர் வங்களாத்துக்கு வெளியே இருந்து கொண்டு வங்காளி இலக்கியத்துக்கு வளமூட்டினார். அவருடைய நாவல் 'ஜாகரீ' அந்தக் காலத்து சமூக, அரசியல் நிலைமையைச் சித்திரிக்கும் ஆவணமாகும். இந்தக் கதையின் நிகழ்விடம் பீகார் மாநிலம். வாழ்க்கையைப் போற்றும் இந்த எழுத்தாளர் அரசியல் குழப்பத்துக்கிடையே திரண்டு வரும் ஆபத்தை எதிர் கொள்ளும் நிலையில் தம் படைப்பில் அந்த ஆபத்தைக் கடக்கும் வழியைச் சுட்டிக் காட்டுகிறார். இடையறாத ஆத்ம சோதனையும் ஆத்ம சுத்தியுமே அவர்காட்டும் வழி.

'பனபூல்' (பலாயிசாந்த் முகோபாத்தியாயா) பல நாவல்களும் கதைகளும் இயற்றியுள்ளார். அவர் தம் எழுத்து நடையில் பல்சுவையையும் புதுமையையும் கொணர்ந்தார். அடக்கம் இந்த நடையின் சிறப்பாகும். அவர் பாத்திரப் படைப்பில் உணர்ச்சிக்கு அதிக முக்கியத்துவமளிக்கவில்லை. உலக அனுபவமும் வாழ்க்கை பற்றிய அறிவும் அவருடைய நாவல்களில்

கிடைக்கும். நாவலின் கட்டமைப்பில் அவர் புதுமை படைத்தார். 'மிருகயா' நாவலில் அவர் காவியத்தின் நடையையும் நாடகத்தின் நடையையும் இணைத்தார்.

மாணிக் பந்தோபாத்தியாயா (உண்மைப் பெயர் பிரபோத் குமார் பந்தோபாத்தியாயா) வின் முதல் படைப்பு 'அதஸீ மாஷி' வங்க ஆண்டு 1335 பௌஷ் மாத 'விசித்ரா' இதழில் வெளியாயிற்று. இருந்தாலும் 'வங்க ஸ்ரீ' பத்திரிகையில் வெளியான அவரது முதல் நாவலான 'திவா ராத்ரிர் காவ்ய' வின் மூலமாகவே அவர் எழுத்தாளராக அறிமுகமானார். அவருடைய நாவல்களில் தனி மனிதனைப் பார்க்கும் நோக்கு புதுமையும் தனித்தன்மையும் வாய்ந்ததாகும். . ஃபிராய்டின் மனோதத்துவம் ஒரு சமயம் மாணிக் பாபுவின் படைப்புகளில் குறிப்பிடத் தக்க தாக்கத்தையுண்டாக்கியது. தனிப்பட்ட மனிதனின் ஆளுமையின் தடைப்பட்ட நிலை அவனுடைய நடத்தையைப் பாதித்து அவனுடைய வாழ்க்கையின் நன்மை தீமைக்கும், வெற்றி தோல்விக்கும் காரணமாகிறது. மாணிக் பாபு இந்த முறையில் தான் வாழ்க்கையின் அர்த்தத்தைக் கோடி காட்ட முயற்சி செய்கிறார். அவருடைய சிந்தனை செயற்கையான கொள்கையெதையும் சார்ந்ததல்ல. ஏழைகளின் பசி, ஏழைகள் ஏழையல்லாதவர்களின் புதைமனத்திலுறையும் பாலுணர்வுத் திரிபுகள் இவையே மாணிக் பாபுவின் பாத்திரங்களின் மேல் ஆதிக்கம் செலுத்துகின்றன.

பங்கிம் சந்திரர் காலம் முதல் தற்காலம் வரை நாவல் இலக்கியத்தின் வளர்ச்சியைக் கோர்வையாக இங்கே விவரிக்க இயலாது. அது தேவையுமில்லை. இக்காலத்தில் நாவலின் கதைக்கரு மாறியிருக்கிறது. அதுபோல் எழுதும் முறையிலும் புதுமை காணப்படுகிறது. இவற்றுள் நல்ல படைப்புகளும் உண்டு. பல 'அதிக விற்பனை'ப் படைப்புகளும் உள்ளன.

போதிசத்வ மைத்ரேயரின் 'சிப்பியின் வயிற்றில் முத்து' நல்ல படைப்புகளுக்கு ஓர் உதாரணமாகும். இது முதலில் 'நவகல்லோல்' பத்திரிகையில் தொடராகப் பிரசுரமாகி, 1980 ம் ஆண்டில் நூல் வடிவில் வெளிவந்தது. போதி சத்வ மைத்ரேய வங்காளி இலக்கிய உலகத்துக்குப் புதியவரல்லர். அவர் ஸ்காட்லாந்து நாட்டின் இயற்கையழகையும் மக்களையும் வர்ணித்து எழுதிய 'உத்தர் சாகரேர் தீரே' என்ற நூல் 1960 ல் ஆண்டில் வெளியாயிற்று. அதைப் படித்து மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். ஒரு புதிய சூழ்நிலை, நமக்குத் தெரிந்திராத ஒரு மனித இனம் இவற்றைப் பற்றிய நூல் அது. அந்த நாட்டு மக்களுடன் நம் நாட்டு மக்களின் தொடர்பை அவர் அதில் விளக்கியிருந்தார்.

இதன் பிறகு அவருடைய வேறு இரண்டு சிறிய நாவல்களையும் படித்தேன். 'அதி படோ கரணி' என்ற நூல் தெற்கு இருபத்து நான்கு பர்கானா மாவட்டத்தின் வட்டார மொழியில் முழுக்க முழுக்க எழுதப்பட்ட ரொமான்டிக் நாவல். 'ஷேயி பிரேம் ஆஸ்வாதன்' நாவல் உடற்குறையுள்ள வைணவன் ஒருவனின் வாழ்க்கைச் சித்திரம். இந்த இரண்டு நூல்களுமே 1963 ம் ஆண்டில் பிரசுரமாயின.

'சிப்பியின் வயிற்றில் முத்து' தென்னிந்தியாவின் ஒரு குறிப்பிட்ட பகுதி வாழ் மக்களின் சுக துக்கங்களைச் சொல்லும் கதை. வங்காளி இலக்கியத்தில் பிறமொழிப் பிரதேசங்களின் மக்களின் கதை அதிகம் இடம் பெறுவதில்லை. இடம் பெறுவது கஷ்டந்தான். ஒரு சில நாவல்களில் கதை வங்காளத்தின் எல்லையைத் தாண்டி வட இந்தியா, மேற்கு இந்தியாவில் நிகழ்வதாகச் சித்திரிக்கப்பட்டாலும் நிகழ்விடம் தெளிவாக உருப்பெறுவதில்லை. ஆகவே 'சிப்பியின் வயிற்றில் முத்து' வின் கதைக்கரு புதுமை வாய்ந்தது.

இந்த நாவலின் நிகழ்விடம் வங்காளத்திலிருந்து வெகு தொலைவில் – வங்காளிகளுக்குப் பரிச்சயமான எல்லைகளிலிருந்து வெகு தூரத்தில் – தென்னிந்தியாவில் மன்னார்குடாவின் கரையிலுள்ள தூத்துக்குடித் துறைமுகம். இதன் கதாபாத்திரங்கள் வங்காளிகளுக்குச் சற்றும் அறிமுகமில்லாத, மன்னார்க்கரையில் வாழும் மீனவர்கள், நீரில் மூழ்கி முத்தும் சங்கும் எடுப்பவர்கள். இவர்கள் முதன் முறையாக வங்காளி இலக்கியத்தில் இடம் பெறுகின்றனர் . ('பத்மா நதீர் மாஜி'., 'கங்கா', 'தி தாஸ் ஏக்டி நதீர் நாம்' ஆகிய நாவல்கள் இங்கு நினைவுகூரத்தக்கவை). இந்த மக்களின் அன்றாட வாழ்வின் உயிரோட்டத்துடன் கூடிய சித்திரம் இந்த நாவலில் தீட்டப்பட்டிருக்கிறது. இந்த சமூகத்தினரின் தோற்றம், நடையுடைகள், பழக்க வழக்கங்கள், மனப் போக்கு, நம்பிக்கைகள், பழமொழிகள், ஆசாரங்கள், விழாக்கள் எல்லாமே இந்த நாவலில் உள்ளன. அவர்கள் தங்கள் வாழ்க்கைக்காக கடலில் நிகழ்த்தும் போராட்டமும், நிலத்தில் தங்களைச் சுரண்டும் பணக்காரர்களுடன் செய்யும் போராட்டமும் இந்த நாவலில் திறமையுடன் சித்திரிக்கப்பட்டுள்ளன.

ஒருண்மை தெளிவாகத் தெரிகிறது. ஆசிரியர் இந்த சமூகத்தை ஆழ்ந்த உள் நோக்குடனும் மிகுந்த பரிவுடனும் பார்த்திருக்கிறார். நீண்ட காலம் இந்த சமூகத்துடன் ஒன்றி

வாழ்ந்திருக்கிறார். இது காரணமாகத்தான் தமிழ் மொழி கற்றிருக்கிறார். அவர் இந்த நூலில் அங்கங்கே அனாயாசமாகக் கையாளும் தமிழ்ச் சொற்களும் தமிழ்ப் பழமொழிகளும் அவரது தமிழறிவுக்குச் சான்றாகும்.

ஆசிரியர் இந்திய அரசாங்கத்தின் ஆழ்கடல் மீன் ஆராய்ச்சித் துறையில் ஆராய்ச்சியாளராகப் பணிபுரிந்த காலத்தில் தூத்துக்குடியில் நீண்ட காலம் தங்கித் தூக்குக்குடி மீனவர்களுடன் பழகும் வாய்ப்பும் பெற்றார்.

ஒரு குறிப்பிட்ட சமூகத்தையும் பண்பாட்டையும் அறியவும், சாதாரண மக்களின் வாழ்க்கையை ஆழமாகவும் விரிவாகவும் புரிந்து கொள்ளவும் ஆசிரியர் இந்த நூலில் முயன்றிருக்கிறார். மீனவ சமூகத்தின் வரலாறு முதல் சாதாரண விவரங்களைக் கூடத் திறம்பட வெளியிட்டிருக்கிறார் ஆசிரியர். கர்நாடக இசை, பரதநாட்டியம் ஆகியவற்றின் நயங்களையும் தெரிவித்துள்ளார்.

இந்த நாவலின் சிறப்பு இதன் விரிவான ஈர்ப்புத் திறனாகும். இந்த நோக்கில் இது ஒரு சிறந்த நாவல். ஆசிரியரின் கதை சொல்லும் முறையும் பாத்திரப் படைப்பும் பரந்த அளவில் மக்களை ஈர்க்கின்றன. இதனால் நாவலின் பாத்திரங்கள் தமிழ் மாந்தராயினும் வங்காளிகளின் உள்ளங்களில் இடம் பெற்று விடுகிறார்கள். அவர்களது வாழ்க்கையின் இன்பதுன்பங்கள், விருப்பு வெறுப்புகள், கோபதாபங்கள் இவையெல்லாம் மிகவும் இயற்கையாக வங்காளிகளின் மனதில் எதிரொலிக்கின்றன.

மன்னார்குடாவின் கரையிலிருந்து தமிழ்நாடு முழுவதும் சங்கு, முத்து எடுக்கும், மீன்பிடிக்கும் மீன் பறவர்களிலிருந்து இசையையும் நடனத்தையும் பாரம்பரியமாகக் கொண்ட தேவதாசி சமூகம் நாவலின் பின்புலமும் கதைக் கருவும் மிக விரிந்தவை. இந்த நாவலின் கால எல்லை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முதல் பாதிவரை. இந்த விரிவான கால அளவுகளும் இடப்பரப்புகளும் எண்ணற்ற பாத்திரங்களும் இந்த நாவலைச் சிறக்கச் செய்கின் றன. நாவலின் சில பாத்திரங்களின் பாலுணர்வுத்துடிப்பு இடையிடையே வாசகனின் கவனத்தைச் சிதறச் செய்தாலும் பாத்திரங்களில் கடலின் ஒலி கேட்கிறது, அவர்களது உடலிலிருந்து கடலின் மணம் பரவி வாசகனின் மனக்கடலை நிறைக்கிறது. இதுவே நாவலாசிரியரின் சிறப்பு . . . .

– **சுகுமார் சென்**

# நூலாசிரியர் உரை

நான் தென்னிந்தியாவை முதலில் பார்த்தது 1944 ம் ஆண்டில். அது மேற்போக்கான பார்வை கல்கத்தாவிலிருந்து செல்லும் உல்லாசப் பயணிகள் பார்ப்பதுபோல. தென்னிந்தியாவுடன் என் உண்மையான பரிச்சயம் நேர்ந்தது 1959 ம் ஆண்டில். வங்க அரசின் மீன் வளத்துறையிலிருந்து இந்திய அரசாங்கத்தின் மீன் வளத்துறைக்கு மாறித் தூத்துக்குடிக்கு வந்தேன். தூத்துக்குடி தமிழ் நாட்டின் தெற்குக் கோடியில் கன்னியாகுமரிக்கருகில் மன்னார் குடாக்கரையிலமைந்த ஒரு துறைமுகம். என் வேலை ஆழ்கடலில் மீன்களைத் தேடுவது.

மீனவர்கள் பல்வேறு முறைகளில் மீன் பிடிக்கிறார்கள். அவர்கள் மூக்கைப் பிடித்துக் கொண்டு கடலில் அறுபது எழுபதடி ஆழத்துக்கு மூழ்கிச் சங்குகளும் முத்துச்சிப்பிகளும் எடுத்து வருவார். அவர்களுடைய வாழ்க்கை சுவையானது, சுற்றுச் சூழலும் அவ்வாறே. நிலத்தில் தமிழ்ப்பண்பாட்டின் செல்வம் இலக்கியம், சிற்பம், இசை, நாட்டியம் . . பின்னவை இரண்டும் தேவதாசி சமூகத்தின் பாரம்பரியம். இருந்தாலும் கடுமையான சாதி வேற்றுமைகள் நிறைந்தது தமிழ்நாடு.

கல்கத்தா வாழ் வங்காளிக்குத் தமிழ்நாடு ஒரு பெரிய இரகசியம். இந்த இரகசியத்தின் திரை ஒரு நாள் விலகியது. தமிழ் நாட்டை நன்றாகப் பார்த்தேன். பார்க்க உதவினர் நண்பர்கள் திரு. அ. சீனிவாச ராகவனும், திரு. ஜெர்ரி ஃபெர்னாண்டோவும். அவர்களிருவருக்கும் நான் வாழ்நாள் முழுதும் கடமைப்பட்டவன்.

என் எழுத்தாள நண்பர் திரு. அஜித் கிருஷ்ண பாசு எழுத்தாளன் என்ற முறையில் என் கடமையை எனக்கு உணர்த்தினார் "தமிழ் சமூகம், தமிழர்களின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள் இவற்றைப் புரிந்து கொண்டு தமிழர்களை

வைத்து நாவல், கதை எழுதுங்கள், தமிழ்நாட்டை வங்காளிகளுக்கு அறிமுகப்படுத்துங்கள் " - என்று கூறினார்.

அவரது விருப்பத்தை நன்றியுடன் நிறைவேற்றி விட்டேன்.

1960ம் ஆண்டிலிருந்தே தமிழர்களைப் பாத்திரங்களாக வைத்து 'கல்ப பாரதி', 'வசுதாரா', 'சனிவாரேர் சிட்டி' முதலிய பத்திரிகைகளில் சிறுகதைகள், நெடுங்கதைகள் எழுதத் தொடங்கினேன். பிறகு 1960 - 61 ல் 'கல்பபாரதி' பத்திரிகையில் 'சுக்தி சைகத்' என்ற தலைப்பில் நாவலெழுதத் தொடங்கினேன். மன்னார்குடாக் கரையில் வாழும் கத்தோலிக்க மீனவ சமூகத்தின் வாழ்க்கையை அதில் சித்திரித்தேன். இரண்டாண்டுகள் தொடர்ந்து வெளியாகிய அந்த நாவல் முற்றுப் பெறவில்லை.

அப்போது நாவலின் மூலப் பொருள்கள் சரியாகப் பக்குவம் பெறவில்லை.

அதன்பின் இந்த இருபதாண்டுகளாக இந்த நாவலை மாற்றி மாற்றி எழுதினேன். ஒரு தடவை இரண்டு தடவையல்ல, சுமார் பத்துத் தடவைகள். அப்படியும் நாவல் மனதுக்குத் திருப்தியாக அமையவில்லை. ஏதாவதொரு பத்திரிகை அதைப் பிரசுரிக்க முன் வந்திருந்தால் நாவலை முடிக்க உற்சாக மேற்பட்டிருக்கும். ஆனால் செல்வாக்குள்ள பத்திரிகைகளில் அந்தந்தக் குழுவுக்கு வெளியேயுள்ள எழுத்தாளர்களுக்கு இடமில்லை.

நான் களைத்துப் போய் நாவலை முடிக்காமலே வைத்து விட்டேன்.

களைப்பு எழுதியதால் ஏற்பட்டதல்ல. கடந்த சில ஆண்டுகளில் வங்காளி இலக்கியத்தின் நிலையைப் பார்த்து ; இலக்கிய வாசகர்களின் ரசனையின் தரத்தில் ஏற்பட்டுள்ள பயங்கர வீழ்ச்சியைப் பார்த்து ஏற்பட்டதாகும்.

ஆனால் சனத் குமார் பந்தோபாத்தியாயா விடாக்கண்டர். "தமிழ்நாடு பற்றிய உங்கள் நாவலை எழுதி முடியுங்கள்" என்று அவர் சொன்னார். பிறகு மறுபடியும் மறுபடியும் வற்புறுத்தத் தொடங்கினார்.

சனத் குமார் நல்ல மனிதர் ; ஆனால் அதைவிடச் சிறந்த அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும் இயந்திரம். அப்படி அடைகாத்துத் தான் அவர் தாரா சங்கரை, நரேன் மித்ராவை, இன்னும் பலரை மலரச் செய்திருக்கிறார்.

அவரளித்த இளஞ்சூட்டில்தான் இந்த நாவலும் உருப் பெற்றது - கட்டமைப்பிலும், பாத்திரப் படைப்பிலும் புதிய உருவத்துடன். புதிய பெயரையும் பெற்றது - 'சிப்பியின் வயிற்றில் முத்து'. உருப்பெற்ற காலம் 1978 பிப்ரவரி முதல்

ஜூலை வரை. நாவலைக் கடைசி வரையில் படிக்கக் கேட்டு சனத் குமார் என்னை இறுகத் தழுவிக் கொண்டு சொன்னார், "நான் உங்களுக்கு ஆசி கூறுகிறேன். இவ்வளவு நல்ல நாவலை நான் படித்து வெகு காலமாகி விட்டது. உங்களது இந்தப் படைப்பு நீண்ட காலம் நிலைத்திருக்கும்."

என் கண்களில் நீர் நிறைந்தது. நான் சொன்னேன், "இப்போது இதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்? இதை யார் அச்சிடுவார்கள்? எழுதியது பிரசுரமாகாவிட்டால் எழுத்தாளனுக்கு நரக வேதனை!"

தயங்காமல் பதிலளித்தார் சனத் குமார் - "அது உங்கள் கவலையில்லை. உங்கள் வேலை எழுதுவது தான்," சற்றுநேரம் பேசாமலிருந்து விட்டு அவர் சொன்னார்," உண்மையான முயற்சி எதுவும் வீண்போகாது. அது புழுதியில் கிடந்தாலும் ஒரு நாள் அதற்கு மதிப்பைப் பெறும். உங்கள் படைப்பிலுள்ள சத்தியம் அழிந்து விடாது . . ."

தம் கடமையைச் செய்து முடித்தபின் மறு மாதமே அவர் என்னை நன்றிக் கடனில் பிணைத்துவிட்டு மறைந்து விட்டார். இந்த நன்றிக் கடனைத் தீர்த்துக் கொள்ள எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை.

அதுமுதல் நாவலைப் பிரசுரிக்கும் முயற்சியில் ஈடுபட்டேன். வெளியீட்டாளர் ரவி பட்டாச்சார்யா இதைப் பிரசுரிக்க முன் வந்தார். அவருடைய மனைவி சாதனா பட்டாச்சார்யாவும் உதவினார்.

ஒரு சில இலக்கிய விமரிசகர்களின் கருத்து தேவைப்பட்டது. செல்வாக்குள்ள ஒரு விமர்சகரிடம் சென்றேன். 'சனிவாரேர் சிட்டி' காலத்திலிருந்தே அவருடன் எனக்குப் பழக்கம். அவர் ஆறு தடவைகள் என்னைத் திருப்பியனுப்பினார். கடைசித் தடவையில் புத்திமதி கூறினார். "நாவலெழுதிப் பொழுதைப் பாழாக்காதீர்கள், கட்டுரைகள் எழுதுங்கள்".

திடீரென்று திரு சுகுமார் சென் அவர்களின் நினைவு வந்தது. கூடவே நினைவுக்கு வந்தது காளிதாசனின் கூற்று "அற்பனிடம் சென்று தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதை விடச் சான்றோரையண்டி விருப்பம் நிறைவேறாமல் போவது சாலச் சிறந்தது." அவருக்கு டெலிபோன் செய்தேன். பரிவுடன் வரச் சொன்னார். போனேன். நாவலை அவரிடம் கொடுத்தேன், அதன் விஷயத்தையும் சுருக்கமாகச் சொன்னேன். அவருக்குப் பார்வை குறைவு. படிப்பது சிரமம். அப்படியும் முழுவதும் படித்தார். படித்துவிட்டுச் சொன்னார், "வெகு காலத்துக்குப் பின் ஒரு

வங்காளி நாவல் படித்த திருப்தி ஏற்பட்டது. நீங்கள் வங்காளியின் மனதில் தமிழ் நாட்டைப் பதிய வைத்து விட்டீர்கள் . . ."

எண்பது பிராயங்கடந்த ஆசிரியர் திரு. சென்னின் இலக்கியத் தீர்ப்பு இளமையின் வீரியம் கொண்டது. அந்த இளமைக்குத் தலை வணங்குகிறேன். அவரளித்த உற்சாகம் என் இலக்கியப் பயணத்துக்குக் கட்டுச் சோறு ஆகும்.

—'நவகல்லோல்' மதுசூதன் மஜூம்தார் மாநிலக் கல்லூரியில் நாங்கள் படித்துக் கொண்டிருந்த காலத்திலிருந்தே என் நண்பர். அவர் சொன்னார். "நீ தமிழ்நாட்டைப் பற்றி நாவல் எழுதியிருப்பதாக சனத் பாபு சொன்னாரே. அதைப் படித்துக் காட்டு."

மதுசூதனுக்கு இப்போது கண் பார்வையில்லை, ஆனால் இலக்கியப் பார்வை இருக்கிறது. மூன்று தலைமுறைகளாகத் தொழிலில் ஈடுபட்டிருந்தும் ஒவ்வொரு சமயம் அவருடைய மனத்தை இலக்கியரசனை ஆட்கொண்டு விடும். நான் நாவலை அவருக்குப் படித்துக் காண்பித்தேன். அவர் சொன்னார் "இது ஒரு புதுமைப் படைப்பு, நான் இதை 'நவகல்லோல்' இல் வெளியிடுகிறேன்" பத்திரிகையில் பிரசுரமானது ஒரு பெரிய உபகாரம் - எனக்கு மட்டுமல்ல, வங்காளி இலக்கியத்துக்கும் கூட. வங்க ஆண்டு 1385 மாக மாதம் முதல் 1387 ஆஷாட மாதம் வரை அது பத்திரிகையில் பிரசுரமாகிக் கொண்டிருந்த காலத்தில் பலதரப்பட்ட வாசகர்களிடமிருந்து கிடைத்த பாராட்டு என் நோய்வாய்ப்பட்ட உடலுக்குப் புத்துயிரளித்தது. இது சாதாரண விஷயமல்ல.

அத்துடன் ஜனரஞ்சகப் பத்திரிகைகளில் முதலிடம் பெற்றுள்ள 'நவகல்லோல்' பத்திரிகையின் ஆசிரியர் மதுசூதன் மஜூம்தாரும் உணர்ந்து கொண்டார் "சிறந்த பொருள் சமூகத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் எல்லோராலும் போற்றப் படும். வீட்டின் சமையலறையிலிருந்து பல்கலைக் கழகத்தின் உயர்மட்டம் வரையிலும் அதற்கு மதிப்பு உண்டு. . ."

நான் மதுசூதனிடம் அன்புக் கடன்பட்டவன். இந்தக் கடனைத் தீர்த்துக் கொள்ளும் பேச்சே கிடையாது.

பாயித் விதீயா
வங்க ஆண்டு 1387
கல்கத்தா

போதிசத்வமைத்ரேய

# சிப்பியின் வயிற்றில் முத்து

இரவு முழுதும் தூக்கமில்லை. இல்லாவிட்டால் என்ன? மனதில் நம்பிக்கை சற்றும் குறையவில்லை. அது சொல்கிறது, சொல்லிக் கொண்டேயிருக்கிறது. "ஏதாவது வரும், ஏதாவது நடக்கும்". உலகத்தில் நம்பிக்கையிழக்கத் தேவையில்லை. நம்பிக்கை யிழக்கும் பேச்சே இல்லை. ... இந்த மண், தண்ணீர் எல்லா வற்றையும் விழுங்கிவிட்டுப் பரவிக்கிடக்கும் இருட்டு. இந்த இருட்டில் சிறிது கூட இடைவெளி தெரியவில்லை.

பீட்டர் கண்களைத் திறந்து வானத்தைப் பார்த்தான். தெரிய வில்லை என்று சொல்வானேன்? அதோ லட்சங்கோடி நட்சத்திர விளக்குகள். வானம் கண்களைத் திறந்துகொண்டு கடலையும் பூமியையும் பார்த்துக் கொண்டிருக்கிறது. இருட்டு பீட்டரின் உடலை மெதுவாகத் தடவிக் கொடுத்துக் கொண்டிருப்பது போலிருக்கிறது.

தலைக்கு மேல் மிருக சீரிட நட்சத்திரம் பிரகாசமாகத் தெரியும். இது இப்போது தண்ணீர் மட்டத்துக்கு வந்துவிட்டது. அதன் கைகள் மட்டும் தெரிகின்றன. கையில் பிரும்மாண்டமான வில், இடுப்புக்கச்சில் கத்தி, மிருக சீரிடமாகிய வேடனுக்குப் பின்னால் நாயும் கண்ணில் படுகிறது. சப்தரிஷி நட்சத்திரமும் சாய்ந்துவிட்டது; ஆனால் அதன் பிரகாசம் சற்றும் குறைய வில்லை.

கறுப்புக்கம்பளி போலிருக்கிறது இருள். அதைப் போர்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தால் நன்றாகத்தானிருக்கிறது. படகின் ஆட்டம் இன்னும் சுகம். படகு அலைகளின் மேல் ஏறியேறி இறங்குகிறது. இந்த ஆட்டத்தில் நிறுத்தம் இல்லை, முடி வில்லை. இந்த நிலையில் வேறுயாராவது இருந்தால் அவனு டைய நரம்புகள் மரத்துப்போயிருக்கும். இந்த தொடர்ந்த ஆட்டத் தில் தூக்க மயக்கம் உடல் முழுவதையும் ஆட்கொண்டிருக்கும்.

ஆனால் பீட்டர் இரவு பூராவும் படகின் மேல் உட்கார்ந்து கொண்டு முழுக்கவனத்துடன் ஓர் அற்புதமான பரத நாட்டியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். படகுக்குக் கீழே நாட்டியக்காரிகளின் கால்சலங்கைகளின் கிணுகிணு ஒலி இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருக்கிறது. நடு நடுவே சம நிலையில் வந்து நிற்கும் படகு அலைகளின் மோதலால் 'சலசல' ஒலியை எழுப்புகிறது.

தூக்கம் எப்படி வரும்? பாடத் தோன்றுகிறது பீட்டருக்கு. அந்த பெண்–அலமேலு, போன வருடந்தான் ஆடிக்கொண்டே போனாள் திருநெல்வேலிக்கு; அவளுடைய பாம்பு நடனம் பிரமாதம். பாட்டுக்கும் வாத்திய இசைக்கும் ஏற்றாற்போல் அவளுடைய உடலும் பாம்புபோல் நெளிந்து நெளிந்து ஆடியது. கொடி போன்ற உடல், அலைபோல் வளைந்து, பாம்பு படமெடுத் துச் சீறுவது போல் அபிநயம் செய்தது. கூடவே பாட்டு "ஆடுபாம்பே..."

புன்னாகவராளி ராகம். பீட்டருக்கு நினைவிருக்கிறது. அந்தப் பாட்டை அவனால் மறக்கமுடியாது– "ஆடு பாம்பே, ஆடு பாம்பே..."

தன்னை மறந்து அலுமேலுவின் பரதநாட்டியம் பார்த்துக் கொண்டிருக்கிறான் பீட்டர். திடீரென்று அவனுடைய மயக்கம் தெளிந்தது.

சற்றுத் தொலைவில் மன்னார்குடாவின் தண்ணீரில் ஒரு சிறு ஒளி தெரிந்தது. மின்மினிபோல் கண்ணில் பட்டு உடனே மறைந்து விட்டது. மறைந்து விட்டது பரத நாட்டியக் காட்சி. அலுமேலுவும் மறைந்து விட்டாள். பாட்டு நின்று விட்டது.

இப்போது பீட்டரின் கண்கள் வேட்டைப் பூனையின் கண்கள், தலையிலிருந்து கால்வரை அவன் வேட்டை மோப்பத்தில் ஜாக்கிரதையானான்.

பொட்டுப்பொட்டாக ஒளி. ஒளிப்பொட்டுகள் இருண்ட வானத்துத்தாரகைகள் போல் ஒளிர்கின்றன. ஒன்று இரண்டு, ஐந்து. பத்து... ஒளிப்பொட்டுகளின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகிறது... நூறு, ஆயிரம்...

கறுப்புத் தண்ணீரில் எண்ணற்ற ஒளிக்கீற்றுகள்– மங்கிப் போன பாஸ்பரஸ் மாதிரி. தண்ணீரே பளபளக்கிறது.

பீட்டருக்கு ஒரே உற்சாகம். அவன் தன் இருகைகளால் தன்னையே தழுவிக் கொண்டான்.

தண்ணீரின் பளபளப்பு பரவுகிறது. ஒரு பர்லாங்–இரண்டு பர்லாங்–ஐந்து, பத்து, பதினைந்து பர்லாங், தென்கிழக்கிலிருந்து வடமேற்காக.

சாளை.

வெகுகாலத்துக்குப்பின் சாளைக்கூட்டம் வருகிறது. கடந்த சில வருடங்களாக அவற்றைக்காணோம்.

இந்தக் கூட்டத்தை வலையில் பிடிக்கவேண்டும்.

படகின் மேல் பரத நாட்டியம் ஆடத் தோன்றியது பீட்டருக்கு.

இந்த மீன்கள் அவ்வப்போது மேற்கே கேரளக் கடலுக்குக் கூட்டமாகப் போய்விடும். திடீரென்று கீழைக்கடலுக்கு வரும். அப்புறம் சில வருடங்கள் அவை இருக்குமிடம் தெரியாது. அவை வரும்போது மீனவர்களின் வீடுகளை நிறைத்துவிடும். அவற்றை மிகவும் சிரமப்பட்டு, கவனமாக வலை போட்டுப் பிடிக்க வேண்டும்.

பீட்டரின் உற்சாகம் பீறிட்டு ஒலித்தது. அவனால் இனியும் பொறுமையாக இருக்க முடியவில்லை.

படகின் வயிற்றில் உறக்கத்திலாழ்ந்திருந்தான் மைக்கேல்.

''மைக்கேல்! மைக்கேல், பண்ணிப்பயலே! தூங்கறான் பாரு பிணம் மாதிரி!'' திட்டினான் பீட்டர், பிறகு படகிலிருந்த நீளத் துடுப்பை எடுத்து மைக்கேலின் பிருஷ்டத்தில் குத்தினான். குத்தலின் வலியில் மைக்கேலின் உறக்கம் பறந்தது. அவன் கண் களைக் கசக்கிக்கொண்டு எழுந்தபோது பீட்டர் சொல்வது கேட்டது. ''சாளைக் கூட்டம் வந்திருக்கு, சீக்கிரம் இந்தப் பக்கம் வா''.

'சாளை' என்ற சொல்லைக் கேட்டதும் மைக்கேலின் தூக்கம் ஓடிப்போய்விட்டது. ''எங்கே, எங்கே?''–மைக்கேலின் குரலில், உடல் முழுதும் ஆர்வம் பொங்கியது. அவனுக்கு விரலால் சுட்டிக் காட்டத் தேவையிருக்கவில்லை. அவன் கண் முன்னே ஒளிப்பூச் சொரியல்.

''பெரியண்ணே!'' – கைகளை இருமுறை கசக்கிக்கொண்டு உரக்கக் கூவினான் மைக்கேல்.

''அதுகளை மரியாதையோடு எடுக்க ஏற்பாடு இருக்கா?''

''இருக்கு. அரையங்குல வலை. ஐநூறுகஜம் இல்லாட்டியும் நானூறு கஜத்துக்குக் குறைவில்லை.''

''சரி, வலையைப்போடு''

''தூண்டில்?''

''தூண்டிலைக் கொண்டு உடைப்பிலே போடு! ராப்பூராத்தூண் டில் போட்டாலும் ரெண்டு மூணு சுறாதான் கிடைக்கும். கொஞ்ச நாளாக் கடலிலே மீனுக்குப் பஞ்சம். வேறே பெரிய மீன் கிடைக் காது. இந்தச்சாளைக் கூட்டத்திலே ஒரு பாகத்தைப் பிடிச்சுப் போட்டுட்டேயின்னா உன் தங்கச்சி கலியாணத்தைப் பத்திக்

கவலைப்படவே வேண்டாம். எழுந்திரு. அந்தப் பசங் களை எழுப்பு. இன்னும் தூங்கறாங்க பண்ணிப்பசங்க!"

அந்தி நேரத்திலேயே தூண்டிலில் மாட்டிறைச்சியை வைத்துக் கயிற்றைப் போட்டிருந்தார்கள் கடலில். அதனால்தான் மைக்கேல் தயங்கினான்.

அந்தி நேரத்து வானம் அவ்வளவு நம்பிக்கையளிப்பதா யில்லை. ஆகவே தூண்டில் கயிறும் அதிகம் போடப்படவில்லை. சுமார் நூறு கஜ நீளக் கயிற்றில் ஐம்பது தூண்டில்கள்தான் பொருத்தியிருந்தார்கள்.

காலையில் கயிற்றை இழுக்கும் போது ஒவ்வொரு தூண்டி லிலும் மீன் அகப்பட்டுக்கொண்டிருக்கும் என்பது மைக்கே லின் நம்பிக்கை. அதுவும் சாதாரண மீன் அல்ல—பெரிய பெரிய சுறா... விலையுயர்ந்த மீன்கள். ஒரு வாரமாக மீனே கிடைக்காததால் வருமானமில்லை. இன்று ஐம்பது பெரிய மீன் கிடைத் தால்—வேண்டாம், அந்தக் கவலை இப்போது வேண்டாம். கயிற்றுத் தூண்டில்கள் தண்ணீரிலேயே கிடக்கட்டும்...

மைக்கேல் நங்கூரக்கயிற்றை இழுக்கக் கையை நீட்டினான்.

"நான் நங்கூரத்தை எடுக்கறேன். நீ பசங்களை எழுப்பு, அவங்களைப் பிருஷ்டத்திலே உதை" என்று மைக்கேலிடம் சொல்லிவிட்டு நங்கூரத்தை எடுக்கத் தொடங்கினான் பீட்டர்.

உதை தேவைப்படவில்லை. மைக்கேல் அவர்களுடைய காதில் "சாளைக்கூட்டம் தெரியுது" என்று கிசுகிசுத்ததுமே நான்கு பையன்களும் ஜப்பானியப் பொம்மைபோல் எழுந்து நின்று விட்டார்கள்.

மைக்கேல் படகின் கீழறையிலிருந்து வலையை மேலே இழுக்கத்தொடங்கினான். "பிடிங்க பெரியண்ணே, இது தான் ஒண்ணாம் நம்பர் வலையோட கயிறு நுனி..."

இருட்டில் வேலைபார்ப்பதில் ஒரு அசௌகரியமும் இல்லை மைக்கேலுக்கு, அவனுடைய கை இயந்திரம் மாதிரி செயல்பட் டது. "இது ரெண்டாம் நம்பர், இது மூணாவது, இது நாலாவது..."

வலைகளை எண்ணியவாறே அவற்றைப் பீட்டரின் கையில் கொடுத்தான் மைக்கேல். பிறகு இருவரும் அவற்றை வரிசைப் படுத்திப் பிணைத்தார்கள். இந்த வேலை முடிந்ததும் பீட்டர் வலைகளைக் கையால் தடவிப்பார்த்தான், அவற்றில் நுனிகள் சரியாக முடியப்பட்டிருக்கிறதா என்று. மிதவைகள் சரியாகப் பொருந்தியிருக்கின்றனவா, வலைகளைத் தண்ணீரில் அமிழ்த்தி வைக்கும் சிறு கற்களும் வளையங்களும் சரியாயிருக்கின்றனவா என்று சோதித்துப் பார்த்தான்.

மைக்கேலின் வேலையில் குறை கிடையாது. அதனால்தான் பீட்டருக்கு அவன் மேல் அவ்வளவு பிரியம். புயலாகட்டும், மழையாகட்டும், இடியிடித்தாலும், பூகம்பம் வந்தாலும் மீன்பிடிக்கும் சாதனங்களைச் சரிசெய்து வைத்துக் கொண்டுதான் படகைக் கிளப்புவான் மைக்கேல். இந்த விஷயத்தில் ஒரு நாளும் மாறுதல் இல்லை. அப்புறம் மைக்கேலுடைய நெஞ்சுறுதி- பெரியண்ணனுக்காக உயிர் கொடுக்கவும் அவன் தயார். அதனால் மைக்கேல் இல்லாமல் பீட்டருக்கு ஒரு காரியம் நடக்காது.

படகின் இருபுறமும் இரண்டிரண்டு பையன்கள் உட்கார்ந்து கொண்டார்கள். ஒரு புறம் தோமஸும் மாத்தியூவும் ; மறு புறத்தில் சிங்கராயனும் நாதனும். நங்கூரம் மேலே வந்ததும் துடுப்புகள் தண்ணீரில் எழுப்பும் ஒலி கேட்டது.

நகரத்தொடங்கியதும் படகு பலமாகக் குலுங்கி ஒரு சுற்றுச் சுற்றியது-வெகு நேரம் கட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு முரட்டுக் குதிரை விடுதலை பெற்றாற்போல; மறுகணம் படகு நீர்ப் போக்கின் தாக்கத்தால் பின் செல்லத் தொடங்கியது.

நீர்ப் போக்குக்கு எதிராகச் செயற்பட்டன எட்டு உறுதியான கைகள். படகின் தலை மெதுவாக நீர்ப்போக்குக்கு எதிராகத் திரும்பியது. படகு மெதுவாக முன்னேறத் தொடங்கியது.

இளைஞர்கள் பல்லைக் கடித்துக் கொண்டு துடுப்பு வலிக்கிறார்கள். அவர்களுடைய கைகளின் தசை நார்கள் விம்மிப் புடைக்கின்றன. நால்வரின் தொண்டைகளிலிருந்தும் ஒலி கிளம்புகிறது- "ஆயிஜோர், ஆரபிஜோர்- ஆரப்பிலானி, ஆஞ்ஜோரோ பானி-"

மைக்கேல் தண்ணீரில் வலையைப்போடுகிறான்-அது பார்க்க வலை மாதிரி இல்லை, புயலுக்கெதிரே கிளம்பும் புகைக்கூட்டம் போல் இருக்கிறது. பீட்டரின் கையில் வலையின் நுனிக்கயிறு.

பீட்டரும் மைக்கேலும் மற்ற நால்வருடன் சேர்ந்து குரலெழுப்புகிறார்கள்- "ஆரப்பிலானி, ஆஞ்ஜோரோ பானி - ஆயிஜோர். ஆயிஜோர் - " திடீரென்று மைக்கேல் எச்சரிக் கிறான். "ஜாக்கிரதை! மீன் கூட்டம் நெருங்கிடுச்சு. தண்ணியைத் துடுப்பாலே அடிக்காதிங்க. துடுப்பை ஆழத்திலே அமுக்கி வலியுங்க..."

இப்போது படகின் நாற்புறமும் ஒளிப்பொறிகள். துடுப்புக்களில் அடிபட்டுச்சில மீன்கள் படகுக்குள் வந்து விழுகின்றன. மைக்கேல் கிடுகிடுவென்று வலையைப் போடுகிறான். பீட்டர் வலதுகையால் சுக்கானைப் பிடித்தவாறு இடதுகையால் இரண்டு மீன்களைப் பிடித்து அவற்றைத் தலையில் வைத்து விட்டு முத்தமிடுகிறான். பிறகு அவற்றைத் தண்ணீரில்

விட்டெறிந்துவிட்டுச் சொல்கிறான், "நீங்க என் வலையிலே வாங்க..."

கழுகின் சிறகடிப்பு போலிருக்கிறது நீரின் வேகம். வலை நீரில் விழுந்ததுமே விறைத்துப் போகிறது. தலைக் கயிற்றில் கட்டப்பட்டிருக்கும் தக்கை மிதவைகள் வலையை மிதக்க வைக்கின்றன. ஏழெட்டு கஜம் கீழே அடிக்கயிற்றில் ஈய வளையங்களும் சிறு கற்களும் தொங்குகின்றன. அதனால்தான் வலையின் விறைப்பு. வலைப்பின்னலின் அரையங்குல இடை வெளியில் தண்ணீர் பெருகி ஓடுகிறது—சாணை தீட்டப்பட்ட ஆயிரக் கணக்கான ஈட்டி நுனிகள்போல. கூடவே வலையில் செதில்கள் சிக்கிக்கொள்வதால் அகப்பட்டுக் கொள்கின்றன ஆயிரக்கணக்கான மீன்கள்.

பீட்டரின் ஒரு கையில் சுக்கான், இன்னொரு கையில் வலையின் நுனிக்கயிறு. வலையின் மிச்சப்பகுதி மைக்கேலின் கையில், மற்ற சமயங்களில் அவன் அதை நங்கூரத்தோடு தொங்கும் மூங்கில் முளையில் கட்டி அதில் ஒரு சிவப்புக் கொடியைப் பறக்கவிட்டுவிடுவான். அதனடியில் ஒரு பெரிய உருண்டையான இரும்பு மிதப்பைக் கட்டிவிடுவான். ஆனால் இந்தத் தடவை அவ்வாறு செய்யவில்லை.

இப்போது படகின் நாற்புறமும் மீன்கூட்டம். அவற்றைப் பிடித்துப்போட அதிக நேரமாகாது. வலையைக்கையால் பிடித்து இழுக்கும்போதே எவ்வளவு மீன்கள் சிக்கியிருக்கின்றன என்பது தெரிந்துவிடும்.

படகு மீன் கூட்டத்தின் ஒரு பகுதியைச் சுற்றிக்கொண்டு சென்றது. எல்லா வலைகளையும் உபயோகித்தும் பூராக் கூட்டத்தையும் பிடிக்க முடியவில்லை. பிரும்மாண்டமான மீன் கூட்டம். மைக்கேலுக்கு ரொம்ப வருத்தம். "இன்னும் இருநூறு கஜ நீள வலையிருந்திருந்தால்—என்ன அசட்டுத்தனம் செய்துவிட்டேன் குடிசைப் பரணிலே ஐநூறு கஜ வலை இருக்கு—நான் கொண்டு வரல்லே. நான் ஒரு முட்டாள்!..." வலை விரிக்கும் வேலை முடிந்துவிட்டது. இனி நங்கூரம் பாய்ச்சிவிட்டுச் சற்று இளைப்பாறலாம்.

☆ ☆ ☆

மிருக சீரிட நட்சத்திரம் எப்போதோ அரவமின்றி மறைந்து விட்டது. சப்தரிஷி நட்சத்திர மண்டலம் படகின் மூக்குக்கு நேரெதிரில் வந்துவிட்டது. இப்போது மேல்வானத்தில் விடி வெள்ளியின் பச்சையொளியின் பளபளப்பு. சாளைகளின் உடலிலும் பாஸ்பரஸின் பச்சை. விடிவெள்ளி நல்லது கொண்டு வரும் என்பார்கள். பீட்டரின் வலையில் இன்று இலட்சக் கணக்கான விடிவெள்ளிகள்.

வானத்து விடிவெள்ளி வானத்திலேயே இருக்கட்டும்!

மனத்துக்குள்ளேயே சிரித்துக்கொண்டான் பீட்டர். ஆகாய மாகிய ஆற்றில் எந்த மீனவன் மீன்பிடிப்பான்? ஆகாயத்தில் மனிதன் ஏது? மனிதனில்லாமல் ஒன்றுக்குமே பொருளில்லை.

ஒரு பெரிய அலை படகின் மேல் மோதியது. பெருத்த ஒலியுடன் படகு பலமாகக் குலுங்கியது. பீட்டரின் நினைவு வானத் திலிருந்து பூமிக்கு இறங்கி வந்தது.

அதிகாலைக் காற்று வீசத் தொடங்கிவிட்டது, அதனால் கடலின் கொந்தளிப்பும் அதிகம். காற்று மிகவும் குளிர்ச்சியா யிருக்கிறது. அப்படியானால் இதுதான் தென்கிழக்கு. இந்தத் திசையிலிருந்துதான் காற்று வருகிறது. புதுவெள்ளம் வந்திருக் கிறது. இல்லாவிட்டால் சாளைக்கூட்டம் எங்கிருந்து வரும்! இவ் வளவு நாள் கழித்து மேகமூட்டம் கலைந்து விட்டது. குளிர் கால முடிவில், தென்றல் காற்றில் மரங்களின் காய்ந்த சருகுகள் பறந்துபோவதுபோல் தென்கிழக்குக் காற்று, மேகக்கூட்டத்தைத் துரத்திவிடும். அந்திநேரத்தில் இங்குமங்கும் பிசிறுபிசிறாக மிதந்த மேகங்களையும் இப்போது காணோம்.

"இப்போ மணி என்ன இருக்கும், பெரியண்ணே?" மைக்கேல் கேட்டான், பேசாமல் உட்கார்ந்திருந்த பீட்டருடன் ஏதோ பேச வேண்டுமென்று.

"நீ தான் சொல்லேன்!"

"பன்னெண்டு மணி, ஒரு மணி இருக்கும்...."

"போடா கழுதை!" கடகடவென்று சிரித்தான் பீட்டர்.

அங்கே பையன்களில் ஒருவன் கிளுகிளுவென்று சிரிக் கிறான். நிச்சயம் சிங்கராயன்தான். பெரிய போக்கிரி அவன். ஆனால் ரொம்பக் கெட்டிக்காரன். இந்த வயசிலேயே எவ்வளவு புத்தி! பெரியவனானால் பறவ சமூகத்தையே விரலாலே ஆட்டி வைப்பான். பையன் கெட்டுப்போகாமல் மட்டுமிருந்தால், அவன் கிட்டே நிறைய எதிர்பார்க்கலாம். நல்ல சுத்தமான எஃகு, நல்லா சாணை தீட்டி அவனைத்தயார் பண்ணணும்.

மைக்கேல் வளர்ந்திருக்கானே தவிர, புத்தியிலே குழந்தை மாதிரிதான். அவனை நம்பலாம், ஆனால் அவன் மூளையை நம்பமுடியாது.

சிங்கராயன் இன்னும் கிளுகிளுவென்று சிரித்துக் கொண்டிருந்தான். பீட்டர் பொய்க் கோபத்துடன் அவனை அதட்டினான், "என்னடா சிரிக்கறே, காலிப் பயலே! நீ தான் சொல்லேன்!"

"கிழக்கு வெளுக்க இன்னும் அரைமணிதானிருக்கு, பெரியண்ணே..." சங்கோசத்துடன் பதிலளித்தான் சிங்கராயன்.

"அப்படீன்னா காபி போடு."

சொன்னதுதான் தாமதம். சிங்கராயன் ஒரேதாவில் படகின் பின் பகுதிக்குப் போனான். அங்கே பலகைகளாலான ஒரு சிறு அறை இருந்தது. அதற்குக் கூரை இல்லை. அதில்தான் அடுப்பு வைக்கப்பட்டிருந்தது. சிங்கராயன் சுள்ளிகளைக் கொண்டு அடுப்பைப் பற்றவைத்து அதன்மேல் கரிபடிந்த கெட்டிலை வைத்தான்.

படகுக்குக் கீழே வேகமாகப் பாய்கிறது தண்ணீர். நடுநடுவே பெரிய அலைகளின் மோதலில் ஆட்டம் போடுகிறது படகு; முன்னால் நீரில் மீன்கள் துள்ளுகின்றன. தலைக்கு மேல் கடற்கொக்குகளின் கூட்டம். மைக்கேல் படகின் ஆட்டத்துக்கேற்பத்தானும் இடுப்பையசைத்து ஆடுகிறான். இருள் வெளிறிக் கொண்டு வருகிறது.

சிங்கராயன் ஒவ்வொருவர் கையிலும் காபி டம்ளரைக் கொடுத்தான். மைக்கேல் டம்ளரை வாங்கக் கை நீட்டும் போது பீட்டர் சொன்னான். "நுனிக்கயித்தைப் படகோடு கட்டிப்பிட்டு காபியை வாங்கிக்க. இல்லேன்னா நீ, காபி இரண்டுமே தண்ணியிலே விழுந்துடுவீங்க."

மைக்கேல் அவ்வாறே செய்தான். காபியை ஆனந்தமாக ஒரு உறிஞ்சு உறிஞ்சிவிட்டுச் சொன்னான், "ஆகா எவ்வளவு மீன் விழுந்திருக்கு, பெரியண்ணே..."

விழாதா பின்னே? அதுதானே வழக்கம்! கடந்த நான்கு நாட்களாக மன்னார் ஓரத்தில் இந்தக் கிழக்குக் கரையில் இரவும் பகலும் பெரும் புயல், மழை; குளிர்கால ஆரம்பத்திலேயே இது இரண்டாவது மழை. ஆனால் வெகுகாலமாக இவ்வளவு மழை பெய்யவில்லை. வடக்கே ராமேசுவரம் பாம்பனிலிருந்து தொடங்கிக் கீழக்கரை, தூத்துக்குடி, பின்னக்கோவில், இடிந்தகரை வழியே நேரே கன்னியாகுமரி வரை எங்கும் ஒரே வெள்ளம்.

இந்த நான்கு நாட்களில் மழை ஒரு மணிகூட ஓயவில்லை. கூடவே பூமியை அதிரவைக்கும் புயல். கொந்தளிக்கும் கடல்.

கடந்த சில வருடங்களின் வறட்சிக்கு வட்டியும் முதலுமாகப் பரிகாரம். பாலைவனம் போன்ற இந்தப் பகுதியின் மணல் கூட இவ்வளவு நீரையும் உறிஞ்சிக் கொள்ளமுடியவில்லை. இங்கும் அங்கும் தண்ணீர் நிற்கிறது. கிராமங்கள் தீவுகள் போலிருக்கின்றன.

புயலின் வீரியந்தான் கொஞ்சமா! கடற்கரை மீனவக் குடியிருப்புகள் நாசம். பனையோலைக் கூரைகள் பறந்துபோய் விட்டன. மண்சுவர்கள் சரிந்துவிட்டன. வெட்டுண்ட போர்வீரர்கள் போல் நூற்றுக்கணக்கான பனைமரங்கள் விழுந்துகிடக்கின்றன. இத்தகைய காட்சியைப் பல ஆண்டுகளாக யாரும் கண்டதில்லை.

நேற்றுக்காலை மழை நின்றுவிட்டது. மாலையில் புயல் ஓய்ந்தது. அந்தி நேரத்திலேயே பீட்டர் தன் ஆட்களுடன் கடலில் இறங்கிவிட்டான்.

அப்போது கடலில் பச்சை நிறம் மருந்துக்குக்கூட இல்லை. தண்ணீர் குழம்பிக் கிடக்கிறது. வானத்தில் இப்போதும் மேக மூட்டம். அலைகளின் ஆர்ப்பாட்டம் சற்றுக் குறைந்திருக்கிறது. இடையிடையே ஓரிரண்டு பேரலைகள் மதம் பிடித்த யானைகள் போல் தாக்குகின்றன. அதன் விளைவாக நிலைகுலைகிறது படகு.

இரவு வளரவளரக் கொஞ்சம் அமைதி ஏற்பட்டது. வானமும் சற்றுத் தெளிவாகியது.

இந்த மாதிரி நேரத்தில் பீட்டரைத் தவிர வேறு யார் கடலில் இறங்குவார்கள்? இந்த மாதிரி மழையும் புயலும் ஓய்ந்ததுமே கடலில் நிறைய மீன்கள் வரும் என்பதுதான் வேறு யாருக்குத் தெரியும்?

அவனுடைய தகப்பனுக்குத் தெரிந்திருந்தது. அவனிடமிருந்துதான் இதைக் கற்றுக்கொண்டான் பீட்டர். தகப்பன்தான் மீன் பிடிக்கும் கலையில் பீட்டரின் குரு.

மீன் வருமென்று பீட்டருக்குத் தெரியுந்தான். ஆனால் இவ்வளவு மீன்கள் கூட்டங் கூட்டமாக வந்து குவியும் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை...

கிழக்கு வானத்தில் இருள் பிரிந்து சிறிதளவு வெளிர் பச்சை தெரிகிறது. அந்த இடைவெளியில் புதிய நாள் எட்டிப் பார்க்கிறது. கடல் நீரின் கருமை குறைந்துவிட்டது. இப்போது அது கற்பலகையின் நிறம். கடற்கொக்குகள் நாற்புறமும் கூட்டங்கூட்டமாகப் பறந்துகொண்டு கரகரத்த குரலில் ஒலியெழுப்புகின்றன—"க—ஆங், க—ஆங்..." வெள்ளை இறக்கைகளின் நிழலில் சற்று மறைந்த அவற்றின் முகங்கள் வெளிர் இருளின் பின்

புலத்தில் வெள்ளைப் பூக்கள் போல் தோன்றுகின்றன. உலகம் விழித்துக் கொள்கிறது.

இனி வலையை இழுக்க வேண்டியதுதான். பீட்டரும் மைக்கேலும் வலையை இழுக்கத்தொடங்கினர். நான்கு பையன்களும் வலையிலிருந்து மீன்களை எடுத்துப் படகுக்குள் போட்டனர்.

வானமும் கடலும் கணத்துககுக் கணம் தங்கள் நிறத்தை மாற்றிக் கொள்கின்றன. கிழக்கே வானமும் கடலும் சந்திக்கும் கோடு தெளிவாகத் தெரிகிறது. இப்போது அதில் சிவப்புக் கறை.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே கடல் நீர் சிவப்புக் குழம்பாகிவிட்டது. வானம் இப்போது இரத்தச்சிவப்பு.

தீடீரென்று அடிவானத்தில் சிவப்புச் சூரியனின் மேற்பகுதி தெரிந்தது. கனன்று எரியும் நெருப்பு மாதிரி. அதன் ஒளி படகின் மேல் விழுந்தது. வலைகள், மீன்களின் குவியலுக்குமேல் மனிதர்கள்.

மீன்களா? இல்லை, பளபளக்கும் ரூபாய்கள்! அவை வலையிலிருந்து ரூபாய்கள் மாதிரி கொட்டுகின்றன. தங்கவெளியில் ரூபாய்க் குவியல்!

படகு நிறையப் பணம் ! மனிதர்களின் மனங்களில் மகிழ்ச்சி நிரம்புகிறது...



"ஐயோ!... ஐயோ!... " வடமேற்கிலிருந்து காற்றில் மிதந்து வந்தது கூக்குரல்.

பீட்டரின் குழுவினர் தங்கள் வேலையைச் சற்று நிறுத்திக் குரல் வந்த பக்கம் திரும்பிப் பார்த்தனர்.

ஒரு நீண்ட படகு முரட்டுக் குதிரைபோல் சின்னஞ்சிறு அலைகளின்மேல் குதித்துக் கொண்டு வேகமாக வந்து கொண்டிருந்தது.

மைக்கேல் எரிச்சலுடன் சொன்னான்,"நாம மட்டுந்தான் மீன் பிடிக்கக் கிளம்பியிருக்கோம்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்... இந்தத் தடியங்க யாரு?"

"ஐயோ!... " மறுபடி கூக்குரல். மறுபடியும், மறுபடியும்....

''பதில் குரல் கொடுக்கட்டுமா, பெரியண்ணே?'' மைக்கேல் கேட்டான்.

''வேண்டாம். உன்வேலையைப் பாரு!''

வலையை இழுக்கும் வேலை, மீனைப் பொறுக்கும் வேலை மௌனமாகத் தொடர்ந்தது. பீட்டர் மட்டும் அடிக்கடி அந்தப் படகு வரும் பக்கம் புலிப்பார்வை பார்க்கிறான்.

அது மீன்பிடிக்கும் படகல்ல; நீளப்படகு. அதன்மேல் இரண்டு பேர் நின்று கொண்டிருக்கிறார்கள், வேறு இருவர் துடுப்பு வலிக்கிறார்கள். அந்தப் பக்கத்திலிருந்து வீசிய காற்று அவர்களுடைய பேச்சையும் சுமந்து வந்தது–''நீங்க என்ன பெரிய நவாபு மகன்களோ? ... பதில் குரல் கொடுக்கமாட்டேங்கறீங்க!...''

''பெரியண்ணே, திமிராப்பேசறாங்களே... தடியங்களை ஒரு கை....''

''ஊஹூம், உன் வேலையைப்பாரு!'' பீட்டர் மைக்கேலைத் தணிந்த குரலில் அடக்கினான். ''மூஞ்சியை மறைச்சுக்கங்க!''

பீட்டர் தன் முகத்தையும் மேல் துணியால் மறைத்துக் கொண் டான். அவனுடைய கண்கள் மட்டுமே வெளியே தெரிந்தன.

''படகு எங்கேயிருந்து வருது?''

''சரியாத் தெரியல்லே'' பீட்டர் வலையை இழுத்துக் கொண்டே அலட்சியமாகப் பதிலளித்தான்.

வலையிலிருந்து மீன்களை உதறிக் கொண்டிருந்த சிங்க ராயன் சொன்னான், ''எனக்குத் தெரியும், பெரியண்ணே''.

''படகுயாருது?''

''இது தூத்துக்குடிப் படகு. பிச்சையா குரல் கேக்கறது...''

''எநதப் பிச்சையா? அருள் ஃபெர்னாண்டோவோட இரட்டைப் பிள்ளைகள் இருக்காங்களே, அவங்களிலே மூத்தவந்தானே! அப்படியானா அவனோட தம்பி சூசையாவும் இருப்பானே. நெருப்பில்லாமே புகை வருமா?''

''சரியாச் சொன்னீங்க, பெரியண்ணே''.

''ரெண்டு பேரும் பயங்கர ஆளுக... கொலைகாரங்க...'' மைக் கேலின் குரலில் கவலை.

''நீ ஏன் பயத்திலே மூஞ்சூறா ஆயிட்டே?''

''பெரியண்ணே!'' உறுமினான் மைக்கேல். அவனுடைய தன் மானம் புண்பட்டுவிட்டது. ''அந்த மாதிரி ரெட்டைப் பிள்ளைகள் எத்தனை வேணாலும் அருள் ஃபெர்னாண்டோ பெறட்டுமே, நான் அவங்க எல்லாரோட கழுத்தையும் முறிச்சுடுவேன்!... நான் அவங்களோட பயத்திலே மூஞ்சூறா ஆயிட்டேனா? ... அந்தத் தடியங்க கரையிலே எல்லாத்தையும் பொசுக்கிப்பிட்டு இப்போ

சமுத்திரத்திலே கொள்ளையடிக்க வந்துட்டாங்க. அவங்க கிட்டே வரட்டும். அவங்களை என்ன பண்றேன் பாருங்க!"

படகு இன்னும் அருகில் வந்துவிட்டது. கூடவே கேட்கிறது படகுக்காரர்களின் பொறுக்கமுடியாத திட்டு—"பண்ணிப் பயல்களா!... இங்கே மீன்பிடிக்க வந்துட்டீங்களா! இது என்ன உங்க அப்பனோட ஜமீந்தாரியா? ... கூப்பிட்டால் பதில் சொல்ல மாட்டேங்கறீங்க!... திருட்டுப்பசங்களா! அப்பனுக்குப் பொறந் திருந்தா சரியாப் பதில் சொல்லுங்கடா!..."

பீட்டரின் படகிலிருந்து யாரும் பதிலளிக்கவில்லை. அவர்கள் வலையை இழுப்பதிலும் மீன்களைக் குவிப்பதிலும் மும்முரமாக இருந்தார்கள்.

இதற்குள் அந்தப் படகு நெருங்கிவிட்டது. பீட்டரின் படகைச் சுற்றிச் சுற்றி வந்தது. ஒரு முறை அது பீட்டரின் படகின் மேல் மோதிக்கொண்டு சென்றது. அந்தப் படகிலிருந்து இரண்டு பேர் பீட்டரின் படகின்மேல் தடதடவென்று ஏறிவிட்டார்கள். யமதூதர் கள் போன்ற தோற்றம். கறுப்பு அரைக்கால் சராய், கையில்லாத பனியன் அணிந்திருந்தார்கள், தலையில் சிவப்பு முண்டாசு. ஒருவனின் கையில் கத்தி வெயிலில் பளபளத்தது.

"இன்னிக்கு உங்க எல்லாரையும் வெட்டித் தள்ளிடறேன், பாரு! கூப்பிட்டால் பதில் குரல் கொடுக்கமாட்டேங்கறீங்களா, தேவடியாப்பசங்களா!"

சலக், சலக்... திடீரென்று ஒரு பெரிய அலை. கூடவே படகும் ஒருக்களித்துச் சாய்ந்தது. நீண்ட படகு இருபது முழ தூரத்துக்கு விலகிப் போய்விட்டது. இதற்குள் ஒரு சிறிய ஒலி—'ஜுப்'. அந்த ஒலி எவர் காதிலும் சரியாகக் கூட விழவில்லை. கையில் கத்தி வைத்திருந்த ஆள் படகின் மேல் தட்டில் இடறிவிழுந்து பிறகு தன் னைச் சமாளித்துக் கொண்டான். பிறகு உறுமினான்—"இப்பவே எல்லா மீனையும் எங்க படகிலே ஏத்திப்புடு! இல்லேன்னா உங்க கழுத்தையறுத்துத் தண்ணியிலே எறிஞ்சுடுவேன்!"

இரண்டு யமதூதர்களும் பீட்டரின் படகில் நின்று கொண்டே தங்கள் படகைக் கூப்பிட்டார்கள்—"நீங்க கிட்டே வாங்க!...

அதே சமயத்தில் படகு பயங்கரமாக அதிர்ந்தது. சிங்கராயன் ஒருவருக்குந் தெரியாமல் படகின் கீழ்ப்பக்கம் இறங்கிப் போய்ப் படகை ஒரு பக்கமாகச் சாய்த்துவிட்டான். பயங்கரமாய்ச் சாய்ந் தது படகு. யமதூதர்களிருவரும் நிலைகுலைந்து தண்ணீரில் விழுந்தார்கள். பீட்டரின் ஆட்கள் ஐவரும் கையில் துடுப்புடன் படகின் மேல் வரிசையாக நின்றார்கள். மைக்கேல் உறுமினான், "இங்கே வந்தீங்களோ, மண்டையை உடைச்சுடுவேன்!"

கையில் கத்தி வைத்திருந்தவன், படகை நோக்கி நீந்தி வந்து சட்டென்று மைக்கேலைக் குறிவைத்துக் கத்தியை எறிந்தான். பீட்டர் அதை அப்படியே கையால்பிடித்து விட்டான். மறுநிமிடம் அவனுடைய உள்ளங்கையிலிருந்து இரத்தம் சொட்டத் தொடங்கியது.

இதற்குள் இரண்டு தடியர்களும் தங்கள் படகில் ஏறிக் கொண்டு விட்டார்கள். அந்தப் படகு எதிர்த் திசையில் ஓடத் தொடங்கியது. பீட்டர் கத்தியைத் தங்கள்மேல் எறிந்துவிடுவானோ என்று பயம் அவர்களுக்கு.

பீட்டருக்கு நல்ல காயந்தான். கத்தி அவனுடைய உள்ளங் கையில் ஆழமாக நுழைந்துவிட்டது. அவன் தன் கையை அழுத்திப்பிடித்தான். அப்படியும் இரத்தப்போக்கு நிற்க வில்லை. மைக்கேல் சட்டென்று கொஞ்சம் சுண்ணாம்பை எடுத்துக் காயத்தில் தடவி அதன் மேல் துணியை அழுத்தமாகச் சுற்றினான். அப்படியும் இரத்தம் பெருகுவது நிற்கவில்லை. சுண்ணாம்பு, துணி எல்லாம் ஒரே இரத்தம்.

மைக்கேலின் முகம் உலர்ந்துவிட்டது. அவனது கண்களில் கிலி. "காயம் ஆழமாக இருக்கு. . . என்ன செய்யறது. . . ."

"சீக்கிரம் வலையை இழுத்துப் போட்டுட்டு தூத்துக்குடிக்குப் போவோம். காயத்துக்குத் தையல் போடணும் போலிருக்கு. இல்லாட்டி இரத்தம் கொட்டறது நிற்காது."

"தூத்துக்குடிக்கா போகணும்!" மைக்கேலின் கண்களில், முகத்தில், குரலில் பயம். "நீ தூத்துக்குடிக்குப் போகவேண்டாம். வேற எங்கேயாவது போகலாம். . ." "நான் தூத்துக்குடியிலேயே பிறந்து வளர்ந்தவன். என்னோட அப்பன், பாட்டன் எல்லாரும் ரெண்டாயிரம் வருசமாத் தூத்துக்குடியிலே பிறந்து வளந்த வங்க. அவங்க தூத்துக்குடி மண்ணிலே குடும்பத்தைப் பெருக் கினாங்க, அந்த மண்ணிலேயே அடக்கமானாங்க. நான் தூத்துக் குடிக்குப் போறதை யாரு தடுக்க முடியும்?...."

"அங்கே அந்த வெறிபிடிச்ச ஓநாய்கள் உனக்காகக் காத் திருப்பாங்க... உன்னைக் கொன்னுடுவாங்க!..."

"எனக் கொண்ணும் பயமில்லே! படகைத் திருப்பு!"

வலைகளை இழுத்து முடித்தாகி விட்டது. பீட்டரின் ஆட்கள் துடுப்பு வலிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

சிங்கராயனுக்கு ஒரே குஷி. அவன் தூத்துக்குடிக்காரன்.

இதற்குள் சூரியன் வானத்தில் நல்ல உயரத்துக்கு ஏறிவிட்டான் கடல் நீர் நீலமாயிருக்கிறது. எங்கும் தெளிவு. நேற்றிரவு வரை புயலும் மழையுமாக இருந்ததென்று யார்தான் சொல்ல முடியும்?

வானமும் கடலும் ஒரே நீலப்பரப்பு. மகிழ்ச்சியான சூழ்நிலை. இங்குமங்கும் மீன்சினைக் கூட்டங்கள் ஜூம்கோப்பூக்கள்போல் வட்டவட்டமாக அலைகளின் மேல் ஆடுகின்றன. மரகத நிறநீரில் சின்னஞ்சிறு இறால் மீன்கள் தெளிவாகத் தெரிகின்றன. பர பரப்பும் துடிப்புமாக நடித்திருகின்றன அவை.

"எங்கே வந்திருக்கோம்?" பீட்டர் தன்னினைவுக்கு வந்தான். மேற்கே பொன்னிற மணற்கரை—அரைச்சந்திரன். இடது புறத்தில் கோவிலின் வெள்ளைக் கோபுரம் – பின்னக்கோவில். அந்தப்பிராந்தியத்திலேயே மிகப்புகழ்பெற்ற. பழைய மாதா கோவில். வலப்புறத்தில் திருச்செந்தூர் முருகன் கோவில் கோபுரம். அதற்கும் வலப்புறத்தில் எதிரெதிரே இரண்டு மலைச்சிகரங்கள் மங்கலாகத் தெரிகின்றன. நடுவே பிரும்மாண் டமான மரம் ஒன்று... நீலநிற நீராகிய முந்தானையில் தங்க ஜரிகைக்கரை. தரையில் அலைகள் போல் மலைகளின் ஏற்ற இறக்கங்கள்...

அழகான இயற்கைச் சித்திரம்.

பீட்டரின் மனதில் மகிழ்ச்சி பொங்கியது. ஆனால் இந்தக் கை வலி....



நகரத்தின் உட்புறத்தில் கன்னிமார் மடம் (Convent). முன்புறம் பிரும்மாண்டமான நிலப்பரப்பு. அதைச்சுற்றி உயரமான சுவர். உள்ளே ஆடவர் நுழைய அனுமதி இல்லை. முக்கிய வாயிலுக் கருகில் இலவச மருந்தகம். அங்கே மட்டும் ஆண். பெண் நோயாளிகள் யாரும் வரலாம். மடத்தைச் சேர்ந்த கன்னிமார் தினமும் காலை முதல் நோயாளிகளைப் பரிசோதித்து இலவச மாக மருந்து கொடுக்கிறார்கள். அங்கே மீனவ ஆண், பெண், குழந்தை நோயாளிகளின் கூட்டம்

சிஸ்டர் சோபியாதான் மருந்தகத்தின் மருத்துவர். மருத்துவப் பயிற்சி பெற்ற மருத்துவரல்ல. உயிரியல் விரிவுரையாளர். உடலி யலும் சிறிது கற்றிருக்கிறாள். ஓரளவு மருத்துவப்பயிற்சியும் உண்டு. இதிலேயே காரியம் நடந்துவிடுகிறது.

நேரம் பிற்பகல் ஒரு மணி பத்து நிமிடம். நோயாளிக் கூட்டம் கலைந்து போய்விட்டது. ஒரேயொரு நோயாளிதான் பாக்கி,

அவன் அறையின் இருட்டு மூலையில் உட்கார்ந்திருந்தான். அவன் ஒரு போர்வையால் உடம்பு முழுவதையும் போர்த்துக் கொண்டிருந்தான். எல்லா நோயாளிகளும் முண்டியடித்துக் கொண்டு மருத்துவரை அணுகிய போது அவன் மட்டும் மௌன மாக உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அவசரமில்லை போலும்.

"என்ன, உனக்கென்ன? இங்கே வா?" என்று கையை நீட்டினாள் சோபியா. அவளுடைய உடல் முழுதும், தலைஉட்பட பளீர் வெள்ளையுடையால் மூடப்பட்டிருந்தது.

நோயாளி போர்வைக்குள்ளிருந்து கையை நீட்டினான் நாடி பார்ப்பதற்காக.

"இதென்ன ஒரே ரத்தம்!" திடுக்கிட்ட சோபியா நாற்காலியை விட்டெழுந்தாள். மருந்து தயாரித்துக் கொடுக்கும் பெண்ணும் இப்பொழுது இங்கில்லை. காலை நேரம் முழுதும் மருந்து கொடுத்துக்கொண்டிருந்தவள் இப்போது காபி குடிக்க வெளியே போயிருக்கலாம்.

சோபியா தானே காயத்தைச் சுற்றியிருந்த துணியை அவிழ்த் தாள்; சுண்ணாம்பைத் துடைத்துவிட்டுக் காயத்தைப் பார்த்தாள். "அடே, பெரியகாயம் ஆஸ்பத்திரிக்கு ஏன் போகல்லே?"

நோயாளியிடமிருந்து பதில் இல்லை, சோபியா தானே அலமாரிக்குப் பின்னால் போய் ஸ்டவ்வைப் பற்றவிட்டுத் தண் ணீரைக் கொதிக்க வைத்தாள். பிறகு அதில் மருந்தையூற்றி ஊசியையும் போட்டாள். தோலைத் தைப்பதற்காக நூலையும் அலமாரியிலிருந்து எடுத்துக் காயத்தைத் தைக்க உட்கார்ந்தாள். அறுவை மருத்துவரல்ல, ஆனாலும் தையலில் தேர்ந்தவள் சோபியா. தைக்கும் போது நோயாளியிடமிருந்து முனகலே யில்லை, தைத்து முடித்து அந்த இடத்தை நன்றாகத் துடைத்து எழுந்து நின்றாள் சோமியா.

"நன்றி, சிஸ்டர். தையல் நல்லாயிருக்கு...."

குரல் கேட்டு நிமிர்ந்தாள் சோபியா. அப்போது பீட்டர் தன் முகத்தை மறைத்திருந்த போர்வையைச் சற்று விலக்கிவிட்டுப் பிறகு மறுபடி மறைத்துக் கொண்டான்.

"இதென்ன, நீயா? ... நீங்களா? ..." சோபியாவின் குரலில் அதிர்ச்சி.

"ஆமா, நான்தான்" தணிந்த குரலில் பேசினான் பீட்டர். "இன் னிக்குக் கொஞ்ச நேரம் சந்தித்துப் பேச முடியுமா?... உப்பு ஆபீசுக்குப்பின்னாலே..."

"முடியாது!" தணிந்த குரலில், ஆனால் அழுத்தமாக, பதில் வந்தது. "நீங்க இப்பவே இங்கேயிருந்து போயிடுங்க!"...என்று

சொல்லிவிட்டு சோபியா சட்டென்று பக்கத்து வாயில் வழியே கன்னிமடத்துக்குள் நுழைந்துவிட்டாள்....

துறைமுகத்துக்குத் தெற்கே ஒரு பர்லாங் தொலைவில் துறைமுக அலுவலகம். அதற்கும் தெற்கே போனால் உப்பு அலுவலகம். ரஸ்தா தெற்கு வடக்காகச் செல்கிறது. ரஸ்தாவின் இடது பக்கம் மணல் மேடு. மேட்டுக்குக் கீழே கடற்கரை. அந்த மேட்டில் சிறிதும் பெரிதுமாகத் தோணிகள் தயாராகின்றன. அவற்றில் ஒன்று விரைவில் நீரில் இறங்கப்போகிறது. ஆட்கள் அதை நீர்க்கரைக்குத் தள்ளிக்கொண்டு போகிறார்கள். கடலின் சிற்றலைகள் தோணியின் அடியில் வந்து மோதுகின்றன.

இரவு ஒரு ஜாமம் கழிந்துவிட்டது. தோணிக்குக் கீழே மௌன மாக நின்று கொண்டிருக்கிறான் பீட்டர். அலைகள் மெதுவாக வந்து அவனுடைய பாதங்களை நனைக்கின்றன. பீட்டர் சிந்த னையிலாழ்ந்திருக்கிறான். அவள் வரமாட்டாளா? அப்படி நினைக்க விரும்பவில்லை மனம்.

அவன் இங்குமங்கும் பார்க்கிறான். எங்கும் இருள். ஆனால் கண் இருட்டுக்குப் பழகியதும் எல்லாம் தெரிகிறது. ரஸ்தா ஓரத்தில் வரிசை வரிசையாகக் குடிசைகள். அவற்றில் படகு தயாரிப்பவர்களும் பலகையறுப்பவர்களும் வசிக்கிறார்கள். அவை நிசப்தமாக இருக்கின்றன. வெளிச்சமும் இல்லை அவற்றில்.

இன்று பகலில் தான் மீன் சந்தையில் முதன்முதலாகச் சாளை கிடைத்தது. பீட்டருக்கு நல்ல வாய்ப்பு. அவன் மீன் பிடித்ததற்குப் பலன் கிடைத்துவிட்டது. ஏலம் எடுக்கும் ராஸ்கல் வின்சென்ட் முதலில் ஏதோ தகராறு செய்தான். வாடிக்கைக்காரர்கள் வின் சென்டைக் கடிந்து கொண்டார்கள். "மீன் வந்திருக்கு. நீ ஏன் ஏலமெடுக்கமாட்டேங்கறே?"

மொத்தக் கொள்முதல் வியாபாரிகள் பாளையங்கோட்டை, திருநெல்வேலி, மதுரை, இன்னும் தொலைவிலிருந்துகூட வந்தி ருந்தார்கள். சில நாட்களாக இந்தப் பிராந்தியத்திலேயே மீன் இல்லை. ஆகையால் மீனுக்கு ரொம்ப டிமாண்ட். கடைசியில் வாடிக்கைக்காரர்களே மீன் ஏலம் கேட்பதென்று முடிவாயிற்று. ஏலத்தில் ஆயிரம் மீன் இருபத்தைந்து ரூபாய் என்ற விலையில் மீன்களை விற்றான் பீட்டர். பாளையங்கோட்டையைச் சேர்ந்த ஒரு முஸ்லீம் வியாபாரி எல்லா மீன்களையும் வாங்கிக் கொண்டு முந்நூற்று எழுபத்தைந்து ரூபாய் கொடுத்தான். அந்தப் பணம் இன்னும் பீட்டரின் மடியில் இருக்கிறது. ஏலக்கார வின்சென்ட் முனகிக் கொண்டேயிருந்தான். பீட்டர் அவனிடம் ஓர் ஐந்து ரூபாய்

நோட்டை எறிந்ததும் அவன் அதைப் பொறுக்கிக் கொண்டு ஓடிப்போய்விட்டான்.

பீட்டர் வந்திருக்கும் செய்தி உள்ளூர் சுறாக்களுக்குத் தெரிந்து போயிருக்கும் இதற்குள். ஆனால் இது அவனுடைய முடிவான ஊர் திரும்பல் அல்ல, அவன் அப்படித்திரும்பி வரும்போது அவனுடைய முன்னோர்களின் வீட்டு மனையை மீட்டு, அதில் வீடு கட்டி, ஒரு கலியாணம் செய்து கொண்டு.... ஒரு நெடு மூச்சு வெளிப்பட்டது பீட்டரிடமிருந்து.

"நான்வந்துட்டேன்".

இருட்டிலிருந்து ஓர் இனிய குரல். பீட்டருக்குப் பின்னாலிருந்து தான் அது வந்தது. ஒரு வினாடி பீட்டரின் நெஞ்சு படபடத்தது. சட்டென்று திரும்பினான் அவன். முன்னால் கறுப்புத்துணியால் உடல் முழுதையும் மறைத்துக் கொண்டு ஓர் உருவம்.

பீட்டரால் பேச இயலவில்லை. அவனுள்ளே ஏதேதோ குழப்பம். அவன் மிகவும் சிரமப்பட்டுப் பேசினான், "இந்த இருட்டிலே எப்படி வந்தே? பயமாயில்லையா?"

"இல்லே. என்ன பயம்?"

"இவ்வளவு ராத்திரியிலே பிஞ்சரா போலிலேருந்து இவ்வளவு தூரம் ..."

"தர்வானுக்குக் கெட்ட வியாதி. வெளியிலே தெரிஞ்சா அவனோட வேலை போயிடும். என் கிட்டேத் திருட்டுத்தனமா ஊசி போட்டுக்கறான். அவனோட உதவியாலேதான் வெளியே வந்தேன். ... என்னை எதுக்கு வரச் சொன்னீங்க?"

இதற்குள் பீட்டர் தன்னைச் சமாளித்துக் கொண்டான். "டாக்டராயிருந்துக்கிட்டு நீ இப்படி நோயாளிகளை விரட்டலாமா?"

"இங்கே நாலு பக்கமும் உங்க எதிரிகள். உங்களுக்குத் தெரியாதா?... அவங்க யாராவது உங்களைப் பார்த்துட்டா...." சோபியாவின் குரலில் கவலை, பயம்...

"பார்க்கட்டுமே! எனக்கொண்ணும் பயமில்லை... இந்த ஊர்ச்செய்தியெல்லாம் கேட்கத்தான் உன்னைக் கூப்பிட்டேன். இந்த ஊரிலே ஏழை, பணக்காரன் எல்லார் வீட்டுக்குத்தான் நீ போறியே..."

"இதுக்காகவா வரச்சொன்னே?"

சோபியா தன்னுள் பிறந்த பெரு மூச்சைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். அந்த இருட்டிலும் இது பீட்டருக்குக் கேட்டுவிட்டது.

"யாரோட செய்தி வேணும் உங்களுக்கு? சுஸான் கர்தோஸா வோட செய்தியா, அவரோட தம்பியோட செய்தியா? சின்ன

வருக்கு என்மேலே இப்பல்லாம் ரொம்பப்பிரியம், போன மாசம் எனக்கு ஒரு காமெரா பரிசு கொடுத்தார். அதோட விலை ஆயிரத்தைநூறு ரூபாய். கேட்டேன்னாத் தூத்துக் குடிமுத்தாலே ஒரு முத்துமாலை கூடக் கொடுப்பார்... ஹி ஹி ஹி... ஆனால் நான் நகை போட்டுக்கக் கூடாது... கேளுங்க..." சோபியா கவலை நிரம்பிய குரலில் தொடர்ந்தாள், "காட்வின் ஃபெர்னாண்டோ வோட உடம்பு ரொம்பக் கவலைக் கிடமாயிருக்கு. நீங்க ஊரை விட்டுப்போனப்பறம் அவர் தொண்டையிலே கான்சர்..."

"என்ன சொல்றே? கான்சரா? காட்வின் ஃபெர்னாண் டோவுக்கா?" பீட்டரின் குரலில் நம்பிக்கையில்லை. எவ்வளவு ஆரோக்கியமானவர் அவர்! அவருக்கா கான்சர்! நம்ப முடிய வில்லையே!

"ஆமா... கான்சர்தான்... தொண்டையிலே... ரொம்பக் கஷ்டப்படறார் பாவம். அவரைக்கவனிச்சுக்க யாருமில்லே ... இன்னும் ரெண்டு வாரம் நாலுவாரம் பொழைச்சிருப்பார், அவ் வளவுதான்! ... பக்கத்திலே உங்க ஆளுக யாராவது இருந்தால்..."

பீட்டரின் வாயில் வார்த்தைகள் வரவில்லை. அவனது நெஞ்சில் யாரோ ஈட்டியால் குத்துவது போலிருக்கிறது. நன்றி கெட்ட பீட்டர் ... காட்வின் மட்டும் உன்னைக்காப்பாற்றியிரா விட்டால் நீ இப்போது எங்கே இருப்பாய்?

"நீங்க அந்தப் பகுதியிலே போறது ரொம்ப ஆபத்துத்தான். இருந்தாலும் சொல்றேன், நீங்க ஒரு தடவை போய் அவரைப் பார்த்துட்டு வாங்க. இல்லாட்டி இனிமேல் அந்த வாய்ப்பே..."

பீட்டர் சட்டென்று முன்னால் வந்தான். சோபியா தன் நெஞ்சின்மேல் வைத்துக் கொண்டிருந்த கைகளிரண்டையும் தன் கைகளால் பிடித்துவிட்டான். உடனே மின்னல்போல் தன் கைகளை விடுவித்துக் கொண்டாள் சோபியா. சில அடிகள் பின் வாங்கினாள்.

"சீ, சீ!... நாங்க பரிசுத்த தேவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட வங்க. நாங்க கன்னிமார். எங்களைத் தொடக்கூடாது..."

பீட்டர் விட்ட மூச்சுக் காற்று சூடாயிருந்தது. அவனுடைய நெஞ்சு துருத்திபோல் விம்மி வடிந்தது. அவன் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு சோபியாவிடம் சொன்னான், "நீ ஒரு காரியம் செய்யணும்... ஒரு தந்தி அனுப்பணும்..."

"யாருக்கு?"

"லண்டன்லே இந்திய ஹைகமிஷனர் கிருஷ்ணமேனனுக்கு .."

"தந்தியிலே என்ன எழுதணும்?"

"எழுது - 'அந்தோனி ஃபெர்னாண்டோவை...?"

"அந்தோனி ஃபெர்னாண்டோ? அது யாரு?"

"காட்வினோட ஒரே பிள்ளை... பதினாலு வருசமா வெளிநாட்டிலேஇருக்கான்..."

"என்ன சொல்லணும்?"

"அந்தோனி ஃபெர்னாண்டோவோட அப்பா சாகக்கிடக்கார். அதனாலே அவனை உடனே இந்தியாவுக்கு அனுப்பணும்னு..."

"அப்படி எழுதினாக் காரியம் நடக்குமா?"

"நடக்கறதுன்னா இதனாலேதான் நடக்கும்... ஆனால் நீ தந்தியனுப்பற விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது இங்கே. ஆகையாலே நீ பாளையங்கோட்டையிலேருந்து தந்தியனுப்பு..."

"எனக்கு நாளைக்குப் பாதிரிக் கிழவரைப் பார்க்கப் பாளையங்கோட்டைக்குப் போகணும்...."

"அப்படீன்னா இதை வாங்கிக்க ...."

பீட்டர் தன் மடியை அவிழ்த்து ஒரு கட்டுக் கரன்ஸி நோட்டுக்களை எடுத்து அவற்றை சோபியாவிடம் கொடுக்க முற்பட்ட போது அவள் கையை இழுத்துக் கொண்டு சொன்னான். "எனக்குப் பணம் வேணாம். சின்ன பாபு தயவிலே எனக்குப் பணத்துக்குக் குறைச்சல் இல்லே..."

"சின்ன பாபு கிட்டே சொக்கிப்போயிருக்கே நீ... அவன் பணத்துக்கு..."

"சீ, சீ!" சீறினாள் சோமியா.

பீட்டர் ஓட்டையான பலூன்போல் அமுங்கிவிட்டான்.

"நான் போறேன். இனிமேல் இங்கே இருக்கமுடியாது என்னாலே. என்னை ரொம்பப்பேர் கண்காணிக்கறாங்க..." சோபியா இப்படிச் சொன்னாலும் உடனே நகரவில்லை.

"இங்கே எந்த வழியா வந்தே?"

"பெரிய ரஸ்தாவைவிட்டு இடுகாட்டுப்பக்கமா வந்தேன்... சரி, வரேன்..."

"சூபி, இன்னுங்கொஞ்சம் இருக்கமாட்டியா?" கெஞ்சினான் பீட்டர்." உன் கைரெண்டையும் நீட்டு, நான் உன்னைக் கொஞ்சம் தொடறேன்..."

"நாங்க கன்னிமார்... அன்னை மேரியின் அம்சம்... எங்க கிட்டே அப்படிப்பேசக்கூடாது..." என்றுசொல்லிக் கொண்டே பீட்டரை நெருங்கி வந்தாள் சோபியா. பீட்டரின் இடது கையைத் தன் கையால் பிடித்துக் கொண்டு சொன்னாள். "இவ்வளவு பெரிய காயம் எப்படி?..."

இப்போது சோபியாவின் குரலே மாறியிருந்தது. இப்போது அவள் அன்னை மேரியின் அம்சமில்லை. அவளே அன்னை

இப்போது. அவள் பீட்டரின் காயத்தைப் பரிவுடன் தடவினாள். அவளுடைய விரல்களிலிருந்து அன்பு சுரந்தது.

பீட்டர் இரண்டு தடவை இருமி தன் தழுதழுத்த தொண்டையைச் சரி செய்து கொண்டான். சொன்னான், "ரொம்ப காலமா மன்னார்த்தண்ணியிலே மீன்பிடிக்கறவங்க ரத்தத்திலே மன்னார்த்தண்ணிபூந்திடுச்சு... இன்னிக்கு அருள் ஃபெர்னாண்டோவோட ரெண்டு பிள்ளைகளும் என் படகைத்தாக்கி..."

"ஐயோ! பிச்சையா, சூச்சையாவா?" சோபியாவின் குரலில் கிலி.

"பெரிய பாபு என்னைக் கொலை செய்ய அவங்களைத் தூண்டிவிட்டிருக்கார்."

பயமிகுதியில் சோபியா பீட்டரின் தழும்பேறிய கைகளை இறுகப் பிடித்துக் கொண்டாள். அவளது பிடி மிருதுவான மலரின் ஸ்பரிசம்போல் இதமாயிருந்தது பீட்டருக்கு. அவனுடைய வலியெல்லாம் ஒரு நிமிடத்தில் மறைந்துவிட்டது–கையிலிருந்து மட்டுமல்ல, உள்ளத்திலிருந்தும்.

ஆனால் மலர்ஸ்பரிசம் விலகிவிட்டது.

"கடவுளை நேசிக்கக்கத்துக்கங்க. என்னை மறந்துடுங்க..."

"உசிரு இருக்கறவரை உன்னை மறக்கமாட்டேன்! நீ எனக்கு வேணும்!...." பீட்டரின் நெஞ்சுக்குள்ளிருந்து வெளிப்பட்ட வார்த்தைகள் சிங்கத்தின் கர்ஜனைபோல், ஆனால் தணிந்த குரலில், ஒலித்தன. "எனக்கு மதத்தைப் பத்தி ஒண்ணும் தெரியாது. கடவுளைத் தெரியாது. அதுகளை விட நீ தான் சத்தியம் எனக்கு...."

"அப்படிப்பேசாதீங்க!"

அவள் தடுத்தும் பீட்டரின் பேச்சு நிற்கவில்லை. துருத்தியால் தூண்டிவிடப்பட்ட உலை நெருப்புப்போல் வார்த்தைகள் அவனுள்ளிருந்து சீறிக்கொண்டு வந்தன.

"எனக்கு வீடுகட்டிக்கொள்ள மனை வேணும். நான் கடலைக் குழப்பி விட்டு மீன் பிடிக்கிறேன். நான் இந்த சமூகம், மதம் எல்லாத்தையும் குழப்பி உன்னைக் கைப்பத்திக்கப்போறேன். நீ தான் என்னோட வயல். அதிலே நான் என்னோட பிள்ளை, பெண்களை உண்டாக்கப்போறேன். நீ எனக்கு வேணும், ... ஆமா, வேணும்!"

"சீ சீ! ... நிறுத்துங்க!"

சோபியா சொன்னாள், அதாவது சொல்ல முயற்சித்தாள். ஆனால் அவளது தொண்டையிலிருந்து குரல் மேலெழும்பவில்லை. அவள் ஏதோ மந்திரத்தைக் கேட்பவள் போல் மௌனமாகப் பீட்டரின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அந்தப்

பேச்சு ஒரு பயங்கர மந்திரம். அது அவளுடைய தசை நார்களில் ஒரு போதையை ஏற்றி விடுகிறது. அவளது நெஞ்சு படபடக்கிறது. அவள் நிலைகுலைந்து போகிறாள்...

பீட்டர் அவளுடைய கைகளைப் பிடிக்கப்போனான். இதற்குள் அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு தன் கைகளை விலக்கிக் கொண்டாள், பிறகு திரும்பி ரஸ்தாவை நோக்கி வேகமாக நடக்கத் தொடங்கினாள்.

திகைத்துப் போய் நின்றான் பீட்டர்.

சோபியாவின் உருவம் இருளில் மறைந்துவிட்டது.



தூத்துக்குடியின் பிரசித்திபெற்ற, பணம் படைத்த தொழிலதிபர்; அசாதாரணத் திறமைசாலி. மதுரையிலிருந்து தெற்கே செல்லச்செல்ல மேலும் மேலும் அவருடைய பெயர் காதில் விழும். அப்பேர்ப்பட்ட காட்வின் ஃபெர்னாண்டோ இப்போது படுத்த படுக்கையாயிருக்கிறார்.

அவர் ரொம்ப அதிருஷ்டசாலி என்பார்கள். அவர் மண்ணைக் கையிலெடுத்தால் அது தங்கமாகி விடுமாம். அவர் தொடங்கிய தொழிலிலெல்லாம் இலட்சக்கணக்கான லாபம்.

அவரிடம் ஏதோ மந்திர சக்தி இருக்கிறது என்பர் சிலர். அவருக்கு ஏதோ ஓர் இக்கிணி தேவதையின் அருள் இருக்கிறது என்பது அவர்களது கருத்து. இல்லாவிட்டால் ஒரு வரி எழுதப் படிக்கத் தெரியாத ஓர் ஆள் இவ்வளவு பணம் எப்படிச் சம்பாதிக்கமுடியும்? அவருடைய இக்கிணி வித்தைக் குரு அவர் வீட்டுக்கு அடிக்கடி போய்வருவதைப் பார்த்திருப்பதாக ஒரு சிலர் சொல்கிறார்கள். பிறரது பெருமைகளை மதிக்கத் தெரிந்தவர்கள் சொல்லுவர், "இந்த மாதிரி அபார மூளை ஆயிரத்திலே ஒருவருக்குத் தானிருக்கும். ஒரு மனிதன் வாயைத் திறக்கறதுக்கு முன்னாலே அவன் என்ன சொல்லப்போறான்னு காட்வினுக்குத் தெரிஞ்சுடும். அதுக்கு மேலே அவரோட அந்தப் பிரும்மாண்டமான உடம்பு! அவரோட உடம்பு, மனசு ரெண்டுமே எஃகு மாதிரி உறுதி. மீனவர் சமூகத்திலே மட்டுமில்லே, தென் பிராந்தியத்திலேயே காட்வின் மாதிரி ஆளைப்பார்க்க முடியாது..."

தெற்கு ராஜவீதியிலிருந்து பிரியும் ஒரு சந்தில் நுழைந்தால் காட்வினின் பிரும்மாண்டமான மாளிகை. அது எவ்வளவு பெரியது என்பது வெளியிலிருந்து பார்த்தால் தெரியாது. சந்து முழுதுமே அவரது வீட்டின் எல்லை. அந்த வீட்டில் மூன்று பகுதிகள்.

முன்பகுதியில் விஸ்தாரமான ஹால். பலகைகளாலான தரை பாலிஷ் செய்யப்பட்டுப்பளபளவென்று இருக்கும். மேலைநாட்டுப் பாணியிலமைந்த நடன அரங்கு அது. ஹாலின் இரண்டு பக்கங்களிலும் இரு பெரிய அறைகள்—ஒன்று சாப்பாட்டு அறை. இன்னொன்று ஒப்பனையறை.

இரண்டாம் பகுதி முழுதுமே அலுவலகம். காட்வினின் தொழில் பலதரப்பட்டது—உப்பளங்கள், கப்பல் ஏஜன்ஸி, கப்பலுக்கு வேண்டிய சாமான்கள் சப்ளை செய்வது, கப்பல் களில் சரக்குகள் ஏற்றியிறக்குவது, வங்கித் தொழில், டீ காபித் தோட்டம், லாரி, காண்டிராக்ட் தொழில், இன்னும் எவ்வளவோ. இந்தியாவைத் தவிர இலங்கை, ஹாங்காங், மலேயாவிலும் இந்தத் தொழில்கள் பரவியிருந்தன. இரண்டு வருடங்களுக்கு முன் வரை அந்த மாளிகைதான் எல்லாத் தொழில்களுக்கும் தலைமை அலுவலகமாக இருந்தது. இப்போது பெரும்பான் மையான தொழில்களின் தலைமையலுவலகத்தை இலங்கைக்கு மாற்றி விட்டார் காட்வின். ஒரு சில தொழில்களின் நிர்வாகமே இங்கே எஞ்சியுள்ளது.

இரண்டாம் பகுதியைக் கடந்து உள்ளே சென்றால் கற்கள் பதித்த பெரிய மேடை. அதைத் தாண்டினால் அந்தப்புரம். அதன் கீழ்ப்பகுதி முழுதும் வேலைக்காரர்களின் அறைகள், சமையலறை, உக்கிராண அறை. நடுவே மரத்தாலான மாடிப் படிகள். மாடியில் நட்ட நடுவே ஒரு பெரிய ஹால். அதன் முன் னும் பின்னும் அகலமான வராந்தாக்கள். அவற்றையொட்டி அநேக அறைகள்.

அந்தப்புரத்தைக் கடந்துபின்னால் சென்றால் கொல்லையில் மலர்ப் பூங்கா. அதன் நடுவில் கற்களால் பதிக்கப்பட்ட ஒரு வட்டத்துக்குள் ஒரு நீரூற்று. அங்கங்கே கல்லால் அமைக்கப்பட்ட பெஞ்சிகள்; கல்லாலான நிர்வாணப்பெண் பதுமைகள்.

பூங்காவின் ஒரு புறத்தில் வரிசை வரிசையாக அலுவலகக் குமாஸ்தாக்களின் வீடுகள்.

அந்தப்புரத்தின் கருங்காலி மரத்தாலான மாடிப்படி பாலிஷ் செய்யப்பட்டுப் பளபளக்கிறது. கீழிருந்து மேல் வரை பாரசீகக் கம்பளிபோடப்பட்டிருக்கிறது அதன்மேல் படியேறியதும் ஹால்.

அதன் ஒரு பக்கம் சுவரோரமாக ஒரு பெரிய கருங்காலிக் கட்டில். ஹாலின் கால் பாகத்தை அடைத்துக் கொண்டிருக் கிறது அது. அதன் மேல் படுத்திருக்கிறார் காட்வின்.

ஹாலின் நாற்புறச்சுவர்களிலும் தங்க மெருகிட்ட சட்டங்கள் போட்ட பெரிய பெரிய ஓவியங்கள் தொங்கிக் கொண்டிருக்கின் றன. சிலவற்றில் இயற்கைக் காட்சிகள்—ஸ்காட்லாந்தின் மலைப் பகுதி, ஸ்காட்லாந்தின் பைன் மரக்காடு, ஆறு... மலைப்பகுதியில் ஆற்றங்கரையோரமாகக் குரல் எழுப்பிக் கொண்டே போகிறது ஒரு மான். ஓர் ஓவியத்தில் வேட்டைக் காரர்கள் குதிரைமேல் ஏறிக் கொண்டு போகிறார்கள். கூடவே வேட்டை நாய்கள். அவர் கள் ஒநாய் வேட்டையாடப் போகிறார்கள்... பெரும்பாலான ஓவியங்களில் நிர்வாணப் பெண்கள் பலவித நிலைகளில் காணப் படுகிறார்கள்... செழிப்பான மார்பகங்கள், பருத்த பிருஷ்டங்கள், பல வித முகங்கள், கொழுத்த உடல்கள்... ஓவியர் ரெனோயா அல்லது ரெம்ரானின் ஓவியங்களின் காப்பிகள். அவற்றில் கலையை விடக் கிளுகிளுப்பே அதிகம். ஹாலில் மூலைக்கு மூலை உயரமான முக்காலிகளின்மேல் நடுத்தர அளவில் வீனஸ் தேவதையின் நிர்வாணப் பதுமைகள்.

மாடிப்படிக்கு எதிரிலுள்ள ஹாலின் வாயில்தான் மற்ற வாயில்களை விடப் பெரியது. அதில் தலைக்குமேலே பாலிஷ் செய்யப்பட்ட மரச்சட்டம். அதில் அன்னை மேரியின் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. அவளது மடியில் குழந்தை ஏசு. கொழு கொழுவென்று இருக்கிறது குழந்தை. அன்னையின் ஒரு புறத்தில் புனித ஆவி. மறுபுறத்தில் புனித அந்தோனி. அவரது தலை நடுவில் மழிக்கப்பட்டு, மழிக்கப்பட்ட பகுதியைச்சுற்றிச் சிறிய மயிர்வளையத்துடன் காணப்படுகிறது. அவர்களுடைய தலைக்கு மேல் பெரிய, நடுத்தர, சிறிய அளவில் தேவதை களின் உருவங்கள் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன.

அன்னை மேரியின் கிரீடத்துக்கு மேலே சொற்ப சக்தியுள்ள மின் விளக்கொன்று இரவும் பகலும் பாட்டரியின் உதவியால் எரிந்து கொண்டிருக்கிறது.

மேரியின் உருவத்துக்கு நேரே ஒரு பெரிய குளோப் தொங்கு கிறது. கூரையிலிருந்து நிலையின் மேல்சட்டம் வரையில் தொங்கு கிறது தங்க மெருகிட்ட சட்டம் போட்ட பிரும்மாண்டமான ஏசுவின் ஓவியம் ஒன்று. அதன் நடுவில் ஒரு பெரிய சிலுவை. ஏசு தன்னிரு கைகளாலும் தன் நெஞ்சைப் பிளந்து காண்பிக்கிறார். பெரிய மல்கோவா மாம்பழம் போன்ற இதயப்பிண்டத்தை முட்கள்

கிழித்துக் கீறியிருக்கின்றன. காட்வினின் பார்வை அந்தப் பக்கந்தான் திரும்பியிருக்கிறது.

ஹாலின் வேறு இரண்டு பக்கங்களில் இரண்டு வாயில்கள், இன்னும் சில பெரிய பெரிய சாளரங்களும் உண்டு. ஆனால் இவையெல்லாமே மூடப்பட்டிருக்கின்றன. அவற்றுக்கு முன்னால் தடிமனான வெல்வெட் திரைகள் தொங்குகின்றன. வெளியிலிருந்து வெளிச்சம் உள்ளே வராமலிருப்பதற்காக அந்தத் திரைகள் எப்போதும் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. இருபத்து நான்கு மணி நேரமும் ஹாலில் ஒரு மங்கிய பச்சையொளி பரவியிருக்கும். அது பகலா இரவா என்பது கூட உள்ளேயிருப்பவர்களுக்குத் தெரியாது. இருந்தாலும் காட்வினின் மனத்துக்குள் கடிகாரம் நிற்காமல் டிக், டிக் கென்று ஓடிக் கொண்டிருக்கிறது. இப்போது மணி என்ன என்று அவருக்குத் தெரியும்.

அவரது பிரும்மாண்டமான உடம்பு இப்போது எலும்பும்தோலுமாய் வற்றிச் சுருங்கிக் கிடக்கிறது. எகிப்து மணலிலிருந்து தோண்டியெடுக்கப்பட்ட நாலாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய எலும்புக் கூடு வைத்திருப்பார்களே கண்காட்சிசாலையில், அது போல. அவ்வளவு பெரிய கட்டிலில் அது இருக்குமிடமே தெரியவில்லை. அப்படி ஒட்டிக் கிடக்கிறது கட்டிலோடு.

இரண்டு வருடங்களுக்கு முன்னால் தொண்டையில் வலியிலிருந்து ஆரம்பித்தது நோய். ஓராண்டுக்குள் தொண்டை முழுதும் ரணமாகிவிட்டது. உள்ளேயும் புண், வெளியிலும் புண். புற்று நோய் என்று அப்போதே தெரிந்துவிட்டது. இந்த நாட்டு மருத்து வர்களெல்லாரும் பார்த்து விட்டார்கள். திருச்சி, சென்னை, வேலூர், டில்லி, கல்கத்தா. இலங்கை, ஹாங்காங், சிங்கப்பூர் மருத்துவர்களிடமும் காட்டியாகிவிட்டது. பிரயோசனமில்லை. ஐரோப்பாவும் அமெரிக்காவும் தான் பாக்கி.

உடம்போ நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டு வந்தது. இனி மருத்துவத்திற்காக வெளிநாடு செல்ல விருப்பமில்லை காட்வினுக்கு. "சாவதானால் இங்கேயே, என் ஊரிலேயே, என் வீட்டிலேயே சாகிறேன்" என்று சொல்லிவிட்டார் அவர்.

இந்த நோயில் வலி கடுமையாக இருக்கும். கழுத்து வெட்டுப்பட்ட ஆடுபோல் வலியால் துடித்தார் காட்வின். ஆயினும் அவரது முடிவை மாற்றிக் கொள்ளவில்லை. "எப்படி வாழணுமோ அப்படி வாழ்ந்துட்டேன். எப்படிச்சாகணுமோ அப்படிச் சாகிறேன்" என்றார். சாகச் சற்றும் அஞ்சவில்லை அவர். அச்சமில்லைதான். ஆனால் கவலை இருக்கிறது. அதனால் மனக்குழப்பம்.

நாளாக ஆகக் குரல் உடைந்துபோய்விட்டது. இப்போதெல்லாம் பேச முயற்சித்தால் கரகர ஒலிதான் வெளிவருகிறது.

அறைக்குள் அழுகல் நாற்றம், மருந்து தெளித்தும் அந்த நாற்றம் போகவில்லை. காட்வினின் உடலில் ஒன்றுமேயில்லை—இரண்டு கண்களைத் தவிர. சாவு நெருங்க நெருங்க அந்தக் கண்களும் இன்னும் கூர்மையாகின்றன—இருளிலே பார்க்கும் அரக்கனின் பார்வைபோல. நெஞ்சின் துடிப்பும் இன்னும் மிச்சமிருக்கிறது.

திடீரென்று கனமான வாயில் திரை அசைந்தது. உடனேயே காட்வினின் கண்கள் நெருப்பாய் ஒளிர்ந்தன.

"யாரு?...மரியதாசனா?"

புண்ணின் நாற்றம் காரணமாக யாரும் அதிகமாக இந்த அறைக்குள் வருவதில்லை, சில மாதங்களாக நெருங்கிய உறவினர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் கூட. பழங்கால நண்பர் வெங்கி அய்யர் மட்டும் தினம் காலையில் ஒரு தடவை வந்து விட்டுப் போவார். அவருக்கு எந்தவிதப் பயமும் கிடையாது. ஆனால் இந்த ராத்திரி வேளையில்...

மரியதாசன் சும்மா சம்பளத்துக்கு வேலைபார்க்கும் வேலைக்காரனல்ல. அவன் காட்வினின் நெடுங்காலத் தோழன். அவருடைய இன்பங்களிலும் துன்பங்களிலும், நல்ல காரியங்களிலும் கெட்ட காரியங்களிலும் துணைவன், நண்பன். இப்போதும் அவன் காலையிலும் மாலையிலும் அறைக்குள் வருகிறான். இங்கேயே இருக்கவும் விருப்பந்தான் அவனுக்கு. ஆனால் காட்வின் அதை விரும்பவில்லை. மருத்துவர்களுந்தான். ஆகையால் அவன் நாள் முழுவதும் அறைக்கு வெளியே உட்கார்ந்திருப்பான். காட்வின் மணியடித்தால் உள்ளே வருவான். அவருக்குத் தேவையானவற்றைச் செய்வான். ஆனால் இரவு வந்துவிட்டால்அவன் இந்த உலகத்திலேயே இருக்க மாட்டான், நிறையக்கள்ளைக் குடித்துவிட்டுத் தன் அறையில் மயங்கிக்கிடப்பான். அப்போது பூகம்பம் வந்து ஊரே அழிந்து போனாலும் அவனுக்குத் தெரியாது.

அப்படியானால் இப்போது—இரவு பத்துமணிக்கு—இங்கே வருவது யார்?... காட்வினுக்கு எரிச்சலேற்பட்டது.

திரை நகர்ந்தது, காட்வின் புருவங்களைச் சுருக்கிக் கொண்டு கூர்ந்து பார்த்தார். ஓர் ஆளின் உருவம். அவன் வேஷ்டியை முழுங்காலுக்குமேல் மடித்துக் கட்டிக் கொண்டிருந்தான்; கையில்லாத அழுக்கு பனியன் அணிந்திருந்தான். பிரும்மாண்டமான உடம்பு அடர்ந்த பரட்டைத்தலை. அதற்குக் கீழே சாணைக்கல்லால்

செதுக்கப்பட்டது போன்ற கறுப்பு நெற்றி, உளியால் வெட்டுப் பட்ட மூக்கு. நெருப்பாய் ஒளிரும் இரு சிறு கண்கள்.

அவன் அசையாமல், மௌனமாக அவரையே பார்த்துக் கொண்டு நின்றான். இமைக்க மறந்து போய் விட்டான் அவன்.

காட்வினும் இமைக்கவில்லை. அவரது நெஞ்சுப் படபடப்பு இரட்டித்துவிட்டது. கடலிலிருந்து புதிய காற்று வந்து அறைக் குள் பரவியது. உப்புத் தண்ணீரின் வாசனையில் சிறிது நேரத் துக்கு அந்த அறையின் நாற்றம் மறைந்தது.

பரபரத்துப்போனார் காட்வின், கண நேரத்துக்குத் தன் வலியை மறந்து படுக்கையில் கைகளை ஊன்றிக் கொண்டு எழுந்து உட்கார முயன்றார். பரபரப்பு மிகுதியில் உடல் வெட வெடத்தது. காட்வின் உட்கார முடியாமல் தலையணையின் மேல் சாய்ந்தார். அந்த ஆள் ஓடி வந்து அவரை இருகைகளாலும் கட்டிக்கொண்டான். தன் சிறுவயதிலேயே இறந்துபோன தாயின் நினைவு வந்தது காட்வினுக்கு. அந்த ஆள் தாயைப் போலவே பரிவுடன் மெதுவாக அவரைப் படுக்கையில் கிடத்தினான். சூடான இரண்டு சொட்டுக் கண்ணீர் காட்வினின் முகத்தின் மேல் விழுந்தது.

பீட்டர் அழுகிறான், ராட்சச காட்வினின் இன்றைய நிலை கண்டு. இந்த காட்வின் ஒரு காலத்தில் இருபது மணு எடையுள்ள இயந்திரத்தை ஒரே தூக்கில் தூக்கிவிடுவார். அவரிடம் ஓர் அறை வாங்கினால் முரட்டு இளைஞனுக்குக் கூட மயக்கம் வந்துவிடும்....

காட்வின் பீட்டரைத் தன்னிடமிருந்து விலக்கி விட்டுப் பக்கத்திலிருந்த நாற்காலியில் அமரும்படி சாடை செய்தார். ஆனால் பீட்டர் படுக்கையிலேயே அவருக்கருகில் உட்கார்ந்தான். அவன் பிறகு காட்வினின் கழுத்தைச் சுற்றிக் கட்டியிருந்த துணியை விலக்கிப் பார்த்தான். என்ன பயங்கரம்! கழுத்தைத் தின்றுவிட்டிருந்தது நோய். ரத்தச் சிவப்பாக வெழுண்டுபோன புண். அதன் வழியே தொண்டைக் குழாய் கூடத் தெரிகிறது. ஐயோ, அழுகல் நாற்றம்! மூச்சுவிடுவதே கஷ்டமாயிருக்கிறது. போனால் போகட்டும்...

பீட்டர் மனக் கண்ணால் ஒரு சிறுத்தையைப் பார்க்கிறான். அது கத்திபோல் கூர்மையான தன் நகங்களை ஒரு பெரிய காட்டு மானின் கழுத்தின் இருபக்கங்களிலும் அழுத்தமாகப் பதித்திருக் கிறது. மலைபோல் பிரும்மாண்டமான அந்த மானின் கழுத்து குதறிப் போய் அது செயலிழந்து கிடக்கிறது.

பீட்டரின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. முழுகிச் செத்திருக்கலாம். தண்ணீர் உள்ளே போனதால் உப்பிப் போன அவரது உடல் 'ஹோர்' த்தீவின் மேட்டில் ஏராளமான இடத்தை யடைத்துக் கொண்டு பெரிய ராஜா மாதிரி கிடந்திருக்க லாம். அப்படி நேர்ந்திருந்தால் வருத்தப்பட வேண்டியதில்லை. அல்லது அந்த இயந்திரத்தின் இருபது மணிப் பளுவும் அவரு டைய தலைமேல் விழுந்து நசுக்கியிருக்கலாம். அப்படியானால் வருத்தமில்லை...

பரியார்க்காட்டில் ஒரு பெரிய யானை சேற்றில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. கழுத்துவரை சேற்றில் அழுந்திவிட்டது. துடிக்கிறது அது. விஷப்பூச்சிகள் அதன் உடலைக்கடித்துக் குதறிக் கொண்டிருக்கின்றன...

இந்தக் காட்சியைப் பார்க்கச் சகிக்கவில்லை...



ஒரு சில வார்த்தைகள் சொல்லத் தவிப்பு. இத்தகைய தவிப்பைப் பீட்டர் தன் வாழ்க்கையில் இப்போதுதான் முதன் முதலாகப் பார்க்கிறான். காட்வினின் உயிர் இப்போதே போய் விடும் போலிருக்கிறது. அவருடைய விழியுருண்டைகள் பிதுங்கி வெளியே வந்துவிடும் போலிருக்கின்றன. அவர் இந்தப் பக்க மும் அந்தப் பக்கமும் புரண்டு படுக்கிறார், துடிக்கிறார். தொண்டையிலிருந்து கரகரவொலிதான் வருகிறதேயொழிய வார்த்தைகள் வரவில்லை.

பதினைந்து நிமிட முயற்சிக்குப் பிறகு வார்த்தைகள் கிசு கிசு ஒலியாக வெளிவந்தன. பீட்டர் குனிந்து காட்வினின் முகத்துக் கருகே காதுகளை வைத்துக் கொண்டு கேட்டான். வார்த்தைகள் ஈனக்குரலில் ஒன்றோடொன்று பிணைந்து வெளிவந்தன. சரியாகப் புரியவில்லை பீட்டருக்கு.

"மேரியம்மா என் பிரார்த்தனையைக் கேட்டுட்டா. உன்னை என்கிட்டே அனுப்பிச்சிருக்கா. நான் உன்னைப் பார்க்கறதுக் காகத்தான் நாளை எண்ணிக்கிட்டு இருக்கேன்..."

"உங்களுக்கு இந்த நிலை!... எனக்கு முன்னாலேயே தெரிஞ்சிருந்தா...."

"எப்படித் தெரியும் உனக்கு? ரெண்டு வருசமா நீ எங்கேயிருக் கேன்னே தெரியல்லே. இருந்தாலும் நீ வருவேங்கற நம்பிக்கை யிலே உசிரைப் பிடிச்சுக்கிட்டு இருந்தேன். நான் மீனவன். நம்ம வாழ்க்கையோட மூச்சுக் காத்தே நம்பிக்கைதான். நம்பிக்கை யிலேதான் நம்ப நெஞ்சு அடிச்சுக்கறது..."

"முன்னாடியே எனக்குத் தெரிஞ்சிருந்தா உங்களை இப்படி விட்டிருக்கமாட்டேன்..."

"நீ இந்த ஊரைவிட்டுப்போனது நல்லதுதான். நீ இங்கே இருந்திருந்தா அவங்க உன்னை உசிரோடே வச்சிருக்க மாட் டாங்க... அவங்ககிட்டே நான் தோத்துப் போயிட்டேன். உன் னைக் காப்பாத்தியிருக்க முடியாது என்னாலே..."

"அன்னிக்கு நான் பயந்துபோய் ஓடிப்போனேன். இப்போ எனக்குப் பயம் தெளிஞ்சு போச்சு. நான் இனி ஓடிப்போக மாட்டேன். உங்க கிட்டேயே இருப்பேன், உங்களுக்குப் பணிவிடை செய்வேன், உங்களை நல்ல டாக்டர்கிட்டே கொண்டு போய்க் காட்டுவேன்..."

"டாக்டர்களாலே என்னை இனிமேல் காப்பாத்த முடியாது... ஆனால் நீ என்னைக் காப்பாத்த முடியும்..."

"நானா? எப்படி? எனக்கு வைத்தியம் என்ன தெரியும்?" வியப்புடன் கேட்டான் பீட்டர்.

"வியாதிக்கு மருந்து தேவையில்லை எனக்கு ..." காட்வினின் கூரிய பார்வை பீட்டரின் முகத்தில் பதிந்தது. "எனக்குத் தேவை வேறுமருந்து..."

பீட்டர் பேச்சிழந்து நின்றான்.

"நீ எனக்குக் கொஞ்சம் அமைதி தருவியா?"

காட்வினின் கண்களில் ஆழ்ந்த வேண்டுகோள். இப்போது அவருடைய பேச்சு தெளிவாயிருக்கிறது. சிரமமில்லாமல் புரிந்துகொள்ள முடிகிறது பீட்டரால்.

காட்வினின் பேச்சைக்கேட்டு அவனுக்கு ஒரே ஆச்சரியம்.

இந்தப் பிராந்தியத்திலேயே பெரிய மனிதர், தொழிலதிபர். அவரிடம் எதற்குமே குறையில்லை—ஆள்படை, பணம், கௌரவம். அப்பேர்ப்பட்டவர் ஒரு சாதாரணப் பக்கிரி மாதிரி அவனிடம் கைநீட்டிக் கொஞ்சம் அமைதிப்பிச்சை கேட்கிறார். ஆச்சரியமான விஷயந்தான்.

பீட்டரின் உள்ளத்தில் ஆழ்ந்த வேதனை. மனிதன் இவ்வளவு கதியற்றவனா?

காட்வின் சொல்லிக் கொண்டுபோனார், "எனக்கு சொந்தக் காரங்களுக்குப் பஞ்சமில்லே. என்னாலே அவங்களுக்கு லாபம்

இருந்த வரையிலே என்னைச் சுத்திச் சுத்தி வந்தாங்க. இப்பல் லாம் அவங்க இங்கே வரதில்லே. யார்யாரு எனக்கு ரொம்ப வேண்டியவங்கன்னு நான் நினைச்சேனோ அவங்க இப்போ விலகிப் போயிட்டாங்க. கான்சர்னு கேட்டதுமே அவங்க ஓடிப் போயிட்டாங்க. ஆனால் அவங்க ரொம்ப தூரம் போயிடல்லே. இந்த வீட்டுக்குப் பக்கத்துச் சந்து பொந்திலேயெல்லாம் சுத்திக் கிட்டிருங்காங்க, இந்தக்கிழட்டு எருமை எப்போ மண்டையைப் போடும்னு எதிர்பார்த்துக்கிட்டு. நான் செத்ததும் அவங்க என் சொத்தையும் நான் உசிரைக் கொடுத்து உருவாக்கின தொழில் களையும் பிணந்தின்னிக்கழுகுகள் மாதிரி பிடுங்கித் தின்னுடு வாங்க. ஆனால் நான் அப்படி நடக்க விடமாட்டேன்!"

இருமல் வந்து காட்வினின் பேச்சைத் தடை செய்தது. கர்ஜனை மாதிரி ஒலித்தது இருமல். அவர் தன் நெஞ்சில் தலை யணையை அழுத்திக் கொண்டு சற்றுநேரம் மௌனமாயிருந்தார்.

சிந்தனையிலாழ்ந்திருந்தான் பீட்டர்.

காட்வின் மறுபடி பேசத் தொடங்கினார், "உன்னோட அப்பா இந்தப் பிராந்தியத்திலேயே ஒண்ணாம் நம்பர் அசல் மனிதன். அவன் சொல்லுவான், 'நாம மீனவங்க. உழைப்போம், சம்பாதிப் போம், சாப்பிடுவோம். சேர்த்து வச்ச பணம் நமக்கு விஷம், அது பாவம்'... இந்தக் கடைசிக்காலத்திலே அந்த விஷத்தைப் பொறுத்துக்க முடியல்லே என்னாலே. அதிலேருந்து என்னைக் காப்பாத்து...."

"நானா?" பீட்டரின் குரல் கனவு மயக்கத்தில் பேசப்படும் பேச்சுப் போல் ஒலித்தது.

"ஆமா. நீ தான்...இந்த ஒரு வருசமா ஒவ்வொரு நாளும் நான் யோசிச்சுப்பார்த்து இந்த முடிவுக்கு வந்திருக்கேன்...அந்தச் சொத்து, தொழில்கள் எல்லாத்தையும் நான் உனக்கு...."

"எனக்கா?" காட்வினின் பேச்சு முடியுமுன்னரே கூவி விட்டான் பீட்டர்.

"ஆமா, உனக்குத்தான்! வாங்கிக்கறேன்னு சொல்லு!" பீட்டரின் கைகளைப் பிடித்துக் கொண்டார் காட்வின். அவரது விரல்கள் வெறும் எலும்பு.

பீட்டரின் வாயிலிருந்து வார்த்தை வரவில்லை.

பேசிக் கொண்டே போனார் காட்வின் –"நாடு இருக்கற நிலையிலே.... யார்கிட்டேப் பணம் இருக்கோ அவன்தான் பல சாலி. என் சொத்து உனக்குக் கிடைச்சுட்டா நீ அந்தப் பிசாசு களைப் பழிவாங்க முடியும்.... அவங்க உன்னோட அப்பாவைக் கொன்னவங்க, மறந்துடாதே! அவங்க உன்னை வீட்டை விட்டு,

ஊரைவிட்டே விரட்டிட்டாங்க. உன்னை உலகத்துலேருந்தே விரட்டறதுக்குச் சமயம் பார்த்துக்கிட்டிருக்காங்க....... என் சொத்தை வாங்கிக்க உனக்கு சம்மதமா?"

பீட்டருக்கு உற்சாகமூட்ட முயல்கிறார் காட்வின். ஆனால் பீட்டரின் சிந்தனை வேறுதிசையில் செல்கிறது. அவன் சொல்கிறான், "கொள்கை ரீதியா நீங்க என்னை எதிரியா நினைக்கறீங்க...."

"அதைவிட்டுத்தள்ளு!" கையை உயர்த்தினார் காட்வின், "இப்போ என்னோட பரம எதிரி நான்தான்!..."

காட்வின் முனகினார். முனகிக்கொண்டே பேசினார். வார்த்தைகளில் கெஞ்சல். "நான் ஒருநாளும் யாரிடமும் எதுவும் கேட்டதில்லே...நான் இப்போது நிர்க்கதியான நிலையிலே உன்கிட்டே கொஞ்சம் அமைதியை வேண்டறேன்...."

அவருடைய பேச்சைக் கேட்கப் பரிதாபமாயிருந்தது. பீட்டரின் நெஞ்சை யாரோ முறுக்கிப் பிழிந்தாற்போல் வலி, இருந்தாலும் தயங்கினான் அவன். பிறகு சொன்னான், "இதற்கெல்லாம் உரிமையுள்ளவன்..."

இப்போது இருவருமே மௌனம். கணங்கள் ஈம ஊர்வலம் போல் நகருகின்றன. இவ்வளவு நேரம் தெளிவாயிருந்த காட்வினின் பார்வை இப்போது மங்கிப் போய்விட்டது, அவருடைய கண்களில் நீர், தலை தானாகவே குனிந்து விட்டது.

"அவன் பேச்சை விட்டுத்தள்ளு!" காட்வினே மௌனத்தைக் கலைத்தார். "அவன் உசிரோடே இருக்கானோ இல்லையோ... அவன் திரும்பிவந்தாலும் அவனை மன்னிக்கமாட்டேன்..."

பேசும்போதே காட்வினின் உடல் முழுதும் வேலால் குத்தப் பட்ட பாம்பு போல் சுருங்கியது. அவருடைய தொண்டைப் புண்ணில் பிறந்த கடுமையான வலி தலையிலிருந்து கால்வரை பரவியது.

தோல் மூடிய அந்த எலும்புக்கூடு படுக்கையில் கிடந்து துடித்தது. நெஞ்சைப் பிளக்கும் காட்சி காணச் சகிக்கவில்லை.

இந்த வலிக்கு மருந்தே இல்லையா?

காட்வின் மிகவும் கஷ்டப்பட்டுப் பக்கத்து மேஜையைக் கையால் சுட்டிக் காட்டினார். மேஜையின் மேல் ஒரு பாட்டிலில் வெள்ளை மாத்திரைகள், பீட்டர் அவற்றில் சிலவற்றை எடுத்துக் காட்வினின் வாயில் போட்டுக் கொஞ்சம் தண்ணீரும் ஊற்றினான்.

அது ஏதோ அமைதியளிக்கும் மருந்தாயிருக்க வேண்டும். அதைச் சாப்பிட்டுச் சற்று நேரம் வரை சலனமின்றி இருந்தார் காட்வின், பீட்டர் அவர் உடலை மெதுவாகத் தடவி விட்டான்.

காட்வின் பிறகு கேட்டார், "என்மேலே கோவமில்லியே உனக்கு?"

"என்ன அப்படிச் சொல்றீங்க?....என்னோட அப்பாவுக்கு அடுத்தபடி நீங்கதான் எனக்கு. இதை ஒரு போதும் மறக்க மாட்டேன்... நீங்க என்னைக் காப்பாத்தியிருக்காட்டி..." வாக்கியத்தை முடிக்கவில்லை பீட்டர். உணர்ச்சி மிகுதியால் அவனுக்குத் தொண்டையடைத்துக் கொண்டது.

மறுபடி இருவரும் மௌனமானார்கள். பீட்டர் ஓரளவு தன்னைச் சமாளித்துக் கொண்டு பேசத் தொடங்கினான்—"நீங்க என்னைச் சின்ன வயசிலேருந்து வளர்த்து ஆளாக்கினீங்க. அன்னிக்குக் கூட நீங்க என்னை அந்தச் சுறுமீன்கள் கிட்டேயிருந்து காப்பாத்தலேன்னு அவங்க நிச்சயம் என்னை..., சரி, எனக்கு சம்மதம், நீங்க உயில் எழுதுங்க...ஆனால் ஒரு நிபந்தனை..."

"என்ன?"

"இந்தச் சொத்துக்கு உரிமையுள்ளவன் திரும்பி வந்தால் இந்தச் சொத்திலே ஒவ்வொரு பைசாவையும் அவங்கிட்டே ஒப்படைச்சுடுவேன். அவன் வர்றவரையிலே நான் இந்தச் சொத்துக்குத் தர்மகர்த்தா..."

"தனிச் சொத்துரிமையிலே உனக்கு நம்பிக்கையிருக்கா?"

"சமூக அமைப்பு முழுமையாக மார்றவரையிலே பிறரோட சொத்தை என்னதுன்னு எப்படி நினைப்பேன்?"

"அவன் சொத்தை அழிச்சுட்டான்னா?....நான் என் ரத்தத்தைத் தண்ணியாக் கொட்டிச் சேர்ந்த இந்தச் சொத்தை. தொழில்களைப் பாழாக்கினான்னா?"

"அப்படிச் செய்வான்னு எனக்குத் தோணினாக் கொடுக்க மாட்டேன்...ஆனால் நீங்க என்னை மட்டும் எப்படி நம்பறீங்க? நானும்..."

"உன்மேலே நம்பிக்கையிருக்கு எனக்கு. காட்வினுக்கு மனிதனைப் புரிஞ்சுக்கத் தெரியும்... உன்னோட அப்பா சிங்கம். நீ அந்தச் சிங்கத்தோட பிள்ளை. நான் உன் அப்பாவை ரொம்ப மதிச்சேன். அந்த மதிப்பு எனக்கு உன்னிடமும் இருக்கு—உனக்குத் தெரியாது—ஏன்னா நீ பிறத்தியாருக்காகக் கவலைப் படறே. அவர்களுக்காகவே நீ வாழறே... உன்னைப் பத்திய எல்லா விஷயமும் எனக்குத் தெரியும். நீ முனைஞ்சிருக்கிற காரியத்துக்குப் பணம் தேவை. அதுக்கு என் பணத்தை உபயோகப் படுத்திக்க. என்னோட பாவப்பட்ட பணத்துக்கு இது ஒரு பிராயச்சித்தம்..."

"பாவம்னு ஏன் சொல்றீங்க?"

"உன் அப்பாதான் சொல்லுவார்—தேவைக்கு அதிகமான பணம் பாவம்னு... நான் கத்தோலிக்கன். பாவ உணர்வு என் ரத்தத்திலேயே இருக்கு..."

"இது பாவப்பணம்னு நினைச்சா ஏதாவது தர்மஸ்தாபனத்துக் குத் தானம் பண்ணிடுங்களேன்"

"அதாவது பிச்சை கொடுக்கச் சொல்றே. ஊஹூம், அது முடியாது. நான் என் வாழ்க்கையிலே ஒரு நாளும் பிச்சை போட்டதில்லே, பிச்சை வாங்கினதுமில்லே. மனிதனுக்குப் பிச்சையைவிடப் பெரிய அவமானம் ஏதுவுமில்லே..." சற்று நேரம் மௌனமாயிருந்துவிட்டுத் தொடர்ந்தார் காட்வின்—"என் னோட அம்மா துறைமுகவாசல்லே பொரி வித்துக்கிட்டிருந்தா. எப்படியோ வாழ்க்கை நடத்திக்கிட்டிருந்தோம். ஒரு தடவை அம்மாவுக்கு ரொம்ப ஜுரம், அவளாலே எழுந்திருக்க முடியல்லே. ஆகையாலே பொரி வியாபாரமும் இல்லே. ரெண்டு நாள் பட்டினி. பசி தாங்காமே ஒருத்தன்கிட்டே பிச்சை வாங்கக் கை நீட்டினேன். அம்மா அதைப்பார்த்துட்டா. அந்த ஜுரத்தி லேயும் அவ எப்படியோ எழுந்து தள்ளாடிக்கிட்டு வந்து என்னை அடிச்சா! வெக்கங்கெட்டவனே! பிச்சை கேட்டீன்னா உன் நாக்கைப் பிடுங்கிடுவேன்!...பசி பொறுக்க முடியல்லேன்னா செத்துத் தொலை. உன்னைப் புதைச்சுடறேன்...' அவ்வளவு தான். நான் பிச்சை கேட்டது அந்த ஒரு தடவைதான். அம்மா வியாதியாக்கிடந்து ஒரு சித்திரை மாசத்து மத்தியான வெயில்லே துறைமுகத்து வாசலுக்குப் பக்கத்திலேயே செத்துப் போனா. எல்லாரும் சொன்னாங்க—' பிச்சையெடுத்து அம்மா வோட சடங்குகளைச் செய்யுன்னு. நான் பிச்சையெடுக்கல்லே, சடங்குகளும் நடக்கல்லே. நான் அம்மாவோட பிணத்தைப் போட்டுக்கிட்டு ரெண்டு பகல், ரெண்டு ராத்திரி உக்காந்திருந் தேன். எவ்வளவோ பேர் அந்தவழியாப்போனாங்க. நாத்தம் எடுக்கற பிணத்தைப் பார்த்து மூக்கைப் பொத்திக்கிட்டுப் போனாங்க. ஆனால் யாரும் ஏன் பிணம் இப்படிக்கிடக்குன்னு கேக்கல்லே. ரெண்டு நாள் கழிச்சு ஒரு முரட்டு மீனவ இளைஞன் கயிறு, தூண்டில், வலை எல்லாத்தையும் தூக்கிக்கிட்டுப் போன வன் அங்கே வந்து நின்னான். அவன் உடம்பிலேருந்து அப்பவும் வேர்வையும் கடலோட உப்புத்தண்ணியும் வழிஞ்சுக் கிட்டிருக்கு, அவன் கேட்டான்-நான் ரெண்டு நாள் முன்னாலே கடலுக்குப் போனபோது உன் அம்மா செத்துப் போயிருந்தா. இன்னும் ஒரு ஏற்பாடும் ஆகல்லியா?... நான் பதில் சொல்லவில்லை. அவன் தன் சுமையைக் கீழே இறக்கி வச்சான். எங்கேருந்தோ ஒரு

மூங்கில் கொண்டு வந்தான். பிணத்தை மூங்கிலோடு சேர்த்துக் கட்டிட்டுச் சொன்னான், 'நான் மூங்கிலை இந்தப் பக்கம் தூக்கிக்கறேன். உன்னாலே அந்தப் பக்கம் தூக்கிக்க முடியுமோ?'... முடியும்னேன்.. ரெண்டு பேரும் பிணத்தை மாதா கோவிலுக்கு எடுத்துக் கிட்டு வந்தோம். அவன் மாதா கோவிலுக் குள்ளே போய்க் கத்தினான்'நீங்க இதைப் புதைக்க ஏற்பாடு பண்ணலேன்னா இது இங்கேயே நாறிக்கிட்டுக் கிடக்கும்...' மாதாகோவில் ஆளுக வேறே வழியில்லாமே புதைக்க ஏற்பாடு செஞ்சாங்க. அந்த இளைஞன் என்னை அவன் வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப்போனான். எனக்குத் தங்க இடங்கொடுத்து மீன் பிடிக்கக்கத்துக் கொடுத்தான்... அவன் தான் உன்னோட அப்பா... நான் மீன்பிடிக்கக் கத்துக்கிட்டேன். ஆனால் அவனோட பேச்சைக் கேக்கல்லே. பேராசைப் பிசாசு என்னைப் பிடிச்சுக்கிட்டது. நான் பெரிய மனுசனாக ஆசைப்பட்டேன். நான் பணக்காரனாகாமே, சாதாரண மீனவனாயிருந்திருந்தால் அமைதியாச் செத்திருப்பேன்னு இப்போ தோணுது எனக்கு..."

காட்வினின் குரல் கரகரத்தது. அவர் கைகளால் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு தலையணைக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டார். சற்றுநேரத்துக்குப்பின் தலையை நிமிர்த்திக் கொண்டு சொன்னார், "உன்னோட அத்தை எனக்கு ரெண டாவது அம்மா. அவங்க அன்னிக்கு என்னைக் காப்பாத்தல் லேன்னா நான் இன்னிக்கு இருக்கமாட்டேன். அந்தக்கடனை என்ன செஞ்சாலும் தீர்க்கமுடியாது. நான் கையாலாகாதவன், சுயநலக்காரன். உன்னோட அப்பாவோட கொலைக்குப் பழி வாங்க முடியல்லே என்னாலே..." வேதனையோடு கூறினார் காட்வின்.

அவர் மறுபடி தலையணைக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டார். உடனேயே தலையைத் தூக்கிச் சொன்னார், "நீ போயிடு. இங்கே இருக்காதே. நான் செத்துப் போன செய்தி கிடைச்சப் பிறகு என்னோட வக்கீல் ராமச்சந்திரய்யரைப்பாரு. அவரைத் தெரியுமில்லையா?..."

"நான் ஓடிப்போக மாட்டேன்!" பீட்டரின் குரலில் உறுதி. "என் அப்பா சுறா வேட்டைக்காரர்னு பிரபலமானார். நான் இந்தச் சுறா மீன்களை ஒழிக்கப் போறேன். முன்னாலே ஓடிப்போனேன் —வாஸ்தவம். ஆனால் இப்போ இவங்களோடே மோதத்தயார்."

"உன்னாலெ முடியுமோ? அவங்க பலசாலிங்க. சர்க்கார் அவங்க கையிலே..."

"நான் ஒப்புத்துக்க மாட்டேன். அசல் பலம் எங்கே இருக்குன்னு இந்த நாட்டிலே படிச்சவங்க இன்னும் உணரல்லே..."

மெல்லச் சிரித்தார் காட்வின். பிரேதத்தின் சிரிப்பு. பிறகு தன் மெலிந்த விரல்களால் பீட்டரைப் படுக்கையிலிருந்து தள்ளினார். "போ, போ... இந்த வீட்டைவிட்டுப்போ!..." குரலில் அதட்டல்.

"நீங்க தயவு பண்ணி இங்கே எனக்குத் தங்க இடம் கொடுங்க".

"உஹூம், நீ போ. இப்பவே போயிடு."

"உங்களுக்கு ரெண்டு நர்ஸ் ஏற்பாடு செய்யவா?"

"வேண்டாம். இந்த அறையிலே இன்னோர் ஆள் இருந்தால் எனக்குப் பிடிக்காது. என்னை அமைதியாச் சாகவிடு. எனக்குப் பிழைக்க ஆசையில்லே."

நோயாளிக்கு அதிர்ச்சியளிக்க விரும்பாமல் பீட்டர் வெளியே வந்தான்—குனிந்த தலையுடன், கண்களைக் கைகளால் மூடிக்கொண்டு, குடிகாரனைப் போல் தள்ளாடியவாறே மாடிப்படிகளில் இறங்கினான்.

யானைகளைப் பற்றி எங்கோ படித்தது அவன் நினைவுக்கு வந்தது. கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் யானை கிழடாகி விட்டால் இளம் யானைகளுடன் ஈடுகொடுக்க முடியாது அதனால். அப்போது அது தனியே காட்டுக்குள்ளே போய் ஓரிடத்தில் பட்டினிகிடந்து இறந்துபோகும்.

காட்வினும் அந்த யானை மாதிரிதான்....

☆ ☆ ☆

ஊரின் பெயர் மாதவபுரம். தூத்துக்குடியிலிருந்து அருப்புக் கோட்டை, எட்டையபுரம் வழியாக ராமநாதபுரம் போகும் ரஸ்தாவில் அமைந்துள்ள சிறியகிராமம். அங்குள்ள ஆரம்பப்பள்ளிக் கட்டிடமும் சிறியதுதான். அதில் ஒரேயொரு அறை. பள்ளி ஆசிரியரும் ஒருவர்தான், அந்த ஓர் அறைதான் வகுப்பறை, ஆசிரியரின் வீடும் அதுதான்.

அறைக்குள் வீணை இசைத்துக் கொண்டிருக்கிறார் ஆசிரியர், பூரிகல்யாணி ராகம். நான்கு மணி நேரமாகத் தொடர்ந்து இசைத்துக் கொண்டிருக்கிறார். பொழுது சாய்ந்து இரவு வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை அவர்.

முதலில் ஆலாபனை ... ஆரோகண அவரோகணம் ... ஸ்வரப் பிரஸ்தாரம் ... பிறகு ஆற்று வெள்ளம் போல் இசைப் பெருக்கு. ஆசிரியரின் கண்கள் மூடியிருக்கின்றன. வலதுகை விரல்கள் அனாயாசமாகக் கம்பிகளை மீட்டுகின்றன. இடது கை விரல்கள் நாட்டியக்காரி போல் தந்திகள் மேல் நடனமாடுகின்றன. தன்னை மறந்து இசைக்கிறார் ஆசிரியர்.

ஒரு கிழவன் கையில் அரிக்கேன் விளக்குடன் அறைக்குள் நுழைந்தான். ஆசிரியர் வீணை இசைத்துக் கொண்டிருப்பதையும் அவருக்கு முன்னால் ஒரு பரட்டைத் தலையன் தலையைக் குனிந்து உட்கார்ந்திருப்பதையும் பார்த்தான். ஆசிரியர், அந்த ஆள் இருவருமே தங்களை மறந்திருக்கிறார்கள்.

"வாத்தியாரே! ஏ வாத்தியாரே!... இன்னும் எவ்வளவு நேரம் வீணை வாசிச்சிக்கிட்டிருப்பீங்க?... ?

ஆசிரியர் தன்னிலைக்கு வந்து கண்களைத் திறந்தார். இசை ஓய்ந்தது. முன்னால் உட்கார்ந்திருந்தவனும் தலை நிமிர்ந்தான்.

"பீட்டரா? நீ எப்போ வந்தே?"

"உங்க கண்முன்னாலே தான் வந்து உக்காந்தேன். நீங்க வீணையிலே முழுகியிருந்தீங்க... ஆகா, எவ்வளவு சுகமான பாட்டு!... இந்த மாதிரி பாட்டுக் கேட்டு ரொம்ப நாளாச்சு..."

கிழவன் அவசரப்படுத்தினான், "எழுந்திருங்கய்யா! அடுப்பு எரியுது... அரிசியை உலையிலே வையுங்க ... நாள் பூராப் பட்டினியா இருந்துட்டீங்க..."

"ஐயோ ஆண்டி! பகவான் உனக்கு எல்லாம் கொடுத்திருக்கார்; கொஞ்சம் சங்கீத ரச ஞானமும் கொடுத்திருந்தால்..."

"எனக்கு வேண்டாமய்யா அது. கிழவயசிலே ரசத்தாலே வாதம் வரும்... சரி, எழுந்திருங்க!..."

ஆசிரியர் வீணையை எடுத்து உறைக்குள் வைத்தார். கவனமாக, நிதானமாக—அப்போதுதான் பிறந்த குழந்தையை அதன் தாய் துணியில் சுற்றிப் படுக்க வைப்பதுபோல் வீணையை ஒரு பக்கமாகச் சாய்த்துவிட்டு எழுந்து நிற்க முயன்றார் கைகளைத் தலையில் ஊன்றிக்கொண்டு, அவரது உடல் கிடு கிடுவென்று நடுங்கியது. அவரால் நிற்கமுடியவில்லை. பீட்டர் முன்னால் வந்து அவரைப் பிடித்துக் கொண்டான்.

அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் பீட்டர் ஆசிரியரைப்பார்த்தான். அவருடைய உடம்பு முன்னைவிட மெலிந்து பலமிழந்து இருந்தது. வெளிறிப்போன முகம், ஒட்டிய கன்னங்கள், கண்கள் இறந்துபோன மீனின் கண்கள் போல.

"உங்கஉடம்பு?..."

"ஆமா, இன்னும் ரொம்ப மோசமாப் போயிட்டது." சிரிக்க முயன்றார் ஆசிரியர். "என்னிக்குத்தான் உடம்பு நல்லாயிருந்தது?"

வெகுகாலமாகவே அவருக்கு உடல் நடுக்கம் உண்டு. நடந்தால் நடுக்கம், பேசினால் நடுக்கம், புதிய இடத்தை, புதிய மனிதர்களைப் பார்த்தால் நடுக்கம் அதிகமாகிவிடும். ஆனால் வீணை வாசிக்கும்போது சிறிதுகூட நடுக்கமிருக்காது. இந்த நோயுள்ளவர்தான் வீணையிசைக்கிறார் என்று யாருமே நினைக்க முடியாது. லயம் ஒரு மயிரிழை கூடப் பிசகாது. அவர் வீணையை மீட்டும்போது உறங்கிக் கொண்டிருக்கும் ராகங்களெல்லாம் விழித்தெழுந்துவிடும். அவற்றின் விளையாட்டு தொடங்கிவிடும். அந்தக்குச்சி போன்ற விரல்கள் இசையின் மந்திரக் கோல்கள்.

சாதாரணமாக ஆசிரியரின் பேச்சு தயங்கித்தயங்கி, நின்று நின்று வெளியேவரும். ஆனால் குழந்தைகளுக்குப் பாடங்கற்றுக் கொடுக்கும்போது இதற்கு நேர்மாறாகச் சொற்கள் கணீரென்று வெளிப்படும். வடமொழி சுலோகங்களின் உச்சரிப்பில் ஒரு தவறுமிருக்காது.

ஆசிரியரின் நோய் மனத்தத்துவரீதியானது என்பார் திருநெல்வேலி மருத்துவர் கோவிந்தன். நோயின் முழு வரலாறும் தெரிந்தால் சிகிச்சை செய்யலாம். ஆனால் ஆசிரியருக்குச் சிகிச்சையில் அக்கறை இல்லை. சிகிச்சை செய்யப் பணமுமில்லை.

"அவர் வேளா வேளைக்குச் சாப்பிடறதில்லே, அதனாலதானே உடம்பு கெட்டுப்போறது" என்றான் பீட்டர்.

"நீங்க சொல்றது சரிதான்" ஆமோதித்தான் ஆண்டி. "தினம் ஒரு வேளைதான் சாப்பிடறார். அதுவும் ஒழுங்காச் சாப்பிடறதில்லே. இப்படியிருந்தா உடம்பு எப்படியிருக்கும்?"

ஆசிரியரின் முகத்தில் நாணங்கலந்த புன்சிரிப்பு. சொன்னார், "சமையல் பண்ணச் சோம்பலாயிருக்கு. ஒரு வயித்துக்காக என்னத்துக்கு இவ்வளவு சிரமம்! அதைவிட வீணைவாசிச்சிக்கிட்டு இருக்கலாமேன்னு தோணுது ... என்ன பீட்டர், ரொம்ப நாளா உன்னைக் காணல்லியே... எங்கே போயிருந்தே?"

"நான் ஊரைவிட்டுப்போய் ரெண்டு வருசமாச்சு."

"ஆமா... எனக்கு வெங்கி அய்யர் சொன்னார்... இப்போ எங்கே இருக்கே?"

"ஸ்திரமா எந்த இடத்திலேயும் வீடு இல்லே, தண்ணியிலேயே மிதந்துக்கிட்டிருக்கேன்..." தலையைச் சொறிந்துகொண்டு சொன்னான் பீட்டர்.

"அப்பமன்னா சங்கீத சாதகம் பண்றதில்லே?"

"எப்படி முடியும் சொல்லுங்க. ஊரை விட்டுப் போனதி லேருந்து பாடமுடியல்லே. இருந்தாலும் நீங்க கத்துக்கொடுத்த சிவரஞ்சனியை மட்டும் அப்பப்போ பாடிப்பார்க்கறேன். ரொம்பக் கஷ்டமான ராகம்..."

"அதெல்லாம் அப்பறம் பேசிக்கலாம். இப்போ உலையிலே அரிசி வையுங்க" அவசரப்படுத்தினான் ஆண்டி.

"நீயே வச்சுடேன்!"

"ஐயோ அது பாவம். நீங்க பிராமணர், நான் பாண்டியன்". சோகமாகச் சிரித்தார் ஆசிரியர். "பீட்டர், நீதான் சொல்லு, இந்தச் சாதி வித்தியாசமெல்லாம் எப்போ ஒழியும்? நாம சுதந்திரமாயிட்டோம்..."

பீட்டர் இதற்குப் பதில் சொல்லவில்லை. சொன்னான், "காட்வின் ஃபெர்னாண்டோ சாகக்கிடக்கறார். நீங்க வெங்கி அய்யர் கிட்டே விசாரிச்சு வையுங்க. நான் அப்புறம் வரேன்..."

பீட்டர் அவருக்கு முன்னால் முழந்தாளிட்டான். ஆசிரியர் அவன் தலைமேல் கைவைத்து ஆசி கூறினார். பீட்டர் எழுந்து வெளியே போனான்.

ஆண்டி பள்ளியின் வேலைக்காரன், காவற்காரன் எல்லாம். ஆசிரியரைக் கவனித்துக் கொள்பவனும் அவன்தான். சாதியில் பாண்டியன். தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும்போது நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு சொல்வான், "நான் வீரபாண்டி யக் கட்டபொம்மனோட பரம்பரையாக்கும்!"

அவன் இளம் வயதில் வெங்கி அய்யரின் சீடனாயிருந்தவன். இப்போது வயதாகிவிட்டாலும் கட்டுமஸ்தான உடம்பு.

இந்தப் பள்ளியைத் தொடங்கியவர் வெங்கி அய்யர்தான். சுப்பிரமணிய பாரதியின் நினைவாக அதற்குப் பெயர் வைத்தார் 'பாரதி வித்தியாலயம்'. ஆசிரியர் வெங்கி அய்யரின் நண்பர். பாரதியின் நண்பருங்கூட. அந்தக் காலத்தில் பாரதியே அவரது வீணையிசையைக் கேட்க அவரிடம் அடிக்கடி வருவார்; இசை யில் மெய்மறந்து போவார்; ஆசிரியரைப்பாராட்டுவார்; பிறகு தாமியற்றிய பாடல்களைப் பாடிக்காட்டுவார் – சுதேசிப்பாடல் கள், கண்ணன் பாட்டு, இன்னும் எத்தனையோ! நல்ல குரல் பாரதிக்கு.

பாரதி பைரவி ராகத்தில் இயற்றிய 'கண்ணன் தீராத விளை யாட்டுப் பிள்ளை' பாடல் ஆசிரியருக்கு மிகவும் பிடித்தமானது. அவர் அதை மெல்லப் பாடிக் கொண்டே உலையில் அரிசியை வைத்தார்.

எளிய உணவுதான்—சாதமும் தயிரும். கடைசியில் இரண்டு கை மோர். தயிரும் மோரும் ஆண்டியே தயாரித்து வைப்பான். அவ்வப்போது பக்கத்திலிருந்த பிராமண வீட்டிலிருந்து ரசம், சாம்பார் வரும். பண்டிகை நாளன்று தேங்காய், வெல்லம் போட்டு அரிசிமாவில் கலந்து தயாரித்த பிட்டு வரும். இட்டிலி, தோசை, வடை, முறுக்கும் சில சமயம் வரும். கிருஷ்ணஜயந்தி யன்று அய்யங்கார் வீட்டிலிருந்து பாயசம் வரும். பொங்கல் சமயத்தில் சர்க்கரைப் பொங்கல் வரும்.

ஊரில் நிறைய மாணவ மாணவியர் உண்டு ஆசிரியருக்கு. இங்கு சுமார் இருபத்திரண்டு வருடங்களைக் கழித்துவிட்டார் அவர். முதல் தலைமுறை மாணவ மாணவியர் இந்தத் தலைமுறை மாணவ மாணவியரின் பெற்றோர்.

அவர்களுக்கெல்லாம் அவர் ஆசிரியர், அவரது உண்மைப் பெயர் என்ன என்று இந்தப் பிராந்தியத்தில் யாருக்கும் தெரியாது.



ஆசிரியரின் இன்னொரு நோய் உறக்கமின்மை. விளக்கை யணைத்துவிட்டுப் படுத்துக் கொண்டால் உறக்கம் ஊரைவிட்டே போய்விடும். அப்போது மனக்கண் முன்னே ஒன்றன்பின் ஒன்றாகச் சித்திரங்கள் தோன்றும். தலையும் காலுமில்லாத, ஒன்றோடொன்று சம்பந்தமில்லாத சித்திரங்கள். ஆசிரியர் இரவு முழுதும் அவற்றை ஒன்றோடொன்று சேர்த்து ஒட்டுப் போட்டு முழுமையான உருவத்தைக் கொண்டுவர முயற்சி செய்து கொண்டிருப்பார். ஆனால் பாதியிலேயே உருவம் சிதைந்து போகும்—சீட்டுக் கட்டால் கட்டப்பட்ட வீடுபோல.

முதலில் ஒரு பையனின் உருவம் தோன்றும். சாலமரத்தின் குருத்துப் போலிருப்பான். இளம் பயிர் போன்ற நிறம்—சியாமள நிறம். ராம பக்தரான தந்தை கணீரென்று சுலோகம் சொல்லு வார்—'சியாமளம் சாந்த மூர்த்திம் வந்தே லோகாபிராமம்'. கேட்க இனிமையாயிருக்கும்.

கூப்பிடும் பெயர் ராமன். முழுப்பெயர் கோதண்டராமன். அனந்த கிருஷ்ணனின் பிள்ளையாதலால் ஏ. கோதண்ட ராமன். ஊர் சதாமங்கலம். திருவையாறு போஸ்ட். தஞ்சாவூர் மாவட்டம்.

அவன் பள்ளியில் சேரும்போது அவனுடைய விலாசத்தை இப்படித்தான் பதிவு செய்து கொண்டார்கள்.

சதாமங்கலம் காவேரிக்கரையில் அமைந்துள்ள ஒரு சிற்றூர். கரையோடு நடந்தால் மூன்று மைல் தொலைவில் திருவையாறு– கர்நாடக சங்கீத மேதை தியாகராஜரின் ஊர்.

கர்நாடக இசையின் மாபெருங்கலைஞர்கள் நால்வர் – தியாக ராஜர், முத்துசாமி தீட்சிதர், சாமா சாஸ்திரி, சுவாதித் திருநாள். இவர்களுள் தியாகராஜர் இயற்றிய கீர்த்தனைகள் எண்ணில டங்கா. இவற்றில் பெரும்பாலும் ராமன் புகழ் பாடுபவை. தியாக ராஜர் தினந்தோறும் புதிய புதிய ராகங்களில், புதிய தாளங் களில் பத்துக் கீர்த்தனைகள் இயற்றுவாராம்.

காவேரிக்கரையிலுள்ள இந்த ஊர்களில் இசை பயில்பவர்கள் அதிகம். அனந்த கிருஷ்ணன் அந்தப் பிராந்தியத்தில் மிகவும் புகழ் பெற்ற வயலின் வித்துவான். இலக்கிய ரசிகர் என்றும் அறியப்பட்டவர். தமிழ், வடமொழிக் காவியங்களில் வல்லவர் – வியாசர், வால்மீகி, காளிதாசர், ஜயதேவர், கம்பன், சிலப்பதி காரம், மணிமேகலை, ஆழ்வார்கள், நாயன்மார்கள்...

சாப்பாட்டுக் கவலையில்லை அவருக்கு. அவர் ஒரு சிறிய மிராசுதார். காவேரிக்கரையில் கொஞ்சம் நிலம், களஞ்சியம் நிறைய நெல், ஆண்டு முழுவதுக்கும் வேண்டிய பருப்பு, வெல்லம், புளி வீட்டில் இருக்கும். கொட்டிலில் பசு மாடு.

அவருடைய குடும்பமும் சிறிதுதான்–மனைவி, பெண் தமயந்தி, பிள்ளை கோதண்டராமன், பிள்ளையை ராமா என்று கூப்பிடுவார். குரலில் பரிவு இழையும், மனம் மகிழ்ச்சியில் திளைக்கும்.

இந்த 'ராமா, ராமா' என்ற சொல் அவர் தியாகராஜரின் பந்துவராளி ராக கீர்த்தனையைப் பாடும்போது அவர் குரலில் அடிக்கடி ஒலிக்கும் – "நின்னு நேரே நம்பி நானுரா, ஓராமா ராமையா..." அதைக்கேட்போர் அந்தச் சொல்லில் புத்தம் புதிய தாமரைத்தேனின் மணத்தையும் சுவையையும் உணர்வார்கள்.

ஆசிரியர் இப்போதெல்லாம் அந்தக் கீர்த்தனையை வீணை யில் இசைப்பதில்லை. இசைத்தால் நெஞ்சில் ஏதோ வேதனை ஏற்படுகிறது, மூச்சுத்திணறுகிறது. அந்தக்கீர்த்தனையைப் பாடகர் பாடிவிடுவாரோ என்ற பயத்தில் அவர் இசைக் கச்சேரி களுக்குக் கூடப் போவதில்லை.

அனந்தகிருஷ்ணன் மிராசுதாரானாலும் சோம்பேறியில்லை, கடுமையான உழைப்பாளி அவர். அதிகாலையில் நான்கு மணிக்கே எழுந்து காலைக் கடன்களை முடித்துவிட்டு வயலின்

சாதகம் செய்யத் தொடங்கிவிடுவார். அதன் பிறகு பூசை. பூசை முடிந்தபின் பலகாரம் செய்துவிட்டு வயலுக்குப்போய்விடுவார். பகல் இரண்டு மணி சுமாருக்குத் திரும்பி வந்து சாப்பிடுவார் . சாப்பிட்டு எழுந்ததும் படிப்பு. அவருக்கு புத்தகங்கள் சேகரிக்கப்பிடிக்கும். காசி, புணே, கோரக்பூர், நேபாளிலிருந்து கூடப் புத்தகங்கள தருவிப்பார். அவருக்கு ஆங்கிலம் அவ்வளவாகத் தெரியாது

பொழுது சாய்ந்ததும் அவர் எழுந்து ஸ்நானம் செய்வார். உடம்பை நன்றாகத்துடைத்துக் கொண்டு வாசனைச் சந்தனம் பூசிக் கொள்வார். சந்தனம் காய்ந்ததும் மெல்லிய வேஷ்டியைப் பஞ்ச கச்சம் வைத்துக்கட்டிக் கொண்டு விலையுயர்ந்த பட்டு மேலாடையணிந்து கொள்வார். பிறகு வெளியே வந்து தன் மாட்டு வண்டியிலேறிக் கொள்வார்.

மாட்டு வண்டிக்குத் தேர் மாதிரி சிகரம் வைத்திருக்கும். அதில் பல சித்திர வேலைப்பாடுகள் இருக்கும். ராமநாதபுரத்தைச் சேர்ந்த ஒரு புகழ் பெற்ற தச்சரின் வேலைப்பாடு அந்த வண்டி. அந்த வண்டி செய்ய நிறைய பணம் செலவாயிற்று. அது தெருவில் போகும்போது பார்ப்பவர்கள் அதைப் பாராட்டாமலிருக்க முடியாது.

ஒரு முரட்டு மாடு வண்டியை இழுக்கும். ஒரு கிழட்டுப் பாண்டியன் அதை ஒட்டுவான். எல்லோரும் அவனைக் கிழவன் என்றுதான் அழைப்பார்கள். வண்டிக்குப் பின்னால் வேலைக்காரப் பையன் பாலன் கையில் ஒரு பெரிய வெள்ளி வெற்றிலைச் செல்லத்துடன் ஓடி வருவான். அதற்குள் வாழைக்குருத்து போல் மிருதுவான துளிர் வெற்றிலை அடுக்கிவைக்கப்பட்டிருக்கும். அதன் சுவையே அலாதிதான். அத்துடன் ஈசலிறகு போல் மெல்லிய பாக்குச் சீவல், வெற்றிலைச் செல்லத்தின் ஒரு மூலையில் வாசனைச் சுண்ணாம்பு. பாலனின் கையில் இன்னொரு சிறிய டப்பாவில் வாசனைப் புகையிலை. அதன் மூடியைத் திறந்தால் நாற்புறமும் மணங்கமழும்.

அம்மா முகத்தைத் திருப்பிக் கொள்வாள் – "கிளம்பியாச்சு பொம்பளையைத் தேடிக்கிட்டு..." என்பாள்.

கிளம்புவதற்கு முன் அப்பா குரல் கொடுப்பார் – "ராமா, வரியா?"

ராமன் அந்த வட்டாரத்திலேயே இருக்கமாட்டான். தந்தை தன்னை அலங்கரித்துக்கொள்ளத் தொடங்கியதுமே ஓடிப் போய் விடுவான். இல்லாவிட்டால் அம்மாவிடம் திட்டுக்கேட்க வேண்டியிருக்கும்.

இன்னும் சிறிய வயதில் அவன் பலதடவைகள் தந்தையுடன் அங்கே போயிருக்கிறான். அவர் போகும் வழி அவனுக்கு அத்துபடி. அப்பாவின் வண்டி காவேரிக்கரையிலேயே திருவையாறுப் பக்கம் போகும். அந்த ஊருக்கு வெளியிலே கேட் வைத்த ஒரு வீட்டுக்குள் நுழையும். வீட்டைச் சுற்றி நிறைய மல்லிகைச் செடிகள். அவற்றில் பெரிய பெரிய குண்டு மல்லிகைப் பூக்கள். கேட்வளைவில் பிச்சிப்பூ தோரணமாகப் பூத்துக்குலுங்கும். கேட்டின் இரும்புக்கிராதியைப்பிடித்துக் கொண்டு நின்றிருப்பாள் தாசி கனகம்மா – அப்பாவின் ஆசைநாயகி.

சிறுவன் ராமனைக் கண்டதும் கனகா இரு கைகளாலும் அவனைத் தூக்கிக்கொண்டு அவனுடைய கன்னங்களில் முத்தம் பொழிவாள். வெகு நேரம் அவனுடைய கன்னங்களைத் தன் கன்னங்களுடன் சேர்த்து வைத்துக் கொண்டிருப்பாள். இதற்குள் அப்பா வண்டியிலிருந்து இறங்கி வீட்டுக்குள் வந்துவிடுவார். அங்கே மரக்கட்டிலின்மேல் – பால் வெள்ளை நிறப்படுக்கை விரிக்கப்பட்டிருக்கும். அப்பா அதன்மேல் சாய்ந்து கொள்வார். கனகம்மா ராமனின் கைநிறைய லாடு கொண்டு வந்து கொடுத்து அவனைப் பாலனின் பொறுப்பில் விடுவாள், பிறகு அப்பாவின் அருகில் உட்கார்ந்து கொண்டு அவரது உடம்பை மெதுவாகத் தடவிக் கொடுப்பாள்.

அவள் தடவிக் கொடுக்கும் அழகே அழகு! அவள் தன் உள்ளார்ந்த பரிவை அந்தத் தடவலின் மூலம் அள்ளிக் கொடுப்பது போலிருக்கும். அப்பா தன் கண்களை மூடியவாறு அந்த சுகத்தை அனுபவிப்பார்.

அவன் சற்றுப் பெரியவனானதும் அம்மா அவன் கனகம்மா வீட்டுக்குப்போவதைத் தடுத்துவிட்டாள். கனகம்மா பேச்சு வந்தால் அம்மா அருவருப்புடன் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு 'தேவடியா, தேவடியா' என்பாள். அந்தச் சொல்லின் பொருள் வெகு காலத்துக்குப் பிறகுதான் அவனுக்குப்புரிந்தது.

அம்மா ஏன் கனகம்மா மாதிரி அப்பாவைத் தடவிக் கொடுக்கறதில்லே? அம்மா ஏன் அப்பா கிட்டேயிருந்து விலகி விலகி இருக்கார்? ராமனுக்குப் புரியவில்லை...

அப்பா கூப்பிடும்போது அவரோடு கூடப்போக ஆசைதான் ராமனுக்கு. ஆனால் அம்மாவிடம் பயம். இருதலைக் கொள்ளி எறும்பு போல் தவிப்பான் அவன். கடைசியில் பயந்தான் வெல்லும்.

கனகம் அப்படியொன்றும் பிரமாத அழகியல்ல, ஆனால் அவள் அலங்காரம் செய்துகொண்டு நடனமாட மேடையேறி

விட்டால் அவளை அடையாளமே தெரியாது. அப்போது அவள் புராணக்கதைகளில் வரும் அப்சரஸ் மாதிரி இருப்பாள். அந்த சமயத்தில் மார்க்கச்சையணிந்த அவளுடைய விம்மிய மார்பை இறுகக் கட்டிக்கொண்டு அவளுக்கு முத்தம் கொடுக்கத் தோன்றும் ராமனுக்கு. அப்போது அவளுடைய முகபாவமே வேறு மாதிரியாக இருக்கும். மையிட்ட நீண்ட கண்களில் பயங் கரக் கவர்ச்சி, திறந்த இடை பித்தளைக் குடத்தின் கழுத்துப் போல் குறுகியிருக்கும். இடைக்குக் கீழ் கரும்பச்சை நிறத்தில் ஜரிகை வேலைப்பாடு செய்த இடைக்கச்சை அவளுடைய உடல் உயரமான குத்துவிளக்குப்போல் பளபளக்கும். பார்க்கப்பார்க்க அலுக்காது ராமனுக்கு.

நாட்டியக் கச்சேரியில் அப்பாவின் வயலின் இசை மாயம் விளைவிக்கும். அவரே வேறு மனிதராக மாறிவிடுவார். திருவை யாறிலேயே மிகச் சிறந்த மிருதங்கக்காரன் தண்டபாணிதான் மிருதங்கம் வாசிப்பான். பாலசுப்பிரமணியன் கடம்.

அப்போது அப்பாவும் கனகமும் ஒன்றாகிவிடுவார்கள். அவர் களைத் தனித்தனியாகக் கற்பனை செய்யவே முடியாது. பார்வையாளர்கள் தங்களை மறந்த நிலையிலிருப்பது அவர்க ளைப் பார்த்தாலே புரியும். கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் மூச்சு விடுகிறார்களா என்பதே சந்தேகந்தான், அவர்களுடைய கைகள் மட்டும் தொடைகளின் மேல் தாளம் போட்டுக் கொண்டிருக்கும்.

கும்பகோணம் பாணியில் மிகவும் புகழ்பெற்ற நாட்டியக்காரி வரலட்சுமி. வரலட்சுமியும் கனகமும் ஒரே குருவிடம் நாட்டியம் கற்றவர்கள் என்ற விஷயம் பெரியவனானபின்தான் ராமனுக்குத் தெரிந்தது. அவர்களுடைய குருவும் சாதாரணமானவரில்லை, புகழ்பெற்ற நடேசய்யர். அவர் நடராஜரின் அவதாரம் என்பது மக்களின் நம்பிக்கை. தஞ்சாவூர் அரண்மனையிலும், சென்னை ரசிகரஞ்சனி சபாவிலும் – ஏன், பம்பாய், காசியில் கூட நாட்டிய மாடியிருக்கிறாள் வரலட்சுமி.

கனகம் எங்கும் நாட்டியமாடப் போவதில்லை. அவள் ஆடுவது தன் வீட்டில் மட்டுந்தான், மாதம் ஒரு முறை அவள் வீட்டில் சிறிய அளவில் நாட்டியக் கச்சேரி நடக்கும். ஆண்டுக்கு இரு முறைகள்–பொங்கலன்றும் போகுலாஷ்டமியன்றும் – நாட்டியக் கச்சேரி விமரிசையாக நடைபெறும். அப்போது கனகம்மா வீட்டில் ஒரே கோலாகலம், தென்னிந்தியாவின் புகழ்பெற்ற பாடகர்களும் வாத்தியக்காரர்களும் அங்கு வந்து கூடுவார்கள், சிறந்த நாட்டியக் கலைஞர்களும் வருவார்கள். நாட்டியமும் இசையும் ஒரே அமர்க்களந்தான்.

இந்தகைய விழாவொன்றில்தான் ராமனுக்கு வீணைப் பயிற்சியைத் தொடங்கி வைத்தார் அப்பாவின் நண்பர் தஞ்சாவூர் நரசிம்மன். அவர் மைசூர் அரண்மனை வீணை வித்துவான். அப்போது ராமனுக்குப் பன்னிரண்டு வயது.

அம்மா கனகத்தைத் தூற்றிக் கொண்டேயிருப்பாள் அவன் முன்னால் – "தேவடியா... மோகினிப்பிசாசு.. குடும்பத்து ஆண்களை மந்திரம் போட்டு மயக்கி அவங்க பணத்தையெல்லாம் கொள்ளையடிக்கறவ..."

அம்மாவின் பேச்சை அவனால் நம்ப முடியவில்லை. ஆனால் அவளை மறுத்துப் பேசவும் வழியில்லை. அம்மா ரொம்பக் கோபக்காரி... மறைவில் அப்பாவைச்சபிப்பாள்.

சிறுகச் சிறுக மாறியது கோதண்டராமனின் மனம்.

மெட்ரிகுலேஷன் தேர்வில் மாவட்டத்திலேயே முதல்வனாகத் தேறினான் ராமன். திருச்சி புனித ஜோசப் கல்லூரியில் சிறந்த மாணவனென்றும் பெயரெடுத்தான். ஆங்கிலத்தில் நன்றாகப் பேசப் பயின்றான். பேசமட்டும் அல்ல, நினைக்கக் கூட; ஏன் அங்கிலத்திலேயே கனவு காணக்கூட!

ஆங்கில ஆசிரியர் கோமஸ் பாதிரியார் யாழ்ப்பாணத்துத் தமிழர், நல்ல கறுப்பு நிறம். கருகரு மீசை தாடி. தலை வழுக்கை, கனத்த குரல், பிரமாதமாகக் கற்பிப்பார், மாணவர்கள் சொக்கிப் போய்ப் பாடம் கேட்பார்கள். அவர் சொல்வார், "பிரிட்டிஷ் இனந்தான் உயர்ந்த இனம். அவங்க மொழி சிறந்தது, இலக்கியம் உயர்ந்தது, அவங்களோட பண்பாடு இலட்சியப் பண்பாடு. அதனால்தான் அவங்களுக்கு இவ்வளவு சிறப்பு, உயர்ந்த பண்பாடு இல்லேன்னா உயர்ந்த மொழியோ இலக்கியமோ பிறக்காது...

"அவங்களோடே ஒப்பிடறபோது இந்தியர்கள் காட்டு மிராண்டிகள் – பழக்க வழக்கங்களிலே, மதத்திலே. இந்து மதம் அநாகரீக மதம். இல்லாட்டா டமாரம் அடிச்சுக்கிட்டுப் பூதத்தைக் கும்பிடுவாங்களா? கோவில்ல காட்டு மிராண்டித்தனந்தான், குரங்கைக் கூடப் பூஜை செய்யறாங்க...

"பழக்க வழக்கங்களும் அந்த மாதிரிதான். ஒழுங்கென்ற பேச்சே இல்லே, ரெண்டு காசு கிடைச்சா வைப்பாட்டி வச்சுக்கு வாங்க–ஒண்ணு, ரெண்டு அதுக்கு மேலே கூட. நாட்டியம் அசிங்கம். அசிங்க அசிங்கமா உடம்பைக் குலுக்கி மினுக்கி ஆண்களோட வெறியைக் கிளப்பி அவங்களைக் கெடுக்கறது. இந்த மாதிரி நாட்டியம் கோவில்லே சாமிக்கு முன்னாலே! மகா பாவம்!..."

பாதிரியின் பேச்சைக் கேட்டு இந்து மதத்தை, இந்துப் பழக்க வழக்கங்களை, தேவதாசி முறையை வெறுக்கத் தொடங்கினான் ராமன். அவனுக்குக் கனகத்தின்மேல், தந்தையின் மேல் கோபம் வந்தது.

விடுமுறையில் வீடு திரும்ப, தந்தையின் முகத்தில் விழிக்கப் பிடிக்கவில்லை அவனுக்கு.

அவனது மனப்போக்கு தந்தைக்குப் புரியாமலில்லை, ஆனால் அவர் எதுவும் சொல்லவில்லை.

அறைத்தோழன் ராமானுஜம் "அடேயப்பா! இந்துக்கள் மேலே இவ்வளவு கோபமா?" என்பான்.

"இருக்காதா பின்னே!" இடைமறிப்பான் ராமன். "இந்துக்களோட மதத்திலே, பழக்க வழக்கங்களிலே நல்லது ஏதாவது இருக்கா? பாதிரியார் சொல்றது உண்மைதானே!"

"பிரமாத உண்மை! சும்மா நம்ம மனசைக் கெடுக்கறார்..."

"இல்லேயில்லே... அவர் சொல்றதெல்லாம் கரெக்ட்!..."

"அதெல்லாம் சுத்த ஹம்பக்!... தேவடியா எந்த நாட்டிலே இல்லே?... இந்தப் பாதிரியார்கள்தான் என்ன ஒழுங்கு!..."

"வாயைமூடு!..." கத்துவான் ராமன், "நீதான் ஒழுக்கங் கெட்டவன்னா..."

"ஆமா, அப்படித்தான்," நிமிர்ந்த நெஞ்சுடன் பதிலளித்தான் ராமானுஜம் "நான் கும்பகோணத்தான். மீசை முளைச்சதிலேயிருந்து தேவடியா வீட்டுக்குப் போறேன். கைகாட்டி மரத் தெருத் தாசிகளுக்கெல்லாம் என்னைத் தெரியும்..." ராமானுஜம் சிரிப்பான்.

அந்தச்சிரிப்பு அசிங்கமாகத் தெரியும் ராமனுக்கு. ராமானுஜத்தில் முகத்தில் ஒரு குத்துவிடலாம் போலிருக்கும்... கடைசியில் ராமன் அந்த அறையைவிட்டு வேறு அறைக்கு மாறிவிட்டான்.

ஆனால் அறை மாறிய பின்னும் பழக்கங்களை மாற்றிக் கொள்ள முடியவில்லை. கடிகாரப் பெண்டுலம்போல் ஊசலாடுகிறது மனம், காலையிலும் மாலையிலும் ஆசனத்திலமர்ந்து கொண்டு சந்தியா வந்தனம், காயத்திரி ஜபம், சங்கு சக்கர கதா தாரியான விஷ்ணுவின் தியானம்... ஆசாரம் மிக்க அய்யங்கார் குடும்பப் பழக்கங்கள்.

வடமொழி இலக்கியத்திலும் ஈடுபாடு. அதை அவன் தந்தையிடம் கற்றிருந்தான். காளிதாசனின் காவியம் படிக்கத் தொடங்கினால் தேன் குடித்த வண்டுபோல் மனம் மயங்கும். அவனது புதை மனதில் இளம் உமையின் மரவுரியணிந்த உருவம் தோன்றும், மரவுரியின் மறைப்புக்குள் மார்பகத்தின் பூரிப்பு... மேக

தூதம் வர்ணிக்கும் காதல் கலைவல்ல அழகியர் அவனது மன அரங்கில் நடமாடுவார்கள். அவர்களுடைய மின்னல் பார்வை கள்... இவையெல்லாம் அசிங்கமா இல்லையா என்ற பிரச்னை அப்போது ஒரு மூலையில் இராக்காவல் காக்கும் நாய்போல் தூங்கி வழியும். அப்போது அவனுக்கு ராமானுஜத்தின் பக்க வாத்தியம் தேவைப்படும். ராமானுஜம் கையால் தாளம் போடா விட்டால் அவனுக்கு வீணை வாசிக்க உற்சாகம் ஏற்பாடது.

பாதிரியார் குரல் கேட்டதும் அதுவரை தூங்கி வழிந்து கொண்டிருந்த நாய் விழித்துக்கொண்டுவிடும். அப்போது அவனுக்குக் கிருஸ்துவமதத்தில் சேர்ந்துவிடலாமா என்று தோன்றும். கிருஸ்துவைச் சரணடைந்து வாழ்க்கையைத் தூய்மை யாக்கிக்கொள்ள மனம் விழையும்.

இந்த மாதிரி மனம் ஊசலாடும், குழம்பும், சதாமங்கலத்து ஹாம்லெட் கோதண்டராமன் தன் அறையில் உலாவிக்கொண்டே சிந்திப்பான் – 'டு பி ஆர் நாட் டு பி ....'

தந்தையின் முகம் நினைவுக்கு வரும்–எல்லாவற்றையும் இழந்துவிட்ட பாவம் அதில் நெருப்புத்துண்டாக ஜொலிக்கும். தாயின் கண்கள் மனக் கண்ணில் தோன்றும் – 'அந்த மோகினிப் பிசாசிடமிருந்து உன் அப்பாவைக் காப்பாத்து!... பாட்டும் நடனமும் நாசகாரப் பழக்கங்கள்!...'

☆ ☆ ☆

மார்கழி மாதத்து அதிகாலை நேரம், வாடைக் காற்றில் உடல் சிலிர்க்கிறது. திருச்சியிலிருந்து ஸ்ரீரங்கம் செல்லும் ரஸ்தாவில் ஒரே கூட்டம். நடந்து செல்லும் மக்கள், குதிரை வண்டி, மாட்டு வண்டியில் செல்பவர்கள். இரவு பூராவும் ஸ்பெஷல் ரயில்கள் பிரயாணிகளைக் கொண்டு வந்து சேர்த்திருக்கின்றன. ஸ்டேஷனில் பயங்கரக்கூட்டம்.

இங்கு காவேரி நல்ல அகலம். அதன் கிழக்கே திருச்சிராப் பள்ளி, மேற்கே ஸ்ரீரங்கம். வைணவர்களுக்கு மிகவும் முக்கிய மான புண்ணியத்தலம் ஸ்ரீரங்கம்–ரங்கநாத சுவாமியின் இருப் பிடம். திருப்பதி விஷ்ணு கம்பீரமாக இருப்பார். ரங்கநாதரோ மென்மை நிறைந்தவர், நளினமானவர்.

இன்று வைகுண்ட ஏகாதசி. புனித நாள். இன்று ரங்க நாதரைத் தரிசிப்பது மிகவும் சிறப்பானது. அதற்காகத் தான் இந்தக் கூட்டம். காவேரியின் படித்துறைகளிலெல்லாம் மக்கள் குழு மியிருக்கிறார்கள்.

கோமஸ் பாதிரியாரின் உபதேசங்கள் எடுபடவில்லை இன்று. வைதிக வைணவப் பரம்பரையில் வந்த ராமனும் இங்கு வந்திருக்கிறான்.

இந்த விஷயத்தில் அவனுக்குக் கொஞ்சம் தயக்கம் ஏற்படாம லில்லை. ஆனால் நீண்ட காலப் பழக்கத்தை விட முடியவில்லை. வைகுண்ட ஏகாதசியன்று ஸ்நானம் செய்துவிட்டுக் கோவிலுக் குப் போவது இளம் பிராயத்துப் பழக்கம். நீச்சலடித்துத் தண் ணீரில் அட்டகாசம் செய்வான்.

அவன் ஆற்றுப் பாலத்தின் மேல் பிரயாணிகளின் கூட்டத் திலிருந்து விலகி ஓரத்தில் நின்றான். கீழே காவேரியின் கறுப்பு நீர் பாலத்தின் தூண்களில் மோதி இரைச்சலுடன் பாய்கிறது. வானத்தில் பிரகாசமாகத் தெரிகிறது விடிவெள்ளி.

படித்துறைகளில் குளிப்பது நடக்காதகாரியம். அவ்வளவு கூட்டம். துறையில்லாத இடத்தில் இறங்கிக் குளிப்பதே மேல்.

ராமன் பாலத்தைக் கடந்து வந்தான். இங்கிருந்து ரஸ்தா. அங்கிருந்து இருபத்தைந்து முப்பது அடி கீழே காவேரி ஓடு கிறது. கரையில் அடர்ந்த தென்னந்தோப்பு. அமைதியான இடம். இங்கு பிரயாணிகள் வரமாட்டார்கள். ராமன் ஆற்றுக்குள் இறங்கினான்.

இங்கே ஒரே அமைதி. தென்னங்கீற்றுகளினூடே பாயும் காற்று சர் சர் என்று ஒலியெழுப்புகிறது. ஆற்று நீருக்கு மேல் மிதந்து வருகிறது காற்று. காற்றோடு மிதந்து வருகின்றன வார்த்தைகள்– "மார்கழித்திங்கள்..." ஆண்டாள் திருப்பாவை யின் முதல் பாசுரத்தின் முதல் அடி...

அடுத்த நிமிடம் ராமனின் மனம் சதா மங்கலத்தில்... கிராமத்துக் கன்னிப்பெண்கள் அதிகாலையில் திருப்பாவை யைப் பாடிக்கொண்டே ஆற்றில் குளிக்கச் செல்கிறார்கள். வண் டின் ரீங்காரம் போன்ற அந்த இனிய ஒலியில் கிராமத்தின் உறக்கம் கலைகிறது. குளித்து முடித்த பெண்கள் பெருமாள் கோவிலுக்குப் போய் வழிபடுகிறார்கள்...

குளித்து விட்டுக் கரையேறினான். பாட்டு தெளிவாகக் கேட்கிறது – "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்..."

இங்கே பாடுவது பெண்கள் கூட்டமல்ல, ஒரேயொரு பெண் தான். மிக இனிய குரல் ஆற்றின் சலசலப்பையும் மீறிக்காற்றை நிறைக்கிறது.

ராமன் உற்றுக் கேட்டான். நல்ல பயிற்சி செய்த தொண்டை. தாமரைத்தேனின் மென்மை, இனிமை. மிகவும் மெல்லிய குரலில்தான் பாடுகிறாள்; இருந்தாலும் பூபாள ராகம் மிகத் தெளிவாக ஒலிக்கிறது. தங்கு தடையின்றி வருகிறது பாட்டு—காவேரியின் பெருக்குப்போல.

பாட்டு எங்கிருந்து வருகிறது?

பாட்டு வரிகளைத் திரும்பத் திரும்பப் பாடுகிறாள் பாடகி, அப்போது தான் மலர்ந்த பூக்களைக் குடலையிலிருந்து கொட்டு வது போல. இசையை அள்ளிக் கொடுக்கிறாள், அதிகாலையில் பறவை தன்னிச்சையாகப் பாடி வானத்தை நிறைப்பது போல. இசைரசிகன் ராமன் சொக்கிப் போய் நிற்கிறான்.

இருள் பிரிந்து கொண்டிருக்கிறது. கீழ்வானம் வெளுக்கத் தொடங்கிவிட்டது. இப்போது அங்கே இருளும் ஒளியும் ஒன் றோடொன்று பிணைந்தநிலை. இந்தப்பொழுதுக்கேற்ற ராகம் தான் பூபாளம், உஷத்காலத்தின் ஆத்மா. அந்த ஆத்மாவுடன் ஒன்றிப்போய்விட்டான் ராமன்.

திருச்சியின் வீடுகளுக்கு மேலேயிருந்து சூரியனின் கதிர்கள் ஆற்று நீரைத் தொடுகின்றன. இப்போது எல்லாம் தெளிவாகத் தெரிகிறது. அந்தக்கரையிலுள்ள கோவில் ஒன்றிலிருந்து சுப பந்து வராளி ராகத்தில் நாதசுரம் ஒலிக்கிறது.

பாடகி இப்போது பாசுரத்தின் கடைசி அடிக்குவந்து விட்டாள் – "படிந்தேலோர் எம்பாவாய்!"

ஆற்று நீரில் கழுத்துவரை அமிழ்ந்து இரண்டு பெண்கள் குளித்துக்கொண்டிருக்கிறார்கள். கரையிலிருந்து ரொம்பத் தொலைவில் இல்லை. அவர்களுடைய வெற்று முதுகுகள் தெளிவாகத் தெரிகின்றன. பழுத்த கடுக்காயின் நிறம் ஒருத்தி.

"சித்தி, தண்ணி வெது வெதுன்னு எவ்வளவு நல்லாயிருக்கு!" பெண்ணின் பேச்சு பாட்டுப்போல் இனிக்கிறது. இவள்தான் இவ்வளவு நேரம் பாடிக்கொண்டிருக்கவேண்டும். இளம் வயது. "ஆத்திலே குளிக்க இறங்கினா எனக்கு பாடத் தோண்றது..."

"சீக்கிரம் குளிச்சுட்டுவா... அக்கா வீட்டுக்கு உள்ளேயும் வெளியேயும் அலைஞ்சுக்கிட்டிருப்பா நம்மை எதிர்பார்த்து... வெயில் ஏர்றதுக்குள்ளே அவளைக் கோவிலுக்குக் கூட்டிக் கிட்டுப்போகணும்...." கட்டைத்தொண்டையில் பேசினாள் வய தான அம்மாள். அவள் கறுப்பாக, தடிமனாக இருந்தாள் – பாதி நரைத்த தலைமுடி.

அவர்கள் கரையேறினர். ராமன் தென்னை மரங்களுக்குப்பின் னால் மறைந்து கொண்டான். அவன் பாட்டில் மயங்கிப் போய்த் தன்னையறியாமலேயே இங்கு பெண்கள் குளிக்கும் இடத்துக்கு வந்தது பிசகு...

ஒரு ஜோடிப் பொற்குடங்களின்மேல் வந்துவிழுந்தது காலை யின் மஞ்சள் வெயில். மறுகணமே அவற்றைப் போர்த்தி மறைத் தது ஈரத்துணி. ஆனால் இந்த மறைப்பால் அவற்றின் கவர்ச்சி சற்றும் குறையவில்லை. மார்பிலிருந்து தொப்புளுக்குச் சற்றுக் கீழ்வரையில் திறந்த வெளி. சிற்றிடை கைப்பிடியிலடங்கும். தொடைகளின் தொடக்கம் இளமை வெள்ளம். ஈரத்துணியால் அந்த வெள்ளத்தை எவ்வளவுதான் கட்டுப் படுத்த முடியும்? அந்த அழகில் நிலைகுத்தி நின்றது ராமனின் பார்வை. ஆழ்ந்த ஏரித் தண்ணீர் போல அமைதியான கண்கள், புருவத்துக்கும் கண்ணுக்கும் இடைப்பட்ட பகுதி சற்றுப் புடைத்திருந்தது. நுனியில் சற்று விரிந்த சிறு நாசி. அதில் இரண்டு வைர மூக்குத்திகள், சாறு ததும்பும் ஆரஞ்சுச்சுளை போன்ற உதடுகள். உருண்டை முகம்.

அவளது நனைந்த தலைமுடி முழங்கால் வரை நீண்டு தொங்குகிறது. சந்தனுவையும் கங்கையையும் சித்திரிக்கும் ரவிவர்மா தீட்டியுள்ள ஓவியத்தில் காணும் கங்கா தேவியை நினைவூட்டுகிறாள் அந்தப் பெண்.

ஆகா, நான் மட்டும் ஓவியனாயிருந்திருந்தால்?...

பளபளக்கும் வெயிலை இன்னும் பளபளப்பாக்கிக் கொண்டு அவள் சென்றுவிட்டாள். வழியெல்லாம் அவளது உடலிலிருந்து வைரங்களும் முத்துக்களும் விழுந்தன.

வயது பதினாறு முதல் பதினெட்டுக்குள் இருக்கும். அதற்கு மேல் நிச்சயம் இருக்காது. கழுத்தில் தாலி இல்லை. கன்னிப் பெண்தான்.

இவள் யார்? எந்த ஊர்?

ராமனின் மனம் சலனப்பட்டுத்தவித்தது.

இதுவரை உறங்கிக் கிடந்த மனச்சாட்சி இப்போது விழித்துக் கொண்டு அவனைக்கடிந்துகொண்டது... ஒளிஞ்சிக்கிட்டு ஒரு இளம் பெண்ணோட உடம்பைப் பார்த்துட்டியே! எவ்வளவு பெரிய பாவம்! சீ... சீ!...

எந்த சாதிப் பெண்ணோ? பிராமணப்பெண்ணாயிருந்தால், அய்யரோ அய்யங்காரோ?... தாசிப்பெண்ணாகக் கூட இருக்க லாம்! ஐயோ, ஐயோ... சீ, என்ன பாவம் பண்ணிட்டேன்....

சட்டென்று ஆற்றில் குதித்தான் ராமன் கைகால்களை ஆட்டிக்கொண்டு நீந்தத் தொடங்கினான், தன் பாவ உணர்வைத் தண்ணீரில் கழுவிக் கொள்ள விரும்பினான் அவன். காவேரி சர்வபாவ சம்ஹாரிணி.

நல்லவேளை ராமானுஜம் பக்கத்தில் இல்லை....

ஸ்ரீரங்கம் கோவிலில் நுழைய முடியாதபடி அவ்வளவு கூட்டம். கோவிலின் அவ்வளவு பெரிய பிரகாரத்தில் எள்போட்டால் எள் விழாது. ராமன் கூட்டத்திற்குள் இடித்துப் புகுந்து கோவிலுக்குள் நுழைந்தான்.

கோவிலுக்குள்ளே இன்னும் அதிக நெரிசல். மிருதங்கம் ஜால்ரா ஒலிக்க நாம சங்கீர்த்தனம் செய்கிறார்கள் நாமந்தரித்த வைணவ பக்தர்கள். ரங்கநாத சுவாமி கருடவாகனத்தில் எழுந் தருளியிருக்கிறார். உற்சவ விக்கிரகத்தைப் பல்லக்கில் வைத் துக் கோவிலைச் சுற்றி ஊர்வலம் வருகிறார்கள். பிரகாரத்தின் இருபுறமும் பெரிய பெரிய தூண்கள்.

ராமன் கூட்டத்திலிருந்து விலகி ஒரு தூண்பக்கம் போய் நின்று கொண்டான். ஊர்வலத்தில் மக்கள் வெள்ளம்–கிழவர்கள், இள வயதினர், குழந்தைகள் – ஆண்கள், பெண்கள். எல்லோருடைய பார்வையும் உற்சவமூர்த்தியின் மேல் பதிந்திருக்கிறது. ராமனின் பார்வை மட்டும் மக்கள் கூட்டத்தை மேய்கிறது – குறிப் பாக மகளிர் இருக்கும் பக்கத்தில்

அவன் தான் புனித ஜோசப் கல்லூரியில் கோமஸ் பாதிரி யாரின் மாணவன் என்பதை மறந்துவிட்டான்.

ஒரே நெரிசல், ஒரே குழப்பம், ஆரவாரம். ராமனின் பார்வை ஓரிடத்தில் நிலைத்தது. வெண் பளிங்குப் பதுமை ஒன்று– இல்லை, பெண்தான்–கூட்டத்தில் இடிபட்டு இங்கு மங்கும் ஊசலாடுகிறாள். நிலைகுலைந்து கீழே விழும் தறுவாயில் அவள் ஆதாரத்தைத் தேடிக் கைகளை நீட்டுகிறாள். உற்சவ மூர்த்தி யின் மேல் கண்களைப் பதித்திருக்கும் மக்கள் கூட்டம் அவளைக் கவனிக்கவில்லை... அவள் கீழே விழுந்துவிடப் போகிறாள்!... விழுந்துவிட்டால் கூட்டத்தின் நெரிசலில் மிதி பட்டுப் போவாள்!

ராமன் அந்த நெரிசலுக்குள் குதித்தான். இடித்துப் புகுந்து கொண்டு முன்னேறி அந்தப் பெண்ணை நெருங்கி அவளை அப்படியே பிடித்துக் கொண்டான்.

நெரிசலின் அழுத்தத்தை ராமனின் முதுகு தாங்கிக் கொண் டது. கூட்டம் அவர்களைக் கடந்து சென்றது. அதுவரை அவன் பல்லைக் கடித்துக் கொண்டு அங்கேயே அசையாமல் நின்றி ருந்தான். அவனுக்கு இவ்வளவு பலம் இருக்கிறதென்று இது வரை அவனுக்கே தெரியாது.

அவன் அப்பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு அவளை வெளியே அழைத்து வந்தான். அங்கே கூட்டம் அதிக மில்லை.

"நீ யாருப்பா?"

"என்பேருகோதண்டராமன்..."

"இல்லே, நீ சாட்சாத் ரங்கநாதன்தான்!... எனக்கு மூச்சுத் திணறித்து... மயக்கம் வரும்போலிருந்தது... அப்போ ரங்க நாதனே பல்லக்கிலேருந்து இறங்கி வந்து என் கையைப் பிடிச்சு என்னைக் காப்பாத்தினார்..."

"இந்த மாதிரி கூட்டத்திலே போய் நிற்கலாமா?"

"எனக்குத் தெரியல்லேப்பா..."

பெண்மணியை நன்றாகக் கவனித்தான் ராமன். மெழுகு தடவியது போன்ற மென்மையான உடல், அடர்த்தியான வெள்ளித்தலைமுடி, மூக்கில் வைரமூக்குத்தி, நீளவாட்டமான முகத்துக்கேற்ற மூக்கு, பெரிய பெரிய கண்கள்... ஆனால் கண் களின் பாப்பாக்கள் மட்டும் என்னவோ மாதிரி... கத்தரி நிறத் தில் மைசூர்ப்பட்டுப் புடைவையணிந்திருந்தாள். இந்த வயதிலும் அழகுக்குக்குறைவில்லை...

"கூட்டம் நெருக்கிக்கிட்டு வந்ததை நீங்க கவனிக்கல்லியா?"

"இல்லேப்பா, எனக்குக் கண் தெரியாது... பார்வை போய் ரொம்பவருஷமாச்சு..."

ராமன் திடுக்கிட்டான்– "அப்பமன்னா நீங்க கோவிலுக்கு ஏன் வந்தீங்க? கோவிலுக்கு வர்றவங்க சாமி பார்க்கத்தான்..."

"கண்ணாலே மட்டுந்தான் சாமியைப் பார்க்க முடியுமா? இந்தக் கோவில்லே எவ்வளவோ மாடுகள் சுத்தறது... பைத்தி யக் காரங்களும் இருப்பாங்க... அவங்கள்ளாம் சாமியைப் பார்க் கறாங்களா?"

ராமனுக்கு வெட்கமேற்பட்டது. "வாங்க, உங்களை உங்க வீட்டிலே கொண்டு போய்விடறேன்... உங்க வீடு எங்கே?"

"நான் துணையோடேதான் வந்தேன். கொஞ்சம் இங்கேயே நிப்போம்... அவ வந்துடுவா..."

இன்னொரு வயது முதிர்ந்த பெண்மணி அங்கே ஓடிவந்தாள். அவளது உடல் பதறிக்கொண்டிருந்தது. அவர்களைப்பார்த்த தும் பெரிதாக அழத்தொடங்கிவிட்டாள்– "ஐயோ, அக்கா! நீ கூட்டத்திலே என் கையை விட்டுட்டு எங்கே போயிட்டே? நான் ரொம்ப பயந்துபோயிட்டேன் உனக்கு என்ன ஆச்சோன்னு... அடிகிடி படல்லியே உனக்கு?..." அவள் குருட்டுப் பெண் மணி யின் உடலைப் பரிவுடன் தடவிக் கொடுத்தாள்.

ராமனுக்கு ஒரே ஆச்சரியம். இவளைத்தான் காலையில் காவேரிக்கரையில் பார்த்திருந்தான் அவன்.

அந்த இளம் பெண் – ரவிவர்மா ஓவியத்தின் கங்கா தேவி – எங்கே?

☆ ☆ ☆

ஜனவரி மாதத் தொடக்கம், சூடு தாங்காமல் தவிக்கிறான் அந்தோனி. ஜனவரி மாதத் துவக்கத்திலேயே இவ்வளவு சூட்டைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை. சிறிய ரயில் வண்டியின் சிறிய பெட்டி. வேறு – தூத்துக்குடி எக்ஸ்பிரஸ். மதுரையிலிருந்து தென் கிழக்குத் திசையில் ஓடிக் கொண்டிருக்கிறது. இருபுறமும் வெயிலில் பொசுங்கும் வெட்ட வெளி.

அந்தோனி கம்பளி சூட் அணிந்திருக்கிறான். பதினான்கு வருடங்களுக்குப் பிறகு லண்டனிலிருந்து சொந்த ஊருக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறான். இந்த ஊரின் வெப்ப தட்ப நிலை கூட மறந்துபோய்விட்டிருந்தது அவனுக்கு. கோட்டைக் கழற்றிச் சுருட்டிப் பெஞ்சியின்மேல் வைத்திருக்கிறான். சட்டையின் உட்புறம் வியர்வையில் நனைந்து பிசுபிசுக்கிறது. நாக்கு உலர்ந்து விட்டது. ரயில் பெட்டியில் இரண்டு மின் விசிறிகள் சுற்றிக் கொண்டிருக்கின்றன. வெளியிலிருந்து சூட்டுக்காற்று வீசுகிறது, உடலைப் பொசுக்குகிறது. பெட்டி முழுதும் தூசி, கரிப்புகை...

ரயிலின் வேகத்தைவிட ஆட்டம் அதிகம். வயிற்றின் நாடி நரம்பெல்லாம் புரட்டியெடுக்கிறது. உட்கார்ந்திருப்பதே கஷ்டமாயிருக்கிறது, நிற்பதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அந்தோனி கால்சராயையும் கழற்றிவிட்டான். நல்லவேளை, பெட்டியில் வேறு பிரயாணி யாருமில்லை, இப்போது மணி பத்துதான். ஆனால் இதற்குள் கண்ணால் ஜன்னலுக்கு வெளியே பார்க்க முடியவில்லை. அந்தோனி ஜன்னல் கதவுகளைச் சாத்தி விட்டு, திருச்சியில் வாங்கின துவாலையைத் தண்ணீரில் நனைத்து அதைக்கொண்டு முகத்தை மறைத்துக் கொண்டு படுத்துக் கொண்டுவிட்டான்.

இங்கே வர வேண்டியிருக்குமென்று இரண்டு நாட்களுக்கு முன்னால் கூட அவனுக்குத் தெரியாது. ஹைகமிஷனர் கிருஷ்ண

மேனன் அவனைத் தன்னறைக்கு வரச்சொல்லி அவன் கையில் ஒரு தந்தியைக் கொடுத்தார் – "நீ உடனேபோ!... உன் அப்பா சாகக்கிடக்கறாராம்...."

பிறகு தன் உதவியாளரைக் கூப்பிட்டார், "அந்தோனிக்கு மூணுமாச லீவு கொடு."

உதவியாளருக்கு ஒரே ஆச்சரியம். "உங்க அப்பா சாகக் கிடக்கறாரா?... உங்களுக்கு உறவுக்காரங்க யாருமே இந்தியா விலே இல்லேன்னுதான் நான் நினைச்சுக்கிட்டிருந்தேன்... இவ்வளவு நாளிலே... சரி, ஒரு விண்ணப்பம் எழுதிக் கொடுங்க. நான் தலைமைச் செயலருக்கு போன் பண்றேன்... உங்களுக்குத் தான் லீவு நிறைய இருக்கே..."

அன்றைக்கே ஹீத்ரோ விமான நிலையத்திலிருந்து சாந்தாக் குரூஸ் விமான நிலையத்துக்குப் பயணம்...

ஒன்றிரண்டு வருடங்களல்ல, பதினான்கு வருடங்கள், ராமர் வனவாச காலம். ராமாயணத்தில் ஏழு காண்டங்கள். அவனுடைய வாழ்விலும் பல காண்டங்கள் கழிந்துவிட்டன.

இப்போது யுத்தகாண்டமா?

ஆயிரத்துத்தொள்ளாயிரத்து முப்பத்தேழாம் ஆண்டு டிசம்பர் இருபத்து நாலாம் தேதி கிருஸ்துமஸுக்கு முதல் நாள். அதற்குப் பின் எல்லாக் கிருஸ்துமஸ்துமஸ்களும் வெளிநாட்டில் தான் கழிந்தன. அவன் போனபோது இந்தியா அடிமைநாடு. இப்போது இந்தியா இரண்டு பட்டுவிட்டாலும் சுதந்திர நாடு.

அந்தோனி தன் முகத்தை மறைத்திருந்த துவாலையை எடுத்துவிட்டு எழுந்து உட்கார்ந்தான். ஜன்னல் கதவுகளைத் திறந்துவிட்டான்.

அவன் பம்பாயில் விமானத்திலிருந்து இந்திய மண்ணில் காலெடுத்து வைக்கும்போது உணர்ச்சிவசப்பட்டான். இந்த நாட்டின் வானம் புனிதமானது; காற்று, மண் எல்லாமே புனிதம். நூற்றுக்கணக்கான மக்கள் தங்கள் உயிரைத்தியாகம் செய்து இந்த சுதந்திரத்தைப் பெற்றிருக்கிறார்கள். நஜ்ருலின் அந்தப் பாட்டு... நாங்கள் அந்தக் காலத்தில் பாடுவோம்... "தூக்கு மேடையில் வாழ்வின் வெற்றிப் பாடலைப் பாடிச் சென்ற வர்கள்"... குதிராம், பகத்சிங், வாஞ்சி அய்யர்... இன்னும் எவ்வளவு பேரோ... நாட்டின் புத்திர ரத்தினங்கள் செய்த தியாகம் பிரிட்டிஷாரின் கொடுமைக்கு முடிவு கட்டியது. சி.ஆர்.தாஸ், காந்திஜி, நேரு, சுபாஷ்...

"உங்க லக்கேஜிலே என்னென்ன சாமான் இருக்கு?"... இதற்குள் சுங்கச்சாவடிக்கு வந்துவிட்டான் அந்தோனி.

"வேறென்ன? கோட், பாண்ட், சட்டை, துணி மணிகள்..."

"இதெல்லாம் என்ன?... ஃபைவ் ஸ்டார், ராயல் செல்யூட், ஏக்ஷா நம்பர் ஒன், மார்ட்டெல்ஸ் கோனியாக், டிரம்பூயி..."

மதுப்பிரியன் அந்தோனி சிலபோத்தல்கள் கொண்டு வந்திருந் தான்.

"கொஞ்சம் இருங்க. இதோவரேன்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து மறைந்துவிட்டார் சுங்க அதிகாரி.

அந்தோனி காத்திருந்தான் ஒரு மணி நேரம், பிறகு கையில் ரிஜிஸ்தருடன் வந்துசேர்ந்தார் அதிகாரி. "நீங்க ஒரு போத்தல் தான் எடுத்துக்கிட்டுக் போகலாம். பாக்கிக்கெல்லாம் சுங்க வரிகட்டணும்... தவிர இங்கே மதுவிலக்கு அமுலிலே இருக்கு..."

"நான் சென்னைக்குப் போயிக்கிட்டிருக்கேன்..."

"சென்னையிலுந்தான் மதுவிலக்கு இருக்கு..." தகராறு செய்யத் தொடங்கினார் சுங்க அதிகாரி.

அந்தோனி பார்த்துக்கொண்டுதானிருக்கிறான், பக்கத்து மேஜையில் நிற்கும் பிரயாணி நான்கு பெரிய பெரிய சூட்கேஸ் களில் அடைத்துக்கொண்டு வந்திருக்கிறார் அன்னிய நாட்டுச் சாமான்களை. எவ்வளவு விதமான சாமான்கள்—காமிரா, கடி காரம், டேப்ரிகார்டர், ரொட்டி சுடும் இயந்திரம், கேசத்தைப் பின்னிவிடும் இயந்திரம் முதற்கொண்டு! மனிதர் ஐரோப்பா முழுவதையும் கட்டி எடுத்துக்கொண்டு வரமுடிந்திருந்தால் அதையும் செய்திருப்பார்! பிரயாணிக்குப் பக்கத்தில் சூட் அணிந்த பருமனான மனிதர் ஒருவர் நின்று கொண்டு சுங்க அதிகாரியுடன் மிகவும் உல்லாசமாகப் பேசுகிறார், சிகரெட் பெட்டியை எடுத்து அதிகாரியிடம் நீட்டுகிறார். அவர் பிரயாணி யின் உறவினர் போலும்.

சூட்கேஸ்கள் பட்பட்டென்று மூடப்படுகின்றன. அவற்றின் மேல் சுங்க அதிகாரி சாக்குக் கட்டியால் ஏதோ எழுதுகிறார். சுங்கப் பரிசோதனை முடிந்துவிட்டது பத்தே நிமிடங்களில். உறவினரிடமிருந்து சுங்க அதிகாரியின் கைக்கு ஒரு காகித உறை மாறியது அந்தோனியின் கண்களுக்குத் தப்பவில்லை.

"வெளிநாட்டு மதுவகைகள் மேல் நூறு சதம்வரி, அப்படியும் நீங்க இவற்றை உடனே எடுத்துப்போக முடியாது. அப்பறம் வந்து டிக்ளரேஷன் கொடுத்து அனுமதி வாங்கிக்கிட்டுத்தான் எடுத்துப்போகலாம்..."

"இந்தப் போத்தல் நாலைஞ்சு எடுத்துக்கிட்டுப்போகச் சென்னையிலேருந்து பம்பாய் வரமுடியுமா?" அந்தோனி சீறி னான். "சரி, வரியை வாங்கிக்கிட்டுச்சாமானைக் கொடுங்க..."

"அதான் சொன்னேனே—மதுவிலக்கு அமுலில் இருக்கற இடத்துக்கு விசேஷ அனுமதிஇல்லாமே மதுவகைகள் எடுத்துப் போகக் கூடாது."

"ஆனால் நான் அயல் நாட்டுக் குடிமகன். இந்திய ஹைகமிஷன்லே வேலை பார்க்கிறேன்..."

"அப்படியா?" அதிகாரியின் விறைப்பு மறைந்துவிட்டது. சிரித்துக் கொண்டே சொன்னார், "இவ்வளவு நல்ல நல்ல டிரிங்க்ஸ் எல்லாம் நீங்களே எஞ்சாய் பண்ணுவீங்களா? எங்களுக்கும் கொஞ்சம்...."

அந்தோனிக்குத் திகைப்பு.

"ராயல் செல்யூட்டை நீங்க வச்சுக்கங்க. ஃபைவ் ஸ்டாரை எனக்குப் பிரசென்டாக் கொடுங்க... நாம ரெண்டு பேருமே சர்க்கார்ஊழியர்கள்தானே!..."

"ஓ, அதுக்கென்ன... இந்தாங்க..."

அதிகாரி அவனுக்கு நன்றி சொல்லிவிட்டுப் போத்தலை வாங்கிக்கொண்டு அதை ஒரு காகிதத்தில் சுற்றிவைத்தார்.

அந்தோனி தன் பெட்டியைத்தூக்கிக்கொண்டு சென்னை விமானத்தைப் பிடிக்க ஓடினான்.

அவன் சுங்கப் பரிசோதனை அறையிலிருந்து வெளி வந்ததுமே அவனிடம் ஓடி வந்தான் சோதா மாதிரி தோற்ற மளித்த ஒருவன் வலையில் விழுந்த ஈயைப்பிடிக்க ஓடிவரும் சிலந்திபோல. "எனி ஃபாரின் மணி?... வெரிகுட் எக்சேஞ்ஜ் ரேட்..."

அந்தோனிக்கு ஒரே எரிச்சல் அவன் பதில் சொல்லாமல் போய்க்கொண்டேயிருந்தான்.

அந்த ஆள் பக்கத்தில் வந்து கொண்டிருந்த இரண்டு வெளிநாட்டுப் பிரயாணிகளிடம் ஓடினான்—"வெரிகுட் எக்சேஞ்ஜ் ரேட்சார்..."

பிரயாணிகளில் ஒருவன் பல்லைக் கடித்துக்கொண்டு அந்த ஆளை ஏதோ திட்டினான். பிறகு தன் தோழனின் கையைப் பிடித்துக்கொண்டு ஆங்கிலத்தில் சொன்னான்," இந்தத் தேவடியா மகன்களை நம்பாதே!... இந்தியர்களை நம்பக்கூடாது! நீ இந்த நாட்டுக்குப் புதிசா வந்திருக்கே. ரொம்ப ஜாக்கிரதையா இரு. இந்த ஊர் ஜனங்க மோசடி செய்யறவங்க, அல்லது பிச்சைக்காரங்க..."

இந்த வார்த்தைகள் அந்தோனியின் காதுகளைச் சுட்டன. அந்தப் பிரயாணியின் முகத்தில் ஒரு குத்துவிட்டு மூக்கையுடைக்கலாம் போலிருந்தது அவனுக்கு.

அன்னிய நாட்டுப் பண வேட்டைக்காரன் இப்போது அந்தோனி சுங்கப் பரிசோதனை அறையில் பார்த்த பிரயாணி யைப் பிடித்துக்கொண்டு விட்டான். இருவரும் ஏதோ குசுகுசு வென்று பேசிக்கொண்டே பாத்ரூமை நோக்கி நடந்தார்கள்...

சென்னை எழும்பூர் ரயில் நிலையத்தில் ஒரே தண்ணீர் வெள்ளம். ரயிலில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு எதிலுமே இடமில்லை. எல்லா இருக்கைகளும் ரிசர்வாகிவிட்டன. வேறு வழியில்லை, மூன்றாம் வகுப்பில் போக வேண்டியதுதான்...

மூன்றாம் வகுப்புக்கு டிக்கெட் கொடுக்குமிடத்தை நோக்கி நடந்தான் அந்தோனி.

"அடேடே, உங்க மாதிரி ஆளுங்க மூணாம் கிளாசிலே பிரயாணம் செய்யலாமா? உங்க சூட்கேசைப்பார்த்தால் நீங்க லண்டனிலேலிருந்து வரீங்கன்னு தெரியுது..." ரயில் ஊழியன் ஒருவன் சொன்னான். "எங்கிட்டே பணங்கொடுங்க. நான் ஏற்பாடுசெய்யறேன்..."

பதினைந்து நிமிடங்களுக்குள் ரிசர்வேஷனோடு முதல் வகுப்பு டிக்கெட் அந்தோனியின் கைக்கு வந்துவிட்டது. அவனுக்கு அதிகப்படியாகப் பத்து ருபாய் செலவாயிற்று, அவ்வளவுதான். "மேலதிகாரிக்கு இதிலே பங்கு உண்டு சார்... அதனாலே அதுக்குக் கொறச்சலா..." என்று இளித்தான் ரயில் ஊழியன்.

சாந்தாக்ருஸ் நிலையத்தில் அந்த அன்னிய நாட்டுப் பிரயாணி கூறியது அந்தோனியின் நினைவுக்கு வந்தது– "... இந்தியாக் காரங்க ஒண்ணு மோசடி செய்யறவங்க அல்லது பிச்சைக் காரங்க..."

இரவு முழுதும் அந்த முதல் வகுப்புப் பெட்டியில் அவன் மட்டும்தான் பிரயாணி. ஆனால் ரிசர்வேஷன் லிஸ்ட்படி எல்லா இருக்கைகளும் ரிசர்வாகிவிட்டிருந்தன!

இதெல்லாம் ஏன் இப்படி?

இம்மாதிரிச் சிந்தனைகளில் இரவில் தூக்கம் வரவில்லை அந்தோனிக்கு...

காந்திஜியின், நேருவின் இந்தியா... "திருடுபவர்கள், கறுப்புச் சந்தைப் பேர்வழிகள் அருகிலுள்ள விளக்குக் கம்பத்தில் தூக்கி விடப்படுவார்கள்!" என்றாரே நேரு...

எங்கோ ஒரு பெரும் தவறு நேர்ந்துவிட்டது... வெளி நாட்டி லிருந்ததால் அவனுக்கு இந்தியாவின் உண்மை நிலவரம் தெரியா மல்போய்விட்டது.

விருது நகர் வந்துவிட்டது.

அந்தோனியின் கண், காது, மண்டை எல்லாம் சூட்டில் எரிகிறது. ஒரு குளிர்பானம் குடித்தால் தேவலை,

அவன் ஸ்டேஷனில் இறங்கி இங்குமங்கும் பார்த்தான். குளிர் பானம் ஒன்றும் கிடைக்கவில்லை. குடிதண்ணீர் ஒரே சூடு. இரண்டு கப் காபி சாப்பிட்டுத்தாகத்தைத் தணித்துக்கொண்டு வண்டியில் ஏறினான்.

இப்போது அவனுடைய பெட்டியில் இன்னொரு பிரயாணியும் இருந்தார். சூட், டையணிந்த கறுப்புத்துரை.

ரயில் விருதுநகர் ஸ்டேஷனுக்குள் நுழையுமுன் அவன் கண்ட காட்சி நினைவுக்கு வந்தது. குமட்டிக்கொண்டு வந்தது அவனுக்கு...

ரயில் பாதையோரத்தில் ஒரு சேரி. வரிசை வரிசையாகப் பனையோலை வேய்ந்த குடிசைகள். குடிசைகளுக்கு நடுவே ஒரு குறுகலானபாதை. அதில் குப்பையுங்கூளமும். அந்தப் பாதையில் எலும்பும்தோலுமாக நடமாடிக்கொண்டிருப்பவர்கள் மனிதர்கள்தாமா? சிலரின் இடுப்பில் ஒரு சிறு துணிக்கந்தல். சிறுவர்களின் உடம்பில் அதுவுமில்லை, பெண்களின் மேலுடம்பு கூட மறைக்கப்படவில்லை. சேறும் புழுதியும் அப்பிய உடம்புகளுடன் சிறுவர் சிறுமியர் நாய்களுடனும் பன்றிகளுடனும் ஒன்றாகக் கலந்துவிட்டார்கள்.

சேரியையொட்டிப் பெரிய சாக்கடையில் சேறு கலந்த அழுக்குத் தண்ணீர் நாற்றமடிக்கிறது. ஆண்களும் பெண்களும் அதில்தான் மலஜலங்கழிக்கிறார்கள். நாய்களும் பன்றிகளும் அந்த மலத்தைத் தின்கின்றன. இந்த மாதிரி நரகக் காட்சியை வெகுகாலமாகப் பார்த்ததில்லை அந்தோனி...

பண்டையப் பெருமை வாய்ந்த பாரத நாடா இது!

சாந்தாக்ரூஸ் விமானநிலையத்தில் பாரத மண்ணில் அடியெடுத்து வைக்குமுன் அவனிடமிருந்த பெருமித உணர்வு மறைந்துவிட்டது...

வெளியே வெறும் பொட்டல்... மணல்... நடுநடுவே வேல மரங்களும் பனை மரங்களும் வெயிலில் பொசுங்கிக்கொண்டிருக்கின்றன.

"நீங்க லண்டனிலேருந்து வரீங்களா?" சக பிரயாணி கேட்டார். அவனுடைய சூட்கேசின்மேல் ஒட்டியிருந்த சீட்டைப் பார்த்திருக்கிறார். அவருடைய ஆங்கில உச்சரிப்பு ஒரு மாதிரியாக இருக்கிறது.

"ஆமா... நீங்க இந்தப் பக்கமா?"

"நான் மிஸ்டர் ரத்னசாமி நாடார். தானிய வியாபாரம், ஆர்டர் சப்ளை பிசினெஸ்... விருதுநகர் நகர சபையோட சேர்மன்..." மனிதரின் கழுத்தில் மடிப்பு மடிப்பாகச் சதை...

இப்போதுதான் அந்தோனி கவனித்தான். அவருடைய உடை கதர். அவர் தன் கைப்பையிலிருந்து ஒரு காந்திக் குல்லாயை எடுத்துத்தலையில் வைத்துக் கொண்டார். "ஐ ஏம் எ ஃபாலோயர் ஆஃப் காந்திஜி.." என்றார்.

"ஸ்டேஷன் வரதுக்கு முன்னாலே அந்தச்சேரி..."

"அது அரிஜனங்க சேரி..."

"பதினாலு வருசத்துக்கு முன்னாலேயும் இதேமாதிரிதான் இருந்தது..."

"பதினாலு வருசமா நீங்க இங்கே இல்லையா?"

"இல்லே... நாடு சுதந்திரமான பிறகு இப்போத்தான் முதல் தடவையா வரேன். நாடு கொஞ்சங்கூட முன்னேறலியா?"

"முன்னேறாமே என்ன? விருது நகர் இந்தப் பிராந்தியத் திலேயே பெரிய தானியச் சந்தை. சுதந்திரத்துக்குப்பிறகு எவ் வளவு பெரிசாயிருக்கு தெரியுமா? ரஸ்தாக்கள் அகலமாயிருக்கு. ஊர் பெரிசாயிருக்கு. மக்களோட வருமானம் பெருகியிருக்கு... நான் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். என் சொந்த முயற்சி யாலே முன்னுக்கு வந்து பெரிய வியாபாரி ஆயிருக்கேன். ஊர்க் காங்கிரசோட செகரெட்டரி, நகர சபைச்சேர்மன்... காங்கிரஸ் மேலிடத்திலே முக்கியமான தலைவர் காமராஜ் இந்த ஊர்க் காரர் தான். அதிலே எங்களுக்குப் பெருமை..."

"ஆனால் அந்தச் சேரி..."

"அதுகளை மாத்தக் கடவுளாலே கூட முடியாது! அவ்வளவு மோசம்! குடிச்சுக்குடிச்சுப் பாழப்போறாங்க. அவங்களை யார் திருத்த முடியும்!... தவிர..."

அந்தோனி மேலே எதுவும் பேசவில்லை.

விருது நகருக்குப் பிறகு சாத்தூர். அதன் பிறகு மணியாச்சி. மணியாச்சியில் ரயில் வெகுநேரம் நின்றது.

இதற்குப்பின் தூத்துக்குடி. அங்கே போய்ச்சேர இன்னும் சில மணிகள் பிடிக்கும்.

அவன் துவாலையை நனைத்து முகத்தை மூடிக்கொண்டு படுத்துவிட்டான். இவ்வளவு நேரத்துக்குப்பின் இப்போது தூத்துக்குடி நினைவுகள் அவன் மனதில் அலைமோதத் தொடங்கின...

☆ ☆ ☆

1937ம் ஆண்டு டிசம்பர் மாதம் கிருஸ்துமஸுக்கு முதல் நாள் இரவு ஒரு மணிக்கு ஒரு கூட்ஸ் வண்டியில் தூத்துக்குடியை விட்டு ஓடினான் அந்தோனி...

பேராசிரியர் சர்க்கார் அவனுக்குச் செய்தியனுப்பியிருந்தார். பரீட்சை முடிவு அதிகாரப் பூர்வமாக வெளிவருமுன் உள் வட்டாரத்திலிருந்து கிடைத்த செய்தி– "நீ எகனாமிக்ஸில் முதல் வகுப்பில் தேறியிருக்கிறாய். அநேகமாக உனக்குத்தான் முதல் இடம். நீ இங்கே இருந்திருந்தால் உன்னைக் கட்டித்தழுவிக் கொண்டிருப்பேன். என்னவென்று சொல்வேன் உன்னை– அப்பனுக்கேற்ற பிள்ளை என்றா. இல்லை, குருவுக்குத்தக்க சீடன் என்றா?

"அந்தோனி, நீ அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? தூத்துக்குடியில் கிணற்றுத்தவளையா? உன் தந்தை உன்னைத் தொழிலில் நுழைத்துவிட்டாரா? எனக்கு இதில் இஷ்டமில்லை. உன் மாதிரிப் பையன் முட்டைப் பொரி மாதிரி மலிவாகக் கிடைத்துவிடமாட்டான். நீ வெறும் பணம் சேர்ப்பதில் உன் வாழ்வைப் பாழாக்குவதை என் மனம் ஏற்றுக்கொள்ளவில்லை. அப்படிச் செய்தால் நீயும் பாழாவாய், நாட்டையும் கெடுப்பாய். நீ தொழில் செய்து வெள்ளையாகவும் கறுப்பாகவும்–கறுப்புத்தான் அதிகம்–நிறையப்பணம் சேர்ப்பாய். இந்த நாட்டில் நேர் வழியில் முட்கள் பல. குறுக்கு வழியில் பணம் பண்ணுவது எளிது. பணம் சேர்த்தவனுக்கு சமூகத்தில் கௌரவம், அவன் முழுக்க முழுக்க சுயநலவாதி. நீ இந்த வழியிலிருந்து விலகி வா. நான் லாஸ்கிக்குக் கடிதம் எழுதுகிறேன். நீ லண்டன்போய் அவரிடம் எகனாமிக்ஸ் படி, லாஸ்கி நல்ல குரு. உன் கண்களைத் திறப்பார். நீ உலகத்தைஉணரலாம்..."

படிப்பதற்குப் பணம் தேவைப்படும் என்பதும் பேராசிரியர் சர்க்காருக்குத் தெரியாமலில்லை. அவர் எழுதியிருந்தார்– "உன் அப்பாதான் ஏகப்பட்ட பணம் சேர்த்து வைத்திருக்கிறாரே, அதை நல்ல காரியத்தில் செலவு செய்யாவிட்டால் சாம்பலில் ஊற்றிய நெய்போல் வீணாகிவிடும். நீ அவரிடம் பணம்கேள். காட்டுப் பன்றிபோல் பிடிவாதம் பிடித்துப் பணம் வாங்கு. அப்படியும் அவரிடம் பணம் பெயராவிட்டால் எனக்கு எழுது... சாதாரணமாக, பல்கலைக்கழக மேலிடத்துக்குப்போய்ப் பணத் துக்காக மறியல் செய்ய எனக்குப்பிடிக்காது. ஆனால் உனக்காக அதுவும் செய்யத்தயார். லண்டனில் உன் படிப்பு என் பொறுப்பு, லாஸ்கியின் பொறுப்பு..."

அந்தோனி சிரித்துக்கொண்டான். சர்க்கார் அவனது ஆறடி உயரமான, கட்டுமஸ்தான உடலை இருகைகளாலும் இறுகத் தழுவிக்கொண்டு சொல்வார், "மனுசன்னா நீ தாண்டா மனுசன்! உனக்கு முன்னாலே முரட்டு வெள்ளைக்காரன் எம்மாத்திரம்!"

பிறகு அவர் அவனுடைய நெஞ்சிலும் முதுகிலும் மடார் மடார் என்று குத்துவார். அவர்தம் பரிவைக்காட்டும் முறை இது. மற்ற மாணவர்களிடம் சொல்வார், "பார்த்தீங்களா இவனை! கறுப்பு ஜூபிடர்! விவசாயியோட முரட்டு ஆகிருதி. ஆம்பிளைன்னா இவன்தான் ஆம்பிளை!"

மாணவர்கள் ஒப்பனை செய்து கொண்டு கல்லூரிக்கு வருவது அவருக்குப் பிடிக்காது. அப்படி யாராவது வந்தால் அவர் அவனிடம் சொல்வார், "இந்த அந்தோனியைப் பாரு. மீனவன் வீட்டுப் பிள்ளை. பிரமாதமாக ஒப்பனைபண்ணிக்கிட்டு வந்திருக்கியே, இவனோடு சண்டை போட்டு ஜயிப்பியா? பாலும் இனிப்பும் சாப்பிட்டு நல்லா டிரஸ் பண்ணிக்கிட்டுக் குழந்தை கிருஷ்ணன் மாதிரி இருக்கே. நாட்டோட ரத்தத்தை உறிஞ்சிக்கிட்டிருக்கற வங்களோடே யார் சண்டை போடுவாங்க?..."

சர்க்கார் மட்டும் இல்லாவிட்டால் அந்தோனியின் படிப்பு எப்போதோ நின்று போயிருக்கும். அவன் பி.ஏ யில் முதல் வகுப்பில் தேறினான். அப்பா சொல்லிவிட்டார், "படிச்சது போதும். தொழில்லே இறங்கு."

சர்க்கார் தாமே தூத்துக்குடிக்கு வந்துவிட்டார். அவனுடைய தந்தையுடன் கடுமையாக விவாதம் செய்தார்.

காட்வினும் விடாக்கண்டர். "படிப்பு எதுக்கு?"

கடைசியில் சர்க்கார்தான் வென்றார். காட்வின் முகத்தை உம்மென்று வைத்துக் கொண்டார்.

அந்தோனி எம்.ஏ படிக்கச் சென்றான்.

"அப்பா, நான் முதல் வகுப்பிலே பாஸ் பண்ணிட்டேன்..."

காட்வின் கஞ்சி குடித்துக் கொண்டிருந்தார். ஒரே மூச்சில் குடித்து முடித்துவிட்டுக் குவளையைக் கீழே வைத்தார். இது தான் அவருடைய வழக்கமான காலையாகாரம்.

பையன் தெரிவித்த செய்திகேட்டு எவ்வித மாற்றமும் இல்லை காட்வினின் முகத்தில். அது சலனமற்றிருந்தது–வீட்டில்நாய் குட்டி போட்டிருக்கிறது என்ற செய்தியைக் கேட்டது போல.

"இனிமேல் என்ன?" காட்வினின் கேள்வி.

"லண்டனுக்குப்போய் புரொபசர் லாஸ்கிகிட்டே ஆராய்ச்சி பண்ணலாம்னு..."

இடைமறித்தார் தந்தை– "படிச்சது போதும்! ஆராய்ச்சி கீராய்ச்சியெல்லாம் வேண்டாம்!" பிள்ளையின் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்காமல் உடைமாற்றிக்கொண்டே தொடர்ந்து சொன்னார், "ராமையங்கார் கிட்டே சொல்லி வைக்கறேன். நாளையிலேருந்து ஆபீசிலே வந்து உட்காரு!..."

காட்வினின் முகம் சீரியஸாக இருந்தது. சட்டையை அணிந்து கொண்டே வாயிற்பக்கம் சென்றார். திடீரென்று ஏதோ நினைவு வந்து சட்டென்று அந்தோனி பக்கம் திரும்பிச் சொன்னார் "உனக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணியிருக்கேன்– மாமா பெண் மார்ஸியோடே. வர்ற மார்ச்சிலே கலியாணம். இப்போலேருந்து அவகிட்டே உன் நடத்தையை மாத்திக்க..."

அந்தோனியின் மனம் முரண்டுபிடித்தது, முரட்டுக் குதிரை போல.

காட்வின் மறுபடி அறைக்குள் வந்தார். மேஜை டிராயரைத் திறந்து ஏதோ தேடினார். அந்தோனியின் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை...

அந்தோனியின் உள்ளத்தில் புயல். இந்தச் சில மாதங்கள் தூத்துக்குடியில் இருப்பதே நரக வேதனையாக இருந்தது அவனுக்கு. வெறும் சாப்பாடு, தூக்கம், காலையிலும் மாலையிலும் கடற்கரையில் நடைபழகல், மற்ற நேரங்களில் புத்தகம். அவனுக்குத்தக்க தோழன் இல்லை. நான்கு வார்த்தை பேசத் தக்க கூட்டாளி யாருமில்லை. அலுப்புத் தரும் வாழ்க்கை. இந்த இடம் அழுகிப் போன குட்டை. சர்க்காரின் வர்ணனை முற்றிலும் உண்மை.

காட்வின் ஒவ்வொரு டிராயராகத் திறந்து ஏதோ தேடிக் கொண்டிருக்கிறார். இன்னும் ஒரு வேளை அவனுடைய பதிலுக்காகக் காத்திருக்கிறாரோ?

இந்தத் தூத்துக்குடியில் இருந்துகொண்டு தொழில் செய்வதா? தோணியில் சரக்கு ஏற்றுவது, உப்பளக் கணக்கு, கொடுக்கல் வாங்கல் விவகாரம்... ஊஹூம், இதையெல்லாம் அவனால் பொறுத்துக்கொள்ள முடியாது!...

அப்புறம் இந்தக் கத்தோலிக்க மீனவர் சமூகத்தின் சூழ்நிலை! யாருடனாவது பேசப்போனால் கரிக்காண்ட்ராக்ட் பற்றி அவதூறுதான் முதலில் காதில் படும். மதுரை மில்லின் துரைமார்களுக்கு யாரைப்பிடிக்கும்... மாதா கோவில் பாதிரி எங்கே கண் வைத்திருக்கிறார்... யார் வீட்டில் ஏழு பெண்களுக்குப் பின் ஆண் குழந்தை பிறந்ததைக் கொண்டாட விசேஷப் பிரார்த்தனை ஏற்பாடாயிருக்கிறது... யாருக்கு எவ்வளவு வைப்பாட்டி... யார்

பெண்டாட்டியோடே யார்... அப்பறம் கோஷ்டிச் சண்டை. இவன் அவன் மேல் சேறு தெளிக்க, அவன் இவன்மேல் பதிலுக்கு... "பெரேரா, கொரேரா, மாசாதோ, வில்லவரையர், ரோச் விக்டோரியா, பிரிஸ், மோத்தா...

உலகம் மாறிக்கொண்டிருக்கிறது. மதக்கொள்கைகள் மாறுகின்றன. சமூகம் மாறுகிறது, பொருளாதாரம் மாறுகிறது. நாட்டின் கிழக்கே மேற்கே தெற்கே வடக்கே புரட்சித் தீ பரவுகிறது. ஆனால் இந்த ஊரில் இது பற்றி யாருக்காவது தெரியுமா? யாருடன் பேசுவான் அந்தோனி?

இங்கேயே தங்குவதென்றால் – சாக்கடைச்சேற்றில் முகத்தைப் புதைத்துக் கொண்டு குட்டிகள் புடை சூழக் கவலையின்றிக்கிடக்கும் தாய்ப் பன்றிகளின் நிலைதான்...

அந்தோனியின் மனக் கண்ணில் ஒரு நாடகக் காட்சி. நாடகத்தின் நாயகன் அவன்தான்...

காட்வினின் பிரும்மாண்டமான மாளிகையில் ஓர் ஓரத்தில் அறையொன்றில் 'கோரா' நாவலில் மூழ்கியிருக்கிறான் அந்தோனி. அசாதாரணப் பாத்திரம் கோரா. கதாநாயகி சுசரிதாவும் அசாதாரணந்தான். நாவலில் சொக்கிப்போயிருக்கிறான் அவன். ரவீந்திரரின் சிறந்த படைப்பு. டால்ஸ்டாயும் ஹியூகோ வும் சங்கமித்தது போன்ற இலக்கியம்...

புத்தகம் திறந்திருக்க நினைவு கல்கத்தாவுக்குத் தாவுகிறது. சுசரிதாவை நினைவூட்டுகிறாள் சாருபமா–மாடர்ன் ஹிஸ்டரி மாணவி. அவளைத் தற்செயலாக சர்க்காரின் வீட்டில் சந்தித்தான் அந்தோனி. நல்ல உயரம், மாநிறம். ஓவியத் தோழன் சுநிர்மல் அவளைப் பார்வதி என்று வர்ணிப்பான். ஒளிசிந்தும் கண்கள். இயற்கையாகப் பழகுவாள். போலிக்கூச்சம் கிடையாது. தென்றல் காற்றுப்போல–அவள் அருகிலிருந்தால் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கும்...

யாரோ பின்னாலிருந்து அவன் கண்களைப் பொத்தினார்கள்...

தூத்துக்குடியில் எந்தப்பெண் அவன் கண்களைப் பொத்தத் துணிவாள்? அவன் வீட்டிலும் பெண்கள் யாருமில்லையே!.. சென்டின் அழுத்தமான மணம் மூக்கைத் துளைக்கிறது...

"யாருன்னு சொல்லத் தெரியல்லியே! ஹி ஹி..." என்று சிரித்துக்கொண்டே அவன்மேல் விழுந்து புரண்டாள் மார்ஸி. ஜோசப் மாமாவின் பெரிய பெண்.

சுசரிதாவும் சாருபமாவும் சின்னாபின்னமாகி மறைந்துவிட்டார்கள். எரிச்சலேற்பட்டது அந்தோனிக்கு.

"மார்ஸியா? எப்ப வந்தே?" பட்டும் படாமலும் கேட்டான் அவன்.

"எப்பப்பார்த்தாலும் என்ன புஸ்தகம் வேண்டிக்கிடக்கு!... நீ ஏன் எங்க வீட்டுக்கு வர்றதில்லே?"

அந்தோனி அதற்குப் பதில் சொல்லாமல் பேச்சை மாற்றினான் "என்ன இன்னிக்கு இவ்வளவு அலங்காரம்?"

அவள் முகத்தில் தடிப்பான பவுடர்ப் பூச்சு, கன்னங்களில் ரூஷ், பிரஷ்ஷால் அகலமாகத் தீட்டப்பட்ட புருவம், லிப்ஸ்டிக் தடவிய உதடுகள் இரத்தச் சிவப்பு.

அதோடு நின்று விடவில்லை மார்ஸி. அவள் தலையில் ஒரு பெரிய கனகாம்பரச்சரம். அதன் ஆரஞ்சு நிறத்துக்குப் பொருத்த மாக விலையுயர்ந்த காஞ்சீபுரம் பட்டுப் புடைவை, ஜார்ஜெட் பிளவுஸ்... அந்த நான்கு மணி வெயிலில் நெருப்பாய் ஜொலிக் கிறாள்.

போன வருடங்கூட அவள் ஃபிராக்தான் அணிந்துகொண்டி ருந்தாள். அவள் புடைவையணியத் தொடங்கிய பின் இப்போது தான் அவளை முதன் முதலாகப் பார்க்கிறான் அவன்.

அவளுக்கு வயது பதினாறு–பதினேழுதானிருக்கும். ஆனால் பார்க்க இருபத்தாறு–இருபத்தேழு மதிப்பிடத்தோன்றுகிறது. ஏற்கனவே அவள் கொஞ்சம் பருமன்தான். ஜோசப் மாமாவும் கிரிஸ்டின் மாமியும் அவளுக்குச் செல்லங் கொடுத்து நிறைய வெண்ணெயும் நெய்யும் ஊட்டியிருக்கிறார்கள். அதன் பலன் தான் இந்தப் பருமன். இந்த வயதிலேயே அவளது கழுத்தில் மடிப்பு விழுந்துவிட்டது. மார்பகம் பிதுங்கி நிற்கிறது. நிறம் சிவப்புதான். அழகுதான், இருந்தாலும் அவளிடமிருந்து தூர ஓடவிரும்புகிறது அவன் மனம்....

"இதையா ரொம்ப அலங்காரங்கறே? அப்படியொண்ணும் அலங்காரம் பண்ணிக்கல்லே நான். அப்படிப்பண்ணிக்கிட்டா உன் தலை மயக்கத்திலே சுத்துமாக்கும்!"

அவளுடைய நிமிர்ந்த மார்பகம் அவன் மேல் உரசியது. அது விம்மிப் புடைப்பதை அவனால் உணர முடிந்தது.

அவனுக்குத் தர்ஜிபாடாவிலிருக்கும் சம்பாவின் நினைவு வந்தது. ஒரு தடவை அவனுடைய நண்பன் கோவிந்தன் அவனை சம்பாவிடம் அழைத்துப் போயிருக்கிறான். சம்பாவும் இந்த மார்ஸி போலத்தான் அவன் மீது உரசி.. கட்டோடு பிடிக்க வில்லை அவனுக்கு. குமட்டிக்கொண்டு வந்தது. அதன் பின் அவன் அந்தப் பக்கமே போவதில்லை.

மார்ஸிக்குக் கூச்சமே கிடையாது. அவள் தன் கைகளால் அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டாள். அவனுடைய முகத்தைப் பிடித்துத் தன் நெஞ்சில் அழுத்தினாள்.

அவனுக்கு மூச்சுத்திணறியது. "மார்ஸி, மார்ஸி" என்று எதிர்ப்புத் தெரிவித்தான் அவன். பெண்களிடம் கடுமையாக நடந்து கொள்ளத் தெரியாது அவனுக்கு.

"போக்கிரி! நீ எங்க வீட்டுக்கு ஏன் வர்றதில்லே?... சொல்லு!..." இன்னும் அவள் தன் பிடியை விடவில்லை.

"காரணம் கேட்க நீ யாரு?" எப்படியோ தன்னை விடுவித்துக்கொண்டு கேட்டான்.

"யாரா?... இனிமேல் நீ என் பொறுப்பிலே?"

"அப்படீன்னா?"

"ஆகா, பச்சைக் குழந்தை!... இவ்வளவு படிச்சிருக்கே, இது கூடப்புரியல்லியா?"

அவள் தன் கன்னத்தை அவனுடைய கன்னத்தில் வைத்து அழுத்தினாள். மாமிசப் பிண்டம். அவனுக்குக் குமட்டிக்கொண்டு வந்தது...

"இனிமேல் நீ என் சொத்து. உன்னோட அப்பா நேத்து ராத்திரி எங்க அப்பாவோடே பேசி நம்ம கலியாணத்தை நிச்சயம் பண்ணிட்டாரு, தெரிஞ்சுக்கோ!"

அவனைவிட்டு நகராமலேயே அவள் தொடர்ந்து சொன்னாள், "அந்தக் காஞ்சுபோன கல்கத்தாக் குட்டிகளை நினைச்சு நினைச்சு ராத்திரி தூக்கம் வராமே தவிச்சுக்கிட்டிருந்தேன் நான்... நல்ல வேளை, இனி மேல் கவலையில்லே!...

"நகர்ந்துக்க! யாராவது பார்த்துடப்போறாங்க..." அந்தோனி அவளைத் தள்ளிவிட்டான். மார்ஸி கீழே விழவிருந்தவள் தன்னைச்சமாளித்துக் கொண்டாள். ரொம்பக் கோபம் வந்து விட்டது அவளுக்கு.

தடதடவென்று காலடிவைத்து வாசலை நோக்கிப் போய்க் கொண்டே அவள் சொன்னாள், "நான் போறேன். நீ என்னைத் தள்ளிவிட்டே. ஒரு நாள் என் காலைப் பிடிச்சு வரச்சொல்லிக் கெஞ்சுவே. அப்பத்தான் நான் வருவேன்..."

சாரு எங்கே, மார்ஸி எங்கே? இருவருக்குமிடையே எவ்வளவு வேற்றுமை, எவ்வளவு தூரம்? கல்கத்தாவுக்கும் தூத்துக் குடிக்குமிடையிலுள்ள தூரம் போல... மார்ஸியைக் கலியாணம் செய்து கொண்டால்... அது பெரிய விபத்து...

"நான் இப்பக் கலியாணம் செய்துக்க மாட்டேன். எனக்கு வாழ்க்கையிலே வேறே இலட்சியங்கள் உண்டு..." அந்தோனியின் குரல் தணிவாக—ஆனால் இலந்தைவிதைபோல் உறுதியாக இருந்தது.

பளார்! அவன் கன்னத்தில் விழுந்தது ஓர் அறை. அறை அல்ல, இடி.

காட்வினின் நெடுங்காலக் கோபம் வெளிப்பட்டது அந்த அறையில்.

அந்தோனி மயங்கிச் சுருண்டு விழுந்தான்...

இவ்வளவு ஆண்டுகளுக்குப்பின், ரயில் பெட்டியில் அந்தோனியின் வலது கன்னம் எரிந்தது. அவன் தன்னையறியாமலேயே அதைத் தடவி விட்டுக்கொண்டான்.

மரியதாசன் அவனைத்தூக்கிக்கொண்டு போய்ப் பக்கத்து அறையில் கிடத்தி அந்த அறையைப் பூட்டிவைத்தான்....

மஞ்சு – அதாவது அசமஞ்சபோஸ் – சொன்னது சரிதான்...

மஞ்சு சிவப்பாக, ஒல்லியாக இருப்பான். சாணைபிடித்த கத்திபோல் கூர்மையான சிறு கண்கள். கொஞ்சம் அழுக்கான, கை மடித்துவிடப்பட்ட டுவில் சட்டை, கொஞ்சம் அழுக்கான, கச்சம் வைத்த வேஷ்டி. வண்டிகளில் வந்து மாநிலக் கல்லூரி வாசலில் இறங்கும் ஜமீந்தார் வீட்டுப் பையன்களோடு சற்றும் பொருத்தமாயிருக்காது அவனைப்பார்த்தால். எப்போதும் சீரியஸாக இருப்பான். அதிகம் பேசமாட்டான். வேடிக்கை விளையாட்டுக்கும் அவனுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. குமாஸ்தாவின் பிள்ளை. உபகாரச் சம்பளத்தில் படிக்கிறான். அந்தோனியுடன் மட்டும்தான் பேசுவான்.

"அந்தோனி, தெரியுமா—இந்த இருபதாம் நூற்றாண்டிலே கூட அடிமை முறை இன்னும் இருக்கு—இந்தக் கல்கத்தாவிலேயே... இந்தப் புண்ணிய பாரத நாட்டில்...

அவன் 'பாரதநாடு' என்ற சொல்லை உச்சரிக்கும் போதெல்லாம் 'புண்ணிய' என்ற அடைமொழியையும் பயன்படுத்துவான்.

அந்தோனி அவன் பேச்சை மறுப்பான்—"உளறாதே!"

மஞ்சு தன் கருத்தில் உறுதியாயிருப்பான்—"உனக்கு இப்பத் தெரியல்லே. பின்னாலே தானாத் தெரிஞ்சுக்குவே. எல்லா அப்பாக்களுமே தங்கள் குழந்தைகளை அடிமைகளா நினைக்கறாங்க. அவங்களை எப்படி வேணும்னாலும் நடத்தலாங்கறது அவங்க எண்ணம். குழந்தைகளைக் கொன்னா இந்தியக் குற்றச் சட்டப்படி குத்தம். அப்படியில்லேன்னாக் கொல்லவும் துணிவாங்க....."

அப்பா! குகைமனிதன் காலத்திலிருந்தே குடும்பத்தின் சக்தி வாய்ந்த தலைவன். குடும்பத்தில் யாரும் அவனை எதிர்த்துப் பேச முடியாது. பேசினால் கடுமையான தண்டனை கிடைக்கும். குழந்தைகளின் எதிர்காலம் அவன் கையில்....

மஞ்சு சொன்னது போல் இந்தியாவில் அந்தக் காட்டு மிராண்டி யுகம் இன்னும் இருக்கிறதோ?

அத்தகைய தந்தையின் கடுங்காவலிலிருந்துதான் தப்பி யோடினான்அந்தோனி....

1937ம் ஆண்டின் கிருஸ்துமஸுக்கு முதல் நாளிரவு மணி பன்னிரண்டு. குடும்பத்தினர் எல்லோரும் விசேஷ நள்ளிரவுப் பிரார்த்தனைக்காக மாதா கோவிலுக்குப் போயிருக்கிறார்கள். வீட்டில் அடைபட்டிருக்கிறான் அந்தோனி, மறவ இனத்தைச் சேர்ந்த காவல்காரன் வாசலில்.

அந்தோனி முடிவு செய்துவிட்டான்–இதுதான் கடைசி இரவு. நாளைக்காலையில் எல்லாரும் குடிமயக்கம் தெளிந்து அவனு டைய அறையைத்திறக்கும்போது அவனுடைய உயிரற்ற உடல் உத்தரத்திலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும். அவனுடைய வேஷ்டியே அவனுக்குத் தூக்குக் கயிறு...

ஏதோ அரவம். அறைக்கதவின் வெளிப்பூட்டு மெல்லத் திறந்தது. பீட்டர் உள்ளே வந்து கிசுகிசுத்தான்–"அந்தோனி, ஓடிப்போயிடு!... கொல்லைப் பக்கத்துக்கதவைத் திறந்து வச்சிருக்கேன். ரயில் பாதையோடே சைடிங்குக்குப்போ. அங்கே கூட்ஸ் வண்டி நின்னுக்கிட்டிருக்கும். சிரில் ஃபெர்னாண் டோதான் கார்டு. என்னோடே படிச்சவன். அவன்கிட்டே சொல்லி வச்சிருக்கேன்...நீ கூட்ஸ் வண்டியிலே ஒளிஞ்சுக்கிட்டு இந்த ஊரை விட்டே ஓடிப்போயிடு!..."

"உனக்குச்சாவி எப்படிக் கிடைச்சது? அது அப்பாவோட மேஜை டிராயரில்லேன்னா இருக்கும்!"

"ஆமா...திருடினேன்...ஓடு, ஓடு!..."

அந்தோனி பீட்டரை இறுகத்தழுவிக்கொண்டான். "பிழைச் சிருந்தேன்னா அப்பறம் உன்னைச்சந்திக்கிறேன்..."

அடுத்த கணம் அவன் அங்கே இல்லை...

தந்தையின் நோய் பற்றிச் செய்தியனுப்பியவனும் பீட்டர்தான்..

மஞ்சு, பீட்டர்–இருவருக்குமிடையே ஏதோ ஓர் ஒற்றுமை இருக்கிறது.

கட கட கட ... ரயில் ஸ்டேஷன் பிளாட்பாரத்தை நெருங்கும் சப்தம். தூத்துக்குடி வந்துவிட்டது.

அந்தோனி எழுந்து உடையணிந்துகொண்டான். சூட்கேசைக் கையிலெடுத்துக் கொண்டு பரபரவென்று ரயிலிலிருந்து இறங்கி னான். பிளாட்பாரம் முழுவதையும் ஒரு முறைபார்த்தான். ஒரு வேளை பீட்டர் வந்திருக்கிறானோ?

இல்லை... வரவில்லை.

☆ ☆ ☆

வழி தெரிந்துகொள்வதில் ஒரு சிரமமும் இல்லை. நேற்றுத் தான் அவன் இந்த வழியில் நடந்துவந்தாற் போலிருக்கிறது. புதிதாகத் தெரிவது சைக்கிள் ரிக்‌ஷாதான். முன்பெல்லாம் குதிரை வண்டிதான் ஒரே வாகனம். அவனுக்கு வாகனம் தேவை யில்லை. நடந்துபோனால் ஐந்தாறு நிமிடத்தில் வீடு.

லண்டனிலிருந்து தூத்துக்குடி. சுத்தமான லண்டன் தெரு, வீடு, வாசல் எல்லாம் துடைத்து விட்டாற் போலிருக்கும். பூங்காக்கள் சித்திரம்போல் அழகு கொஞ்சும். தூத்துக்குடித்தெருவில் மலந் தின்னும் பன்றிகளையும் கழுதைகளையும் தவிர்த்துக் கொண்டு நடக்கிறான் அந்தோனி, திறந்த சாக்கடை நாற்றம், அங்கங்கே குப்பை கூளம்.

வீட்டில் ஓர் அசாதாரணச் சூழ்நிலை. வாயிலில் காவற்காரன் இல்லை. முதலிரண்டு பகுதிகளைக் கடந்து சென்றான் அவன். ஆபீஸ் எங்கே?

முன்பு இங்கெல்லாம் ராமையங்காரின் அதிகாரம் தூள் பறக்கும். மக்கள் நடமாடிக் கொண்டிருப்பார்கள், ஆபீஸ் அறை களில் குமாஸ்தாக்கள் குனிந்த தலையுடன் வேலை செய்து கொண்டிருப்பார்கள். அவர்களுக்கு முன்னால் தடிமனான ரிஜிஸ்தர்கள்...

இப்போது எங்கும் அமைதி.

அந்தப்புரப்பகுதியில் கருங்காலி மாடிப்படியருகில் நிற்பது யார்? ஒட்டியுலர்ந்த கன்னத்துடன் அந்தக் கிழவன் மரியதாசனா? நொண்டி நொண்டி நடக்கிறான். சற்றுக்கூனல், உடம்புச்சதை மடிப்பு மடிப்பாகத் தொங்குகிறது.

"யாரு, யாரு?" மங்கிய கண்களால் உற்றுப்பார்த்தான் மரியதாசன். கொஞ்சகாலமாக அவனுக்குக் கண் படல நோய். அது இன்னும் பழுக்காததால் ஆப்பரேஷன் செய்யவில்லை.

அந்தோனி சிலையாக நின்றான். அவனுடைய காலைப் பிடித்துக் கொண்டு கதறிவிட்டான் மரியதாசன்– "சின்னய்யாவா!... நீ எங்கே இருந்தே இவ்வளவு நாளா?..."

மரியதாசனின் அழுகைக்குரல் கேட்டுச் சமையலறையிலிருந்து ஓடி வந்தாள் சமையற்காரி ஆஞ்செலா – "சின்னய்யா! அந்தோன்!..."

அந்தோனியில் நெஞ்சில் சுரீரென்று வலித்தது. ஆஞ்செலா எப்போதும் அவனைச் செல்லமாக 'அந்தோன்' என்று தான் கூப்பிடுவாள். இந்தச் சொல்லைக்கேட்டு எவ்வளவு காலமாகி விட்டது!

ஆஞ்செலாவும் கிழண்டு போய் விட்டாள். ஆனால் மரியதாசன் அளவு இல்லை. இன்னும் சில வேலைக்காரர்கள் வந்து நின்றார்கள். அவர்கள் புதுமுகங்கள். ஆஞ்செலா புடவை முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"வா, மேலேவா... எசமான் சாகக் கிடக்கார். அவர் நெஞ்சு உனக்காகத்தான அடிச்சுக்கிட்டிருக்கு. கடைசிக்காலத்திலே தான் உன்னைக் கூப்பிட்டனுப்பிச்சார்."

மரியதாசன் நடுங்கும் கைகளால் அந்தோனியின் கையைப் பிடித்துக்கொண்டு மாடிக்கு அழைத்துச் சென்றான். அவனுடைய அழுகை விம்மல் இன்னும் நிற்கவில்லை. அவனுக்கு வாதம், படியேறக் கஷ்டப்பட்டான்.

வாயில் திரையைத் தள்ளிக் கொண்டு இருவரும் அறைக்குள் நுழைந்தார்கள். முன்னால் மரியதாசன், பின்னால் அந்தோனி, அறையின் இருட்டில் அந்தோனிக்குக் கண் தெரியவில்லை. இருவரும் கதவருகே சற்று நேரம் நின்றுகொண்டிருந்தார்கள்.

"ஐயா தூங்கறார் போலேருக்கு...."

அந்தோனியின் கண்கள் கொஞ்சங்கொஞ்சமாக இருட்டுக்குப் பழகிவிட்டன. அவன் கட்டிலின் மேலிருந்த எலும்புக் கூட்டைப் பார்த்தான்.

அசையாமல் படுத்திருக்கிறார் காட்வின். கண்கள் மூடியிருக்கின்றன. அவருக்கு எதைப்பார்க்கவும் விருப்பமில்லை. ஆனால் காதுகள் வேட்டை நாயின் காதுகளைப்போல் கூர்மையாக இருக்கின்றன. கீழேயிருந்து மரியதாசனின் அழுகைக்குரல், அவன் பேசிய பேச்சு எல்லாமே அவருக்குக் கேட்டது.

அந்தோனிக்குத் திகைப்பு–என் அப்பாவா இது! ஒரே அறையில் ஓர் இளைஞனை மயக்கம் போடச் செய்தவரா இவர்! பழங்கால ராட்சதப் பிராணிகளின் எலும்புக்கூடு. ஆனால் கண்காட்சி சாலையில் பிராணிகளின் உருவத்திலேயே முழுமையாகப்

பொருத்தி வைத்திருப்பார்கள். இங்கே இருப்பது எலும்புத் துண்டங்களின் மூட்டை. அந்தப் பூதாகாரமான தோற்றம் எங்கே!

அந்தோனியின் பார்வை மங்கிவிட்டது. அவனால் பார்க்க முடியவில்லை. நெஞ்சைத் திருகுவது போல் வலி. இதுவரை வாழ்க்கையில் இத்தகைய வேதனையை உணர்ந்ததில்லை அவன். அவன் தொண்டையை ஏதோ அடைக்கிறது.

"அப்பா!" கூப்பிட முயன்றான். தொண்டையிலிருந்து வார்த்தை வரவில்லை. தொண்டையைக் கனைத்துக்கொண்டு மறுபடி கூப்பிட்டான் – "அப்பா!"

காட்வின் கண்களைத் திறந்தார், அந்தோனி முன்னே வந்தான். மரியதாசன் பின்னாலேயே வந்து சொன்னான், "ஐயா, சின்னையா வந்திருக்கார்... பாருங்க!...."

அந்தோனி தந்தையைக் கட்டித் தழுவிக்கொள்ள கைகளை நீட்டிக் கொண்டு கட்டிலை அணுகினான். ஆனால் மறுநிமிடமே கடுமையான நாற்றம் அவனைத் தள்ளிவிட்டது.

காட்வின் மறுபடி கண்களை மூடிக்கொண்டார். அந்தோனி, அவருடைய கைகளைப் பிடித்துத் தன் தலைமேல் வைத்துக் கொண்டான் மெதுவாக. கறுப்புத் தோல் போர்த்திய இரும்புத் தகடுகள் அசைவில்லை. உணர்ச்சியும் இல்லை போலும். திராணியின்றித் தொங்குகின்றன காட்வினின் கைகள்...

இந்தக் கைதானே அந்தோனியை அறைந்தது!...

"அப்பா நான் வந்துட்டேன்!" அந்தோனி 'அப்பா, என்னை மன்னிச்சுடு!' என்றும் சொல்லத்தான் விரும்பினான். ஆனால் வார்த்தைகள் அவன் தொண்டையிலிருந்து வெளிவரவில்லை. பெருமூச்சையடக்கிக் கொண்டான் அவன்

தந்தையைப் பழிவாங்க வேண்டுமென்பது அவனது நெடுங்கால விருப்பம். ஆனால் அவரது இந்தப் பரிதாப நிலை!... அவனுடைய உள்ளம் உருகியது, பரிவு பெருகியது. அவன் கட்டிலில் தந்தையருகில் உட்கார்ந்தான்.

என்னதானிருந்தாலும் இவர் அவனை உண்டாக்கியவர்; சிறுவயதில் அவனுக்கு உணவூட்டி வளர்த்தவர்; அவன் நோய் வாய்ப்பட்டபோது அவனுக்குச் சிகிச்சை செய்வித்தவர்; அவனுடைய படிப்புக்காகத் தாராளமாகப் பணம் செலவு செய்தவர். இதற்கெல்லாம் பதிலாக அவன் இவருக்கு என்ன கொடுத்திருக்கிறான்?

அவன் சுயநலக்காரன், நன்றி கெட்டவன், அவனுக்குத் தன்னைப் பற்றித்தான் கவலை....

"அப்பா!"

காட்வின் கண்களைத் திறந்தார். மங்கலான பார்வை. பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

மரியதாசன் அவருடைய முகத்தருகில் குனிந்து சொன்னான், "ஐயா, சின்னையாவின் குத்தமெல்லாம் மன்னிச்சுடுங்க!"

சட்டென்று தலைநிமிர்ந்தான் அந்தோனி. குற்றமா? என்ன குற்றம்?

ஆனால் உடனேயே மாறிவிட்டான், தலைகுனிந்து, வேதனையால் இளகிப்போய்த் தன் தந்தையின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். தீவிர எதிர்பார்ப்பு. தந்தை ஒரு தடவை பேசட்டும், ஒரு வார்த்தையாவது பேசட்டும்!

ஆனால் காட்வின் ஒன்றும் பேசவில்லை.

சிலநிமிடங்கள் கழிந்தன. தீவிர எதிர்பார்ப்பு ஆழ்ந்த நிராசையாகிவிட்டது. காட்வின் மெதுவாகத் தன் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக் கொண்டார். அந்தோனியால் தன் பெருமூச்சை அடக்கிக்கொள்ள முடியவில்லை. புயலாகக் கிளம்பியது அந்தப் பெருமூச்சு.

அவன் இவ்வளவுநேரம் உணர்ச்சி வசப்பட்டிருந்தான். சாகப்போகும் மனிதனுக்கு முன்னால்—அவன் தந்தையாகட்டும் அல்லது வேறு யாராகட்டும்—நிற்பவன் உணர்ச்சிவசப்படுவது இயற்கைதான்.

அந்தோனி தன்னிலைக்கு வந்து மரியதாசனிடம் சொன்னான், "வா, வெளியே போகலாம். அப்பா அமைதியாக இருக்கட்டும். அப்புறம் வரலாம்." அவன் குரல் அமைதியாக, நிதானமாக இருந்தது.

அன்றுமாலையில் காட்வினின் வண்டி பாளையங்கோட்டையிலிருந்து பாதிரியார் அமலநாதன் விக்டோரியாவை அழைத்து வந்தது. அவருடைய தோற்றத்தைப் பார்த்தால் அவர் எண்பது வயதைக் கடந்தவர் என்று சொல்ல முடியாது. தலை வெள்ளை, வெள்ளைத்தாடி, சாந்தமான ஒளி நிறைந்த முகத் தோற்றம். பார்க்கப் பண்டைக்கால ரிஷி போலிருப்பார்.

காட்வின் பாதிரியாரிடம் பாவ மன்னிப்பு வேண்டப் போகிறார். உள்ளூர் மாதா கோவில்களில் பாதிரியார்களிடம் பாவமன்னிப்பு வேண்ட அவருக்கு விருப்பமில்லை. கன்னி மடத்துத் தலைமையன்னையும் வந்திருக்கிறார். வயது முதிர்ந்த பெண்மணி. அவரிடமும் காட்வினுக்கு மிகுந்த மதிப்பு உண்டு.

அன்னை காட்வினுக்கு ஆசியளித்தார். பாதிரியார் இறுதிப் பிராயச் சித்தத்துக்கான ஏற்பாடுகள் செய்தார். ஜீவன் பாவத்தில் பிறக்கிறது. வாழும்போதும் பாவம் செய்கிறது.

இந்தப் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்தால்தான் கடவுளின் மன்னிப்பைப் பெறலாம். பிராயத்சித்ததத்தால் ஆத்மாவுக்கு அமைதி கிடைக்கும்.

காட்வினின் தலைமாட்டில் இருபுறமும் இரண்டு மெழுகு வர்த்திகள் எரிந்தன சின்னஞ்சிறு தூண்கள் போல. பாதிரியார் காடவினின் உடைகளைக் களைந்து அவரது உடல் முழுதும் புனிதத் தைலத்தைத் தடவினார். அவர் வாய் லத்தீன் மொழியில் மந்திரங்களை உச்சரித்தது– 'உன் நோய்கள் யாவும் தீரட்டும். உன் வேதனைகள் முடியட்டும். நீ திவ்விய தேகத்தைப் பெறுவாய்...

அறை முற்றிலும் காலி. வீட்டைச் சேர்ந்தவர், உறவினர்கள், நண்பர்கள் எல்லோரும் கதவுக்கு வெளியே நின்று கொண் டிருக்கிறார்கள். எல்லாரும் மௌனம். ஆனால் எல்லோருடைய கண்களும் ஈரமாயிருக்கின்றன. கம்பீரமான, புனிதமான, சாதாரண சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்ட சூழ்நிலை.

கதவு மூடியிருக்கிறது. மந்திர ஒலியும் கேட்கவில்லை. உள்ளே காட்வின் பாதிரியாரிடம் பாவமன்னிப்பு வேண்டிக் கொண்டிருக்கிறார்.

காட்வின் தன் பாவங்களை ஒப்புக் கொண்டுவிட்டார். பாதிரியாரின் இனிய, கம்பீரமான குரல் மறுபடி மந்திரங்களை ஒலிக்கிறது. பாவமன்னிப்பு. அவர் கடவுளின் பிரதிநிதியாகக் காட்வினின் பாவங்களை மன்னிக்கிறார்– "காட்வின், உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன. கருணையே உருவான நம் பிதா உன்னை மன்னித்துவிட்டார். நீ இப்போது குற்றமற்றவன்; பிதாவைச் சென்றடையத் தகுதி பெற்றவன்."

பாதிரியார் தாமே கதவைத் திறந்தார். மற்றவர்களுடன் அந்தோனியும் உள்ளே நுழைந்தான். அவனது நெஞ்சின்மேல் பாறாங்கல்.

பாதிரியார் சொன்னார், "காட்வின் ஃபெர்னாண்டோ கடவுளின் மகன், தரும உணர்வு கொண்ட கத்தோலிக்க கிருஸ் துவன். கடவுள் அவனுடைய எல்லாக் குற்றங்களையும் மன்னித்து அவனைத் தம்மிடம் அழைத்துக் கொண்டிருக்கிறார். இப்போது அவன் உங்களெல்லாரிடமும் மன்னிப்புக்கேட்கிறான்."

எல்லோரும் ஒவ்வொருவராகக் கட்டிலையணுகுகிறார்கள். மரியதாசன், ஆஞ்செலா, வீட்டு வேலைக்காரர்கள், அக்கம் பக்கத்து வீட்டார் சிலர், வரிசை வரிசையாகப் படகோட்டிகள்... எல்லோரும் மண்டியிட்டுக் காட்வினின் சீவனிழந்த கையை முத்தமிடுகிறார்கள். அவர்கள் கண்களிலிருந்து நீர் பெருகு கிறது.

அந்தோனி கடைசியில் வந்து கட்டிலின்மேல் உட்கார்ந்தான். உணர்ச்சிவசப்பட்டுத் தந்தையின் கைகளைக் கூடப் பிடிக்க முடியாமல் கதறிக் கொண்டு படுக்கையின் மேல் விழுந்தான். இந்தக் கணத்தில் அவனது தர்க்கம், வாதம், எதிர்ப்பு எல்லாம் அடங்கிவிட்டது.

மரம் மண்ணுக்கடியில் மறைந்திருந்த தன் வேரை அறியவில்லை. திடீரென்று அது வேருடன் பிடுங்கியெறியப் பட்டது.

காட்வினின் எலும்புக்கை அசைந்தது; மெதுவாக உயர்ந்து அந்தோனியின் தலையைத் தொட்டது.

அந்தோனியின் நெஞ்சையழுத்திக் கொண்டிருந்த பாறாங்கல் நகர்ந்துபோய்விட்டது. மனது இலேசாகிவிட்டது.



உயில் தயாராகிறது. காட்வினின் அறை உட்புறமாகத் தாழ்ப்பாளிடப்பட்டிருக்கிறது. உள்ளே பாதிரியார் விக்டோரியா, வக்கீல் ராமச்சந்திரய்யர், திருநெல்வேலியைச்சேர்ந்த கிழ டாக்டர் சாமுவேல் மோத்தா. இன்று பிற்பகலிலேயே காட்வினின் பிரும்மாண்டமான பாக்கார்ட் கார் அவர்களை அழைத்து வந்துவிட்டது.

காட்வினுக்கு அதிக நேரமில்லை. ஆகையால் மற்றவர் களெல்லாரும் ஒரு சேர வந்திருக்கிறார்கள்.

மரியதாசனுக்கு ரொம்ப மகிழ்ச்சி. ஐயா இவ்வளவு நாள் பிள்ளையை நினைச்சுத்தான் உயில் எழுதாமே இருந்திருக்கார். இப்போ பிள்ளை வந்துட்டான். அதனாலே இப்போ உயில் எழுதிச் சொத்தையெல்லாம் உரியவனுக்கே கொடுத்துவிட்டுப் போவார்.

அந்தோனி யாருடனும் பேசவில்லை. யாராவது அவனை ஏதாவது கேட்டால் ஓரிரு வார்த்தைகளில் பதிலளிக்கிறான். அவனது கண்கள் பீட்டரைத் தேடுகின்றன. பீட்டர் ஒரு தடவை கூட அப்பாவைப் பார்க்க வரவில்லையே!

அந்தப்புரப் பகுதியில் இருப்புக் கொள்ளவில்லை அவனுக்கு. அவன் வெளிப்பக்கத்து ஹாலில் வந்து உட்கார்ந்தான்.

தலைமையன்னையும் ஒரு பணிப் பெண்ணும் காட்வினுக்குப் பணிவிடை செய்கிறார்கள்.

ஹாலுக்குள் இருவர் நுழைந்தார்கள். பார்த்ததுமே அவர்களை அடையாளங் கண்டு கொண்டான் அந்தோணி–அவனுடைய மாமாக்கள் ஜோசப்பும் ஆல்பர்ட்டும். ஜோசப்பின் முகத்தில் தடிமனான லென்ஸ் பதித்த மூக்குக் கண்ணாடி. கண்ணாடிக் குள் தெரியும் விழி ரொம்பப் பெரிதாக இருக்கிறது. நிலையற்ற பார்வை. ஆல்பர்ட்டின் முகம் போக்கிரி ஓநாயின் முகம்போல் நீளமுகம். விறைப்பான காதுகள், கடுகுக் கண்கள், காரியவாதி, பேச்சில் வல்லவர்.

ஜோசப் அந்தோனியை மேலும் கீழும் பார்த்துவிட்டுக்கேட்டார், "நீயாரு?...."

சட்டென்று பதில் வந்தது ஆல்பர்ட்டிடமிருந்து– "இது நம்ம அந்தோனி... உனக்கு அடையாளம் தெரியல்லியா?..." பிறகு அந்தோனியிடம் திரும்பினார்– "அண்ணனுக்குக் கண்ணிலே குளுகோமா வந்தது போன வருசம்... நீ தான் இங்கே இல்லையே. நீ எப்போ வந்தே?..." அந்தோனி பதில் சொல்லக் காத்திராமல் பேசிக்கொண்டே போனார் ஆல்பர்ட்– " நீ நல்ல சமயத்திலே வந்திருக்கேப்பா... நீ வரல்லேன்னா இவ்வளவு சொத்தும் ஆழும் பாழுமா..."

அந்தோனிக்குச் சங்கடமாயிருந்தது. ஜோசப் அவனுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு சொன்னார்– "மாப்பிள்ளை உயில் எழுதறார்னு கேள்விப்பட்டேன்... ஒரு முறை எங்களோடே கலந்து பேசி... உனக்காகத்தான் சொல்றேன்... உன்னோட அம்மா உசிரோடே இருந்தால் பேச்சே இல்லே..."

இடையில் பேசினார் ஆல்பர்ட்– "சூழ்ச்சிக்காரங்க பேச்சைக் கேட்டு உன்னோட அப்பா உன்னைத் துறந்துட்டதாகக் கேள்விப் பட்டோம்..."

"இருப்பா!" என்று ஆல்பர்ட்டைத் தடுத்துவிட்டுத்தாமே பேசினார் ஜோசப் தயங்கித் தயங்கி– "சொந்தப்பிள்ளையை... அவன் எவ்வளவு தான் போக்கிரியா இருந்தாலும்... என்ன இருந்தாலும் பிள்ளை பிள்ளைதான்... நீ ஒண்ணும்..."

அதற்குள் ஆல்பர்ட்டுக்குப் பொறுக்கவில்லை. அவர் அண்ணனின் கையைப்பிடித்துக் கொண்டு சொன்னார், "வா, உள்ளே போய்ப்பார்ப்போம், என்ன நடக்கறதுன்னு..." இருவரும் அந்தப்புரப்பகுதியை நோக்கிச் சென்றார்கள்.

ஒவ்வொருவராக ஹாலுக்குள் ஜனங்கள் வரத் தொடங்கினர். ஒரு மணி நேரத்துக்குள் ஹால் நிரம்பிவிட்டது. காரணம்,

காட்வின் உயிலெழுதும் செய்தி பரவியது தான். காட்வின் பாவ மன்னிப்பு வேண்டும்போது எங்கேயிருந்தார்கள் இவர்கள்?

இப்போது எல்லோரும் காட்வினைச் சந்திக்க விரும்பினர். அவர் சாகக்கிடக்கிறார், அவரால் பேசமுடியவில்லை என்பது பற்றியெல்லாம் அவர்களுக்குக் கவலையில்லை...

"நான் மாதாகோவிலிலேருந்து வந்திருக்கேன். கோவிலுக்குக் கொஞ்சம் பணம் தேவைப்படறது..."

"நாங்க நல்லொழுக்க சங்கத்திலேருந்து வந்திருக்கோம். எங்களுக்கு ஏதாவது கொஞ்சம்..."

"நாங்க சால்வேஷன் ஆர்மியைச் சேர்ந்தவங்க. எங்க அமைப்பு நன்கொடையிலேதான் இயங்கறது. காட்வின் ஏதாவது ஒரு நிரந்தர ஏற்பாடு செஞ்சுட்டுப் போனால்..."

அந்தோனிக்கு முதலில் ஆச்சரியமாயிருந்தது. பிறகு எரிச்சல் வந்தது. காட்வினின் குமாஸ்தாக்கள் இருவர் வந்தவர்களைச் சமாளிக்க முடியாமல் திணறுகிறார்கள்...

"நான் ஒரு தடவை அவரைச் சந்திக்கிறேன்..."

"என் பெண்ணுக்குக் கலியாணம்..." என்று சொல்லிக் கொண்டே ஒருவன் அவர்களிடமிருந்து நழுவிக் கொண்டு உள்ளே நுழையப் பார்த்தான். மறவக்காவற்காரன் அவனைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தான்.

"காட்வின் பெரியவரைப் பார்த்தாகணும் எனக்கு!... அம்பத்தாறாயிர ரூபாய்க்கடனுக்காக என் வீடு ஏலம் போயிக் கிட்டிருக்கு!..." தீனமாகக் கதறினான் ஒருவன்.

இவர்களில் யாரையுமே அந்தோனிக்குத் தெரியாது.

அதோ கையில் ஜெப மாலையுடன் வந்துகொண்டிருப்பது யார்? ... சுஸான் கார்தோஸாதானே? அப்படித்தான் தோன்று கிறது. அவலட்சணமான முகம், குழம்பிய கண்கள்–பக்தி மேலீட்டாலா அல்லது போத்தலின் தயவாலா, தெரியவில்லை. முகத்தில் மேற்பூச்சாக ஒரு புன் சிரிப்பு–கெட்ட நோக்கத்தை மறைக்கும் முகமூடி. தோற்றம் சற்றும் மாறவில்லை.

சுஸான் மரியதாசனைப் பார்த்துச்சிரித்தான்–காதுகள் வரை நீண்ட சிரிப்பு. கரகரத்த குரலில் அவனைக் கூப்பிட்டான் – "தாசன், இங்கே வா..." தாசன் அவனைத் தவிர்ப்பதற்காக வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

சுஸானின் இடது புருவத்துக்குமேல் வெட்டுப்பட்ட காயத் தழும்பு. அவன் அருணாசலத்தின் அழகு மனைவியுடன் சல்லா பித்ததற்குக் கிடைத்த பரிசு. வெகுகாலத்துக்கு முந்தைய நிகழ்ச்சி. அந்தோனிக்கு இன்னும் நன்றாக நினைவிருக்கிறது.

சுஸான் எல்லோருடனும் கிசுகிசுக்கிறான். என்னதான் பேசுகிறானோ! கடைசியில் அவனிடம் தாசன் அகப்பட்டக் கொண்டு விட்டான். "தாசன், ஐயா கிட்டே போய் நான் அவரோட கொஞ்சம் பேசணும்னு சொல்லு!..."

மரியதாசன் எப்படியாவது தப்பினால் போதுமென்று உள்ளே ஓடினான்; ஐந்தாறு நிமிடங்களுக்குப்பின் திரும்பிவந்தான்.

"ஐயா சொன்னார் 'இப்ப நேரமில்லே. அவனை என் சவப்பெட்டிக்குப்பின்னாலே வர்றதுக்குத் தயாராயிருக்கச் சொல்லு'..." என்று தெரிவித்தான் மரியதாசன்.

"ஆ!..." என்று வாய் திறந்து நின்றான் சுஸான். "அன்னை மேரியே... கர்த்தாவே..." என்று ஜெபமாலையை உருட்டத் தொடங்கினான், பிறகு திடீரென்று ஜெபத்தைநிறுத்திக்கொண்டு கத்தினான், "என்ன அக்கிரமம் இது! டாக்டர்களாலே ஒண்ணும் பண்ண முடியலேன்னு விட்டுடறதா? இது கொடுமை! நாட்டிலே சித்த வைத்தியம் இல்லையா? சித்த வைத்தியங்க செத்தவங்களைக் கூடப் பிழைக்க வைப்பாங்களே!... வேறேயாரும் சித்த வைத்தியனைக் கூட்டிக்கிட்டு வரல்லேன்னா நான் கூட்டிக்கிட்டு வரேன். நான் காட்வினோட தம்பி. ஒரே ரத்தந்தான் எங்க ரெண்டு பேர் உடம்பிலேயும் ஓடறது... நாங்க ஒரே குடும்பம்..."

"இவனுக்கென்ன இவ்வளவு அக்கறை?..." பக்கத்திலிருந்த ஒருவன் கேட்டான். "முதலைக் கண்ணீர் வடிக்கறானே!... இவ்வளவு கரிசனம் இவ்வளவு நாள் எங்கே இருந்தது?"

அந்தோனி திரும்பிப் பேசியவனைப் பார்த்தான். சும்மா வந்திருக்கிறான் – எதுவும் வாங்கிக் கொண்டுபோக அல்ல.

அந்த மனிதனின் விமரிசனம் சுஸானின் காதில் விழாமலில்லை. ஆனால் இதையெல்லாம் பொருட்படுத்தினால் அவனுக்குக்கட்டாது.

இந்த சமயத்தில் ஜோசப்பும் ஆல்பர்ட்டும் அந்தப்புரப் பகுதியிலிருந்து வந்தார்கள்.

சுஸான் அவர்களை ஆவலுடன் கேட்டான், "உள்ளே என்ன நடக்கறது?... நீங்க பாத்தீங்களா?"

"ஒண்ணும் பார்க்க முடியல்லே... காட்வினோட அறை உட்புறம் தாழ்ப்பாள் போட்டிருக்கு. ஈ காக்கை உள்ளே நுழைய முடியாது..." என்று சுருக்கமாகப் பதிலளித்துவிட்டு ஆல்பர்ட் அந்தோனி பக்கம் திரும்பினான். "அந்தோனி..."

"அந்தோனியா?" திகைத்துப்போய்க் கூவினான் சுஸான். "அந்தோனி எங்கேருந்து வந்தான் இப்போ?"

"ஏன் இதுதான் நம்ம அந்தோனி" என்று அலட்சியமாகப் பதிலளித்த ஜோசப் அந்தோனி பக்கம் திரும்பி, "அந்தோனி, இப்ப உனக்கு ரொம்ப சங்கடமான காலம்... நீ எங்க வீட்டுக்கு வந்துடேன்... உன் மாமி இருக்கற வரையிலே உனக்கு எந்த விதக் கஷ்டமும் இருக்காது..."

"மேரியே... கர்த்தாவே..." என்று வேகமாக ஜெபமாலையை உருட்டிக்கொண்டே வெளியேறினான் சுஸான்.

"ராஸ்கல்! கழுதைப்புலி!..." சுஸான் சென்ற திசையை நோக்கித்திட்டினான் ஆல்பர்ட்.

"இந்த ராஸ்கல் எதுக்காக வந்தான் இங்கே?" கசப்பு மருந்து சாப்பிட்டவன்போல் முகத்தைக் கோணிக்கொண்டு கேட்டான் ஜோசப். மாப்பிள்ளையை எவ்வளவு பாடுபடுத்தியிருக்கான் இவன்! எவ்வளவு அவமானப்படுத்தியிருக்கான்! கம்மகார மகாஜன சங்கத்தலைவங்கற முறையிலே..."

பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒருவன் ஏதோ சொன்னான். அவனுடன் தான் சுஸான் வெகுநேரம் கிசுகிசுத்துக் கொண்டிருந்தான்.

"கம்மகார மகாஜன சங்கமா? அது ஒரு பெரிய மோசடின்னா! சங்கப் பணம் பூரா இந்தப் போக்கிரியோட வயித்திலேதான். மோசக்காரத் தடியன்! இவனைப் பத்தித் தெரியாதா எங்களுக்கு!..." ஆல்பர்ட் சொல்லத்தகாத வார்த்தைகளால் சுஸானைத்திட்டத் தொடங்கினான்.

திட்டுக்களைக் கேட்கச் கூசினான் அந்தோனி. சீ, சீ... ஒரு மனிதன் இன்னொரு மனிதனை இப்படியா திட்டுவது!

"... நான் இந்த அந்தோனிக்கு முன்னாலேயே சொல்லி வைக்கறேன். மாப்பிள்ளை கிட்டேயிருந்து சுஸான் வாங்கிக்கிட்ட ஒரு லட்சத்து எழுபதாயிர ரூபாய்க்கும் கணக்குக் கேக்காமே விடமாட்டேன் நான்!..." இது ஆல்பர்ட்.

"முட்டாள்! நிறுத்து! எது எங்கே பேசறதுன்னு தெரியாமே..." இதுஜோசப்...

இதெல்லாம் ஒரே திகைப்பையளித்தது அந்தோனிக்கு. இந்த சுஸான்.. இந்த ஜோசப், ஆல்பர்ட்... ஏதேதோ சங்கங்கள்... அவற்றின் தலைவர்கள், செயலாளர்கள்.... ஒரு மனிதன் உலகத்தை விட்டே போகப்போகிறான். ஆனால் யாருக்குமே அவனைப் பற்றிக் கவலையில்லை. இவர்கள் தாங்கள் மட்டும் அழியாமலிருக்கப்போவதாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆச்சரியம்! இவர்களுக்கெல்லாம் பணம் தேவை. காட்வினிடம் தான் நிறைய பணமிருக்கிறதே, அதை இவர்களுக்கு ஏன்

கொடுக்கக் கூடாது? கிருஸ்துவ மதத்தில் தானம் செய்வது பெரிய புண்ணியமல்லவா!.

சாந்தாக்ருஸ் நிலையத்தில் வெளிநாட்டான் கூறியது நினைவு வந்தது அந்தோனிக்கு – "இந்த நாட்டில் எல்லாரும் பிச்சைக்காரங்க அல்லது திருடங்க..."

காட்வின் அறைக்கதவு திறந்தது. உள்ளிருந்தவர்கள் வெளியே வந்தார்கள். வக்கீல் ராமச்சந்திரய்யர் அந்தோனியிடம் சொன்னார், "நீ அப்புறம் என்னை வந்து பாரு..."

சாமுவேல் மோத்தா அந்தோனியை அன்புடன் கட்டித்தழுவிக் கொண்டார் – "அசட்டுப்பையா! அப்பாமேலே கோவிச்சுக் கலாமா?... ஒரு நாள் சாவகாசமா என்னை வந்து பாரு..."

கிழட்டுப் பாதிரியார் அமலநாதன் விக்டோரியா அந்தோனியை ஏற இறங்கப் பார்த்துவிட்டுச் சிரித்துக்கொண்டே சொன்னார் – "அப்பாவுக்கேத்த பிள்ளைதான். புகழ்பெற்ற பிள்ளை... நான் உன்கிட்டே ஒரு நாள் வெளிநாட்டைப் பத்தியெல்லாம் கேட்க விரும்பறேன்..."

ஒவ்வொருவராக அந்தோனியிடம் விடைபெற்றனர்.

அன்றிரவே காட்வின் மௌனமாக, யாருக்கும் தெரிவிக்காமல் உலக வாழ்வைத் துறந்து விட்டார்....



வெகு நேரமாக முயற்சி செய்கிறார். மன்றாடிக் கெஞ்சுகிறார். அப்படியும் கல்யாணிக்கு மனமிரங்கவில்லை. அவள் பிடிபட மறுக்கிறாள். ஆசிரியரின் கன்னங்களிலிருந்து வியர்வை வழிகிறது.

வெகு காலத்துக்குப் பிறகு கல்யாணி வாசிக்கத்தொடங்கியிருக்கிறார் அவர். முதலில் டுங், டாங் என்று ஆலாபனை. பிறகு வீணைத்தந்திகளில் பலமாக மீட்டுகிறார், ஊஹூம், அவர் விரும்பும் வகையில் ராகம் தெளிவாக ஒலிக்கவில்லை. கல்யாணி ரொம்ப ரோசக்காரி, ஆசிரியரும் விடாக்கண்டர். தொடர்ந்து இசைத்துக் கொண்டேயிருந்தார்.

முன்னிரவுக் காலம் -கல்யாணிக்கு ஏற்ற நேரம், கல்யாணி வரத்தான் வேண்டும்.

ஒரு முறை மீட்டல், அப்புறம் தந்தியைத் திருகல், திருகலின் வேதனையில் தந்தியின் ஓலம், பிறகு தொடர்ந்து மீட்டல்.

ஸ்வரத்தில் மயிரிழை கூடப் பிசகில்லை. அப்படியும் ஏன் கல்யாணி பிசிறில்லாமல் ஒலிக்கவில்லை?

அந்த இரவிலும் இதே மாதிரிதான். அந்தப் பெண்ணும் கல்யாணி ராகத்தைத்தான் எடுத்துக் கொண்டிருந்தாள். பெரிய கச்சேரி நிகழ்ச்சியில்லை. கேட்பவன் ராமன் ஒருவன்தான். ராமானுஜம் தான் பக்க வாத்தியம்.

ராமானுஜம் தான் அவனை அழைத்து வந்திருந்தான் "ஒரு நல்ல வீணைவித்துவான் வந்திருக்கார், போய் வீணைகேட்டுட்டு வரலாம்" என்று சொல்லி இந்த மாதிரி இடத்துக்குக் கூட்டிக் கொண்டு வருவான் என்று ராமன் நினைக்கவேயில்லை.

அக்கிரகாரம், பிராமணவீடு, வீட்டு வெளிச்சுவரில் வெள்ளை யிலும் காவியிலும் பட்டைகள், அறைநடுவில் சமுக்காளத்தின் மேல் ஒரு வீணையும் மிருதங்கமும் வைக்கப்பட்டிருக்கின்றன. ராமனும் ராமானுஜமும் சமுக்காளத்தின் மேல் அமர்ந்தார்கள்.

பிச்சிப்பூவின் அழுத்தமான நெடி மூக்கில் தாக்கியதும் நிமிர்ந்து பார்த்தான் ராமன், இளமை ததும்பும் பெண் ஒருத்தி உட்பக்கக் கதவு வழியே அறைக்குள் நுழைந்து வீணையின் முன் னால் அமர்ந்தாள். தடிப்பான மூக்கு நுனி, உதடுகள், அகல மான முகம், மோவாயில் ஒருமச்சம்.

"நமஸ்காரம், தம்பி " அவள் சொன்னாள்.

பறவைக் கண்கள் போல் சலனம் மிகுந்தகண்கள் அவளுக்கு. பிராமணப்பெண்ணல்ல, தேவதாசி. ராமானுஜம் வேண்டு மென்றே அவனை இங்கு அழைத்து வந்திருக்கிறான். அவனுக்கு ராமானுஜத்தின் மேல் கோபங் கோபமாக வந்தது. ஆனால் மரியாதைக்குறைவாக நடந்து கொள்ளவும் முடியாது ராமனால். இருந்தாலும் பதில் வணக்கம் செய்யத் தோன்றவில்லை அவனுக்கு.

தேனில் தோய்த்தாற்போல் வார்த்தைகள் வந்தன அவளிட மிருந்து " நீங்க ஒரு பெரிய கலைஞர். உங்க அப்பா எவ்வளவு பெரியவர்!...நமஸ்காரம், தம்பி!"

இப்போது ராமனும் பதில் வணக்கம் செய்தான்.

துவளும் கண்கள், ஒளிரும் புன்னகை. அந்தப் பெண் வீணையை எடுத்துக் கொண்டு சொன்னாள் "உங்க முன்னாலே வீணை வாசிக்கறேன். குத்தங் குறையிருந்தால் மன்னிக் கணும்...."

ஓரக்கண்ணால் அவளைப்பார்த்துக் கொண்டிருந்தான் ராமன். ராமானுஜம் மிருதங்கத்தைச் சிறுசுத்தியால் தட்டினான், பிறகு கையால் அடிக்கடி தட்டிப் பார்த்து வீணையொலியுடன் மிருதங்க ஒலியைப் பிசிறின்றி இணைத்துக் கொண்டான்.

ராமனைப் பார்த்தவாறே வீணையை மீட்டினாள் பெண். தந்தி ஒலித்தது. ஆனால் அதில் ராகத்தின் உயிர் ஒலிக்கவில்லையே! டிங் டிங் ஒலி காதில் விழுகிறது, ஆனால் மனதைத் தொட வில்லை. உற்சாகமாக மிருதங்கத்தைத் தட்டுகிறான் ராமானுஜம்.

"கல்யாணியைக் கொலை பண்ணப் போறியா?" ஓர் அதட்டல் உள்ளேயிருந்து வந்தது.

அடுத்தகணம் இசை நின்றுவிட்டது. எல்லாரும் உட்புறம் முகத்தைத் திருப்பினார்கள். அங்கே நிலைப்படியைப் பிடித்துக் கொண்டு ஒரு வெண் பளிங்குப் பதுமை இல்லை, ஒருபெண் மணி. உடல் வெள்ளை, தலைமுடியும் வெள்ளை.

பெண் வீணையைக் கீழே வைத்தாள். ராமானுஜம் மிருதங் கத்தைக் கீழே வைத்துவிட்டு அந்த மூதாட்டியின் முன்னால் விழுந்து சாஷ்டாங்கமாய் வணங்கினான்.

மூதாட்டி வேறு யாருமில்ல, பிரசித்தி பெற்ற வீணை ருக்மணி அம்மாள்!

ராமன் எழுந்து நின்றான். இருந்தாலும் கும்பிட்டு வணங்கக் கூச்சம். மறுபடி உட்கார்ந்தான்.

ருக்மணி அம்மாள் அக்காலத்தில் இணையற்ற வீணைப் பாடகி, அவள் சாட்சாத் கலைவாணிதான் என்பார் ராமனின் குரு தஞ்சாவூர் நரசிம்மன். தோற்றம் சரஸ்வதி தேவியைப் போலத் தானிருக்கிறது. தேர்ந்த சிற்பி சமைத்த பதுமை. மலர்ந்த விழிகளில் பார்வைமட்டும் இல்லை.

காவிரிக் கரை நினைவு வந்தது ராமனுக்கு. நினைவு வந்தது, காலையின் பொன்னொளியைப் பூசிக் கொண்டு நீரிலிருந்து எழுந்து வரும் ஊர்வசி. அவளிசைத்த திருப்பாவை காதுகளில் ஒலித்தது.

"நீ யாருப்பா?"

"நான் கோதண்டராமன், திருவையாத்துப்பக்கம் சதாமங் கலத்து அனந்த கிருஷ்ணனோட பிள்ளை..."

"உன்னைத் தெரியறது எனக்கு, நீ என்னோட ரங்கநாதன்", என்று சொல்லிச் சிரித்தாள் ருக்மணியம்மாள். பெண்ணுக்கும் ராமானுஜத்துக்கும் ஒரே திகைப்பு.

ருக்மணியம்மாளைப் பற்றி நரசிம்மன் கூறிய செய்தியொன்று ராமனின் நினைவுக்கு வந்தது....

ருக்மணியம்மாள் திருப்பதிக்கு யாத்திரை போயிருந்தாள். வழியில் ஓரிடத்தில் ஒரு பெண்மணி அழுது கொண்டிருந்தாள். அவளுடைய பிள்ளை இறந்து போய்விட்டானாம். புத்திர சோகத்தை மறக்க அந்த யாத்திரையை மேற்கொண்டிருந் தாளாம் அவள். ஆனால் காசு பணமில்லாமல் திருப்பதிப் பெரு மாளைத் தரிசனம் செய்வது சுலபமில்லையே! அதனால் அழுது கொண்டிருந்தாள் அந்தப் பெண்மணி.

அவள் நிலையைக் காணப் பரிதாபமாயிருந்தது ருக்மணி அம்மாளுக்கு. அவள் அந்தப் பெண்மணியிடம் சொன்னாள், "நீ இங்கேயே இரு... பெருமாளை உள்ளூர வேண்டு... அவர் இங்கே வந்து உனக்குக் காட்சி தருவார்."

அந்தப் பெண் மணியின் அருகிலேயே தானும் அமர்ந்து கொண்டு பக்திப்பாடல்கள், ஆண்டாள் பாசுரங்கள் பாடத் தொடங்கினாள் ருக்மணியம்மாள். இவ்வாறு மூன்று நாட்கள் கழிந்தன. மூன்றாம் நாள் இரவில் வீணையை எடுத்துக் கொண்டு நீலாம்பரி ராகத்தை இசைக்கத் தொடங்கினாள்.

நீலாம்பரி இரவுக்கேற்ற ராகம். இந்த ராகத்தை இசைத்துத் தான் யசோதை பாலகிருஷ்ணனை உறங்க வைப்பாள். இந்த ராகத்தின் மோகனக்கவர்ச்சி திருப்பதிப் பெருமாளை அங்கு இழுத்து வந்தது. அந்தப் பெண்மணியின் இறந்துபோன பிள்ளை யின் உருவத்தில் அங்கு தோன்றினார் பெருமாள். செத்த குழந்தையைக் கண்முன்னே பார்த்து அழுது தீர்த்தாள் தாய். பெருமாளே தன் பிள்ளையுருவத்தில் வந்திருப்பதை அவள் அறியவில்லை.

ஆனால் ருக்மணியம்மாளுக்குத் தெரிந்துவிட்டது. உடல் சிலிர்க்க, மெய் மறந்து நீலாம்பரியை இசைத்துக்கொண்டே அவள் வேண்டிக்கொண்டாள்– "பாலகோபாலா! நான் உன் னைப் பார்த்துட்டேன் இந்தக் கண்களாலே. கண்களாலே எனக்குக் கிடைக்கவேண்டிய பலன் கிடைச்சுப்போச்சு. இனி மேல் உலகத்திலேயே வேறே எதையும் பார்க்க வேண்டாம் எனக்கு.... என் பார்வையை நீ எடுத்துக்கோ!...."

அன்று முதல் பார்வையிழந்து விட்டாள் ருக்மணியம்மாள், அதுமுதல் யாருக்கு முன்னாலும் வீணைவாசிப்பதில்லை.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி இது....

"நீ என்னை அன்னிக்குக் காப்பாத்தினேப்பா!"

இளம் பெண் ருக்மணியம்மாளைப்பிடித்துச் சமுக்காளத்தின் மேல் உட்காரச் செய்தாள்.

"உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வே ்ப்பா!"

ருக்மணியம்மாளின் வரலாறு தெரிந்திருந்தும் ராமன் சொன்னான், "நான் நீங்க வீணைவாசிச்சுக் கேக்கணும். என்னோட நீண்ட கால ஆசை...."

உற்சாகமின்றிச் சிரித்தாள் ருக்மணியம்மாள்–"ரங்கநாதா, நீ என்னைச் சோதனை பண்றியே!"

பிறகு மௌனமாகி விட்டாள். எல்லோரும் பேசாமலிருந்தார்கள்.

யோசனையிலாழ்ந்திருந்த ருக்மணியம்மாள் கடைசியில் சொன்னாள், "சரி... என்னோட வீணையைக் கொண்டுவாம்மா."

பெண் பக்கத்து அறையிலிருந்து வீணையைக் கொண்டு வந்தாள்.

பிரும்மாண்டமான வீணை. இவ்வளவு பெரிய வீணை ஒன்றை ராமன் தன் குரு நரசிம்மனிடம் பார்த்திருக்கிறான். அதில் நிறையத்தந்திகள்.. பெயர்சரஸ்வதி வீணை.

ருக்மணியம்மாள் மிகவும் அக்கறையாக வீணையில் சுருதி சேர்த்தாள்.

ராமானுஜம் தயங்கிக்கொண்டே கேட்டான், "நான் உங்களுக்குப் பக்கவாத்தியம் வாசிக்கமுடியுமா?"

சிரித்தவாறே உற்சாகப்படுத்தினாள் ருக்மணியம்மாள் – "நல்லா வாசிக்க முடியும்.... வாசி..."

ருக்மணியம்மாள் கல்யாணி ராகத்தை இசைக்கிறாள். ராமனின் மூடிய கண்களுக்கு முன்னால் காட்சிக்குப்பின் காட்சி. வெல்வெட் மாதிரி மிருதுவான வானம். இருட்டு. வீணையின் ஒவ்வொரு மீட்டலிலும் ஒரு நட்சத்திரம் பிறக்கிறது அந்த வானத்தில். நேரமாக ஆக ஒரே நட்சத்திரக் கூட்டம். வைரங்கள், கோமேதகங்கள், மரகதங்களின் குவியல்.

இசையின் மோகன ஒலி. முன்னிரவு வேளை. இயற்கை சலனமற்றிருக்கிறது. காற்றின் சல சலப்பு கூடக் கேட்கவில்லை.

எங்கிருந்தோ – ஆழத்திலிருந்து – மேலெழும்பி வருகிறது இந்த இசை. பிரபஞ்சத்தைத் துதி செய்யும் இசை...

மேலே வானம், கீழே சமுத்திரம், சமுத்திரத்தில் அலைகளின் சலசலப்பு. அலைகள் ஒன்றன்பின் ஒன்று எழுந்து கரையில் மோதி ஓய்கின்றன.

அது வெறும் வீணையல்ல, பிரபஞ்ச வீணை. அதிலிருந்து வெளிப்படும் இசை வானத்தில், காற்றில், கடலில் அமைதியைத் தெளிக்கிறது.

தன்னினைவின்றி இசைக் கடலில் மிதந்துபோய்க் கொண்டிருக்கிறான் ராமன்.

திடீரென்று கடலில் புயல். இசைப்புயல். புயல் வேகத்தில் திமிதிமி – மிருதங்க ஒலி இடியாகக் கர்ஜிக்கிறது.

பலே ராமானுஜம்! மந்திரக் கோலின் ஸ்பரிசம்பட்டு நீயும் பொன்னாகிவிட்டாய்!

அதன் பிறகு புயல் ஓய்ந்துவிட்டது. இப்போது வானம், கடல் எல்லாம் அமைதி. மென்மையாக ஒலிக்கிறது இசை, வண்டின் ரீங்காரம்போல.

வாத்திய இசை முற்றுப் பெற்றுவிட்டது. இல்லை, அறையின் காற்றில் இன்னும் மிதக்கிறது இசையின் ரீங்காரம்–பூக்களை அறையிலிருந்து எடுத்துச் சென்றபின்னும் அறையில் அவற்றின் வாசம் நடமாடுவது போல.

அறையிலிருந்த கடிகாரம் ஒன்பதுமணி அடித்தது. அவர்கள் வந்து இரண்டு மணிநேரம் கழிந்துவிட்டது. ராமானுஜம் திடுக்கிட்டு எழுந்தான். "நான் இப்பவே புறப்படணும்!"

பெண்ணும் பரபரவென்று எழுந்தாள் – "கொஞ்சம் காபி சாப்பிட்டுட்டுப் போங்க."

அவளும் ராமானுஜமும் உள்ளே போய்விட்டார்கள்.

ராமன் ருக்மணியம்மாளின் காலடியில் சாஷ்டாங்கமாக விழுந்தான்.

ருக்மணியம்மாள் அவன் தலையில் கை வைத்து ஆசி கூறினாள். பிறகு வேண்டிக்கொண்டாள், 'நீ இன்னும் கொஞ்ச நேரம் இருந்துட்டுப் போப்பா... உன்னோட நிறையப் பேசணும் எனக்கு... நீ என்னோடே ஆத்மாவுக்கு நெருங்கிய உறவுக் காரன்..."

இளம் பெண் ராமானுஜத்துடன் வந்தாள். அவள் கையில் காபி டம்ளர்.

ராமன் வாயில் வரையில் சென்று ராமானுஜத்தை வழியனுப்பி விட்டு வந்தான். அவன் திரும்பி உள்ளே வந்து உட்கார்ந்ததும் ருக்மணியம்மாள் சொன்னாள் – "நீ பெரிய வித்துவானோட பிள்ளை. அனந்த கிருஷ்ணன் வயலின் எவ்வளவு அருமையா வாசிப்பார்!... நீ பாட்டுக் கத்துக்கிட்டிருக்கியா?"

"சின்ன வயசிலே தஞ்சாவூர் நரசிம்மன்கிட்டே வீணை கத்துக் கிட்டிருக்கேன் கொஞ்சம்..." சங்கோசத்துடன் பதிலளித்தான் ராமன்.

"எனக்குக் கொஞ்சம் வாசிச்சுக் காண்பியேன்!..."

ராமனின் நெஞ்சில் படபடப்பு. அவன் ருக்மணியம்மாளின் முன்னால் வீணைவாசிப்பதா!... ஊஹூம், முடியாது!

"உங்களுக்கு முன்னாலே என் சங்கீதம் ஒண்ணுமேயில்லே, ...உங்களுக்கு, வாசிச்சுக் காண்பிக்கும்படியா..."

"சங்கீதம் சாதகம் பண்றவங்க அப்படிப் பேசக் கூடாது... அது தன்னம்பிக்கையைக் குறைச்சுடும்..."

ராமனின் உள்ளேயிருந்த கலையுள்ளம் தலை நிமிர்ந்தது. எதற்குப் போலிப் பணிவு? தெரிஞ்சதை, கத்துக்கிட்டதை வாசிச்சுக் காண்பிக்கலாமே... இதுதான் வாசிச்சுக் காண்பிக்க ஏத்த இடம். கத்துக்கிட்டது எவ்வளவு தூரம் பலிச்சிருக்கு என் பது இங்கே வாசிச்சுக் காட்டினால்தானே தெரியும்!...

"சரியம்மா, தெரிஞ்சதை வாசிக்கறேன்..."

ராமன் அந்தப் பெண்ணின் வீணையை எடுத்து வைத்துக் கொண்டு தந்திகளை மீட்டிப் பார்த்து சுருதி சேர்த்தான்.

"எனக்குத் தோடி ராகம் வாசிச்சுக் காண்பியப்பா... வெறும் ஆலாபனை பண்ணினால் போதும், ராகம், தாளம், பல்லவி.... மிருதங்கம் வாசிக்கவும் ஆளில்லே..."

அந்தப் பெண் கேட்டாள், "நான் வேணும்னா மிருதங்கம் வாசிக்கட்டுமா?"

"வேண்டாம்" என்றாள் ருக்மணியம்மாள்.

உஷத் காலம் வளர்ந்து காலையாகிறது. அந்தக் காலை நேரத்துக்குரிய ராகம் தோடி. ராமன் தோடியைத் தியானித்துக் கொண்டு இசைக்கத் தொடங்கினான். ராகத்தின் உயிர் நிலையைப் பிடித்தும் விட்டான். ராகத்தின் தூய்மையான உருவம் அனாயாசமாக வெளிப்பட்டது ராமனின் இசையில்...

ருக்மணியம்மாள் மெய்மறந்து போய்விட்டாள். அந்தப் பெண் ணும்தான்.

பல்லவியில் ஆலாபனையை நிறைவு செய்தான் ராமன். அவன் தன் குருவுக்கு முன்னால் கூட இவ்வளவு அபூர்வமாக இசைத்ததில்லை.

தன்னிலைக்கு வந்த ருக்மணியம்மாள் அவனிடம் சொன் னாள், "உனக்கு ஒண்ணு கொடுக்க ஆசைப்படறேன். வாங்கிக் குவியா?"

ராமனுக்கு ஒரே வியப்பு, ருக்மணியம்மாள் என்ன கொடுக்கப் போகிறாள் – தங்கம், வைரம், முத்து?

"என்கிட்டே கொஞ்சம் சொத்து இருக்கு, எனக்கு வயசா யிடுச்சு, சீக்கிரம் உலகத்தை விட்டுப்போக வேண்டியதுதான். அதுக்கு முன்னாலே என் வித்தையை உனக்குக் கத்துக் கொடுக்க ஆசை..."

திகைத்துப்போய்விட்டான் ராமன். என்ன சொல்கிறாள் ருக்மணியம்மாள்? அவள் "உன்னைச் சென்னை கவர்னாராக்கி விடுகிறேன்" என்று சொல்லியிருந்தால் கூட அவன் இவ்வளவு திகைத்துப் போயிருக்க மாட்டான்.

ஆனால் உடனே "சரி" என்றும் சொல்ல முடியாது. முதலில் அவன் தன் குருவின் அனுமதியைப் பெற வேண்டும்.

"பெரிய பாக்கியம்னா இது! நான் கற்பனையே செய்ய முடியாத அதிருஷ்டம்!... ஆனால் ஒண்ணு—என் குருவோட அனுமதி வேணும்..."

"வாஸ்தவந்தான், நீ அவர்கிட்டே என் பேரைச் சொல்லு, அவர் நிச்சயம் அனுமதிப்பார்..."

"தம்பி, காபி ஆறிப்போச்சு, நான் வேறே காபி கொண்டு வரேன்" என்றாள் பெண்.

"ஆமா, நல்ல காபி கொண்டு வா, கூடவே கொஞ்சம் முறுக்கும் கொண்டு வா" என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள் ருக்மணியம்மாள். இப்போது அவள் பூஜை செய்யும் நேரம்.

அந்தப் பெண் காபியும் முறுக்கும் கொண்டு வந்து அவன் முன்னே உட்கார்ந்தாள். கண்களைச் சுழற்றிக் கொண்டே சொன்னாள், "நீங்க உண்மையிலேயே பெரிய கலைஞர்தான். இல்லாட்டி சித்தி தானாக உங்களுக்கு சங்கீதம் கத்துக் கொடுக்க ஆசைப்பட்டிருக்க மாட்டாங்க..."

"இவங்க உங்களோட அம்மா இல்லியா?"

"இல்லே, சித்தி. இங்கே கோவிலுக்கு வந்திருக்காங்க. எங்க வீட்டிலே தங்கியிருக்காங்க. நாளைக்குக் கும்பகோணம் போயிடுவாங்க."

"இவங்களுக்குக் குழந்தைகள் இல்லையா?"

"ஒரேயொரு பெண்... இவங்க கிட்டேயே வீணைகத்துக்கறா. ரொம்ப நல்ல வாசிப்பா. அம்மாவோட பேரைப் காப்பாத்துவா... பேர் கேட்டதில்லே?....ரத்தினம்மாள்..."

காபி சாப்பிட்டுவிட்டு எழுந்திருந்தான் ராமன், கைகளைக் கூப்பிக்கொண்டு சொன்னான், "நமஸ்காரம்... நான் வரேன்."

"இது என்ன... இன்னிக்கி நீங்க எங்க விருந்தாளி..." பெண்ணின் கண்கள் நடனமாடின. உதட்டோரத்தில் புன் சிரிப்பு அதன் குறிப்பும் தெளிவு.

"இல்லேயில்லே..."

"ஏன்?... ராமானுஜம் இந்த ஏற்பாடுதான் செஞ்சுட்டுப் போயிருக்கார். இன்னிக்கு நான் உங்களுக்குப் பணிவிடை செய்யும் வாய்ப்புக்கொடுங்க... நான் உங்க அடிமை..."

ராமானுஜத்தின் மேல் எரிச்சலாக வந்தது ராமனுக்கு.

"என்னை மன்னிச்சுக்கங்க.... நான் வரேன்...." அவன் வீட்டைவிட்டு வெளியே வந்து தெருவில் நடக்கத் தொடங்கினான்.

பெண் ஆச்சரியத்துடன் நின்று கொண்டிருந்தாள்...

மறுநாள் ராமன் ராமானுஜத்தைப் பார்த்தபோது அவனைக் கடிந்து கொண்டான். – "நேத்திக்கு நீ என்கிட்டே சொல்லாமலே என்னை தாசி வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு போயிட்டியே! நீ இருந்தாலும் ரொம்ப மோசம்! உன் மூஞ்சியிலேயே முழிக்கக் கூடாது!"

"தாசின்னு தெரிஞ்சும் ருக்மணியம்மாள் காலிலே விழுந்தியே நீ! அதுமட்டும்?..." சரித்துக் கொண்டே கேட்டான் ராமானுஜம்.

"நீ காட்டு மிராண்டி! உன் மூஞ்சியிலே முழிச்சாப் பாவம்!"

"முழிக்க வேண்டாமே!... சரி, லட்சுமி எப்படி!.... ராத்திரி அங்கே தானே இருந்தே?" குறும்பாகக் கண்களைச் சிமிட்டிக் கொண்டு ராமானுஜம் கேட்டான்.

"இல்லை... நான் இனிமேல் உன்னோட ஒரு இடத்துக்கும் போகமாட்டேன்!"

"போனதினாலேதான் உன்னாலே ருக்மணியம்மாளோட வீணைகேட்க முடிஞ்சது, ஞாபகமிருக்கட்டும்!... ஆகா, என்னமா வாசிக்கறாங்க! அந்த அம்மாளுக்குப் பக்க வாத்தியம் வாசிக் கறதுக்குப் பயமாத்தானிருந்தது எனக்கு. ஆனால் அவங்களே எனக்கு வழிகாட்டிக்கிட்டு போனாங்க. எனக்குப் பயம் தெளிஞ்சு போச்சு... ஆகா, என்னமா வாசிச்சேன் நான்! இவ்வளவு பிரமாதமா நான் வாசிச்சதே இல்லே. இதுவே என் வாழ்விலே பெரிய வெற்றி... அவங்க ராத்திரி ரொம்ப நேரம் வரை பூஜை பண்ணுவாங்களாம். அதாவது வீணைவாசிக்கறது தான் பூஜை, என்ன அருமையாயிருக்கும், தெரியுமா?.... அதனால்தான் நீ தங்கறதுக்கு ஏற்பாடு பண்ணிட்டு வந்தேன்..."

"அதெல்லாம் சும்மா!... நீ அந்தப் பெண்ணோடே சதி பண்ணி..."

ஹி ஹி யென்று சிரித்தான் ராமானுஜம். "நீ அங்கேயே ராத்திரி தங்கிட்டு வந்திருக்கலாம்...."

☆ ☆ ☆

கோமஸ் பாதிரியார் ராமனின் உள்ளத்தில் வளர்த்து விட்டிருந்த கறுப்பு நாய் கடுமையாகக் குலைக்கும். அதனால் குழம்புவான் ராமன். ஒழுக்கம்தான் பண்பாட்டின் அடிப்படை. நீ ஒழுக்கமுள்ளவன் என்று கருதிக்கொண்டிருக்கிறாய், அப்படிப் பட்ட நீ தாசி வீட்டுக்குப் போனாயே! சென்னை சட்டக் கல்லூரி யில் நடந்த விவாதத்தில் நீ கட்டுப்பாடற்ற ஆண்–பெண் உறவைச் சாடினாயே! தேவதாசிகள் பொட்டுக் கட்டிக் கொள்ளும் வழக் கத்தை குஷ்டநோய்க்கு ஒப்பிட்டுக் கடுமையாகத் தாக்கினாயே!... உண்மையிலேயே நீ ஒரு வேஷக்காரன்!.... சீ.... சீ!....

நான் தெரிஞ்சா போனேன்? ராமானுஜம்தான் என்னை ....

ராமானுஜம் ஒழுக்கங்கெட்டவன்னு உனக்கு நன்னாத் தெரியுமே! அவன்கூட ஏன் போனே?

ராமானுஜம் சங்கீதம் தெரிஞ்சவன்... ருக்மணியம்மாளுக்குப் பக்க வாத்தியம் வாசிக்கக் கூடியவன் சாதாரண வாத்தியக் காரனில்லே...அதனாலே....

என்னதானிருந்தாலும் ருக்மணியம்மாள் தேவதாசிதானே! அதாவது தேவடியா! அவசமூகத்தைச் சேர்ந்தவங்க கும்ப கோணம் கைகாட்டி மரத் தெருவிலே உடலைவித்துப் பிழைக் கறாங்க. ஆண்களை மயக்கிக் கெடுக்கறது அவங்க தொழில்... பாட்டும் கூத்தும் குடியைக் கெடுக்கற வெறி.

ராமனின் அம்மா இப்படித்தான் சொல்வாள் – "பாட்டும் கூத்தும் குடியைக் கெடுக்கும்டா. நீ அந்த வெறியிலேருந்து உடன் அப்பாவைக் காப்பாத்துடா". அப்போது அவள் கண்கள் விஷத்தைக் கக்கும்.

ஆனால் குரு நரசிம்மன் சொல்வாரே, ருக்மணியம்மாள் பிறவிக்கலைஞர் என்று, நான் அந்த அம்மாளிடம் போகத்தான் போவேன்! குருவின் அனுமதி கிடைத்து விட்டது. அனுமதி மட்டு மில்லை, ஆசிகூட. "நீ ரொம்ப அதிருஷ்டக்காரன்!" என்றார் அவர்.

இருந்தாலும் கோமஸ் பாதிரியாரின் கறுப்பு நாயை அடக்கி வைப்பதும் கடினம்தான். பாட்டும் கூத்தும் தலைமுறை தலை முறையாகத் தேவதாசிகளின் ஏகபோக உரிமை. அவன் கனகம் மாளின் நாட்டியம் பார்த்திருக்கிறான். கோவில் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ள நாட்டியப் பதுமைகளைப் பார்த்திருக் கிறான். ஆணும் பெண்ணும் சேர்ந்து நாட்டியமாடும் பல்வேறு நிலைகள். அவற்றில் சில அசிங்கம், ரொம்ப அசிங்கம்!

வெள்ளைய மாது மிஸ் டெனெட் சென்னை வந்து சொற் பொழிவாற்றினாள். அவள் ஒரு சமூக சீர்திருத்தவாதி, அவள்

சொன்னாள் – "இந்திய சமூகம் சீரழிந்துபோய்விட்டது. அதைக் கரையேற்ற ஆங்கிலக் கல்வி அவசியம். சமூகத்தில் ஒழுக்கம் பரவவேண்டுமானால் பாட்டையும் நடனத்தையும் ஒழித்துக்கட்ட வேண்டும். நாட்டின் ஒழுக்கமின்மைக்கு முக்கிய காரணம் பாட்டும்நடனமுந்தான்!...."

இந்தச் சொற்பொழிவு ராமனை மயக்கிவிட்டது....

வாஸ்தவந்தான்... இந்தப் பாட்டும் கூத்தும் வேண்டவே வேண் டாம். தூய்மையான, பண்புள்ள வாழ்க்கை நடத்தவேண்டும். இலட்சியக் கிருஸ்துவ கனவானின் வாழ்க்கை....

இப்போது பெண்டுலம் மறுபக்கத்துக்குப் போகிறது... சிறு வயதிலிருந்தே இசை கற்றுவருகிறேன் முறையாக. ராகங்களின் ஆத்மா இப்போது என் கைப்பிடியில். அவற்றுடன் விளையாடு வதில்தான் என்ன அலாதியான மகிழ்ச்சி! சங்கீதத்தைப்போல் மகிழ்ச்சிதருவது எது?

திடீரென்று நினைவுக்கு வந்தது – காவேரிக்கரை – மார்கழி மாத அதிகாலை – திருப்பாவைப் பாசுரம்.

கறுப்பு நாய் வாய் மூடிக்கொண்டுவிட்டது. மிஸ் டெனெட்டின் சொற்பொழிவு போன இடம் தெரியவில்லை...

சென்னையிலிருந்து நேரே கும்பகோணத்துக்கு ரயிலேறி னான். ஒரு தடவை வீட்டுக்குப் போய் வரலாமா என்று தோன் றியது. பிறகு அந்த எண்ணத்தைக் கைவிட்டான். வீட்டுக்குப் போனால் அம்மா அவன் திட்டத்தை எதிர்ப்பாள்... அப்பா ரொம்ப சந்தோஷப்படுவார். அவனை இறுகத் தழுவிக் கொள்வார்.

நாட்டியக்காரி கனகம்மாள்... அவளுடைய நாட்டியத்தைப் பார்த்து வெகுகாலமாகிவிட்டது. அவனிடம் ரொம்பப் பிரியம் அவளுக்கு. அவள் இன்னும் நாட்டியமாடுகிறாளா?

நடன எதிர்ப்பு இயக்கம் தென்னிந்தியாவில் மும்முரமாயிருந் தது. ஆங்கிலக்கல்வி கற்றவர்கள் இந்த இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டார்கள். மிஸ். டெனெட் தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து சொற்பொழிவுகள் நிகழ்த்தினாள் – "தேவ தாசி நடனம் ஒரு சமூக முறை கேடு. இந்துக்களே, ஆங்கிலம் கற்றுக் கொண்டு இருளிலிருந்து வெளிச்சத்துக்கு வாருங்கள்! ஆங்கிலேயரின் நடையுடை பாவனைகளைக் கடைப்பிடியுங்கள்! அசிங்கமான பாட்டையும் கூத்தையும் ஒழித்துவிடுங்கள். நீங்கள் கிருஸ்துவ மதத்தை ஏற்றுக்கொண்டால் ரொம்ப நல்லது. கிருஸ்து உங்களுக்கு சக்தியளிப்பார், உங்கள் கவலையைப் போக்குவார். பிரிட்டிஷ்காரர்களைப் போல நீங்களும் கண்

ணியமாயிருந்தால் அவர்கள் உங்களை மதிப்பார்கள், உங்களுக்கு நல்ல வேலை கிடைக்கும், நீங்கள் மகிழ்ச்சியாக வாழலாம்..."

கோமஸ் பாதிரியாரின் கருத்துக்களையே வேறு வார்த்தைகளில் தெரிவிக்கிறாள் மிஸ். டெனெட்.

பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவின் சிறப்புக்களையெல்லாம் அழிக்கத்திட்டமிட்டு அதற்காகத்தான் மிஸ் டெனெட்டுக்குப் பணம் கொடுத்து அவளை இந்தியாவுக்கு அனுப்பியிருக்கிறது என்கிறான் ராமானுஜம்.

அன்று கோகுலாஷ்டமி. ரயிலில் ஒரே கூட்டம். இரவு முழுதும் உறக்கமில்லை ராமனுக்கு. ரயிலிலிருந்து இறங்கியதும் நேரே ருக்மணியம்மாளின் வீட்டுக்குச் சென்றான் அவன்.

விடியற்காலை, காகங்கள் கரைகின்றன. இதற்குள்ளேயே தெருவில் நடமாட்டம் தொடங்கி விட்டது. அது அக்கிரகாரம். ராமானுஜத்தின் வீடும் பக்கத்தில்தானிருக்க வேண்டும். அவனைச் சந்திக்க நேர்ந்தால் வெட்கக்கேடு...

கதவு தட்டியதும் திறந்து "நீங்க யாரு, தம்பி?" என்று கேட்டவள் வேறு யாருமில்லை. அவன் காவேரிக் கரையில் பார்த்திருந்த அந்தப் பெண்தான். அந்த முகத்தை மறக்க முடியுமா! அவள் ஊர்வசிபோல் ஆற்று நீரிலிருந்து எழுந்த காட்சி அழியாச் சித்திரமாக அவனுள்ளத்தில் பதிந்திருந்தது. தெருவில் தற்செயலாகக் கிடைத்த வைரத்தை வெல்வெட் பெட்டியில் வைத்துப் பாதுகாப்பதுபோல் அவன் அவளது நினைவைத் தன் உள்ளப் பெட்டகத்தில் பூட்டிவைத்திருந்தான். பக்கத்தில் யாருமில்லாத போது அவன் அப்பெட்டியைத் திறந்து அவளுடைய நினைவில் மூழ்குவான்.

நீர் நிறைந்து வழியும் ஏரிபோல் கண்கள். புருவங்களுக் கீழுள்ள பகுதி சற்று புடைத்திருந்தது. சற்றே விரிந்த மூக்கு நுனி. ரசம் ததும்பும் ஆரஞ்சுச் சுளை போன்ற உதடுகள். அந்த முகத்தின் அமைப்பு – அதற்கு உவமை கிடைக்காது.

கடந்த சில வருடங்களில் அவன் தன் நினைவுகளில் அவளை ஆயிரக்கணக்கான தடவைகள் பார்த்திருக்கிறான். ஒரு சில வார்த்தைகளும் பேசியிருக்கிறான் அவளுடன்.

"நீ தாசியாக ஏன் பிறந்தே?"

"பின்னே எப்படிப் பிறந்திருக்கணும்?"

"பிராமணத்தியாப் பிறந்திருக்கலாமே!"

"நான் அய்யர்ப் பெண்ணாப் பிறந்தேன்னு வச்சுக்கங்க... அதனாலே மட்டும் என்ன லாபம்?"

"அய்யங்கார்ப் பெண்ணாப் பிறந்திருக்கலாமே..."

"அய்யங்கார்களிலேயே தான் எவ்வளவு வித்தியாசங்கள்! தென்கலை, வடகலை..."

"சரி, அதெல்லாம் வேண்டாம். நீ தாசியாகவே இரு..."

"நான் ஆணுக்கு சேவை செய்யப் பிறந்திருக்கேன்..."

"பின்னே இவ்வளவு வயசாகியும் ஏன் இன்னும் பொட்டுக் கட்டிக்கலே நீ?"

"பொட்டுக் கட்டிக்கத் தகுதியான ஆண் பிள்ளை இன்னும் கிடைக்கல்லே, அதனாலேதான்...."

ருக்மணியம்மாளின் பெண் ரத்தினம்மாள் அவன் முன்னால் நின்றபோது கூச்சமாயிருந்தது ராமனுக்கு. அவனால் அவளை ஏறிட்டு நோக்க முடியவில்லை. அவன் சொன்னான், "சதாமங் கலம் அனந்த கிருஷ்ணய்யங்காரோட பிள்ளை கோதண்ட ராமன் வந்திருக்கிறதா உங்க அம்மாகிட்டே சொல்லுங்க..."

"ஓ, நீங்களா! வாங்க, உள்ளே வந்து உட்காருங்க. நீங்க விடியற்காலை ரயில்லே வந்தீங்களா? சென்னையிலேருந்தா?"

"ஆமா...ருக்மணியம்மாள்...."

"அம்மா கோவிலுக்குப் போயிருக்காங்க. இன்னிக்குக் கோகுலாஷ்டமியில்லையா! அவங்க வர நேரமாகும். நீங்க இளைப்பாறுங்க. ராத்திரி தூக்கமிருந்திருக்காது. கைகால் கழுவிக்கங்க..."

வெகுநாட்களாகப் பரிச்சயமானவள் போல் அவனிடம் இயல் பாக, பரிவுடன் பேசினாள் அவள்.

வீட்டில் வேறு யாருமில்லை. ஆனால் அது காரணமாக எந்த அசௌகரியமும் ஏற்படவில்லை அவனுக்கு. அந்தப் பெண்ணிடம் போலிக் கூச்சமோ, தயக்கமோ இல்லை.

தாசிகளெல்லாருமே இப்படித்தானோ என்று நினைத்தான் ராமன். அவனுக்குக் கனகம்மாளின் நினைவு வந்தது.

அவள் அவனுக்குச் செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். சலவை செய்து மடித்து வைக்கப்பட்டிருந்த துண் டொன்றையும் கொடுத்து விட்டுச் சொன்னாள், "நீங்க முகங் கழுவிக்கிட்டு வாங்க. காபி போட்டுக்கிட்டு வரேன். காபி சாப்பிட்டுட்டுக் கொஞ்சநேரம் பெஞ்சிலே படுத்துக்கங்க. நான் அதுக்கு வேண்டிய ஏற்பாடு செய்யறேன்."

அவளது இயல்பான, இனிமையான புன்சிரிப்பு அவனது உள்ளத்தைத் தொட்டது. அவள் அவனை அன்னியனாகவே கருதவில்லை. கருதினால் இவ்வளவு இயற்கையாகச் சிரிப் 'பாளா?

சாதுப் பையன் போல் அவன் கை, கால், முகம் கழுவிக் கொண்டான். உள்ளே காபிக் கொட்டை வறுபடும் வாசனை மூக்கில் வந்து மிதந்தது. பிறகு 'கர் கர்' என்று காபிக் கொட்டை அரைபடும் ஒலி. அந்தப் பெண் அவனுக்காக அப்போதே வறுத்து அரைத்த காபிப்பொடி போட்டுக் காபி தயாரிக்கிறாள். புத்தம் புதிய காபி ராமனுக்கு ரொம்பப் பிடித்தமானது. அதன் வாசனையில் அவனது உள்ளம் மலர்ந்தது. இரவின் களைப்பில் பாதி பறந்து போய்விட்டது.

ரத்தினம்மாள் பெரிய டம்ளரில் ஆவிபறக்கக் காபி எடுத்து வந்தாள்; கூடவே சில முறுக்குகள். "சாப்பிடுங்க. களைப்புத் தீர்ந்துடும்...."

பெண்கள் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு இவ்வளவு பரிவுடன் பணிவிடை செய்வார்களா? அவனுக்கு இத்தகைய அனுபவம் இதுவரை ஏற்படவில்லை. தாசிகள் மோகினிப் பிசாசுகள் என்று சொல்வாள் அம்மா. அம்மா ஒரு நாளும் அவனிடம் இவ்வளவு பரிவு காட்டியதில்லையே! அவன் பெற்ற பரிவு அம்மாவிடமிருந்தல்ல, கனகம்மாளிடமிருந்துதான். அது வும் அவன் சிறுவனாயிருந்தபோது. வயது வந்தவர்களிடமும் இவ்வளவு பரிவு காட்டமுடியுமா? ஆச்சரியமாயிருந்தது அவனுக்கு.

ரத்னா காபியை ஆற்றி அவனுக்குக் கொடுத்தாள். கனகமும் இப்படித்தான் காபியை ஆற்றி அவனுக்கும் கொடுப்பாள், அப்பாவுக்கும் கொடுப்பாள்.

ஓரினிய உணர்வு அவனுடைய உள்ளத்தின் ஆழத்தில் வெகு தூரம் பரவியது – அப்பாவின் வாசனைப் புகையிலையின் மணம் போல் – குண்டுமல்லிகையின் வாசனைபோல் – அதி காலையில் பிச்சிப் பூ பரப்பும் நறுமணம்போல்....

ரத்னா பெஞ்சியின் மேல் ஒரு வெள்ளை விரிப்பை விரித்து விட்டுச் சொன்னாள், "நீங்க கொஞ்சம் இளைப்பாறுங்க, தம்பி. நான் ஸ்நானம் செஞ்சுட்டு வந்துடறேன்".

கொல்லையில் கிணற்றையடுத்துக் குளியலறை. ரத்னா குளியலை முடித்துக் கொண்டு வர ஒரு மணி நேரம் பிடித்தது. அவள் வந்தபோது ராமன் தலையைக் கைமேல் வைத்துக் கொண்டு ஆழ்ந்த உறக்கத்திலிருந்தான். ரத்னா மெதுவாக அவன் தலைக்கடியில் ஒரு தலையணையை வைத்தாள். இதனால் ராமனின் உறக்கம் கலையவில்லை.

அவன் விழித்தபோது பிற்பகல். பெஞ்சியின்மேல் அவன ருகில் உட்கார்ந்திருந்த ருக்மணியம்மாள் சொன்னாள், "இன் னிக்கே பயிற்சி ஆரம்பிக்கலாம். இன்னிக்கு சாயங் காலம்..."

"அதுக்கு முன்னாலே நான் உங்களுக்குக் குரு மரியாதை செய்யணும். நான் உங்களுக்கு என்ன கொடுக்கணும், சொல்லுங்க..."

"நீ தான் எனக்கு என் உயிரையே கொடுத்திருக்கியே, அப்பா..."

"அதைவிட்டுடுங்க... முறையாகப் பயிற்சி தொடங்கறதுக்கு முன்னாலே குரு தட்சிணை கொடுக்கணும்..."

"சரி, எனக்கு ஒரு வாக்குக் கொடு..."

அவன் ருக்மணியம்மாளைப் பார்த்தபடி நின்றிருந்தான். அவன் வாயில் பேச்செழவில்லை.

"நீ ரத்னாவோட பொறுப்பை ஏத்துக்க!..."

காலுக்குக் கீழே தரை நகர்வது போன்ற உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. தலை சுற்றியது. தாசியை வைப்பாக...

"என் ஒரே குழந்தை இவ... இவளோட அப்பா பேரு தமிழ் நாட்டிலே எல்லாருக்கும் தெரியும்..."

ருக்மணியம்மாள் சொன்ன பெயர் அவனுக்குப் பரிச்சய மானதுதான். அவர் மதுரையைச் சேர்ந்த அய்யர். மேற்குடியில் பிறந்தவர். ஜில்லா ஜட்ஜாகப் பதவி வகித்தவர். கலை ரசிகர் எனப் புகழ்பெற்றவர். சங்கீதத்திலும் தேர்ந்தவர். அண்மையில் ஏதோ ஒரு விபத்தில் அவர் உயிரிழந்தபோது தென்னிந்தியாவில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

"நானே இவளுக்கு வீணை கத்துக் கொடுத்திருக்கேன். இவ ளோட அப்பா இவளை நல்லாப் படிக்க வச்சிருக்கார். இவளுக் குத் தமிழ், இங்கிலீஷ் இரண்டும் தெரியும். அதனாலேதான் சங்க டம். பொட்டுக் கட்ட இவளுக்கேத்த பையன் கிடைக்கல்லே. இவ ளோட அப்பா உசிரோடே இருந்தவரையிலே நான் கவலை யில்லாமே இருந்தேன். இப்போ அவர் இல்லே. இவளைப் பத்தி ரொம்பக் கவலையாயிருக்கு எனக்கு... எங்க குலத்திலே கவனிச் சுக்க ஆம்பிளைத் துணையில்லேன்னாப் பெண்களுக்கு ரொம்ப ஆபத்து. மோசமான ஆளுக தொந்தரவு பண்ணுவாங்க... நீ இவ பொறுப்பை ஏத்துக்குவியா?"

ராமன் மௌனம்.

ருக்மணியம்மாள் மிகவும் கவனமாகத்தான் வீணைத் தந்தி களை முறுக்கிவிட்டாள். அளவுக்கதிகமாக முறுக்கி விட்டாளோ? தந்தி அறுந்து போய் விடுமா?

ராமன் பேசவில்லை. ஆனால் மனதுக்குள் பலவிஷயங்கள் அலைமோதுகின்றன. இதெல்லாம் சூழ்ச்சி, ராமானுஜத்தின், ருக்மணியம்மாளின் சூழ்ச்சி... அம்மா சொல்வது சரிதான். இவர்கள் மோகினிகள்!....

கடைசியில் பேச்சு வந்தது ராமனிடமிருந்து "எதற்கும் அப்பா அனுமதி வேணும்..."

"வாஸ்தவந்தான். நீ அவங்களுக்கு என் வணக்கத்தைத் தெரிவிச்சு அவங்ககிட்டே சொல்லு..."

"அப்படீன்னா இன்னிக்குப் பயிற்சி தொடங்க வேண்டாம். நான் வீட்டுக்குப் போறேன்?

"அப்படியே செய்..."

ராமன் எழுந்தான்.

"அதுக்குள்ளே புறப்பட்டீங்களா?" ரத்னா கேட்டாள் கவலையோடு. "நீங்க இன்னும் பகல் சாப்பாடு கூடச் சாப்பிடல்லே. ஒரு அஞ்சு நிமிசம் பொறுங்க தம்பி. உங்க சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்றேன்".

"இல்லையில்லே, அவசியமில்லே..."

தாசி வீட்டில் சாப்பிட விருப்பமில்லையா அவனுக்கு? அம்மா, பெண் இருவரும் விக்கித்துப் போய் நின்றனர்.

ராமன் ரொம்ப ஆசாரக்காரன் என்று ராமானுஜம் முன்னமே சொல்லியிருந்தான் ரத்னாவிடம்.

ராமன் இதற்குள் வாயிலைத் தாண்டிவிட்டான். ரத்னா அவன் பின்னே ஓடினாள். சிலைபோல் நின்றிருந்தாள் ருக்மணியம் மாள்.

"மறுபடியும் வாங்க, தம்பி. விருந்தாளி சாப்பிடாமே போனால் குடும்ப ஜனங்களுக்குக் கெடுதி... எங்க சேவையிலே ஏதாவது குறையிருந்தால் மன்னிக்கணும்... நான் உங்களை எதிர் பார்த்துக்கிட்டிருப்பேன்..."

ராமன் திரும்பிப் பார்த்தான். வாயில் நிலைப்படியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறாள் கங்கா தேவி. ரவி வர்மாவின் ஓவியத்திலும் இப்படித்தான் கங்கா தேவியின் கேசம் கீழே பரந்து விரிந்திருக்கும். இதே அழகு. இதே மாதிரி நீர் நிரம்பி வழியும் ஏரிபோல். கண்களிலிருந்து நீர் வழியும் போலிக்கிறது...

ராமன் திரும்பி ரஸ்தாவில் நடக்கத் தொடங்கினான்... அதன் பின் அவன் ருக்மணியம்மாளைச் சந்திக்கவில்லை. அவளிடம்

கல்யாணி ராகத்தைப் பயிலும். வாய்ப்புக் கிடைக்கவில்லை. அதுமுதல் ஆசிரியரின் வீணையில் கல்யாணி முன்போல் ஒலிப்ப தில்லை....

☆ ☆ ☆

இவ்வளவு பெரிய வீட்டில் அந்தோனி மட்டும் இருந்தான். வீட்டின் முன் பகுதி முற்றிலும் காலி. நடுப்பகுதியில் நாலைந்து குமாஸ்தாக்கள் கணக்கு வழக்குகளைக் கவனிக்கிறார்கள். பின் பகுதியில்தான் அந்தோனி வசிக்கிறான். ஆஞ்செலா இப்போ தெல்லாம் சமையலறையை விட்டு வெளி வருவதேயில்லை. மரியதாசனும் தன்னறைக்குள் நுழைந்து கொண்டு விட்டான். எப்போதாவது அபூர்வமாகத்தான் அவனைப் பார்க்க முடிகிறது – அவனும் தன் எஜமான் காட்வினுடன் புதைக்கப் பட்டு விட்டாற்போல. பாக்கியுள்ள ஒரு சில வேலைக்காரர், வேலைக் காரிகள் ஓசை செய்யாமல் வேலை செய்கிறார்கள்.

பிரும்மாண்டமான வீடு பாலைவனம் மாதிரி இருக்கிறது. வீடு மாத்திரமென்ன, அந்தோனியைப் பொறுத்தவரையில் தூத்துக் குடிப் பட்டினம் முழுதுமே பாலைவனந்தான். இப்போது ஊரில் அவனைத் தெரிந்தவர்கள் எவ்வளவு பேர்? அவன் பதினான்கு வருடங்கள் ஊரைவிட்டுப்போய் வெளிநாட்டிலிருந்தான். அதற் கும் முன்னால், பத்து வயதிலிருந்தே கல்கத்தாவில் வாசம். இடையிடையே தூத்துக்குடிக்கு வந்து போவதோடு சரி. அப் போது சிலருக்கு அவனைத் தெரியும். பீட்டர் அவனுடைய தோழன்.

அவன் சிறுவனாயிருந்தபோது இந்த வீட்டில் எவ்வளவு ஜனங்கள் இருப்பார்கள்! தூரத்து உறவினர்கள் நிறையப்பேர் இருந்தார்கள். வீட்டில் ஒரே கும்மாளம். கல கலவென்றிருக்கும். தனிமைக்கே வழியில்லை அப்போது. அந்த வீடே அப்போது அந்தோனியின் உலகமாயிருந்தது.

மனம்போன போக்கில் வீட்டுக்குள் சுற்றி வந்தான் அந்தோனி. ஒரு நாள் தற்செயலாகத் தாயின் அறைக்கு முன்னால் வந்தான். கதவு திறந்திருந்தது. உள்ளே நுழைந்தான். நுழைந்ததும் எதிர்ச் சுவரில் அம்மாவின் பெரிய ஓவியம். அந்தோனி ஓடிப்போன பின் அப்பா இதைத் தயாரித்திருக்கவேண்டும்.

அறை சுத்தமாயிருந்தது. தினம் வேலைக்காரி அதைப் பெருக்கித் துடைகிறாள் என்பது தெரிந்தது.

தாயின் கண்களில் சோகம் அப்பிக் கிடக்கிறது. அந்தோனி சிறுவயதிலிருந்தே தன் தாயை இப்படித்தான் பார்க்கிறான். இவ்வளவு நாள் அவனுக்கு அம்மாவின் நினைவு வராதது ஆச்சரியந்தான். இப்போது அவள் ஞாபகம் வருகிறது.

அந்தோனியின் உடலில், உள்ளத்தில் ஏதோ சஞ்சலம். அவனது பதினான்கு வருட மேல் நாட்டு வாழ்க்கையின் மேற்பூச்சு அவன் மனதிலிருந்து கரைந்துபோவதை உணர்கிறான்.

அப்போது அந்தோனிக்கு ஆறு, ஏழு வயதிருக்கும். அவன் தன் முகத்தை அம்மாவின் மார்புக்குள் புதைத்துக் கொண்டிருக்கிறான். அவள் விம்மி விம்மியழுகிறாள். அவள் நெஞ்சு அழுகையில் உப்புகிறது. அவள் அந்தோனியை இறுகத்தழுவிக் கொண்டு புலம்புகிறாள் – "நான் என்ன பண்ணுவேன், என்ன பண்ணுவேன்!" அவளைப் பார்க்கப் பரிதாபமாயிருக்கிறது.

அந்தோனிக்கு அவள் நிலை இப்போது புரிகிறது... பிச்சம்மா தணிந்த குரலில் அம்மாவை அதட்டுகிறாள் – என்னம்மா இது!... அவர் எவ்வளவு பெரிய மனிசர்! எப்பப்பார்த்தாலும் உன் முந்தானையைப் பிடிச்சுக்கிட்டு இருக்க முடியுமா அவராலே? நம்ம மீனவ சமூகத்திலே அப்படியிருந்தால் ரொம்ப அவமானமாக்கும்!... ஆம்பிளைகள் ஆம்பிளைகள்தான். அவங்க எவ்வளவு கஷ்டப்பட்டு உழைக்கறாங்க!... அப்பப்போ கொஞ்சம் விளையாடத்தான் செய்வாங்க..."

அம்மாவிடம் சொல்கிறாள் பிச்சம்மா – "ராமய்யாங்கார் ஒரு குட்டியைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கார்.. நீ நம்பமாட்டேம்மா... அப்சராஸ்னா அப்சரஸ்தான்! அவ்வளவு அழகு! நிச்சயம் பாப்பாத்திப் பொண்ணாத்தானிருக்கும்..."

கேட்கக்கேட்க அம்மாவின் அழுகை வலுக்கிறது. அவள் கத்துகிறாள் – "அக்கா என்னைப் பிடிச்சுக்க! எனக்கு நெஞ்சை என்னவோ செய்யறது..."

இன்னொரு நாள்... நள்ளிரவு. அம்மாவின் அருகில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறான் அந்தோனி. ஒரு கர்ஜனை கேட்டு விழித்துக் கொள்கிறான். படுக்கையறையில் மங்கிய ஒளியில் அவன் கண்ட காட்சியால் பயத்தில் உறைந்து போகிறான்.

படுக்கைக்கு அருகில் ஒரு பூதாகாரமான உருவம். முற்றிலும் அம்மணம். பூதத்தின் உடம்பிலிருந்து தீவிரமான நெடியொன்று வருகிறது. பூதம் உறுமு கிறது – "என் படுக்கைக்குவா!"

அம்மா தாழ்ந்த குரலில் – ஆனால் உறுதியாக – பதிலளிக்கிறாள், "மாட்டேன்!"

மூச்சு முட்டுகிறது அந்தோனிக்கு. அவன் தூங்குவதுபோல் பாவனை செய்துகொண்டு பார்க்கிறான். பூதம் அம்மாவைப் பிடித்திழுக்கிறது. அவளுடைய மார்புத் துணி விலகி மார்பகம் தெரிகிறது. அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டு அந்த இரண்டு மிருதுவான பந்துகளையும் கையால் அமுக்கி விளையாடுவான் அவன். சில சமயம் அவற்றைச் சப்பவும் முற்படுவான். அப்போது அவள் அவனை, "சீ, போக்கிரிப்பயலே!" என்று அதட்டுவாள்...

பூதம் அம்மாவின் மார்பகத்தைக் குரங்குப்பிடியாகப் பிடித்துக் கொள்கிறது. பொறியில் அகப்பட்டுக் கொண்ட எலிபோல் அம்மா சுருங்கிப் போகிறாள். அப்படியும் அவளது பிடிவாதம் போகவில்லை... பூதம் அவளைப் பிடித்திழுக்கிறது. அது அவளைக் குதறித் தின்று விடுமா?

அம்மா அழுகிறாள் – "நீ போயிடு!... என் குழந்தைக்கு முன்னாலே..."

பூதம் சீறுகிறது. அது அம்மாவின் உடைகளையெல்லாம் அவிழ்த்தெறிந்தது... அவளை இறுகக்கட்டிக் கொண்டது... அது அம்மாவின் நெஞ்சைக் கிழித்துத்தின்று விடுமோ? அவளுடைய ரத்தத்தை உறிஞ்சிவிடுமோ?...

அந்தோனியால் இந்த அதிர்ச்சியைத் தாங்கிகொள்ள முடியவில்லை. அவன் வீலென்று கத்தினான்....

பூதம் அம்மாவைவிட்டு விட்டுத் தள்ளாடிக் கொண்டே வெளியே போய்விட்டது. அம்மா பிழிந்த கந்தைபோல் மயங்கித் தரையில் விழுந்துகிடந்தாள்....

அம்மா ரொம்பக் கஷ்டப்பட்டுவிட்டாள். அந்த சோகம் ஓவியத்திலும் தெரிகிறது. அவனறியாமலேயே ஒரு பெருமூச்சு வந்தது அந்தோனியிடமிருந்தது.

குழந்தைப் பருவத்தில் அந்தோனிக்கு ஆதரவாயிருந்தது அம்மா தான். அவனுக்கு அப்பா மிகவும் தூரத்து மனிதர். அந்தப்புரத்துக்கும் வீட்டின் வெளிப்பகுதிக்கும் இடையே ஒரு சமுத்திரம் – கடக்க முடியாத சமுத்திரம். அவனுக்கு அப்பாவிடம் ரொம்ப பயம். அவரிடமிருந்து விலகியே இருப்பான்; தற்செயலாக அவரெதிரில் வந்துவிட்டால் நழுவப்பார்ப்பான். அம்மாவின் மடியில் ரொம்ப சுகம், ரொம்ப அமைதி. அம்மா செல்லம் அவன். அவளோடிருக்கும்போது பாட்டு, சிரிப்பு, விளையாட்டு எல்லாம் உண்டு.

தினம் காலையில் அம்மா அவனைச் செல்லமாகக் கூப்பிடு வாள் – "மணி... ஏ மணி!"

அவளுடைய குரலில் தேன் சொட்டும். அதன் இனிமையை அனுபவிப்பதற்காக அவன் வேண்டுமென்றே படுக்கையில் படுத் திருப்பான். அரைத்தூக்கமும் அரை விழிப்புமான நிலையில் அவன் அம்மாவின் குரலினிமையை ருசித்துக் கொண்டிருப்பான்.

திடீரென்று அவனுடைய நெஞ்சிலிருந்து கிளம்புகிறது வேதனை ஓலம்....

இந்த அறையில்தான் கிடக்கிறது அம்மாவின் உடல். அசையா மல் கிடக்கிறது. நெஞ்சின் ஏற்ற இறக்கம் இல்லை. முகம் நீலம் பாரித்திருக்கிறது. உதடுகள் கறுத்திருக்கின்றன. உதட்டோரங்க ளில் சாளை வழிந்திருக்கிறது. அந்தோனி அந்த உடலை கை யால் தள்ளுகிறான் – "அம்மா, எழுந்திரு! எழுந்திரும்மா!"

சில சமயம் அம்மா விளையாட்டுக்காகச் செத்தவள் போலப் பாவனை செய்வாள். மூச்சையடக்கிக் கொண்டு கிடப்பாள் அவ னைப் பயமுறுத்துவதற்காக. அந்தோனி அழத்தொடங்கியதும் அவள் எழுந்திருந்து 'ஹோ ஹோ' வென்று சிரிப்பாள்...

ஆனால் இவ்வளவு நேரம் படுத்திருக்கமாட்டாளே! அவள் ஏன் எழுந்திருக்கவில்லை இன்னும்? "அம்மா, எழுந்திரேன்!" பலமாக அழத்தொடங்கினான் அவன்.

அழுகைக் குரல் கேட்டு அறைக்குள் வந்த ஆஞ்செலா அலறி னாள். பிச்சம்மா ஓடி வந்தாள். பயந்துபோனார்கள் அவர்கள். பிச்சம்மா அம்மாவின் நெஞ்சில் கைவைத்து வைத்துப்பார்த் தாள். கண்ணிமைகளைத் தூக்கிப் பார்த்தாள். மூக்கில் பஞ்சை வைத்துப் பார்த்தாள். அதன் பின் தலையிலடித்துக் கொண்டு பெரிதாக அழத் தொடங்கினாள்.

அம்மாவின் முகத்தைப் போர்வையால் மூடினார்கள். ஒரு வேலைக்காரி வந்து அவனை அங்கிருந்து அழைத்துச் சென்றாள். அந்தோனி கத்தினான், "அம்மா, ஏன் எழுந்திருக்கல்லே? ஏன் பேசமாட்டேங்கறா?..."

ஒரே அமர்க்களம். வைத்தியர்கள் ஓடிவந்தார்கள். வீட்டி லுள்ளவர் எல்லோர் முகத்திலும் பயம்.

எல்லாம் முடிந்துவிட்டது. வீடு முழுதுமே துக்கத்தின் ஆட்சி, துணிவுக்கும் பெயர் போன அப்பாவின் முகங்கூட வற்றிக் கறுத்துவிட்டது.

அதுதான் அம்மாவைக் கடைசியாகப் பார்த்தது...

இந்த நினைவுகளெல்லாம் இவ்வளவு காலம் எங்கே இருந்தன? இவ்வளவு நாள் அவனுக்குத் தோன்றவில்லையே இவை!...

அம்மாவின் இடத்தில் ஆம்மி – அதாவது, சுரசுந்தரி தேவி. பவானிபூரில் பகுப்பாகான் தெருவில் அந்த வீடு. வீட்டின் முன்னால் ஐந்து கிளைகள் கொண்ட ஈச்ச மரம். ஆனால் இது பிற்காலத்துக் கதை. அதற்கு முன்னால்?

தாயை இழந்த பிள்ளை ஒருவன் பெரிய வீட்டின் மூலை முடுக்குகளில் தாயைத் தேடிக் கொண்டு அலைகிறான். அம்மா எங்கே? பிச்சம்மா பதில் சொல்வதில்லை, சும்மா அழுகிறாள். ஆஞ்செலா சொல்கிறாள், "அம்மா கன்னியாகுமரிலே அவங்க அம்மா வீட்டுக்குப் போயிருக்காங்க; வந்துடுவாங்க."

பீட்டர் தான் உண்மையைச் சொன்னான், "அம்மா செத்துப் போயிட்டாங்க. அவங்களைப் புதைச்சாச்சு. இனிமேல் திரும்பி வரமாட்டாங்க."

வீட்டில் அம்மாவைக்காணோம். யாருக்கும் தெரியாமல் வீட்டைவிட்டுக் கிளம்பித் தெருவுக்குப் போய்விட்டான் அந்தோனி. அம்மா இல்லாமல் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. அவன் அம்மாவை எப்படியாவது தேடிக் கண்டுபிடிக்கத்தான் போகிறான்.

அலைந்து கொண்டே கடற்கரைக்கு வந்துவிட்டான். தெற்கில் உப்பு ஆபீசுக்கு மறுபக்கம். இந்தப் பக்கம் ஆள் நடமாட்டமே இல்லை. வெறும் கருவேல மரப்புதர்களும் மணல் மேடுகளும் தான்.

அம்மா இருக்கும்போது அவனை ஒருபோதும் இந்தப் பக்கம் வரவிடமாட்டாள். இங்கே பூதங்கள் பிசாசுகள் இருக்குமாம், குழந்தைகளைப் பார்த்தால் அப்படியே எடுத்து விழுங்கி விடுமாம்... ஒவ்வொரு நாள் மாலையில் அவர்கள் வீட்டுக் காரோட்டி திடீரென்று காரை இந்தப் பக்கம் திருப்பிவிடுவான். மர்மங்கள் நிறைந்த இடம் இது. அந்தோனியின் மனம் பயத்தில் குறுகுறுத்தாலும், அதிலும் ஒரு சுகம் உண்டு. எதிரில் நீலக்கடல். தூரத்தில் தீவுகளின் பொன்னிறக் கரைகள். தண்ணீர் அவனைக் கைநீட்டி அழைக்கிறது....

தண்ணீரில் இறங்கிப் பார்த்தால் எப்படி இருக்கும்? செத்துப் போனவர்களை மண்ணுக்குள் புதைக்கிறார்களே. செத்துப் போனவர்கள் சமுத்திரத்துக்கு அடியில் இருப்பார்களோ? அம்மாவும் இருப்பாளோ? அம்மாவைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். தண்ணீரில் முழுகி அம்மாவைத் தேட வேண்டும்.

கண்ணாமூச்சி விளையாட்டு. தண்ணீருக்குள்ளிலிருந்து அம்மா கை நீட்டுவாள்; "அடே, மணி என்னைப் பிடிச்சுட்டானே!" என்று சொல்லி அவனைக் கட்டிக் கொள்வாள்...

அந்தோனி தன் உடைகளை அவிழ்க்கிறான். அதற்குள் அங்கே ஓடி வந்துவிட்டான் பீட்டர். ஓடி வந்த வேகத்தில் மூச்சுத் திணறுகிறது. அவன் அந்தோனியைப் பிடித்துக் கொண்டு சொல்கிறான் – "இங்கே இறங்கக் கூடாது! தண்ணிரொம்ப ஆழம். இங்கே யாரும் தண்ணியிலே இறங்கக் கூடாதுன்னு அப்பா சொல்லியிருக்கார்...."

"நான் அம்மாவைத் தேடப் போறேன்..."

"சீ, பைத்தியம்! தண்ணிக்குள்ளே பேய் பிசாசுகள் சுறாமீன் மாதிரி, பாம்பு மாதிரி வேசம் போட்டுக்கிட்டு அலையும்.... உன்னோட அம்மா புண்ணியாத்மா. அவங்க தேவதையாகி, மேலே ஆகாசத்திலே – சுவர்க்கத்திலே – இருக்காங்க..."

"அப்பமுன்னா நான் அம்மாவைப் பார்க்க முடியாதா?" பெரிதாக அழத் தொடங்கிவிட்டான் அந்தோனி. அவன் வீட்டில் அழுவதேயில்லை. இப்போது பல நாட்களாக அடக்கி வைக்கப் பட்டிருந்த கண்ணீர் கரை புரண்டு ஓடியது. வெகு நேரம் அழுதான் அவன்.

அவன் அழுது ஓயும் வரை பேசாமல் நின்றிருந்தான் பீட்டர். பிறகு அவனைத் தேற்றினான், "எல்லாருக்கும் அம்மா இருக் காங்களா? எனக்கும்தான் அம்மா இல்லை..."

பொழுது சாயும் நேரம். மேலை வாயிலில் சிறிது வெய்யில், அந்தோனி வேஷ்டி சட்டையணிந்து கொண்டு, காலில் செருப் புடன் – அசல் தமிழ்க்கனவான் மாதிரி–வெளியே புறப்பட்டான். இடதுபக்கம் தூத்துக்குடித்துறைமுகம். ரஸ்தா வடக்கு தெற் காகச் செல்கிறது. தெற்கே ஊருக்கு வெளியே உப்பு ஆபீஸ். இந்தப் பக்கம் முன்னைப் போல் காலியாக இல்லை. நிறைய வீடுகள். உப்பு ஆபீஸ் கட்டிடம் புதிது போலத் தெரிகிறது. அதற்கு முன்னால் ஒரே ஜனத்திரள். எல்லோரும் கடலைப் பார்த்தபடி நிற்கிறார்கள்.

தொலைவில் கடல் நீர் நீலமாக வெயிலில் பளபளக்கிறது. கரைப் பக்கம் சற்று வெளிர் நிறம். காற்றில் சிறுசிறு அலைகள எழுந்து பரவுகின்றன. வெறிபிடித்த நாயின் பற்கள் போல் இங்குமங்கும் வெள்ளை நுரைக் கற்றைகள். நீரின்மேல் அங் கங்கே சிறு படகுகள். அவற்றின் பாய்கள் விரிந்து கொக்கு களின் இறக்கைகளை நினைவூட்டுகின்றன. கொக்குகள் அப் போது தான் தண்ணீரில் இறங்கியிருக்கின்றன; இன்னும் இறக் கைகளை மடக்கிக் கொள்ளவில்லை.

படகுகள் வேகமாக கரையை நோக்கி வந்துகொண்டிருக்கின் றன. அருகில் வந்திருக்கும் படகுகள் பெரிதாகவும் தொலைவில் வந்து கொண்டிருப்பவை சிறிதாகவும் தெரிகின்றன. மிகத் தொலைவிலிருப்பவை மாலை வெயில் பட்டு நீர்த்துளிகள்போல் பளபளக்கின்றன.

எது முதலில் கரைக்கு வந்து சேரும் என்பதில் படகுகளுக் கிடையே போட்டி. பந்தயக் குதிரைகள் மாதிரி ஓடி வருகின்றன படகுகள். பார்க்க ஒரே குஷி அந்தோனிக்கு.

திடீரென்று மற்ற படகுகளை முந்திக் கொண்டு வந்துவிட்டது ஒரு படகு. அதன் மேல் ஒருவன் நின்றுகொண்டு பாயின் கயிறு களை இப்படியும் அப்படியும் இழுத்து சர்க்கஸ் விளையாட்டுக் காட்டுகிறான். இருக்கும் கொஞ்சக் காற்றையும் முழுமையாகப் பயன்படுத்திப் பாயை உப்ப வைக்கிறான். பலே பேர்வழி! அந்தோனிக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. அதையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான்.

"ஐயா, வணக்கம்!"

அந்தோனி திரும்பிப் பார்த்தான். வணக்கம் தெரிவித்த வனின் தோற்றம் முதிர்ந்து கரடு முரடாயிருந்தது. குதிரை முகம் மாதிரி நீண்ட முகம். வலது கன்னம் உப்பியிருந்தது. அது புகை யிலையால் என்பது அவன் புகையிலையை வெளியே துப்பிய போது தெரிந்தது. முன்பக்கத்துப் பற்கள் குதிரைப் பற்கள் போல் நீளம். வெற்றிலைக் காவி படிந்து மூட்டைப் பூச்சியின் நிறம் கொண்டிருந்தன அவை. அழுக்கு வேஷ்டியை மடித்து மேலே தூக்கிக் கட்டியிருந்தான். மேலுடம்பு திறந்திருந்தது. சீட்டித் துணியாலான, அரைக்கை வைத்த அழுக்குச் சட்டையை இடது பக்கத் தோளில் போட்டுக் கொண்டிருந்தான். வலது தோளில் ஒரு துணிப்பை தொங்கிக் கொண்டிருந்தது. அவன் கையிலிருந்த சுருட்டில் ஒரு இழுப்பு இழுத்து எச்சிலைத் துப்பிவிட்டுச் சொன்னான், "ஐயா இங்கே..."

"உங்களைத் தெரியல்லியே..." என்றான் அந்தோனி.

"நீங்க என்னை 'நீங்க' ன்னு கூப்பிடாதீங்க. நான் உங்க ஊழி யன். என் பேரு ஜோக்கிம் மாசாதோ. மீன் ஏலம் போடறவன்..." அவன் மறுபடி சுருட்டில் இரண்டு இழுப்பு இழுத்துப் புகையை விட்டான்... "உங்களைத் தெரிஞ்சிடுச்சி எனக்கு... காட்வின் துரையைப் புதைக்கிறபோது... நீங்க ரொம்ப படிச்சவங்க. சீமையிலே இருக்கீங்க... தூத்துக்குடி மட்டும்.... ஏன், இந்தப் பிராந்தியத்திலே எவ்வளவு பெரிய பேரு உங்களுக்கு!...

அவனுடைய பேச்சில் ஒரு சிறு பகுதிதான் அந்தோனியின் காதில் விழுந்தது. அந்தோனியின் கவனமெல்லாம் படகுக் காரனின் சர்க்கஸில். இப்போது சர்க்கஸ் செய்பவனின் முகம் தெளிவாகத் தெரிந்தது.

''.... உங்களைப் பார்த்துக் கும்பிட்டுட்டு வரணும்னு தினம் நினைக்கறேன். முடியல்லே. தெற்கும் வடக்குமா ரெண்டு சந்தையிலே காலம்பரவும் சாயங்காலமும் ஏலம் போடவே நேரம் சரியாயிடுது... ஒரு நாள் உங்ககிட்டே வரேன்...''

சர்க்கஸ் படகு இப்போது கரைக்கு வெகு அருகில் வந்து விட்டது. சர்க்கஸ்காரன் இன்னும் படகு முனையில் நின்று கொண்டிருக்கிறான். முரட்டு இளைஞன். அட்டைக்கரி நிறம். தோள், நெஞ்சு நரம்புகள் காற்றில் உப்பிய பாயைப் போலவே புடைத்திருக்கின்றன. அவன் காற்றுடனும் அலைகளுடனும் போரிட்டவாறே வந்திருக்கிறானென்பது அவனைப் பார்த்தாலே தெரிகிறது. அவனது மார்பு துருத்திபோல் ஏறி இறங்குகிறது. பெரிய தலையில் சுருள் சுருளாகக் கூடைமயிர். அவன் நல்ல உயரம். இடுப்பில் ஒரு சிறு துண்டுதான் அணிந்திருக்கிறான். காலணக்கல்லில் செதுக்கிய கிரேக்கர்களின் சமுத்திர தேவன் நெப்ட்யூன் மாதிரி இருக்கிறான். அவனது உடல் முழுதும் வியர் வையும் கடல் நீரும் வழிகிறது....

அவன் கயிற்றைவிட்டு விட்டுக் கீழே குதித்தான். மார்பளவு தண்ணீர்.

அந்தோனி சொக்கிப்போனான். அந்த ஆளைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போலிருக்கிறது. இத்தகைய மனிதனைச் சிற்பத்தில் செதுக்க மைக்கேல் ஆஞ்செலோவால்தான் முடியும்.

படகில் ஐந்து வாலிபர்கள் பாயைச் சுருட்டி மடித்துக் கொண் டிருக்கிறார்கள். சர்க்கஸ்காரன் படகைப் பிடித்துக் கரைக்கு இழுத்து வருவதுபோல. மற்ற ஐவரும் நீரில் குதிக்கிறார்கள். எல்லோரும் படகையிழுத்துக் கரையில் ஏற்றுகிறார்கள்.

ஜோக்கிம் அவர்களை நோக்கி ஓடினான். அவர்களை நெருங் கியதும் மிகவும் அலட்சியமாக உதட்டைப் பிதுக்கிக் கொண்டு, புருவத்தைச் சுளுக்கிக் கொண்டு ''நீயா?... உன் பேரு என்ன?''

அவர்களிடமிருந்து பதிலில்லை.

ஜோக்கும் ''என்ன மீன் கிடைச்சது?'' என்று கேட்டுக்கொண்டே ஓரக்கண்ணால் படகை நோட்டம் விட்டான். படகுக்காரர்களுக்கு இப்போது பேசநேரமில்லை. அவர்களுக்கு ரொம்ப வேலை. வலையைச் சுருட்டி வைப்பது, மீன்களை வெளியே எடுத்துக் குவிப்பது...

பிரமாதமான மீன்! எல்லாமே பெரிய பெரிய கட்டா மீன். அந்தி வெயிலில் தங்கமாக மின்னுகின்றன. தங்கக் குவியல்கள் மைதாஸ் அரசனின் தங்கக் கிடங்குபோல். நாற்புறமும் பார்வை யாளர் கூட்டம். யார் வாங்கப் போகிறார்கள் என்ற பேச்சே எழ வில்லை. பார்த்துக் கொண்டிருப்பதில்தான் எல்லாருக்கும் அக் கறை. அந்தோனியும் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திரும்பாமல் மீன்களையே பார்த்துக் கொண்டிருக்கிறான். இவ்வளவு புத்தம் புது மீன்களை ஒரே இடத்தில் அவன் இதுவரை பார்த்ததில்லை. பில்லிங்க்ஸ் கேட் பற்றிக் கேள்விப்பட்டதுண்டு. ஒரு தடவையும் போனதில்லை.

தானும் ஒரு மீனவன்தான் என்பது அப்போதுதான் அந்தோனிக்கு நினைவு வந்தது.

ஜோக்கிம் மீன் குவியல்களைச் சுற்றி வந்தான் – மோப்பம் பிடிக்கும் பூனைபோல. படகின் சொந்தக்காரன் அந்தப் பக்கம் திரும்பிக் கூடப்பார்க்கவில்லை. பெரிய கர்வக்காரன் போலும்.

இன்னும் சில படகுகளும் கரை சேர்ந்துவிட்டன. ஆனால் ஜோக்கிம் படகின் சொந்தக் காரனிடம் சொன்னான் "முதலாளி உன் பேரு என்ன? ஏலம் ஆரம்பிக்கறதுக்கு முன்னாலே நான் நோட்டிலே எழுதிக்கணுமே!"

☆ ☆ ☆

இப்போது தான் வாயைத்திறந்தான் படகின் சொந்தக்காரன் –"நான் இப்பவே ஏலம் போடப் போறதில்லே. தூரத்துச் சந்தையிலேருந்து தரகங்க வரட்டும். அப்புறம் பார்த்துக்கலாம்". மீன் குவியல்களைச்சரிப்படுத்திக் கொண்டே ஜோக்கிம் பக்கம் திரும்பாமலே பேசினான் அவன். கனத்த குரல் மேகத்தின் உறுமல் மாதிரி ஒலித்தது. "என் பேரு உன் நோட்டிலே ஆயிரந்தடவை எழுதியிருக்கு...."

அவன் தொடர்ந்து படகுக்குள்ளிருந்து மீன்களை எடுத்து வெளியில் போட்டான். மூங்கில்கள், தக்கை மிதப்புகள், தூண் டில்கள், சிறுகற்கள், ஈய வளையங்கள் எல்லாவற்றையும் அவனுடைய ஐந்து உதவியாளர்களும் எடுத்து வெளியில் போட்டார்கள். யாரும் எதுவும் பேசவில்லை.

ஜோக்கிமுக்குக் கோபம் வந்துவிட்டது. அவன் கத்தினான் "எந்த ஊர் ஆளப்பா நீ? சீக்கிரம் ஏலம் போடாட்டா உன் மீன் அழுகிப்போகும்...நான்போறேன்..."

ஜோக்கிமின் கோபத்தைக் கண்டு பக்கத்திலிருந்தவர்கள் சிரித்து விட்டார்கள். இது அவனது கோபத்தை இன்னும் கிளறி விட்டது. அவன் கத்தத் தொடங்கினான் ? நீ இந்தப் பக்கத்து ஆள் இல்லே...உன்னை எனக்குத் தெரியாது. நீ உன் பேரைச் சொல்லலேன்னா உன் மீன் ஏலம் போகாது. அவ்வளவு தான்!... எப்போதும் என் பேச்சு வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டு..."

அந்தக் கர்வக்கார மீனவன் இப்போது ஜோக்கிமின் பக்கம் திரும்பிச் சொன்னான் "நான் உன்னை ஏலம் போடக் கூப்பிடல்லியே. என் மீன் வாங்கறவங்க அவங்களே வந்து வாங்கிப்பாங்க..."

"உன் படகு தூத்துக்குடிப் படகில்லே. வெளியூர்ப் படகு மீனை இங்கே ஏலம் போடக்கூடாதுன்னு எசமான் உத்தரவு" குதிரை போல் பற்களைக் கடித்துக் கொண்டு கத்தினான் ஜோக்கிம்.

படகுக்காரனின் அகம்பாவம் சாமானியமானதல்ல. அவன் தன் கைகளை இருபுறமும் நீட்டிக் கொண்டு, படகின் பலகைபோல் விறைத்த நெஞ்சுடன் நடந்து வந்து ஜோக்கிமுக்கு முன்னால் நின்றான்- "நான் பிடிச்சமீனை இந்த இந்தியாவிலே எந்தச் சந்தையிலே வேணும்னாலும் விற்பேன். இதுதான் சட்டம்! உன் சட்டத்தின் மேலே நான் மூத்திரம் அடிப்பேன்...நான் இங்கே தான் என் மீனை விற்கப்போறேன் தைரியமிருந்தாத் தடுத்துப்பாரு!..."

இதற்குள் மீன் வாங்குபவர்களும் தரகர்களும் அங்கே கூடிவிட்டார்கள். இந்தச் சண்டைக் கிடையில் பேரம் பேசத் துணியவில்லை ஒருவரும். அவர்களுடைய பேச்சு அந்தோனியின் காதில் விழுந்தது- "இன்னிக்குச் சந்தையிலே முதல்தரமீன்..."

ஜோக்கிம் குதித்தான் - "என்ன அகம்பாவம்! எந்த ஊர்க் காரனோ தெரியல்லே..."

படகுக்காரன் நெற்றி வியர்வையை வழித்தெறிந்துவிட்டு குரலையுயர்த்திச் சொன்னான்- "கடைசித்தடவையா என் பேரைச் சொல்றேன், கேட்டுக்கோ!...நான் தான் பீட்டர் ஃபெர்னாண்டோ! என்னோட அப்பா சுறாமீன் பிடிக்கற மோஸஸ் ஃபெர்னாண்டோ! என் விலாசம் தூத்துக்குடியிலே வடக்கத்தி மீனவர்சேரி..." இப்படிச் சொல்லிவிட்டு அவன் அங்கிருந்த மற்றவர்களிடம் திரும்பிச் சொன்னான், " என் சித்தப்பா தாமஸ்

ஃபெர்னுண்டோ குடியன, ஸ்திரி லோலன். அவன் ஏதோ ஒரு சந்தையிலே ஒரு வைப்பாடடிவச்சுக் கிட்டிருந்தான். அவளுக்கு ஒரு பிள்ளை. அவனோட அப்பன் யாருன்னு தெரியாது. அவன் என் சித்தப்பாவைத்தான் அப்பான்னு கூப்பிடுவான். அந்த ராஸ்கலோட பதினாலு தலைமுறையிலே மாசாதோன்னு யாருமே இல்லே..."

"ஏ பீட்டர்! பன்னிப்பயலே! நான் உன் மூக்கிலே குத்துவச்சு..."

ஜோக்கிம் குதிக்கக் குதிக்க வேடிக்கைபார்ப்பவர்களுக்கு இன்னும் உற்சாகம். அவர்கள் கைதட்டிக் கொண்டு கூவினார்கள், "சண்டைபோடுங்க பார்க்கலாம்!"

ஜோக்கிம் குதிப்பதோடு சரி, பீட்டரை நெருங்கத்திராணியில்லை அவனுக்கு. அவன் அந்தோனியிடம் மத்தியஸ்தத்துக்கு வந்தான்- "நீங்களே பாருங்க ஐயா! போக்கிரிப்பயல் மேலே விழுந்து சண்டைக்கு வரான்..."

ஜோக்கிம் சொன்னது அந்தோனியின் காதில் விழவில்லை. பீட்டரின் வார்த்தைகளே அவனுடைய காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தன "பீட்டர் ஃபெர்னுண்டோ..அப்பா சுரு பிடிக்கற மோஸஸ் ஃபெர்னுண்டோ விலாசம்...."

அந்தோனி கூட்டத்தில் இடித்துத்தள்ளிக் கொண்டு முன்னே வந்தான். தன் கைகளை நீட்டிப் பீட்டரின் கைகளைப் பிடித்துக் கொண்டான்.

பீட்டர் புருவத்தைச் சுருக்கிப் பார்த்து ஒரே பார்வையில் அந்தோனியை அடையாளங்கண்டு கொண்டான். உடனே அவனுடைய காய்த்துப் போன உள்ளங்கைகளுக்குள் அந்தோனியின் கைகள் சிறைப்பட்டன.

"அந்தோனி, நீ வந்துட்டியா?...ஆகா, எவ்வளவு காலத்துக்கப்புறம்..." இப்போது பீட்டரின் குரல் முற்றிலும் மாறிவிட்டது. அந்தத் திமிரும் அகம்பாவமும் போன இடம் தெரியவில்லை. இரும்பாயிருந்தது இப்போது களிமண் உருண்டையாகி விட்டது. பீட்டர் சிரித்தான், அவன் கண்களில் ஈரம்...

☆ ☆ ☆

அரைமணி நேரத்துக்குள் அந்தோனியும் பீட்டரும் மிகவும் நெருக்கமாகி விட்டார்கள். அவர்கள் பதினான்கு வருடங்களுக்கு முற்பட்ட பழைய கதைகளைப் பேசிக் கொண்டே நடந்தார்கள். இடைப்பட்ட பதினான்கு வருடங்களும் மாயமாய் மறைந்து விட்டன. இந்த இடைவெளியில் அவர்கள் வளர்ந்திருந்தார்கள். அவர் களுடைய நடையுடை பாவனைகள் மாறியிருந்தன. உலக நிலையும் மாறியிருந்தது. அவர்கள் போய்க் கொண்டிருந்த ரஸ்தா கூட மாறியிருந்தது இந்த மாற்றங்களை அவர்கள் சற்றும் பொருட்படுத்தவில்லை.

அந்தோனி சொன்னான், "நான் உன்னை ரொம்ப நேரமாப் பார்த்துக்கிட்டிருக்கேன். ஆனால் உன்னை அடையாளம் தெரியலே, முந்தியெல்லாம் நீ ஒல்லியா இருந்தே...பார்க்க அசடு மாதிரி இருந்தே..இப்போ என்னடான்னா...உன்னைப் பார்த்தால் ரொம்பக் கவர்ச்சிகரமாயிருக்கு..."

"உன்னையுந்தான் எனக்கு முதல்லே தெரியலே...ஆனால் நான் உன்னைச் சரியாக் கவனிக்கலே. அந்த ராஸ்கல் ஜோக்கிம் பண்ணின களேபரத்திலே எனக்கு ரொம்ப எரிச்சல் வந்திடுச்சு... அவன் தகராறு பண்ணுவான்னு எனக்குத் தெரியும்..."

"ஏன் தகராறு பண்ணணும்?"

"அது ஒரு பெரிய கதை. அப்புறம் சொல்றேன்." பீட்டர் தன் இடது கையில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு வெளிர்நிறமீனைத் தூக்கிக் காட்டிக் கேட்டான், "இது என்ன மீன் தெரியுமா?"

"தெரியாது"

"மதனம்...'மகளை வித்து மதனம் சாப்பிடு' அப்படீன்னு ஒரு பழமொழி இருக்கு தெரியுமா?" பெரியதாகச் சிரித்தான் பீட்டர். "சின்ன வயசிலே உனக்கு இந்த மீன் ரொம்பப் பிடிக்கும், கல்கத்தாவிலேருந்து தூத்துக்குடிக்கு வர்றபோதெல்லாம் மதனம் வறுத்துச் சாப்பிடணும்னு அடம்பிடிப்பே... ஞாபகமிருக்கா?" ஊஹூம், அந்தோனிக்கு நினைவு வரவில்லை.

"தந்தி கிடைச்சுதா?"

"உம்...உனக்கு என் விலாசம் எப்படிக் கிடைச்சுது?"

"உன் அப்பாவோட கணக்குப் பிள்ளை கிட்டேயிருந்து..."

அந்தோனி ஆச்சரியத்துடன் கேட்டான், "அப்பாவுக்கு என் விலாசம் தெரியுமா?"

"நீ இந்திய ஹைகமிஷன்லே வேலைபார்க்கறது அவருக்குத் தெரியும். அதுமட்டுமா? இலங்கையோட முதல் பிரதம மந்திரி டி.எஸ். சேனநாயகே உன் அப்பாவை சொந்தத் தம்பி மாதிரி நேசித்தார். உன் அப்பாவோட யோசனைப்படிதான் அவரோட மந்திரிசபையிலே ஒரு தமிழ் மந்திரியை வச்சுக்கிட்டார்.

சேஞு நாயகே மூலம் உலகத்துச் செய்தியெல்லாம் உன் அப்பா வுக்குத் தெரிஞ்சுது..."

இருவரும் துறைமுகத்தின் பிரதான வாயிலைக்கடந்து இடது பக்கம் திரும்பித் தெற்கு ராஜ வீதியில் நுழைந்தார்கள். அங்கே ஒரே நெரிசல். குதிரை வண்டிகள், மாட்டு வண்டிகள், லாரிகள், தள்ளு வண்டிகள், மனிதர்கள். உலர்ந்த மீனின் நாற்றமும், மிளகாயின் நெடியும் வெங்காயத்தின் மணமும் கலந்த ஒரு கதம்பமான வாசனை அங்கே பரவியிருந்தது. இந்த நெரிசலில் இருவரும் பிரிந்து விட்டார்கள், வீதிமுனையில் மறுபடி ஒன்று சேர்ந்துகொண்டார்கள்.

"அப்பா செத்துப்போன போது உன்னைக் காணோம். புதைக்கற போதும் நீ வரலே. உன்னைப் பத்தி விசாரிச்சேன். நீ ஊரைவிட்டே போயி ரெண்டு வருசமாச்சுன்னு சொன்னாங்க"

"ஆமா... நான் வேணும்னுதான் உன் அப்பா செத்துப் போன சமயத்திலே வரலே. வந்திருந்தால் தகராறு ஏற்பட்டிருக்கும்..."

"ஆனால் அப்பாவுக்கு உடல் நிலை மோசமான செய்தி மட்டும் தெரிஞ்சுடுச்சு..."

"கடைசி நேரத்திலே தகவல் கிடைச்சுது எனக்கு. அப்போ அவருக்கு எந்த வித உதவியும் செய்ய முடியலே..."

"வா....வீட்டுக்கு வா...இனிமேல் இது உன்னோட வீடு" அந்தோனி பீட்டரின் கையைப் பிடித்துக் கொண்டு சற்றுக் கேலியாகச் சிரித்தான். "அப்பா எல்லா சொத்தையும் உன் பேரிலே எழுதி வச்சிருக்கார்."

"உனக்கு விசயம் தெரியுமா?"

"வக்கீல் ராமச்சந்திரன் சொன்னார். இந்தச் செய்தியை ரகசியமா வச்சுக்கச் சொன்னார்..."

வீட்டு வாசலுக்கு எதிரே பீட்டர் நின்றான். அந்தோனியின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டு கேட்டான், "உனக்கு சந்தோஷமா, வருத்தமா?"

வீட்டுவாசலின் இருபக்கத்து விளக்குகளின் ஒளியும் அவர்களது முகங்களின் மேல் விழுந்தது.

அந்தோனி நேரடியாகப் பதில் சொல்லாமல் மழுப்பினான் "இந்தக் கேள்வியை நான்னா உன்னைக் கேட்கலாம்னு இருந்தேன்."

பீட்டரின் வார்த்தைகள் மெதுவாக - ஆனால் தெளிவாக வெளி வந்தன. அவனது பேச்சு ஏதோ ஒரு சபதத்தை உச்சரிப்பது போலிருந்தது "நான் உழைத்துச் சம்பாதிக்காத காசில் ஒரு பைசாக் கூட எனக்கு வேண்டாம்."

திகைத்துப் போனான் அந்தோனி. பீட்டரின் இந்த மாதிரிக் குரலை அவன் கேட்டதில்லை. இந்தப் பீட்டர் இதுவரை அவனறிந்திராத பீட்டர். எவ்வளவு கம்பீரமாப் பேசுகிறான்! உலகத்தில் இவ்வளவு சொத்தையும் மறுக்கக் கூடியவர்களும் இருக்கிறார்களா?....பீட்டரின் பேச்சு நம்ப முடியாததாயும் இல்லை.

சட்டென்று பீட்டர் வாசலைக் கடந்து உள்ளே நுழைந்து அந்தோனியின் கையைப் பிடித்து இழுத்தான் "வா, வா, ரொம்பப் பசிக்கிறது. மீன் புதுசாயிருக்கறபோதே ஆஞ்செலா சித்திகிட்டே கொடுத்து வறுவலும் குழம்பும் பண்ணச் சொல்லணும்..."

சற்று முன்பிருந்த பீட்டர் இப்போது மாறிவிட்டான். இந்தப் பீட்டர் அந்தோனிக்கு வெகுகாலம் முன்பே நன்றாகப் பரிச்சய மானவன் தான்.

ஆழ்ந்த சிந்தனையிலாழ்ந்தான் அந்தோனி. அவன் மேலை நாட்டில் பீட்டர் போன்ற மனிதனைப் பார்த்திருக்கிறானா?

இருவரும் ஸ்நானம் செய்து விட்டு உடையணிந்து கொண்டு எதிரெதிரே அமர்ந்து காபி சாப்பிட்டார்கள். அவர்களுக்கு முன் னால் ஒரு தட்டில் மதன மீனின் வறுவல்.

பீட்டர் வறுவலைத் தின்று கொண்டே கேட்டான்- "ரொம்ப வருசங்கழிச்சு ஊருக்குத் திரும்பியிருக்கே. மாறுதல் ஏதாவது கண்ணிலே படறதா?"

"அப்படியொண்ணுமில்லே...முன்னேயெல்லாம் வெள்ளைக் காரங்க நிறைய நடமாடுவாங்க. இப்போ அவங்க இல்லே. தெருவிலே ஜனக்கூட்டம். குப்பை கூளம் ஜாஸ்தி. பன்னிக் கூட்டம், கழுதைகள் எல்லாம் முன்னே மாதிரிதான்" சிரித்துக் கொண்டே சொன்னான் அந்தோனி.

பீட்டரும் சிரித்தான்-"கல்கத்தாவிலேருந்து இங்கே வர போதெல்லாம் சொல்லுவியே, 'பன்னிகள் தான் இந்த ஊரில சுகாதார அதிகாரிகள்'னு ஞாபகம் இருக்கா?"

சிரித்துக் கொண்டே காபியை உறிஞ்சினான் அந்தோனி - "உனக்கு ஞாபகம் இருக்கா - பரீட்சை எழுதப் போறபோது தெரு விலே கழுதையைப் பார்த்தால் அப்படியே நின்னுடுவே. அது கத்தற வரையிலே நகர மாட்டே. 'கழுதை கத்தினா நல்ல சகுனம்'னு சொல்லுவே..."

கடகடவென்று சிரித்தான் பீட்டர், "கழுதை கத்தினா நல்ல சகுனந்தான். ஆனால் ஆயிரங்கழுதை கத்தினாலும் என்னைப் பாஸ் பண்ணவைக்கமுடியாது!... சின்ன வயசிலே எவ்வளவு

முட்டாளா இருந்தேன் நான்! படிச்சுப் பாஸ் பண்றதுதான் வாழ்க்கையிலே பெரிய விசயம்னு நினைச்சேன். ஆனால் அப்பா அடிக்கடி சொல்லுவார்-'படிச்சுப் பெரிய மனிசனாகத்தேவை இல்லே. அதைவிட, நல்லா மீன் பிடிக்கக் கத்துக்கிட்டாப் போதும்.'..."

"மோஸஸ் சித்தப்பா எப்படி இருக்கார்?"

"அவர் இல்லே" சீரியஸான குரலில் சுருக்கமாகப் பதில் சொன்னான் பீட்டர். "சுதந்திர இந்தியாவாலே அப்பாவைப் பொறுத்துக் கொள்ள முடியல்லே. அவரோட நெஞ்சை மூங்கிலாலே அடிச்சுத் தொகைச்சு..."

வியப்பு மிகுதியில் அந்தோனியின் கண்கள் வெளியே பிதுங்கும் போலாகிவிட்டன. "என்ன பயங்கரம்!" மிகவும் ருசியான மதனமீன் கூடத் தொண்டையில் இறங்கவில்லை. "அவரை ஏன் கொன்னாங்க? என்ன குத்தம் செஞ்சார் அவர்?"

"குத்தம்னா சாதாரணக்குத்தமா? பயங்கரமான குத்தம்! ...நீ மோஸஸ் ஃபெர்னான்டோ, சாதாரண மீனவக்குடும்பத்துப் பையன், புழுவுக்குங் கேடு கெட்டவன். அன்றாடங்காய்ச்சி, நீ ஸ்கூல், காலேஜிலே படிக்கல்லே, இங்கிலீஷிலே பேசத் தெரியாது உனக்கு, அப்படிப் பட்டவன் எங்களை மதிக்காமே இருக்கியா! நாங்க படிச்சவங்க, சூட், பூட்ஸ் போட்டுக்கறோம், பிஸினஸ் பண்றோம், லட்சலட்சமா சம்பாதிக்கிறோம், இங்கிலீஷிலே தஸ்புஸ்னு பேசறோம், மேஜைமேலே சாப்பிடறோம், அயல் நாட்டுச் சரக்கைக் குடிக்கிறோம், மோட்டாரிலே சவாரி செய்யறோம், எங்க வீட்டிலே நிறைய வேலைக்காரங்க, வேலைக்காரிக......அப்படிப்பட்ட எங்களுக்கு நீ சலாம் பண்ண மாட்டியா! அவ்வளவு திமிரா உனக்கு!...

"அதுக்காக மூங்கிலாலே நெஞ்சை அடிச்சுத் தொகைச்சு...என்ன பயங்கரம்!" அந்தோனியின் குரல் நடுங்கியது. அவனால் அந்தக் கற்பனைக் காட்சியை மறக்க முடியவில்லை.

"நம்ம மீனவ சமூகத்திலே பொறுமைச் சூடு இந்த மாதிரி தான் தணியும்..." என்று சொல்லி மௌனமானான் பீட்டர்.

மோஸஸ் சித்தப்பாவின் மார்பு அந்தோனியின் நினைவுக்கு வந்தது- வல்கன் என்ற கிரேக்க தேவனின் கேடயம் மாதிரி. பீட்டர் ஜோக்கிமுக்கு முன்னால் நெஞ்சை நிமிர்த்துக் கொண்டு நின்றது போல் நிமிர்ந்த நெஞ்சுடன் நடப்பார் மோஸஸ் சித்தப்பா. உடையைப் பற்றிய கவலையே இல்லை அவருக்கு. ஒரு சிறு துண்டைத்தான் இடுப்பில் சுற்றியிருப்பார். பனை மாதிரி

நெட்டை, அட்டைக் கறுப்பு.பிரும்மாண்டமான தலையில் கூடை மயிர். பீட்டரின் தலையும் தன் அப்பாவின் தலைமாதிரி தான். அகலஅகலமான எலும்புகள், கரடு முரடான உடல், அதில் மென்மையின் சாயலே கிடையாது. இடிவிழுந்து கருகிப் போன பனைமரத்தை நினைவூட்டும் அவரது தோற்றம். கழுகுக் கண் களில் கழுகுப் பார்வை. சட்டென்று அவருடைய கண்களைப் பார்த்தவர் நெஞ்சில் திடுக்கென்று அதிர்ச்சி ஏற்படும்.

சிறுபையன்களுக்கு மோஸஸிடம் ரொம்பப் பயம். அந்தோனிக்கு மட்டும் பயமில்லை. மோஸஸ் அவனை விளையாட்டுப் பொம்மை மாதிரி இருகைகளாலும் தூக்கிப் போட்டு விளையாடுவார். அந்தோனிக்கு ரொம்ப குஷியாயிருக்கும்.

சுறாக் கொல்லி மோஸஸ் மூக்கைப் பிடித்துக் கொண்டு கடலுக்குள் முழுகிச் சங்குகளும் சிப்பிகளும் அள்ளிக் கொண்டு வருவார். ஒரு சமயம் ஒரு பெரிய சுறா அவருடைய பிருஷ்டத்தின் ஒரு பகுதியை கடித்துக் குதறிவிட்டது. அது மறுமுறைகடிப்பதற்குள் மோஸஸ் அதைப் பிடித்துக் கொண்டு விட்டார். தண்ணீருக்குள் சுறாவுடன் பயங்கர யுத்தம்!... மோஸஸ் தன் கத்தியால் சுறாவின் வயிற்றை அப்படியே கிழித்துச் சுறாவிழுங்கிய தசைப்பிண்டத்தை எடுத்துக்கொண்டு விட்டார். அப்புறம் மருத்துவமனை ....

சுறாகடித்த இடத்தில் தையல்போட்ட தழும்பு இருக்கும். அந்தோனி அதைத் தடவிக் கொடுப்பான். மோஸஸ் சிரிப்பார்.

"காட்டுப்பன்னி மாதிரி பிடிவாதக்காரர் அப்பா. எதையாவது செய்ய நினைச்சா, செய்துதான் தீருவார். ஒருதடவை அவர் நினைச்சார், மாதா கோவில்லே முதல்வரிசை பெஞ்சியிலே உட்காரணும்னு... பாதிரியார் சொல்றாங்க இல்லையா– சாமிக்கு முன்னாலே எல்லாரும் சமம்னு... நினைச்சுப்பாரு, அந்தோனி!"

இந்தக் காட்சியைக் கற்பனையில் பார்த்தான் அந்தோனி... முன்வரிசை பெஞ்சிகளில் ஊரின் செல்வாக்குள்ள கிறிஸ்தவர் கள் அமர்வது வழக்கம். அவர்கள் விலையுயர்ந்த சூட் அல்லது வெள்ளை வெளேர் வேஷ்டியணிந்திருப்பார்கள். சலவை செய்த சட்டைகளும் ஜரிகைக்கரை சால்வைகளும் அணிந்திருப்பார்கள். அவர்கள் பணம் படைத்தவர்கள், கண்ணியமான குடும்பங் களைச் சேர்ந்தவர்கள். பாலும் வெண்ணெயும் நல்ல இறைச்சி யும் சாப்பிட்டுச் சாப்பிட்டு அவர்களுடைய உடம்பு கொழு கொழு வென்றிருக்கும். அவர்களுக்கு நடுவில் இடி விழுந்து கருகிப் போன பனை மரம்! துவைத்துக்கட்டிய அழுக்கு வேஷ்டி, திறந்த மேலுடம்புடன் மோஸஸ் ஃபெர்னாண்டோ! கொஞ்சமும் பொருத்தமில்லாத காட்சி...

ஒரு நாள், இரண்டு நாட்கள், மூன்று நாட்கள் கழிந்தன. பாதிரியாரின் புருவங்கள் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போயின. கடைசியில் அவருக்குப் பொறுக்கவில்லை. மோஸஸைக் கூப்பிட்டுச் சொன்னார், "நீ பின் வரிசையிலே போய் உட்கார்ந்துக்க".

"ஏன்? சாமிக்கு முன்னாலே எல்லாரும் ஒண்ணுன்னு நீங்க தானே சொன்னீங்க!"

"நான் சொன்னதைக் கேளு! இல்லேன்னா மாதா கோவிலுக்கே வராதே!"

அவ்வளவுதான். அது முதல் மோஸஸ் மாதாகோவில் செல்வது நின்றுவிட்டது. அவர் தினம் காலையில் மீன்பிடிக்கக் கிளம்பு முன்னர் கடற்கரையில் நின்றுகொண்டு ஏதோ பிரார்த்தனையை முணுமுணுப்பார். அப்போது சூரியன் கிழக்கு அடிவானத்தில் சிவப்பாகத் தோன்றுவான். தந்தையின் பிரார்த்தனை மாதாகோவிலின் நான்கு சுவர்களுக்குள் அடைபடாமல் அது போக வேண்டிய இடத்தை அடைந்து விட்டதாகத் தோன்றும் பீட்டருக்கு.

"ஊரிலே உள்ள பணக்கார மீனவர்களிடம் அப்பாவுக்கு ரொம்ப வெறுப்பு. காரணத்தைக்கேட்டால் நீ ஆச்சரியப்படுவே, அந்தோனி. இந்துக்கோவில்லே பூஜை செய்யாதவன் பிராமணனில்லே. அது மாதிரி தன் கையாலே வலையை வீசி மீன்பிடிக்காதவன் மீனவனில்லையாம்!... பணக்காரங்க உடலாலே உழைக்கறதில்லே. பிறத்தியானோட உழைப்பாலே கிடைக்கற காசைப் பிடுங்கிக்கறாங்க. வெறும் தரகு வேலை. தரகுவேலை ரொம்ப மட்டமான தொழில். இவங்க மாதாகோவிலுக்குப் போய்க் கண்ணை மூடிக்கிட்டு ஜபமாலையை உருட்டறாங்க. ஆனால் இவங்க உண்மையான கிருஸ்தவங்க இல்லே. சாமியோட பத்துக் கட்டளைகளிலே அரைக் கட்டளையைக்கூட இவங்க சரியாக கடைப்பிடிக்கறதில்லே... சும்மா விபூதியை அப்பிக்கிட்டவனெல்லாம் பிராமணன் ஆயிடமாட்டான்; அதுமாதிரி மாதா கோவில்லே ஜபமாலை உருட்டினவனெல்லாம் நல்ல கத்தோலிகன் ஆயிட மாட்டான்... இப்படியெல்லாம் பேசுவார் அவர். அப்புறம் அந்தப் பிடிவாதம் வேறே! இப்படிப்பட்டவர் சமூகத்திலே காலந்தள்ள முடியுமா?"

"ஆனால் அதுக்கா மூங்கிலாலே அடிச்சு..."

"ஆமா, அப்படித்தான்... நான் மீன்பிடிக்கக் கடலுக்குப் போயிருந்தேன். ரெண்டு பகல் ரெண்டு ராத்திரி கழிச்சுத் திரும்பினேன். எங்க நாய் பூச்சி என்னைக் கண்டதும் தண்ணியிலே

குதிச்சுக் கேவிக்கேவியழுதது. நான் கரைக்கு வந்ததும் வீட்டுக்கு ஒரே ஓட்டமாக ஓடிச்சு, இந்த மாதிரி அது ஒருபோதும் செஞ்ச தில்லே. பைத்தியம் பிடிச்சுடுச்சா அதுக்கு? ஏதோ ஒரு விபத்து நடந்திருக்குன்னு தோணிச்சு எனக்கு. நான் போய்ப் பார்க்கறேன் ...ஆ..."

தொண்டையடைத்துக்கொண்டது பீட்டருக்கு. அவன் சிரமப் பட்டு அழுகையை அடக்கிக்கொண்டான். அவர்களுக்கு முன் னால் மதன வறுவல் ஆறிக்குளிர்ந்துபோய் விட்டது. அதைத் தின் னத்தோன்றவில்லை அவர்களுக்கு.

"அப்பா தரையில் படுத்துக் கிடக்கிறார். அவரது செஞ்சுக்கு மேலே ஒரு மூங்கில். அவ்வளவு பெரிய நெஞ்சு எலும்பு முறிஞ்சு தூள் தூளாயிருக்கு. வாயிலேருந்து ரத்தம் வழிஞ்சு காஞ்சு கிடக்கு. பிதுங்கிக்கிடக்கு கண் ரெண்டும்... "

"என்ன பயங்கரம்!... போலீஸ் கொலைகாரனைப் பிடிக்க முயற்சி செய்யலியா?"

"செஞ்சாங்க... நான் போலீசிலே புகார் எழுதிக்கொடுத்தேன். போலீஸ்காரங்க வந்தாங்க. குடிசையைச் சுத்திப் பார்த்தாங்க. மண்ணிலே பதிஞ்ச அடிச்சுவடை அளந்துக்கிட்டாங்க. மூங் கில்லே பதிஞ்சிருந்த கைரேகையை எடுத்துக்கிட்டாங்க. விசா ரணை நடத்தினாங்க... ஆனால் கொலைகாரனைப் பிடிக்கல்லே. எப்படிப் பிடிக்க முடியும்? கொலை காரங்க ஒளிஞ்சுக்கிட்டு இல்லையே! அவங்கதான் எல்லாருக்கும் முன்னாலே தைரியமா நடமாடறாங்களே!...

"அப்பாவைப் புதைச்சு ஒரு வாரத்துக்கப்பறம் தெருவிலே போயிக்கிட்டிருந்தேன். பூச்சியும் கூட வந்தது. திடீர்னு வழியிலே வந்துக்கிட்டிருந்த ஆள் ஒருத்தன் மேலே பாஞ்சு அவனோட குதிகாலைக் கவ்விடிச்சு. அவன் பேரு சிரில் ஃபெர்னாண்டோ. முதல் நம்பர் போக்கிரி. இந்த ஊர்ப் பெரிய மனுசங்களோட அடியாளுங்களுக்குத் தலைவன்..."

"என் அப்பாவுக்குத் தெரியுமா?" அந்தோனி கேட்டான்.

"தெரியாது. கொலைக்கு ரெண்டு நாள் முன்னாலே அவர் சிலோன் போயிருந்தார். அங்கே விபத்திலே சேனாநாயகே செத்துப்போயிட்டார்... காட்வின் துரை திரும்பி வந்ததும் விசயத் தைக் கேள்விப்பட்டு மெட்ராசிலேருந்து திருநெல்வேலி வரை எல்லாவித முயற்சியும் செஞ்சு பார்த்தார் கொலைகாரனைப் பிடிக்க. ஆனால் கொலைக்கு ஏற்பாடு பண்ணினவங்க ரொம்ப செல்வாக்குள்ளவங்க. சர்க்காரை ஆட்டி வைக்கிறவங்க. அவங்களோட ஆளுங்கதான் தேர்தல்லே ஜெயிச்சு மக்கள் பிரதி

நிதியாகி நாட்டை ஆள்றாங்க. காட்வின் துரைக்கும் அவங்களுக்குமுள்ள உறவு பூசனிக்கும் கத்திக்கும் போல. அவராலே ஒண்ணும்செய்யமுடியல்லே...."

இப்போதும் நம்ப முடியவில்லை அந்தோனியால். சித்தப்பா பிடிவாதக்காரர்தான். அவரால் சிலபேருக்கு இடைஞ்சல் ஏற்பட்டிருக்கலாம்தான். ஆனால் அற்காக நெஞ்சிலே மூங்கிலால்அடித்து...

"பெரிய மனுசங்க விரோதம் இன்னி, நேத்தி சமாசாரமில்லே. 1917 ம் வருசத்திலேருந்து—அதாவது முதல் உலக யுத்தம்னு படிச்சிருக்கோமே, அதிலேருந்து. பெரியபெரிய நாடுகள் வெறி பிடிச்ச நாய்கள் மாதிரி ஒண்ணையொண்ணு கடிச்சுக் குதறிக்கிட்டிருக்கு. சண்டை மும்முரமா நடந்துக்கிட்டிருக்கு. அப்பல்லாம் மீனவங்க மீன் பிடிச்சுக்கிட்டு வந்து நேரே சந்தைக்குக் கொண்டு போய் விற்பாங்க... திமீர்னு ஒரு நாள் சில ஆளுங்க கடற்கரைக்கு வந்து மீனவங்க கொண்டு வந்த மீனையெல்லாம் வாங்கிட்டாங்க. சந்தைக்குத் தூக்கிக்கிட்டுப் போய் விக்கற சிரமம் மிச்சம்னு மீனவங்களுக்கு ரொம்ப சந்தோசம்... ஆனால் அப்பா மட்டும் அவரோட மீனை சந்தை யிலே கொண்டு போய்த்தான் விற்பார். மத்தவங்க அவரை அசடுன்னு நினைச்சாங்க....

"கொஞ்ச நாள் கழிஞ்சது. மீனவங்க ரொம்ப சுகவாசிகளாயிட்டாங்க. மொத்தமா மீன் வாங்கறவங்க அவங்க கையிலே முன்பணம் கொடுத்தாங்க. மீனவங்க காசைக் கண்டதும் தலை கால் தெரியாமே கள் குடிச்சு ஊதாரித்தனம் செஞ்சாங்க. இதனாலே மீன் சந்தையே அவங்க கையை விட்டுப் போயிடுச்சு...

"தூத்துக்குடிதான் இந்த பிராந்தியத்திலேயே பெரிய மீன் சந்தை. அக்கம் பக்கத்து ஊர்களுக்கெல்லாம் இங்கேருந்துதான் புது மீன் போகும். மீன் வத்தல் வியாபாரத்திலே தூத்துக்குடிதான் தேசத்திலேயே முதல். இங்கேருந்து பர்மா, மலேயா, சிலோனுக்குக் கூட மீன் வத்தல் ஏற்றுமதியாறது...

"இவ்வளவு பெரிய மீன் சந்தை ஒரு சில ஆளுங்களோட கைக்குப் போயிடுச்சு. அவங்க மீனை ரொம்பக் குறைச்ச விலைக்கு வாங்கினாங்க... அப்பா மத்த மீனவங்கிட்டே சொன்னார், பார்த்தீங்களா! நான் இதுக்காகத்தான் இந்த ஆளுங்களோட சூழ்ச்சியிலே அகப்பட்டுக்கலே..." அப்போ சுமார் ஐநூத்தி இருபது பேர் இந்த ஊரிலே மீன்பிடிக்கறவங்க. அப்பா அவங்க ஒவ்வொருத்தர் வீட்டுக்கும் போயி விசயத்தை விளக்கினார்....

"ஒரு நாள் கடற்கரையிலே மீன் விற்பனை நின்னுபோச்சு. மீனவங்க சந்தைவிலைக்குத்தான் மீன் விற்போம்னாங்க. கொள் முதல் பண்றவங்களும் விடாக்கண்டங்க. 'நாங்க சொல்ற விலைக்குத்தான் விற்கணும், இல்லாட்டி உங்க மீன் அழுகிப் போக வேண்டியதுதான்' அப்படீன்னு பயமுறுத்தினாங்க... அப்பறம் விசாரிச்சுப் பார்த்தாங்க, மீனவங்களோட பிடிவாதத் துக்கு யாருடா காரணம்னு, மோஸஸ் ஃபெர்னாண்டோ வேலை தான்னு தெரிஞ்சுது... அதிலேருந்தே விரோதம்..."

"சரிதான், அது உன் அப்பாவோட கொலையிலே முடிஞ்ச தாக்கும்!"

பீட்டர் சிரித்தான்—கோணல் கத்தி போல் விஷமச் சிரிப்பு. பிறகு சொன்னான், "ஆனால் நான் என்ன நினைக்கறேன்னா, சண்டை இப்போதான் தொடங்கியிருக்கு; எப்போ முடியும்னு யாருக்கும்தெரியாது..."

ஒரு வேலைக்காரி மாடிப்படியேறி வந்து ஒரு கவரை அந்தோனியிடம் கொடுத்தாள். கவரின் மேல் பீட்டரின் பெயர் எழுதப்பட்டிருந்தது.

அந்தோனி கவரைப்பீட்டரிடம் கொடுக்க, பீட்டர் கவரின் வாயைக் கிழித்துப் பார்த்தான். அதனுள்ளே ஒரு சிறிய காகிதத் துண்டு. அதைப் படித்து விட்டு ஒரு மாதிரியாகச் சிரித்துக் கொண்டே அந்தோனியிடம் நீட்டினான் பீட்டர்.

அந்தோனி தமிழ் படித்து வெகு காலமாயிற்று. சிரமப்பட்டு எழுத்துக் கூட்டிப் படித்துவிட்டுத் திடுக்கிட்டான் அவன்.

அதில் எழுதியிருந்தது – "உங்களைக் கொலை செய்யக் காட்வின் வீட்டுக்கருகில் ஆட்கள் சுற்றுகிறார்கள். ஜாக்கிரதை!"

கடிதம் எந்த இடத்திலிருந்து வந்ததோ அதன் விலாசம் இல்லை. எழுதியவரின் கையெழுத்துமில்லை. பெண்ணின் கையெழுத்து.

அந்தோனியின் முகம் பயத்தில் வெளிறிப் போய் விட்டது.

"என் அப்பாவை உலகத்திலேருந்து அனுப்பிவச்சாச்சு. இனிமேல் அவங்க குறி என் மேலே..." என்றான் பீட்டர்.

"இதை யார் கொண்டு வந்தாங்க?" அந்தோனி வேலைக் காரியைக் கேட்டான்.

''பத்து வயசுப் பெண் ஒருத்தி... மீனவங்க சேரியைச் சேர்ந்த வளாத்தானிருக்கும். பேர் சொல்லலல்லே. கடிதாசைக்கொடுத் துட்டு உடனே போயிட்டா...''

''போலீசுக்குத் தகவல் கொடுக்கட்டுமா?'' அந்தோனி கேட்டான்.

''அதனாலே பிரயோசனமில்லே...'' பீட்டரின் சுருக்கமான பதில்.

''ஏன்?''

''நீ போய் விசாரிச்சுப் பார்த்தால் போலீஸ் அதிகாரி இப்போ ஸ்டேசன்லேயே இல்லைன்னு தெரியும். அவர் ஒரு குறிப்பிட்ட இடத்திலே அன்னிய நாட்டுச் சரக்கைக் குடிச்சிக்கிட்டுச் சீட்டு விளையாடிக்கிட்டு இருப்பார். அவரோடே சீட்டு விளையாடற வங்க தான் என்னைக் கொலை செய்ய ஆளனுப்பிச்சிருக்காங்க இங்கே...''

''என்ன சொல்றே நீ?...''

''சரியாத்தான் சொல்றேன்... தாசனுக்கு இப்போ உலக நினைவே இருக்காது. காவல்காரனைக் கூப்பிடு...''

வேலைக்காரியை அனுப்பிக்காவல்காரனைவரச் சொன் னான் அந்தோனி. அவன் வந்தான்.

பீட்டர் அவனிடம் சொன்னான். ''உன்னோட டார்ச்சையும் தடியையும் கொண்டு வந்து கொடு.''

இரண்டும் வந்ததும் அவற்றை எடுத்துக்கொண்டு பீட்டர் எழுந்திருந்தான்– ''எனக்காக ஒருத்தன் ராத்திரி பூரா முழிச்சுக் கிட்டு இருப்பானேன்!... விசயத்தைக் கையோடே கையா முடிச் சுட்டுவரேன்...''

''நானும் உன்னோட வரேன்'' அந்தோனியும் எழுந்தான்.

''நீ வேறே எதுக்கு? வேண்டாம்! நீ இங்கேயே இரு... நான் வந்துடறேன்...''

☆ ☆ ☆

கடிக்கிற நாய் குலைக்காது. பீட்டர் அல்சேஷன் நாய் மாதிரி. அவன் நடமாட்டமெல்லாம் நிசப்தமாயிருக்கும்.

அந்தோனி வராந்தாவில் நின்றுகொண்டு பார்த்தான். வீட்டுக்குள்ளிருந்து வரும் வெளிச்சம் வாசற்பக்கத்தின் ஒரு பகுதியில் விழுகிறது. மற்ற பகுதிகள் இருண்டிருக்கின்றன. வாசலையடுத்துத் தோட்டம். தோட்டத்தில் பல வருடங்களாகவே விளக்குகள் எரிவதில்லை. பீட்டர் தோட்டத்தின் இருளில் மறைத்துவிட்டான்.

தோட்டத்தின் மறுபுறம் சுற்றுச்சுவர். அதன்பின் குமாஸ்தாக்களின் வீடுகள். அவற்றில் பெரும்பாலானவை இப்போது காலி. ஒன்றிரண்டு வீடுகளில் தான் குமாஸ்தாக்கள் குடும்பங்களுடன் வசிக்கிறார்கள். அந்த வீடுகளிலிருந்து வரும் வெளிச்சத்தைச் சுவர் மறைத்து விடுவதால் தோட்டம் இருட்டாய்த் தானிருக்கும். தோட்டத்தின் ஒரு பக்கத்தில் புதர்களுக்கு நடுவில் வீனஸின் பெரிய சிலை ஒன்று நிற்கிறது.

பீட்டர் டார்ச்சை ஏற்றிக்கொள்ளாமல் இருளிலேயே செடிகளை மிதித்துக்கொண்டு முன்னேறினான். வீனஸ் சிலைக்குப் பின்னால் ஒருவன் ஒளிந்து கொண்டிருப்பதை அந்த இருட்டிலும் அவன் பார்த்துவிட்டான். வீட்டிலிருந்து தெருவுக்கு வரும் வழியைப் பார்த்துக்கொண்டு உட்கார்த்ந்திருந்தான் அந்த ஆள். அவனுடைய முதுகுப்பக்கமாகப் பீட்டர் வந்து அவன் மேல் பாய்ந்தான். பாய்ந்ததுமே அந்த ஆளின் கை மின்னல் வேகத்தில் இடுப்புப் பக்கம் சென்றது. அங்குதான் கத்தியைச் செருகி வைத்திருந்தான் அந்த ஆள். பீட்டர் அந்த ஆளின் வயிற்றில் பலமாக உதை கொடுத்தான். ஜாதிக்குதிரையின் உதை. ஆள் "ஐயோ!" என்று கத்திக் கொண்டு கீழே விழுந்தான். அவன் எழுவதற்குள் அவனுடைய கத்தியைப பிடுங்கிக் கொண்டு விட்டான் பீட்டர். அப்புறம் குஸ்தி.

இந்த அரவத்தைக் கேட்டு அந்தோனி அங்கே ஓடிவந்தான். காவல்காரனும் சில வேலைக்காரர்களும் விளக்கை எடுத்துக் கொண்டு ஓடி வந்தார்கள்.

அந்த ஆளைப்பிடித்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றார்கள் குமாஸ்தா ஒருவனும் காவல்காரனும்.

அந்தோனியும் பீட்டரும் மறுபடி வராந்தாவில் போய் உட்கார்ந்தார்கள்.

"அந்த ஆள் அங்கே ஒளிஞ்சிருப்பான்னு உனக்கு எப்படித் தெரியும்?" அந்தோனி கேட்டான்.

"இந்த வீட்டோட மூலை முடுக்குக் கூட எனக்குத் தெரியும். வெளியாள் உள்ளே எப்படி நுழைவான்னும் தெரியும்... அந்தப் பக்கம் சுவர் கொஞ்சம் இடிஞ்சிருக்கு".

"இடிஞ்சிருக்கா?...ஏன்?"

"அது காட்வின் துரையோட ஒழுக்கத்திலே உள்ள இடிபாடு..."

"அப்படீன்னா?"

"இடிஞ்ச சுவருக்குப் பக்கத்திலே இருக்கறது சாலமன் டிசௌஸாவோட வீடு. அவன் பெண்டாட்டி பாத்திமா மேனா மினுக்கி. அஞ்சு வருசத்துக்கு முன்னாலே கூட அப்படித்தான் இருந்தா. அவ காட்வின் துரையை வசியப்படுத்திட்டா... அவர் கிட்டேருந்து நிறையப்பணம், நகை நட்டு எல்லாம் பத்திக்கிட்டா. குமாஸ்தா சாலமன் டிசௌஸ்ஸாவுக்கும் பதவி உயர்வு கிடைச் சுது. அவன் இப்போ சிலோன் டிரான்ஸ்போர்ட்டிலே தலைமைக் குமாஸ்தா. இங்கே அவன் அநேகமா வர்றதே கிடையாது. பாத்திமா மட்டுந்தான் தனியா இருக்கா..."

ஆஞ்செலா வந்து சொன்னாள் – "ராத்திரி பத்துமணி ஆயிடுச்சு. சின்னய்யா என்ன சாப்பிடுவீங்க?"

"என்ன சமைச்சிருக்கே, சித்தி?" பீட்டர் கேட்டான்.

"மதனக் குழம்பு, சாம்பார், சாதம், அப்பளம்... தயிர் இருக்கு..."

பீட்டர் சொன்னான், "இது போதும்,... ஆனால் நாளைக் காலையிலே..."

"ஞாபகம் இருக்கு எனக்கு... இடியாப்பம், சீனி சாம்பார் தானே? என் கையாலே சீனிசாம்பார் சாப்பிடறதுன்னா உனக்கு அவ்வளவு ஆசை!" என்று சொல்லிச் சிரித்த ஆஞ்செலாவின் குரலில் பரிவு ஒலித்தது. பிறகு தொடர்ந்து சொன்னாள். "பீட்டர், உன்னைப் பார்த்து எவ்வளவு நாளாச்சு! கிழட்டுச்சித்தியைப் பார்க்கணும்னு தோணலியே உனக்கு! நீ இப்போ எங்கே இருக்கே?"

"எங்கே இருக்கறது?... தண்ணியிலேதான் மிதந்துக்கிட்டு இருக்கேன்..."

"நிசமாவா?... உனக்கு வீடு, வாசல் கிடையாதா?" அந்தோனி கேட்டான்.

"இல்லே... படகுதான் என்வீடு, வாசல் எல்லாம்..."

"சீனாவிலே சில இடங்களிலே ஜனங்க படகுகளிலேயே வசிக் கறாங்களாம்" என்றான் அந்தோனி.

"அது மாறிப்போச்சு... இப்போ சீனர்களோட நிலைமை நம்ம மாதிரி இல்லே..."

ஆஞ்செலா சாப்பாடு எடுத்துவரப்போனாள்.

"அப்போ உனக்குக் குடும்பம் கிடும்பம் இல்லே?"

"வாஸ்தவந்தான்... உன் சமாசாரம் என்ன?"

"நானும் கலியாணம் பண்ணிக்கல்லே இன்னும். ஆனால் ஒருத்தியைக் காதலிக்கிறேன். அதாவது அவ என் தோழி..."

"அப்படீன்னா? தோழியும் பெண்சாதியும் ஒண்ணுதானா?" பீட்டர்கேட்டான்.

"தோழியும் பெண் சாதியும் முழுக்க முழுக்க ஒண்ணு இல்லே... ஆனால் தோழி ஏறக்குறையப் பெண் சாதி மாதிரிதான் . .இப்போ பணம் சேமிச்சுக்கிட்டிருக்கேன். அடுத்த வருசம் ஒரு ஃபிளாட் வாங்கற அளவுக்குப் பணம் சேரும். அப்புறம் ஒரு காரும் வாங்குவேன். அப்புறம் அவளைக் கலியாணம் பண்ணிக் கிட்டுக் குடித்தனம் நடத்துவேன். இதுதான் என் பிளான்..."

"அந்த நாட்டிலே எல்லாம் இந்த வழக்கம் உண்டா? கலியாணம் செஞ்சுக்கறதுக்கு முன்னாலேயே ஆணும்பெண்ணும் நெருங்கிப் பழகறதை சமூகம் ஏத்துக்குமா?" பீட்டர் வியப்புடன் கேட்டான்.

"இதெல்லாம் அங்கே சகஜம். ஆண் பெண்களுக்கு வயசு வந்தப்பறம் அவங்க தங்களிஷ்டப்படி பழகலாம், சேர்ந்து கூட வசிக்கலாம். இதைப்பத்தி யாரும் கவலைப்படறதில்லே... அப்பா அம்மா கூடக் கவலைப் படமாட்டாங்க..."

"இதிலே ஆபத்தும் இருங்கே..."

"அதை யாரும் பொருட்படுத்தறதில்லே... சர்க்காரும் இந்த ஏற்பாட்டை ஆட்சேபிக்கறதில்லே."

ஆஞ்செலா சித்தி சாப்பாடு எடுத்து வந்தாள். வெகு காலத் துக்குப் பிறகு இரு நண்பர்களும் அருகருகே அமர்ந்து சாப் பிட்டார்கள். பீட்டர் சுடு சாதத்துடன் மீன் குழம்பைக் கலந்து பெரிய பெரிய கவளங்களை விழுங்கினான். அவனுடைய உள்ளங்கை சிங்கத்தின் பாதம் போல் அகலம். இதற்கு நேர் மாறாக அந்தோனி ஒரு துண்டு மீன், ஒரு சிறுபிடி சாதம். ஒரு வாய் சாம்பார் என்று கொஞ்சம்கொஞ்சமாகச் சாப்பிட்டான்...

"இந்தப் பக்கம் கலியாணம் கிலியாணமெல்லாம் முந்தி மாதிரிதானே நடக்கறது?" அந்தோனி கேட்டான்.

"இல்லை... முந்தியை விட மோசம்..."

"அப்படீன்னா?"

"ஆமா, இப்பல்லாம் நிலைமை ரொம்ப மோசம். முந்தியெல் லாம் கூச்சம்னு ஒரு பேச்சு இருந்தது. பண விஷயத்திலே

அவ்வளவு கண்டிப்பு இல்லாமே இருந்தது. இப்போ அதெல்லா மில்லே, சமூகத்திலே பெண்கள் ஆடுமாடுகள் மாதிரிதான்."

அந்தோனி உணர்ச்சிவசப்பட்டுச் சற்றுநேரம் தன்னை மறந் திருந்தான். சாப்பிடுவதை நிறுத்திவிட்டுப் பீட்டரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

இதைக் கவனிக்காமல் பீட்டர் சுறுசுறுப்பாகச் சோற்றை விழுங்கிக் கொண்டிருந்தான். "ஆகா, ஆஞ்செலா சித்தி அருமை யாச் சமைச்சிருக்கா... உம், சாப்பிடேன்!

"ரொம்ப உறைப்புப்பா... இவ்வளவு உறைப்பு சாப்பிட்டுப் பழக்கமில்லே எனக்கு... அந்தப் பாத்திமாதானே அப்பாவோட கடைசி?..."

"ஆமா" அந்தோனி பேசி முடிப்பதற்குள் பதிலளித்தான் பீட்டர், "அதுமட்டுமில்லே. அவளேதான் காட்வின் துரையையும் சாக அடிச்சா..."

"அதெப்படி?"

"ராமய்யங்கார் போனப்பறம் சாலமனைக் கணக்குப் பிள்ளை யாக்கிடுங்கன்னு காட்வின் துரையை வற்புறுத்த ஆரம்பிச்சா. அவர் சம்மதிக்கல்லே அவ்வளவுதான்!..."

"அப்பா ஏன் சம்மதிக்கல்லே?"

"இந்தப் பிராந்தியத்திலே முதலாளி செட்டியார், முதலியார், மீனவக்கிறஸ்துவர், நாடார் யாராயிருந்தாலும் கணக்குப்பிள்ளை மட்டும் பிராமணன்தான். அது அவங்களோட பரம்பரைத் தொழில். கணக்கு வழக்கிலே அவங்களை யாரும் மிஞ்சிக்க முடியாது. தவிர தொழில் சம்பந்தமான ரகசியங்களிலே அவங் களை நம்ப முடியும்... சாலமன் அந்த விஷயத்திலே சரியா நடந்துக்கலே. அவனாலே ரொம்பப் பணம் நஷ்டமாயிடுச்சு. அதனாலே காட்வின் அவனைக் கணக்குப் பிள்ளையாக்க சம்மதிக்கலே... இதுக்கு அந்தப் பெண் பிள்ளை அவரை எப்படிப் பழி வாங்கினா தெரியுமா?... சுஸான் கார்தோஸாவை வீட்டுக்குள்ளே நுழைச்சா... காட்வின் துரையோட பரம சத்துரு அவன்..."

பீட்டர் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, கடகடவென்று தண் ணீர் குடித்துவிட்டுத் தொடர்ந்தான்– "காட்வின் துரைக்கு மட்டுமில்லே, சமூகத்தோட சத்துரு, மனித குலத்துக்கே சத்துரு சைத்தான்..."

பீட்டரின்முகத்தில் அவனது கோபம் பிரதிபலித்தது. சிறுத்தையின் குரல் போல் அவனது குரலும் கரகரத்தது. "இப்போ பிடிச்சோமே, அந்த ஆளை எனக்குத் தெரியும். அவன்

சுஸானோட படகிலே வேலை செய்யறவன்..." சற்றுநேரம் மௌனமாயிருந்து விட்டுப் பீட்டர் தொடர்ந்தான். "பாத்திமா செஞ்சது காட்வின் துரைக்கு எவ்வளவு பெரிய அவமானம்!... அப்பறந்தான் அவருக்கு இந்த வியாதி..."

அந்தோனியின் வாயிலிருந்து பேச்சு வரவில்லை. அவன் பீட்டரைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். அவன் கண்டான். பீட்டரின் சாப்பாட்டை, அவனுடைய போகத்தை, அவனுடைய வெறுப்பை, தன் தந்தையின் மேல் பீட்டருக்கிருந்த பரிவை. பீட்டர் ஒரு விசித்திர மனிதன்தான். அவனோடு பழகப்பழக அந்தோனிக்கு அதிக ஈர்ப்பு ஏற்படுகிறது அவனிடம். இது சிறு பிராயத்து ஈர்ப்பு அல்ல. இது வேறு விதக் கவர்ச்சி. புத்தம் புதிய கவர்ச்சி...

இருவரும் கைகழுவிக் கொண்டு மறுபடி வந்து உட்கார்ந்து கொண்டார்கள். அந்தோனி சொன்னான், "எனக்கு ரொம்ப ஆச்சரியமாயிருக்கு, உன்னை எச்சரிக்கை பண்ணின அந்தப் பெண் யாரு?..."

பீட்டர் சற்றே வெட்கத்துடன் சொன்னான், "அவ ஒரு ஆச்சரியப் பிறவி.. ஆனால் உன் தோழி மாதிரி அவளோடே பேசிப் பழக வாய்ப்பு இல்லே எனக்கு."

"உன் மாதிரி பரதேசிக்காக இவ்வளவு கவலைப்படற அந்தப் பெண் யாரு? அவளைப் பார்க்கணும்போல இருக்கு எனக்கு"

பீட்டர் பதில் சொல்லவில்லை. அவன் ஏதோ நினைவில் ஆழ்ந்துபோனான். அவன் முகபாவத்தைப் பார்த்தால் அவனுக்கு உலக நினைவேயில்லை என்று தோன்றியது. அவன் மனக்கண்ணால் யாரையோ மிகவும் நெருக்கமாகப் பார்க்கிறான் போலும்!... பீட்டரின் முகத்தில் மென்மையின் மெருகு. பார்வை யில் ஆச்சரியகரமான மிருதுத்தன்மை... ஆகா, பீட்டர் எவ்வளவு அழகாயிருக்கிறான்!

அந்தோனியால் பீட்டரின் முகத்திலிருந்து தன் பார்வையைத் திருப்ப முடியவில்லை. பீட்டர் காதல் வசப்பட்டிருக்கிறான்...

"நீ அந்தப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கோயேன்!"

பீட்டர் பதிலெதுவும் சொல்லவில்லை..வெகுநேரம் இருவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். வீடும் நிசப்தமாகிவிட்டது. ஏதோ ஓர் அறையில் கடிகாரம் டிங்டிங் என்று பதினொரு மணி அடித்தது.

இப்போது அந்தோனி பீட்டர் பேசுவதைக் கேட்டான். எங்கோ வெகு தொலைவிலிருந்து வருவதுபோல் ஒலித்தது பீட்டரின் குரல். பேச்சும் புதுமாதிரியான பேச்சு...

"இந்த நாடு ரொம்ப அதிருஷ்டங்கெட்டதுப்பா. இந்த நாட்டு ஜனங்க குழந்தைகள் மாதிரி விவரந்தெரியாதவங்க. தங்களையே அழிச்சுக்கற அளவு புத்திகெட்டவங்க. இவங்களுக்கு எது நல்ல துன்னு இவங்களுக்கே தெரியாது. தங்களுக்காகவும் தெரியாது, பிறத்தியாரையும் தெரிஞ்சுக்க விடமாட்டாங்க. பழையகாலத்துப் பிசாசு பிடிச்சுக்கிட்டிருக்கு இவங்களை. ஒரு பிசாசு ரெண்டு பிசாசு இல்லே, ஏராளமான பிசாசுகள்—சாமி, மதம், குரு, பாவம் புண்ணியம், சுவர்க்கம் நரகம்... இந்தப் பிசாசு களோட ஆர்ப் பாட்டத்திலே இவங்களுக்குத்தாராளமாக மூச்சு விடக்கூட பயம். சுதந்திர வாழ்வுன்னாலே பயந்து சாகறாங்க இவங்க... அந்தக் காலத்திலே சீனாவிலே பெண் குழந்தைகள் பிறந்ததுமே அது களோட கால்களைக் குறுகலான இரும்பு ஷூ க்குள்ளே அடச்சு வச்சுடுவாங்களாம். அதனாலே குழந்தைகள் வளர்ந்தப்பறமும் அவங்க கால்கள் மட்டும் சின்னதாவே இருக்கு மாம். அதனாலே அவங்க தாராளமா நடமாடமுடியாதாம்... நம்ம நாட்டிலே எல்லா ஜனங்களோட நிலையும் இந்த மாதிரிதான்... இந்தக் காலத்திலே இன்னொரு புதுப்பிசாசு வந்து சேர்ந்திருக்கு அரசியல். அரசியலும் மதமும் சேர்ந்துக்கிட்டு கோஷ்டிச்சண்டை, கட்சிச் சண்டை. முந்தி குரு இருந்த இடத்திலே இப்போ கட்சித் தலை வர்கள். இந்தப் பிசாசுகள் நாட்டையே ஆட்டி வைக்கறது...

"அந்தோனி, நீ பிறந்த நாடு இது. உன் உடல் இந்த மண் ணாலே ஆனது, இந்த நாட்டுத்தண்ணி, காத்து, வெளிச்சத்திலே நீ இருபது வருசம் வழ்ந்திருக்கே—உன் வழக்கையிலே மிக முக்கியமான இருபது வருசம்... இந்தக் கடனை நீ தீர்க்க வேண் டாமா?... இந்த அதிருஷ்டங் கெட்ட ஜனங்களுக்காக் கவலைப் படமாட்டியா?...."

அந்தோனிக்குத்திகைப்பாயிருக்கிறது. அவனுக்கு முன்னால் உட்கார்ந்துகொண்டு பேசிக்கொண்டிருப்பவன் யார்? லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ்—இன் ஆசிரியர் ஹெரால்டு லாஸ் கியா? அல்லது டிரபால்கர் சதுக்கத்து ஜே.பி. எஸ். ஹால்டேனா? இல்லை, சீவின பென்சில் மாதிரி கூர்மையான மூக்கு இருக்குமே, அந்த பெர்ட்ராண்ட் ரஸ்ஸலா?

☆ ☆ ☆

பெரேரா வீட்டுப் புதிய படகைத் தண்ணீரில் முதல்முதலாக விடுவதைக்கொண்டாடப் பெரிய விழா ஏற்பாடாகியிருக்கிறது. அந்தோனி அதில் கலந்து கொள்வதற்காக் கடற்கரைச் சாலை வழியே வடக்கு நோக்கிப்போகிறான். அவனுக்கு இடது பக்கம் ஹார்வி மில்; வலது பக்கம் மணல்மேடு; அதைக்கடந்தால் கடல்.

மணல் மேட்டின் மேல் பிரும்மாண்டமான பந்தல். பந்தலின் விதானமாக மஞ்சள் நிறத்துணி கட்டி அதில் நீலமும் சிவப்பு மாகக் குஞ்சங்கள் வெயிலில் பளபளக்கின்றன. அவை தொலை விலிருந்தே கவனத்தை ஈர்க்கின்றன. எறும்புச்சாரி போல் மக்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். பெரிய பெரிய கார்கள் வருகின்றன. பாண்டு கோஷ்டியின் இசை தூரத்திலிருந்தே கேட்கிறது.

அந்தோனி வேஷ்டியும், தொள தொள ஜிப்பாவும், கால்களில் செருப்பும் அணிந்திருக்கிறான். ஊரின் காலநிலைக்கேற்ற உடை. இது தான் அவனுக்கு வசதியாயிருக்கிறது—அதுவும் இந்தப் பிற்பகல் நான்கு மணிவெயிலில்.

ஜில் பெரேரா நேற்று வீட்டுக்குத்தானே வந்து அந்தோனியை விழாவுக்கு அழைத்தான். அழைப்பை ஏற்றுக்கொண்டு வரா விட்டால் மரியாதையில்லை. இல்லாவிட்டால் அந்தோனி இந்த மாதிரி நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதில்லை சாதாரணமாக.

பந்தல் வாசலில் ஜில்பெரேரா அவனை எதிர்கொண்டு வரவேற்றான்— "வாங்க, வாங்க!... உள்ளே வாங்க!... ரொம்ப சந்தோசம்..." அவன் அந்தோனியின் கையைப் பிடித்து உள்ளே அழைத்துப்போய் முதல் வரிசையில் அமர்த்தினான். உடனே விலையுயர்ந்த செர்ஜ்துணியில் தைத்த சூட் அணிந்த இளைஞன் ஒருவன் கைகளில் வெள்ளித் தட்டு ஒன்றை ஏந்திக்கொண்டு அந்தோனிக்கு முன் வந்து நின்றான். தட்டில் ஒரு கிண்ணத்தில் பன்னீரில் கரைத்த சந்தனம் மணம்பரப்பிக் கொண்டிருந்தது.

ஜில் சிரித்துக்கொண்டு சொன்னான், "சந்தனம் எடுத்துக் கங்க!... நீங்க ரொம்ப நாளா வெளிநாட்டிலே இருக்கறதாலே நம்ம ஊர்ப்பழக்க வழக்கங்களை மறந்துபோயிட்டீங்க..."

அந்தோனி விரல்களைச் சந்தனத்தில் நனைத்துக் கைகளில் தேய்த்துக் கொண்டு முகர்ந்தான்.

ஜில் அடக்கமாகச் சிரித்துக் கொண்டு சொன்னான், "நான் சொன்னாத் தவறா நினைச்சுக்காதீங்க... நீங்க இந்த மாதிரி டிரஸ் பண்ணிக்கிட்டு வருவீங்கன்னு நான் எதிர்பார்க்கல்லே."

"இதுதான் சுகமாயிருக்கு..."

"வாஸ்தவந்தான்... இருந்தாலும் இந்த ஊரிலே உள்ள கௌரவப்பட்டவங்க விழாக்களுக்கு அல்லது சபைகளுக்குப் பேறாதுன்னா சூட்தான் போட்டுக்குவாங்க. ஏழைப் படகோட்டி கள் தான் வேஷ்டி கட்டிக்கிட்டு வருவாங்க..."

"இந்த வெயில்லே சூட்டா?"

"இவன் தான் என் பெரிய பையன் சாம்ஸன். ஹார்வி மில்லலே ஸ்பின்னிங் அப்பிரென்டிசாயிருக்கான். அடுத்த வருசம் மேல் நாட்டுக்குப் போகப் போறான்..."

"அப்படியா?"

"சாம்ஸன், இதோ பாரு. இவர் உனக்கு ஒரு மாமா. நம்ம வீட்டுக்குப் பக்கத்திலேதான் இருக்கார். வேஷ்டி கட்டியிருக் கிறாரேன்னு உள்ளூரான்னு நினைக்காதே. அசல் வெளிநாட்டுக் காரர். முழுக்க முழுக்க துரை. நீ இவர் கிட்டே போய் வெளி நாட்டு சம்பிரதாயங்களையெல்லாம் கத்துக்க. இல்லேன்னா அங்கே உனக்குக் காட்டுமிராண்டின்னு கெட்டபேர் கிடைக்கும்... நீங்க என்ன சொல்றீங்க?" ஜில் அந்தோனியைப் பார்த்துச் சிரித்தான்.

சாம்ஸன் ஒரு ரோஜாப்பூவை எடுத்து அதை அந்தோனியின் ஜிப்பாவில் எப்படிச் செருகுவது என்று தெரியாமல் 'தடுமாறு வதைக் கண்ட அந்தோனி பூவைத்தன் கையில் வாங்கிக் கொண் டான்.

வாடகைக்கு ஏற்பாடு செய்யப்பட்ட இரும்பு நாற்காலிகள் வரிசை வரிசையாகப் போடப்பட்டிருந்தன. அவற்றில் மேல் நாட்டுப் பாணியில் விலையுயர்ந்த உடையணிந்த ஊர்ப் பெரிய மனிதர்கள் அமர்ந்திருக்க, நாற்காலிகளுக்குப் பின்னால் வேஷ்டி, சட்டை, துண்டு அணிந்த சாதாரண மக்கள் கூட்டமாக நின்றுகொண்டிருந்தனர்.

வாசலில் ஏதோ ஆரவாரம் கேட்டது. ஜில் தன் பிள்ளையைக் கூட்டிக்கொண்டு வாசலுக்கு ஓடினான். அந்தோனியும் கழுத்தை யுயர்த்திப் பார்த்தான். சுஸான் கார்தோஸா தன் பிரும்மாண் டமான காரிலிருந்து இறங்கினான். கதர்ப்பாண்டும் கதர்க் கோட்டும் அணிந்திருந்தான் அவன். மற்ற விருந்தினர் களின் கார்கள் ரஸ்தாவிலேயே நிற்க கார்களிலிருந்து இறங்கி நடந்தே மணல்மேட்டைக் கடந்து பந்தலையடைந்தார்கள். சுஸானின் கார் மட்டும் நேரே பந்தல் வாசலுக்கு வந்துவிட்டது.

ஜில்லும் சாம்ஸனும் சுஸானை உற்சாகமாக வரவேற்று அவனை முதல் வரிசையில் ஒரு நாற்காலியில் உட்கார வைத்தார்கள். அந்த நாற்காலி மற்ற நாற்காலிகளைப் போல்

வாடகைக்கு கொண்டு வரப்பட்டதல்ல; ஜில்லின் வீட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட, மெத்தை வைத்துத்தைத்த விக்டோரியா மோஸ்தர் சிம்மாசனம். அந்த இருக்கைக்குப் பின்னால் சூட் அணிந்து கொண்டு உட்கார்ந்திருந்த சிலர் அவனைப்பார்த்து மரியாதையுடன் கைகளைப் பிசைந்து கொண்டார்கள். சுஸான் தான் ராஜா. அவர்கள் சபையோர், அல்லது விதூஷகர்கள். சுஸான் அவர்களைப் பார்த்துத் தலையாட்டிவிட்டுக் கிசு கிசுக்குரலில் ஏதோ பேசினான். அந்தப் பேச்சின் சில வார்த்தைகள் அந்தோனியின் காதில் விழுந்தன.

"சகோதரர்களான உங்க ரெண்டு பேரையும் நினைச்சுக் கர்வப்படறேன் நான்... நீங்க நம்ம சமூகத்துக்கே பெரிய சொத்துக்கள்... ஜாக்கி எங்கே?"

ஜாக்கி பெரேரா சுஸானுக்கு முன்னால் வந்து நின்று, "ஹி ஹி... சௌக்கியமா இருக்கீங்களா?" என்று கேட்டான்.

'ஆகா, உன்னை மறக்க முடியுமா!' என்று நினைத்துக் கொண் டான் அந்தோனி. அவனுக்குப் பழைய ஞாபகம் வந்தது...

1945ம் வருடத்து லண்டன். கிழக்கிலிருந்து அகதிகள் திரள் திரளாக வந்து கொண்டிருக்கிறார்கள்; தங்களிடமிருக்கும் பணத்தைக் கொண்டு லண்டனில் வீடு வாங்குகிறார்கள். போலந் துக்காரர் வால்தா அப்படித்தான் ஹைட் பார்க்குக்கு எதிரில் பேஜ் வாட்டர்ப் பகுதியில் ஒருவீடு வாங்கி அதன் அறைகளை வாடகைக்குக் கொடுத்து வாழ்க்கை நடத்தி வந்தார். தெரு முனைகளில் உடலை விற்கும் பெண்கள் கூட்டம். வாடகை குறைவு என்பதால் வால்தாவின் வீட்டில் இந்தியர்களும் ஆப்பிரிக்கர்களும் மேற்கு இந்தியர்களும் அதிகம். வால்தாவின் வீடு அனைத்துலக சபை மாதிரி இருக்கும். குடியிருந்தவர் களுக்கு உடற்பசி அதிகம். பெண்ணுறவுக்காக வெறிபிடித்து அலைபவர்கள் அவர்கள். இருட்டியதும் வேசிகளைத் தங்கள் அறைகளுக்கு அழைத்து வந்துவிடுவார்கள். இரவு முழுதும் குடி, கூத்து, கும்மாளம், இரைச்சல்...

அந்தோனி பணங்கொடுத்து வசிக்கும் விருந்தினனாக அந்த வீட்டில் தங்கியிருந்தான்.

வால்தாவின் மனைவி ஜேனேச்காவுக்கு ரொம்பக் கவலை யாகிவிட்டது. அவர்களுக்கு இரண்டு வயது வந்த பெண்கள். இந்தச் சூழ்நிலையில் இவர்களை வைத்துக்கொண்டு....

"நான் என்ன செய்வேன், மிஸ்டர் ஃபெர்னாண்டோ?" என்று கையைப்பிசைந்தான் ஜேனேச்சா.

அந்தோனி யோசனை சொன்னான், "ராத்திரி பத்து மணிக்கு மேல் யாரும் தோழிகளை அறைக்கு அழைத்துவரக்கூடாதுன்னு நோட்டீஸ்போட்டுருங்க."

அப்படியே நோட்டீஸ் ஒட்டப்பட்டது. அதுமுதல் இரவுக் கும்மாளம் நின்றுவிட்டது. வால்தா தம்பதியருக்கு நிம்மதி ஏற்பட்டது. அவர்கள் அந்தோனிக்கு நன்றி தெரிவித்தார்கள்.

மறுநாள் நள்ளிரவில் வால்தா தம்பதியின் அறையின் அழைப்பு மணி பலமாக ஒலித்தது.

கதவைத்திறந்து பார்த்தால் வெளியில் ஒரு கறுப்பன் கத்திக் கொண்டிருக்கிறான். அவன் கால்கள் தள்ளாடுகின்றன. அவன் இடது கையால் ஒரு பெண்ணின் இடையைக் கட்டிக்கொண்டிருக் கிறான். தெருவேசி என்பது அவளைப் பார்த்தாலே தெரிகிறது.

அந்த ஆள் கத்தினான், "ராத்திரி வேளையிலே தோழிகளைக் கூட்டி வரக்கூடாதுன்னு தடுக்க நீ யார்?"

வால்தாவின் அறைக்கு எதிரில் தான் அந்தோனியின் அறை. அவன் இந்தச் சத்தத்தில் உறக்கம் கலைந்து எழுந்து கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். கூச்சலிடுபவனிடம் சொன் னான்– "ராத்திரி வேளையிலே கண்ணியமான மனுசங்களோட தூக்கத்தைக் கெடுக்க உனக்கு உரிமையில்லே!"

"பன்னிப்பயலே! ராஸ்கல்! பொட்டை நாய்க்குப் பெறந்தவனே! நீ போடா! உன்னோடே எனக்குப் பேச்சு இல்லே..."

ஆர்ப்பாட்டக்காரனின் தோழி அவன் வாயைத்தன் கையால் மூடமுயன்றாள். அவன் அவளுடைய கையை நகர்த்திவிட்டுக் கத்தினான்– "நான் யாரு தெரியுமா?..., நான் ஜாக்கி பெரேரா! தூத்துக்குடி மகாராஜாவோட பிள்ளை!..."

தூத்துக்குடியா? பெரேராவா?... வெறும் இந்தியன் மட்டுமில்லே. அவனுடைய ஊர்க்காரன், சாதிக்காரன்!

அந்தோனி இரத்தம் கொதித்தது. "ஒண்ணு நான் சாகணும், அல்லது அவன் சாகணும்!...."

அந்தோனி ஜாக்கியின் கழுத்தில் கையைப்போட்டு இறுக் கிக்கொண்டு அவனுடைய காதில் மெதுவாகச் சொன்னான்– "இன்னும் தகராறு பண்ணினே, கழுத்தைத் திருகிப் போட்டுடு வேன். போலீஸ் வர்றதுக்கு முன்னாலேயே செத்துப் போயிடுவே!..."

ஆச்சரியம்! ஜாக்கி இதற்குப்பின் அடங்கிவிட்டான். போலீஸ் என்ற பேச்சைக் கேட்டதுமே அந்தப் பெண் நழுவிவிட்டாள். ஜாக்கி மறுவார்த்தை பேசாமல் சமத்துப் பையனாகத் தன் அறைக்குப் போய்விட்டான்.

"ஜாக்கி பெரேரா, உனக்கு ஜாபருல்லாவை நினைவிருக்கா?... முகம்மது ஜாபருல்லா, டாக்காக்காரன். அற்புதமா வயலின் வாசிப்பான். தாராள மனசு அவனுக்கு, ஹபீஸ், ரூமி இவங்களோட கஜல் பாட்டுக்களை அபாரமாப்பாடுவான். மக்களெல்லாம் அவனுக்கு அண்ணன் தம்பிகள். அதிலேயும் இந்தியர்கள் கிட்டே ரொம்பப்பிரியம்... உனக்கு ஞாபகமிருக்கா? நீ குடி போதையிலே இருந்ததுக்காக உன்னைப் போலீஸ் பிடிச்சபோது அவன் உன்னை விடுதலை பண்ணி தன் ஃபிளாட்டிலே கொண்டு வந்து வச்சுக்கிட்டான். அப்போ இந்தத் தூத்துக்குடி இளவரசன் பை காலி, ஒரு வேளைச் சோத்துக்கு வழியில்லே...

"அந்த ஜாபருல்லாவுக்கு நீ எப்படிப் பிரதியுபகாரம் பண்ணினே? அவன் குடியிருந்த வீட்டுக்காரியோட பெண் எடித்தைக் கெடுத்து அவ வயித்திலே பிள்ளையைக் கொடுத்தே... அவ அவமானம் தாங்காமே தற்கொலை பண்ணிக்கிட்டா. அந்தப் பிள்ளை இப்போ லண்டனிலேயே ஜாபருல்லாகிட்டே இருக்கான்; ஜாபருல்லாவை 'டாடி'ன்னு கூப்பிடறான்..."

ஊஹூம், ஜாக்கிக்கு அந்தோனியை அடையாளம் தெரியவில்லை. அவன் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்வையைத்திருப்புகிறான். ஒரு சமயம் சுஸானைப் பார்த்து, இன்னொரு சமயம் மற்றொரு பெரிய மனிதனைப் பார்த்துப் புன்னகைக்கிறான்.

சுஸானும் இங்குமங்கும் திரும்பிப் பார்க்கிறான். அவன் பார்வை பட்டவர்கள் எழுந்து நின்று கை கூப்புகிறார்கள். பதில் வணக்கம் செய்ய வேண்டிய தேவையில்லை சுஸானுக்கு. அவன் சும்மா தலையை மட்டும் ஆட்டுகிறான். தான் ஒரு கவர்னர், வைசிராய் என்ற நினைப்பு அவனுக்கு, அவனுடைய பார்வை அந்தோனியின் மேலும் விழுந்தது. அந்தோனியின் கை சற்று உயர்ந்து சட்டென்று இறங்கிவிட்டது. அதன்பிறகு அடிக்கடி அந்தோனியைத் திரும்பிப் பார்த்தான் சுஸான். அந்தோனி வேறுபக்கம் திரும்பிக் கொண்டான்.

மறுபடியும் வாசல் பக்கம் ஆரவாரம் பாண்டு வாத்தியம் பலமாக ஒலித்தது, இரண்டு பளபளப்பான கார்கள் வாசலில் வந்து நின்றன. ஒன்றிலிருந்து இறங்கினவர் வெள்ளையர், மினுமினுப்பான கறுப்புநிற சூட் அணிந்திருந்தார். இரண்டாவது காரிலிருந்து உயரமான இந்தியர் ஒருவர் இறங்கினார். அவரது உடல் முழுவதையும் லேஸ் வைத்துத்தைத்த வெள்ளை கவுன் மறைத்தது. இடுப்பில் ஒரு பட்டுக் கயிற்றைக்கட்டியிருந்தார் அவர் கயிற்றிலிருந்து ஒரு ஜபமாலை தொங்கிக் கொண்டிருந்தது.

தலையில் ஒரு சிறிய தொப்பி. கபத்தில் அணிந்திருந்த தங்கச் செயினிலிருந்து ஒரு சிலுவை தொங்கிக் கொண்டிருந்தது. அவரது வலது மோதிரவிரலில் பத்மராகக்கல் பதித்த மோதிரம் ஒளி வீசிக் கொண்டிருந்தது. முயலின் கண்போலிருந்தது அந்தக் கல்.... அவர்தான் தூத்துக்குடியின் பிஷப். முகத்தில் இளந்தாடி, உதடுகளில் சுவர்க்கத்துப் புன்னகையின் இலேசான பூச்சு.....

"பிஷப் வந்துட்டார்! பிஷப் வந்துட்டார்!"

எல்லோரும் எழுந்து நின்றனர். சுஸான் எழுந்து வந்து பிஷப்பின் கையை முத்தமிட்டான்.

பந்தலின் முன் பகுதியில் ஒரு உயரமான மேடை. அதில் இரண்டு சிம்மாசனங்கள் போடப்பட்டிருந்தன. ஒன்றில் பிஷப்பும் மற்றதில் வெள்ளையர் மிஸ்டர் மெக்லியோடும் அமர்த்தப் பட்டனர்.

மெக்லியோட் கலகலப்பான மனிதர். அவரது முகத்தில் சிரிப்பு, கண்களில் சிரிப்பு. தலை பூராவும் வழுக்கை. மேலை வெயில் நேராக அந்த வழுக்கையின் மேல் விழுந்தது. பிஷப் சிரித்துக் கொண்டே தன் தொப்பியை அவரிடம் நீட்டினார் "இதை வச்சுக்கங்க. உங்க தலை தப்பட்டும்."

சட்டென்று பதில் வந்தது மெக்லியோடிமிருந்து "தாங்க் யூ, மிஸ்டர் பிஷப்! உங்க தொப்பியை அணியறது ரொம்ப கௌரவம். ஆனால் வருத்தத்துக்குரிய விஷயம் என்னன்னா, நான் இரண்டு குழந்தைகளுக்குத்தான் ஃபாதர், கணக்கு வழக்கில்லாத குழந்தைகளுக்கு ஃபாதர் ஆகிற சக்தி இருக்கு உங்களுக்கு ...." இதைக் கேட்டு சபையில் ஒரே சிரிப்பு.

பிஷப்பின் இடதுபுறம் அந்தோனியின் கவனத்தைக் கவர் கிறது. அது பெண்கள் பகுதி. அங்கே கொழுகொழு உடம்புக ளுடன் அழுத்தமான நிறங்களில் காஞ்சீபுரம் பட்டுப்புடை வைகளும், மைசூர்ப் பட்டுப்புடைவைகளும் அணிந்துகொண்டு அமர்ந்திருக்கிறார்கள் பெண்கள். தலையில் அடர்த்தியான பிச்சிப்பூ, குண்டு மல்லிகைச்சரங்கள், அங்கிருந்து சென்ட்டின் வாசனை பந்தலெங்கும் பரவுகிறது. கலகலச்சிரிப்பும் பேச்சும். இந்தக் கலகலப்பையும் மீறிக்கொண்டு ஒலிக்கிறது வெட்கமற்ற அட்டகாசச்சிரிப்பு ஒன்று. "என்னைப்பார், என்னைப்பார்! " என்கிறது அந்தச் சிரிப்பு. நிறையப் பேர்களின் கவனத்தை இழுக்கிறது.

அந்தச் சிரிப்புக்குச் சொந்தக்காரி அந்தோனிக்குப் பரிச்சய மானவள்தான். இந்தப் பதினான்கு வருடங்களில் அவளிடம்

மாறுதல் எதுவும் இல்லை. அதே பருமன், அதே சதை போட்ட முகம் . முன்பு போலவே நிறைய கிரீமை அப்பிக் கொண்டிருக் கிறாள் உதடுகளில் இரத்தச் சிவப்பு உதட்டுச்சாயம், தலையில் விசித்திரக் கொண்டை .......

பதினான்கு ஆண்டுகளுக்கு முந்தைய நிகழ்ச்சி , நாட்டியக் காரி ஜயம்மா. காட்வினின் வைப்பாட்டி. ராமய்யங்காரால் சிலோ னிலிருந்து கொண்டு வரப்பட்டவள்... அப்புறம் அந்த வெட்க கேடான நிகழ்ச்சி ...அந்தோனி சிரித்துக் கொண்டான். தணிக்க முடியாத உடற்பசி அவளுக்கு ...

"ஹலோ, மிஸ்டர் ஃபெர்னாண்டோ!"

அந்தோனியின் தோளின்மேல் இலேசான அழுத்தம். பக்கத் தில் சுஸானின் கரகரத்த குரல். வேட்டைப்பூனை சமயம் பார்த்து இவனைப்பிடித்துக் கொண்டுவிட்டது ..........

பிறகு சுஸான் ஜில்லிடம் போய்த்தணித்த குரலில் அவனை அதட்டினான் "என்னப்பா இப்படி செஞ்சுட்டே!.... இவர் எவ்வ ளவு முக்கியப்பட்டவர்! இவரை இரும்புச் சேரிலேயா உட்கார வைக்கிறது! .. உங்களுக்குக் கொஞ்சங்கூட விவேகமில்லே ... "

ஒரு பத்து-பதினோரு வயதுப்பெண் பிஷப்பின் பக்கத்தில் நின்றுகொண்டு இறைவணக்கம் பாடினாள். அசாத்தியப்பருமன் நகைக்கடையின் கண்காட்சிப் பெட்டி மாதிரி உடல் முழுதும் நகைகள். அவள் பாடியது தமிழ்ப்பாட்டு.ஆனால் வார்த்தைகள் தெளிவாக இல்லை. இழுத்து இழுத்து என்னதான் பாடினாளோ! அபஸ்வரம்.

பின்னாலிருந்த ஒருவன் ஜாக்கியிடம் சொன்னான், "உன் பெண் பிரமாதமாப் பாடறாளே! குரல் ரொம்ப நல்லாயிருக்கு!"

ஜாக்கி மகிழ்ச்சியுடன் ஆமோதித்தான், "ஆமா, எல்லாரும் அப்படித்தான் சொல்றாங்க. நான் அவளுக்குக் கர்நாடக சங்கீதம் கத்துக் கொடுக்கலாமான்னு பார்க்கிறேன்..... நீ ஒருநாள் சாயங்காலம் வீட்டுக்கு வாயேன்........பெண்ணோட பாட்டைக் கேட்டுட்டுச் சாப்பிட்டுட்டுப் போகலாம்...."

அந்தோனியின் பார்வை தவிர்க்க முடியாமல் ஜயம்மா மேல் விழுந்தது. அவளுடைய முகத்தில் ஏளனப்புன்னகை.

பாட்டு முடிந்தது. இப்போது பிஷப்பின் பேச்சு. அவருடைய குரல் கம்பீரமாக, ஆனால் கரகரப்பாக, இருந்தது மயிலின் அக வல் போல, அவர் ஆங்கிலத்தில் பேசினார்-"ஜாக்கியும் ஜில்லும் இலட்சிய சகோதரர்கள். பக்திமான்கள், மதப்பற்றுள்ளவர்கள், கத்தோலிக்க ஒழுக்கத்தின் உயிருள்ள முன்மாதிரிகள் ...."

பக்கத்திலிருந்து வெளிப்பட்டது அந்த வெட்கமற்ற சிரிப்பு.

ஜயம்மா தன் கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண் டாள். சுஸானின் புருவங்களுக்கிடையே ஒரு சிறு சுருக்கம் விழுந்தது.

பிஷப்பின் பேச்சு வழக்கமான பிரசாரம்தான் "கடவுள் நம்பிக் கை ரொம்ப முக்கியம். கடவுள் நம்பிக்கை, பக்தி, வளர வளரத் தொழிலும் பெருகும், பணமும் பெருகும். தொழில் வளர்ந்தால் அதிலே ஏராளமான ஏழைகளுக்குப் பிழைப்பு கிடைக்கும். இந்த ரெண்டு சகோதரர்களும் ஏழைப் பங்காளர்கள் .."

பிறகு மெக்லியோட் பேசினார். தெளிவான ஆங்கிலத்தில் முத லிலேயே அவர் ஜாக்கி-ஜில்லின் காலஞ் சென்ற தந்தை ஆல்பிரெட் பெரேராவைப்பற்றிக் குறிப்பிட்டார். அவருடைய நாணயத்தைப் புகழ்ந்தார். ஆல்பிரெட் உயர்ந்த ஜாதிக்காவல் நாய் மாதிரி ஹாக்கி மில்லின் சொத்துக்களைப் பாதுகாத்தார். அவருடைய எஜமான விசுவாசத்துக்கு ஈடில்லை. அவர் மாதிரி யாரும் இருக்க முடியாது. அப்புறம் அந்தக்கதை ......

ஹார்வி மில்லுக்குச் சரக்கேற்றி வந்த கப்பல் எட்டு மைல் தூரத்தில் கடலில் நின்று கொண்டிருந்தது. பெரும்புயல், மழை அந்த நிலையில் படகேறிச் சென்று கப்பலிலிருந்து சரக்குகளை இறக்குவது ஆபத்து. ஆனால் உடனே இறக்காவிட்டால் கம்பெ னிக்குப் பெரு நஷ்டம் ஏற்படும். கடமையே கண்ணான ஆல்பிரெட் அந்தப் புயலிலும் படகு கொண்டு போய்ச் சரக்குகளை எடுத்துக் கொண்டு வந்தார். அவரது இந்த சேவையை இன்றும் மறக்க வில்லை மெக்லியோட் துரை. அவருடைய பிள்ளைகள் இப்போது பெரேராகா கம்பெனியை நடத்துகிறார்கள். தந்தையின் அச்சு தான் பிள்ளைகளும் ......

கைதட்டல் ஒலியில் பந்தல் அதிர்ந்தது .......

மறுபடியும் அந்த வெட்கங் கெட்ட சிரிப்பு. சிரித்தவள் கறுப்புக் கண்ணாடி அணிந்த கண்களை அந்தோனியிருந்த பக்கம் திருப்பினாள். அவனைத்தான் பார்க்கிறாளோ, என் னவோ!.....

"மிஸ்டர் ஃபெர்ணாண்டோ, காபி ..."

சுஸான் அந்தோனியின் முன்னால் ஒருதட்டை நீட்டிக் கொண் டிருந்தாள். அவன் அட்டைப்பெட்டியைப் பக்கத்தில் வைத்து விட்டுக்காபியை உறிஞ்சத் தொடங்கினான்.

இப்போது பின்னாலிருந்தவர்கள் எழுந்து நின்றார்கள், பிஷப் பெஞ்சிகளுக்கு நடுவிலிருந்த பாதை வழியே கடற்கரையை

நோக்கி நடந்தார். அவருக்கு ஒரு பக்கத்தில் ஜாக்கி, இன்னொரு பக்கத்தில் சுஸான். சபையினர் பிஷப்பைப் பின் தொடர்ந்தனர்.

இப்போது எல்லாரும் சமுத்திரக் கரையில். அங்கே புதிய தோணி நின்று கொண்டிருந்தது. ஆயிரம் டன் பளு ஏற்றிக் கொண்டு சிலோன், மலேயா, சிங்கப்பூர், ஹாங்காங் முதலிய இடங்களுக்கெல்லாம் போகும். புத்தம் புதுப்படகு. அதிலிருந்து வருகிறது அறுக்கப்பட்ட பலகையின் வாசனை, புதுப் பெயிண்ட்டின் மணம்.

கூட்டம் படகையடைந்தது. அதன் மேற்பகுதி தரையிலிருந்து முப்பதடி உயரத்திலிருந்தது. அதில் ஒரு ஏணி பொருத்தப் பட்டிருந்தது. பிஷப், ஜாக்கியும் ஜில்லும் பின் தொடர ஏணியின் மேலேறினார். அதன்பின் மெக்லியோடும் இன்னும் சில பெரிய மனிதர்களும் ஏறினார்கள். சுஸான் ஏறும் போது அந்தோனியையும் தன் கூட அழைத்துக் கொண்டான். அந்தோனி கடைசியாக ஏறினான்.

சுஸான் ஒவ்வொருபடி ஏறியதும் சற்றுநேரம் பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான். அவனுக்கு வாதப்பிடிப்போ? எல்லோருக்கும் கடைசியில் படகின் மேலேறினான் சுஸான்.

கப்பல் மாதிரி பெரிய படகு. இரண்டு பிரும்மாண்டமான பாய் மரங்களிலும் வாழைமரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. படகின் மேல் தட்டைச் சுற்றிக் கலர்க்காகிதத் தோரணங்கள், பிச்சிப் பூச்சரங்கள், இங்குமங்கும் சந்தனப்பூச்சு. கலியாணப்பெண் மாதிரி ஜோடனை. படகின் முன்புறம் கீழே தமிழில் அதன்பெயர் 'ஜபமாலை'.

பிஷப் படகின் முன்புறத்தில் வந்து நின்றார். பாண்டுக் குழுவின் இசை பலமாக முழங்கியது. படகோட்டிகளின் தலைவனான இளைஞன், பிஷப்புக்கும் மெக்லியோடுக்கும் மாலையணிவித்தான். அவனுக்குக்கீழே பணிபுரியும் இருபது படகோட்டிகள் ஒவ்வொருவராக அவ்விருவருக்கும் மாலையணிவித்தார்கள்.

பிஷப் தன் அங்கியின் பையிலிருந்து வெள்ளியாலான ஒரு சிறிய தெளிப்பானை எடுத்து அதிலிருந்த புனித நீரை மந்திரம் சொல்லிக் கொண்டே படகின்மேல் தெளித்தார். தெளித்துக் கொண்டே ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு மறுபடி படகின் முன் பகுதிக்கு வந்தார். அவருக்குப் பின்னால் மெக்லியோட். சுஸான் நகராமல் அங்கேயே நின்றுக் கொண்டிருந்தான்.

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான். நமது ஜனங்கள் இப்போதும் கடலை நடுங்க வைக்கக்கூடிய பெரிய பெரிய படகுகள் தயாரிக்கிறார்கள்! பார்க்க ஆச்சரியமாயிருக்கிறது. இந்தியாவின் கப்பல் தொழில் எவ்வளவு பண்டைய கலை!

சுஸோன் தன் சப்பை முகத்தை ஆட்டிக் கொண்டே சொன்னால்- "மந்திரம் போட்ட தண்ணியைப் படகுமேலே தெளிச்சாச்சு, இனிமேல் பேய், பிசாசு ஒண்ணும் நெருங்கமுடியாது இதை. இது புயல்கியலையெல்லாம் லட்சியமே பண்ணாது இது இரும்புப் படகாக்கும்!"

பிஷப்பும் மற்றவர்களும் கீழே இறங்கினார்கள். படகின் தலைப்பகுதி கடலை நோக்கித் திரும்பியிருந்தது. படகு நின்று கொண்டிருந்தது. அதன் முன் பக்கத்திலிருந்து ஒரு பெரிய போத்தல் தொங்கி கொண்டிருந்தது.

"இப்போ ஷாம்பேன் போத்தலை உடைக்க வேண்டியது தானே?" என்று கேட்டான் ஒருவன்.

"சரியாப் போச்சு!.. ராஜகோபாலாச்சாரி ராஜ்யம் நடக்கறது இங்கே. பூரண மதுவிலக்கு அமுல்லே இருக்கு, பன்னீர்தான்". அதை இருகைகளாலும் பிடித்துப் படகின் மேல் பலமாக மோதினார். போத்தல் தூள்தூளாகச் சிதறப் பன்னீர்த்துளிகளும் சிதறின. நாற்புறமும் கையொலி.பெரிய மனிதர்களிடையே வயது முதிர்ந்த ஒருவர் சென்னார் "ஏதேது, நம்ம பிஷப் போத்தல் உடைக்கிறதிலே ரொம்ப கெட்டிக்காரர் போலே இருக்கே!" பிஷப் சிரித்துக் கொண்டே அவரைப் பார்த்தார்.

அதே சமயத்தில் மறுபடி அந்தக் கலகலச் சரிப்பு கேட்டது. ஜயம்மா இப்போது தன்னருகில் நிற்பதைக் கவனித்தான் அந்தோனி. கூட்டத்தில் ஆண்களும் பெண்களும் கலந்து போய் விட்டார்கள்.

ஜாக்கியும் ஜில்லும் கைகூப்பிக் கூட்டத்தினரைக் கேட்டுக் கொண்டார்கள்-"இப்போ நீங்களும் படகை ஆசீர்வாதம் பண்ணுங்க!" அவர்களுக்குப் பக்கத்தில் சந்தனக் கிண்ணத்துடன் சாம்ஸன். எல்லோரும் கிண்ணத்திலிருந்து கொஞ்சம் சந்தனத்தை எடுத்துப் படகின்மேல் அப்பினார்கள்.

அந்தோனியும் சிறிது சந்தனத்தை எடுத்துப் படகின்மேல் தடவினான், அப்போது சட்டென்று ஒரு மிருதுவான கை அவன் கையில் சந்தனத்தைத் தடவி விட்டு நகர்ந்து விட்டது.

அந்தோனி திரும்பிப் பார்த்தான்-ஜயம்மா!

அவன் கூட்டத்தைவிட்டு வெளியே வந்தான். அப்போது படகுக்கு முன்னால் ஜாக்கி, ஜில், பிஷப், மெக்லியோட், சுஸான், இன்னும் சிலரை நிறுத்திவைத்துப் போட்டோ எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

படகைச் சால மரக்கட்டைகளின் மேல் நிறுத்தி வைத்திருந் தார்கள். சில ஊழியர்கள் இரும்பு வாளிகளில் சீப்பு சீப்பாக வாழைப்பழங்கள் எடுத்து உரித்துப்போட, இன்னும் சிலர் அவற் றைப் பிசைந்து விளக்கெண்ணையுடன் கலந்தார்கள். வேறு சிலர் அந்தக் குழம்பைக்கரண்டிகளில் எடுத்துச் சாலமரகக் கட்டைகளின்மேல் ஊற்றினார்கள். கட்டைகளை வழவழப்பாக்கு வதற்காக இந்த முயற்சி. அவை எவ்வளவுக்கெவ்வளவு வழவழப்பாக ஆகின்றனவோ அவ்வளவக்கவ்வளவு எளிதாகப் படகு நகர்ந்து தண்ணீருக்கு வரும். பீமன் மாதிரி முரட்டு இளைஞர்கள் ஐம்பது பேர் படகைக் கீழேயிருந்து தள்ளினார்கள். படகு மெதுவாக நகரத் தொடங்கியது.

ஆர்வத்துடன் இந்தக்காட்சியைப் பார்த்தான் அந்தோனி, அரு கில் ஒரு பெண்குரல் "எப்படி இருக்கே?"

அந்தோனி திரும்பிப் பார்த்தான். கேட்டவளை அடையாளம் கண்டுகொள்ளச் சற்று நேரம் பிடித்தது மார்ஸி.

"வண்டி கொண்டு வந்திருக்கியா?" அவள் கேட்டாள்,

"இல்லே, நடந்துதான் வந்தேன்...."

"என்னோட வா ..... நான் கொண்டு போய் விடறேன்'.

மார்ஸி முன்னால் நடக்க, அவளைப்பின் தொடர்ந்தான் அந்தோனி.

☆ ☆ ☆

சாம்பல் கரைத்தாற்போலிருக்கிறது கடல் நீரின் நிறம். மீன் பிடிக்கும் படகுகள் வெகு நேரம் முன்பே திரும்பிவிட்டன. பீட்டர் இன்றும் வரவில்லை. அன்று விடியுமுன்னரே இருட்டில் போனவன்தான். ஐந்துநாட்களாக ஆளைக்கோணாம்.

இவ்வளவு பெரிய வீட்டில் தனியாக இருக்கப்பிடிக்க வில்லை. அந்தோனிக்கு நான்கு வார்த்தைகள் பேசக்கூட ஆளில்லை. மேரி வேறு கடித்ததுக்கு மேல் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறாள். ஏனோ திடீரென்று அவள் கவலைப் படத் தொடங்கிவிட்டாள். உடனே லண்டனுக்குத் திரும்பி வந்து கலியா ணம் செய்து கொள் என்கிறாள். அவள் மனது ஏன்தான் மாறி விட்டதோ தெரியவில்லை.

இங்கேயும் சில முக்கியமான விஷயங்களில் முடிவு காண வேண்டும். அதற்கு முன் அவன் கிளம்பமுடியாது.

காட்வின் தன் சொத்து எல்லாவற்றையும் பீட்டர் பேருக்கு எழுதி வைத்துவிட்டதாக வக்கீல் ராமச்சந்திரய்யர் சொன்னார். தான் எல்லாச் சொத்தையும் அந்தோனிக்குக் கொடுத்துவிடப் போவதாக அன்றிரவு தெளிவாகக் கூறிவிட்டான் பீட்டர். இது சம்பந்தமாக அவன் முன்னமே காட்வினுடன் பேசியிருக்கிறானாம். ஆனால் இதற்கு ஒரு நிபந்தனையாம். என்ன நிபந்தனை என்று மட்டும் அவன் சொல்லவில்லை இன்னும்.

அந்தோனி வீட்டை விட்டு ஓடியபின் தன் தந்தையின் சொத்தை அனுபவிக்கும் நினைவே இல்லை அவனுக்கு. அவன் தன் வாழ்க்கையைத் தானே அமைத்துக் கொண்டான். தொடக்க காலத்தில் பேராசிரியர் சர்க்கார் அவனுக்குக் கொஞ்சம் உதவி செய்தார். தந்தை வாங்கிப் போட்டிருந்த நகையை விற்று அவனுக்குத் தேவையான கப்பல் கட்டணத்தைக் கொடுத்தாள் ஆம்மி. இதில் அவளுக்கும் ஒரு காரணம் இருந்தது. வெளி நாட்டில் அவன் தன் தேவைக்கான பணத்தைத்தானே சம்பாதித்துக்கொண்டான். தனக்குக் கல்லூரி உபகாரச் சம்பளம் கிடைக்கும்வரை ஓட்டல் பணியாளனாக வேலை செய்து பணம் சம்பாதித்தான்.

அவன் லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ்–ல் பேராசிரியர் ஹெரால்டு லாஸ்கியின் மாணவன். பிரோஸ் காந்தி சகமாணவன். இந்திரா இப்போது இந்திரா நேரு. பிரோஸும் இந்திராவும் வெளிநாட்டில் தான் சந்தித்தார்கள். அவர்களிடையே காதல் மலர்ந்ததும் அந்தோனிக்குத் தெரியும். அப்போது அவன் மும்முரமாகத் தேர்வுக்குத் தயார் செய்து கொண்டிருந்தான்.

1939 ம் ஆண்டு செப்டம்பர் மாதம். ஹிட்லர் போலந்தின் மீது படையெடுத்தான். உலகப்போர் மூண்டது. ஒரு பக்கம் அச்சு நாடுகள்; மறுபக்கம் நேசநாடுகள்.

அப்போது அந்தோனி டாக்டர் சின்ஹாவின் சீடன். டாக்டர் சின்ஹா, ரஸ்ஸல் சதுக்கத்தில் ஒரு புத்தகக்கடை வைத்திருந்தார். ஆனால் அது ஒரு சாக்கு தான். அவர் உண்மையில் செய்து வந்தது அரசியல் பணி. இந்தியாவிலிருந்து வரும் இளைஞர்களை அவர் தூண்டிவிடுவார் – "இங்கே இருந்து கொண்டே தாய் நாட்டுக்கு சேவை செய்யுங்க. நாட்டு விடுதலைக்காகப் போராடுங்க..."

இதன் விளைவாகப் பிறந்தது 'இண்டியன் ஸ்டூடண்ட்ஸ ப்யூரோ'. இந்த நிறுவனத்தின் உறுப்பினர்கள் கவர் தெருவின் சிறிய வீட்டில் ஒன்று கூடி விவாதிப்பார்கள்.

இதற்குச் சில வருடங்கள் முன்னரே இந்தியா லீக் தோன்றி விட்டது. டாக்டர் சின்ஹாவும் வி.கே. கிருஷ்ணமேனனும் லீகின் இரண்டு தூண்கள்.

லண்டன் அப்போது ஹிட்லரின் குண்டு வீச்சால் சின்னா பின்னமாகிக் கொண்டிருந்தது. பெரிய பெரிய வீடுகளெல்லாம் சீட்டுக்களால் கட்டப் பெற்றவைபோல் இடிந்துவிழுந்து கொண்டிருந்தன. சில நிமிடங்களுக்கொரு முறை அபாய அறிவிப்புச் சங்கு ஒலித்தது. அந்த சமயங்களில் மண்ணுக்குக் கீழே எலிபோல் பதுங்கிப் பிழைக்க வேண்டும். அந்தோனி லீகின் தஸ்தாவேஜுகளை எவ்வளவு கஷ்டப்பட்டுப் பாதுகாத் தான் என்பது டாக்டர் சின்ஹாவுக்குத்தான் தெரியும். அவன் வீடுகளின் இடிபாடுகளுக்குக் கீழே தஸ்தாவேஜுகளடங்கிய சூட் கேஸை வைத்துக் கொண்டு மூன்று பகல்கள் மூன்று இரவு களைக் கழித்தான்.

அவன் மனதில் அன்று பயமேதுமில்லை, வேறெந்த ஆசையு மில்லை. அவனது விருப்பம் ஒன்றுதான் – நாட்டின் விடுதலை.

வெள்ளையனே, வெளியேறு!

யுத்தகாலத்தில் அந்தோனிக்கு ஒரு புதிய படிப்பினை.

அவன் நிறையப் படித்தான். போர் முடிந்தபின் மறுபடியும் கல்லூரியில் படித்தான். ஆராய்ச்சி, பி.எச்.டி பட்டம்....

பிரிட்டிஷார் கடைசியில் இந்தியாவை விட்டு வெளியேறினர். இந்தியாவில் சுதந்திர அரசு பதவியேற்றது. ஆல்ட்விச்சில் இந்திய ஹைகமிஷனர் அலுவலகம் செயற்படத் தொடங்கியது. ஜவகர்லாலின் நம்பிக்கைக்குரிய கிருஷ்ணமேனன் ஹைகமிஷன ரானார். அவர் அந்தோனியைக் கூப்பிட்டுத் தம் அலுவலகத்தில் வேலை கொடுத்தார்.

டில்லிப் பாராளுமன்றத்தில் ஏக ரகளை. கிருஷ்ணமேனன் மேல் ஏராளமான குற்றச்சாட்டுகள் எழுந்தன. காங்கிரஸ் வலது சாரியினருக்குக் கிருஷ்ணமேனனைப் பிடிக்கவில்லை. நேருவின் நிலை இருதலைக்கொள்ளி எறும்பின் நிலைதான். ஜீப் பேர ஊழல் பெரும் பரபரப்பை விளைவித்துக் கொண்டிருந்தது. எதையும் லட்சியம் செய்யாத கிருஷ்ணமேனன் தம் பதவியை ராஜிநாமா செய்யும் வாய்ப்பு இருந்தது. அவர் ராஜிநாமா செய்துவிட்டால் அவருடைய சீடர்கள் பாடு திண்டாட்டம்தான். புதிதாக வரும் ஹைகமிஷனர் கிருஷ்ணமேனனின் ஆட்களை

விட்டுவைக்கமாட்டார்—குறிப்பாக, ஜீப் பேர விவகாரத்தில் சம்பந்தப்பட்டவர்களை. அந்தோனியின் வேலை போய்விடும் நிச்சயமாக. இந்நிலையில் மேரியைக் கலியாணம் செய்து கொள்வது எப்படி?

அந்தோனிக்கு இந்திய அரசாங்க இயந்திரத்தின் மீது எரிச்சல் ஏற்பட்டுவிட்டது. லண்டனிலிருந்து பார்க்கும்போது டில்லியில் ஏதோ பழங்காலத்து ஜமீன்தாரி முறையில் நிர்வாகம் நடைபெறுவதாகத் தோன்றியது. நிர்வாகப் பொறுப்பிலிருந்தவர்கள் மனம் போனபடி நடந்து கொண்டிருந்தார்கள். ஐ.சி.எஸ் நிர்வாகம் உளுத்துப்போய்விட்டது.

நாட்டுக்காகத் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்திருந்த ஜவகர்லால்—'டிஸ்கவரி ஆஃப் இண்டியா' எழுதிய ஜவகர்லால்—அவர் கண்ணில் இந்தச் சீர்குலைவு படவில்லையா?

அந்தோனியின் கருத்தில் அரசாங்கம் என்றால் ஜவகர்லாலும் அவரது மந்திரிசபையும் அவர்களைச் சுற்றி ஒரு சில ஐ.சி.எஸ். அதிகாரிகளும் தான். மறுபுறத்தில் அவனை ஆட்கொண்டிருந்தது தாய் நாட்டைப் பற்றிய ரொமான்டிக் உணர்வு. "என் நாட்டு மண்ணே, உனக்குத் தலை வணங்குகின்றேன்" என்பது போன்ற ரவீந்திரரின் தேசபக்திப் பாடல்களைக் கிராமபோனில் கேட்கும் போது மனம் உணர்ச்சிவசப்பட்டது. விஸ்கியைக் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிக்கொண்டே இந்த மாதிரிப் பாடல்களைக் கேட்பது சுகமாகத்தானிருந்தது....

அன்றிரவு அவனுக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. அதிர்ச்சியளித்தவன் பீட்டர். பீட்டர் சொன்னான்— "அந்தோனி, நீ இந்த நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமை இருக்கிறது!"

பீட்டர் அந்தோனிமேல் ஒரு பூதத்தை ஏவிவிட்டு விட்டான். அது அந்தோனியைக் குத்திக் குத்திச் சொல்லிக்கொண்டேயிருக்கிறது—"நீ நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமை இருக்கிறது!"

அவனுக்கு இப்போதே பீட்டரைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. ஆனால் பீட்டர் இருக்குமிடம் தெரியவில்லை.

அமைதியற்ற மனநிலையில் கடற்கரையோரமாக ஊரை நோக்கி நடந்துகொண்டிருந்தான் அந்தோனி. இருட்டிவிட்டதால் கடல் கண்ணுக்குத் தெரியவில்லை. அறுக்கப்படும் கட்டையின் வாசனையும் கொதிக்கும் தாரும் புகையும் கலந்த நெடியும் அவனது மூக்கில் தாக்குகின்றன. வலது பக்கம் கடற்கரையில் சிறிதும் பெரிதுமாகத் தோணிகள் தயாராகின்றன. பக்கத்தில் சின்னஞ்சிறு பனையோலைக் குடிசைகள். தோணி செய்யும் கூலிக்காரர்கள் அவற்றில் வசிக்கிறார்கள். மணலில் பெரிய

பெரிய பள்ளங்கள். அவற்றின் மீது குறுக்காகப் போடப்பட்டிருக்கின்றன கட்டைகள். பள்ளத்துக்கு வெளியே ஒருவனும் பள்ளத்துக்குள்ளே ஒருவனுமாக நின்று கொண்டு ரம்பத்தால் கட்டையை அறுக்கிறார்கள். அருகில் பெரிய பெரிய தீவட்டிகள் எரிந்து கொண்டிருக்கின்றன.

அருகிலேயே ஒருபெரிய அடுப்பில் தார் காய்ந்து கொண்டிருக்கிறது. தோணியின் பலகைகளை ஒன்று சேர்த்த பின் அவற்றின் இடைவெளிகளில் உருக்கிய தாரை ஊற்றி அடைத்துவிடுவார்கள். பக்கத்தில் கொல்லப்பட்டறை. துருத்தியின் புஸ் புஸ் காற்றில் உலை நெருப்பு பற்றியெரிகிறது. அதில் பழுக்கக் காய்ச்சிய இரும்பை எடுத்துச் சம்மட்டியாலடித்துப் பெரிய பெரிய ஆணிகள் தயாரிக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டே மெல்ல நடந்தான் அந்தோனி. நாட்டு வாழ்க்கையின் இந்தப் பகுதி இதுவரை அவன் கண்ணில் பட்டதில்லை.

ஓரிடத்தில் அவனுடைய பார்வை நிலைத்து நின்றது. அங்கே தீவட்டி வெளிச்சத்தில் ஒரு காட்சி. ஒரு கரிபிடித்த மண் சட்டியைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள் நாலைந்து சின்னஞ்சிறு குழந்தைகள். அவை ஒன்றோடொன்று போட்டிபோட்டுக் கொண்டு சட்டியிலிருந்த பழஞ்சோற்றை எடுத்து வாயிலடைத்துக் கொள்கின்றன. ஒரு தாய்ப் பன்றியும் தன் குட்டிகளுடன் அந்தச் சோற்றைப் பங்கு போட்டுக் கொள்கிறது. இரண்டே நிமிடங்களில் சட்டி காலி. ரொம்பச் சின்னக்குழந்தையொன்றுக்கு இந்தப் போட்டா போட்டியில் சோறு கிடைக்கவில்லை. அது காலிச்சட்டிக்குள் கையை நுழைத்துப்பார்த்துவிட்டுத் தரையில் விழுந்து புரண்டு ஓலமிடுகிறது. அந்த ஓலம் கட்டையறுக்கும் ஒலியையும் விஞ்சிவிடுகிறது.

அந்தோனியின் கால்கள் நகராமல் நின்றுவிட்டன. அவனுக்கு மூச்சடைக்கிறது...

ஒரு குடிசை வாசலில் ஒரு பெண் பிள்ளை உட்கார்ந்திருக்கிறாள். அவள் கட்டிக்கொண்டிருக்கும் கந்தல் துணியால் அவளது உடலை முழுதும் மறைக்க இயலவில்லை. மார்பின் மேல் குறுக்காகப்போடப்பட்டிருந்த அந்தத் துணிக்கு இருபுறமும் தனங்கள் தோலாலான பைகள் போல் தொங்குகின்றன. உடல் வற்றிச் சுருங்கியிருக்கிறது. அவள் வெறிபிடித்தவள் போல் தலை முடிக்குள் கையை விட்டுச் சொறிந்து கொண்டிருக்கிறாள்; இடையிடையே தலைமுடிக்குள்ளிருந்து பேனை எடுத்து நகங்களுக்கு நடுவில் வைத்து நசுக்குகிறாள்.

இவ்வளவு நேரம் பேனெடுப்பதிலேயே குறியாயிருந்த அவள் குழந்தையின் அழுகையைக் கேட்டதும் எழுந்திருந்து மற்ற குழந்தைகளைப் பிடித்துத்தாறுமாறாக அடிக்கத் தொடங்கினாள். உடம்பு வற்றாலாயிருந்தாலும் நல்ல பலம் அவளுக்கு. குழந்தைகள் நாற்புறமும் சிதறி விழுந்தன. பெண் பன்றி தன் குட்டிகளுடன் எடுத்தது ஓட்டம்.

மரமறுப்பவர்கள் சற்று ஓய்வு எடுத்துக்கொண்டனர். அறுவையொலி நின்றுவிட்டது. அவர்கள் மணல் மேட்டின்மேல் ஏறி உட்கார்ந்தார்கள். அவர்கள் வெறுங்கோவணம் அணிந்திருந்தனர். அது அரைஞாணின் முன்புறமும் பின்புறமும் தொங்கிக் கொண்டிருந்தது. மற்றபடி உடம்பெல்லாம் திறந்துதானிருந்தது. அதன்மேல் பொட்டுப் பொட்டாக அரும்பியிருந்த வியர்வையில் தீவட்டி வெளிச்சம் பிரதிபலித்துப் பளபளத்தது.

அவர்கள் சுருட்டுப் பற்றவைத்துக்கொண்டார்கள். மறுபக்கத்திலிருந்து வரும் குழந்தைகளின் அழுகையை அவர்கள் சற்றும் பொருட்படுத்தவில்லை.

அந்தோனி அவர்களுக்குப் பின்னால் அரையிருளில் உட்கார்ந்து கொண்டான். அவர்களுடைய பேச்சு அவனுக்குக் கேட்டது.

"அடேயப்பா, சரியான முடிச்சுக்கட்டைடா! வெட்டறதுக்குக் குள்ளே எலும்பு முறிஞ்சுடும் போலேருக்கு..." ஒருவன் சொன்னான்.

"பின்னே என்ன, இது கருவேலங்கட்டைன்னு நினைச்சியா–சும்மா ரம்பத்தைப் போடவேண்டியது, அறுத்துத்தள்ள வேண்டியதுன்னு?..." இன்னொருவன் கேட்டான். "இது செங்கோட்டைக்காட்டிலே இருக்கற அசல் ஆயினிப்புரிசி மரமாக்கும்! இதை அறுக்கறது லேசுப்பட்ட காரியமில்லே!..."

மூன்றாமவன் தூதூவென்று எச்சிலைத் துப்பிவிட்டுச் சொன்னான், "வாஸ்தவந்தான். ஆனால் திங்கச் சோறு இல்லேன்னா உடம்பிலே பலம் எங்கேருந்து வரும்?... விடாமே பன்னெண்டு மணி நேரம் பதினாலு மணி நேரம் உழைக்கிறேன். அப்படியும் பெண்டாட்டி பிள்ளைகளுக்கு அரை வயத்துச் சோறு கூடக் கிடைக்கல்லே... கண்ட்ரோல் ரேட்டிலே அரிசி விலை படி ஒரு ரூபாய் பத்துக்காசு தான். ஆனால் அந்த விலைக்கு ஒரு மணி அரிசி கிடைக்குதா? அந்த ராஸ்கல் அரிசிக் கடைக்காரங்க ரெண்டு ரூபாய்க்குக் குறைவா ஒருபடி அரிசி கொடுக்கறாங்களா?...பார்த்துக்க..."

''பெரிய முதலாளிங்க பணத்தைக் கொள்ளையடிக் கறாங்க...'' ஓரிளைஞனின் குரல். ''பெரிய பெரிய தோணி பண் றாங்க, மூட்டை மூட்டையாப் பணம் சேர்க்கறாங்க. சேர்த்தால் சேர்க்கட்டும்... நமக்குக் கூலி கொடுக்கறபோது மட்டும் பக்க வாதம் வந்தாப்பலே கை இழுத்துக்கறதே, அது ஏங்கிறேன்?.... அவங்க எப்படியெல்லாம் மஜா பண்றாங்க!...''

''உனக்கும் மஜா பண்ணணுமா?'' ஒருவன் இடைமறித்துப் பேசினான். ''அப்பமுன்னா இந்த வேலையை விட்டுடு. ராத்திரி பத்து மணிக்கு மேல் மைக்கேல் துரை வீட்டுக்குப் பின்னாலே சந்திலே போய் நில்லு. நீ நல்ல இளவட்டமாயிருக்கே. நீ கிடைச் சாத் துரைசானி அம்மாவுக்கு ரொம்ப சந்தோசமாயிருக்கும். உனக்கும் சுகம், அவளுக்கும் சுகம். கைநிறையப் பணமும் கிடைக்கும் உனக்கு!''

இளைஞன் கடகடவென்று சிரித்துக்கொண்டு சொன்னான், ''அந்த ஆசையிலேயும் மண்ணுதான்!... நம்ம மேஸ்திரி அந்தத் தோணியிலே துடுப்புப் போட்டுக்கிட்டிருக்கான். எனக்கு விஷய மெல்லாம்தெரியும்...''

''சரி, போனால் போறது, வேறொரு தோணி முதலாளி வீட்டுக்குப் பின்னாலே போய் நில்லேன்! அவங்க வீடுகள்ளே காய்ஞ்சு கிடக்கற பொம்பளைகளுக்குப் பஞ்சமில்லே... துரைக ளெல்லாரும் இருட்டினதும் வெளியே...''

''துரைசானிங்க எல்லாரும் பாலும் வெண்ணெயும் சாப் பிட்டுட்டு நல்லா கொழு கொழுன்னுதான் இருக்காங்களே, துரை மாருங்க அவங்களை விட்டுட்டு ஏன்...

''முட்டாள்! வீட்டுச் சாப்பாட்டைவிட ஓட்டல் சாப்பாட்டிலே தாண்டா ருசி ஜாஸ்தி...'' அந்தக் குழுவிலேயே வயது முதிர்ந் தவன் பதில் சொன்னான். இருமிக் கோழையைத் துப்பிவிட்டு அவன் தொடர்ந்தான், ''தவிர இன்னொரு விசயமும் இருக்கு இதிலே. இது கௌரவத்தைப் பொறுத்த விசயம். எவ்வளவுக் கெவ்வளவு வைப்பாட்டி இருக்கோ, அவ்வளவுக்கவ்வளவு கௌரவம் ஜாஸ்தி. காசுத்திமிரிலே பொம்பளைங்களைக் கெடுக் கல்லேன்னாப் பெரிய மனிசனாயிருந்து என்ன பிரயோசனம்!''

அந்தோனியின் காதுகள் சிவந்துவிட்டன. மேலும் கேட்கப் பொறுக்கவில்லை அவனுக்கு. அவன் மெதுவாக எழுந்து ரஸ் தாவை நோக்கி நடந்தான்.

தீவட்டியின் மங்கிய ஒளியில் அவனைக் கவனித்துவிட்ட ஒருவன் கடைசியில் பேசியவனிடம் சொன்னான், ''ஃபெர்னாண்

டெஸ், ஜாக்கரதை!... முதலாளியோட உளவாளி நீ பேசறதைக் கேட்டுக்கிட்டு இருந்திருக்கான். நாளைக்கு உனக்கு என்ன ஆகப்போறது, பாரு!"

☆ ☆ ☆

அந்தோனி வீட்டு வாசலில் நுழைந்ததும் காவற்காரன் வந்து சலாம் செய்துவிட்டுச் சொன்னான், "கார்தோஸா துரை வெளிய றையிலே உங்களுக்காக..."

"கார்தோஸாவா? சுஸான் கார்தோஸாவா? அவனுக்குத் தன் னிடம் என்ன வேலை?" என்று சிந்தித்தவாறே வெளியறைக்கு வந்தான் அந்தோனி.

உட்கார்ந்திருந்த சுஸான் அந்தோனியைக் கண்டதும் துள்ளி யெழுந்து வந்து அவன் கையைப் பிடித்தான்– "இளைஞனே, உனக்காகத்தான் காத்திருந்தேன்..."

அந்தோனி புன்னகையுடன் கை கூப்பி வணக்கம் தெரிவித் தான்–"ஏதாவது முக்கிய காரியமாத்தான்...?"

"இல்லேயில்லே... அப்படி முக்கியமான காரியமொண்ணு மில்லே... நீ இந்த ஊருக்கு ரொம்பப் புதுசாச்சே, எப்படிப் பொழுது போக்கறேன்னு பார்க்க ஆசை.... தவிர... நீ லண்ட னிலே டாக்டர் பட்டம் வாங்கினவன். உன் மாதிரி அறிவாளி யோடே பேசறதே..."

"கொஞ்சம் காபி சாப்பிடறீங்களா?"

"வேண்டாம்!... நாலு மணிக்கப்பறம் காபி எனக்குச் சத்துரு... ஏற்கனவே ராத்திரி தூக்கம் வரதில்லே. தினம் தூக்க மாத்திரை சாப்பிடறேன். இந்த நேரத்திலே காபி சாப்பிட்டா வேறெ வினை வேண்டாம்! இமை மூடவே மூடாது!..."

"கொஞ்சம் சர்பத்...?"

"ஐயோ! இனிப்பு எனக்கு நஞ்சு! ரத்தத்திலே சீனி ஜாஸ்தி. அதோடே ரத்த அழுத்தம் வேறே! ரெண்டு தடவை ஹார்ட் அட்டாக் வந்து படுக்கையிலே போட்டிடுச்சு... திருநெல்வேலி டாக்டர் சுப்பிரமணியம் எப்படியோ பிழைக்க வச்சார்..."

சுஸானைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. தோணி மிதப்பு விழாவில் கண்ட ராஜவேடம் இன்று இல்லை...

இல்லை, ராஜவேடம் மறுபடி தோன்றிவிட்டது. கடுகுக் கண்களில் ஜொலிப்பு. அவற்றில் தந்திரம் தலைகாட்டுகிறது... "ஆனால் நான் இப்பவே சாக முடியாது! ஐ கேனாட் ரெஸ்ட்!" ஜவகர்லால் மாதிரி கம்பீரமாகப் பேசுகிறான் சுஸான். அவனுடைய கழுத்து புடைக்கிறது.

"இவ்வளவு முயற்சிகள் செய்து நாடு விடுதலை பெற்றிருக்கிறது. இப்போதுதான் ஆட்சி கைக்கு வந்திருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றத்தான் வேண்டும்! இல்லாவிட்டால் உலகத்துக்கு எப்படி முகத்தைக் காட்டுவது!... என்ன சொல்றே தம்பி?"

அந்தோனி பதில் சொல்லவில்லை.

சுஸானின் சொற்பொழிவு தொடர்ந்தது. அவன் அடிக்கடி சொற்பொழிவுகள் நிகழ்த்துகிறான் என்பது புரிந்தது.

"இதெல்லாம் நமது தேசியக் கடமைகள். ஆனால் இதை விடப் பெரிய கடமையும் நமக்கு இருக்கிறது – அதாவது இந்த மீனவ சமூகத்தை உயர்த்துவது... உலகம் பார்க்க வேண்டும்– அவர்கள் இதுவரை இளப்பம் செய்து வந்த மீனவ சமூகம் எப்படிப்பட்ட துன்னு.... உன் மாதிரி கோகினூர் வைரம், மீனவ சமூகத்துப் பையன்தானே!... என்ன சொல்றே, தம்பி?"

அந்தோனி இப்போதும் மௌனம்.

"நீ இவ்வளவு நாள் எங்கே இருந்தே?"

"லண்டன்லே."

"அங்கே என்ன செஞ்சுக்கிட்டிருந்தே?"

"இந்திய ஹைகமிஷனர் ஆபீசிலே வேலை..."

"ஃபாரின் சர்விஸா? அடேயப்பா! நிறையச் சம்பளம் இருக்குமே!... என்ன சம்பளம் வாங்கறே?"

அந்தோனியின் காதுகளில் சூடேறியது. என்ன ஆள் இவன்! பிறர் வருமானத்தைப்பற்றிக் கேட்பது அநாகரிகம் என்பது கூடத் தெரியவில்லையே இவனுக்கு!

அந்தோனியின் கோபத்தைக் கவனிக்காமல் பேசிக் கொண்டே போனான் சுஸான். "நிச்சயம் நாலாயிரம், ஐயாயிரம் இருக்கும்..."

அந்தோனி புன்னகையை வலுவில் வரவழைத்துக் கொண்டு இடைமறித்தான், "அப்பமன்னா ஒண்ணுமே சாப்பிட மாட்டீங்களா?"

"கொடுக்கத்தான் வேணும்னாக் கொஞ்சம் பிராந்தி கொடு. விஸ்கி அல்லது பிராந்தி, சோடா தேவையில்லை. அப்படியே குடிச்சுடுவேன்..."

அந்தோனி எப்போதாவது கொஞ்சம் குடிப்பதுண்டு. மது விலக்கை அவன் லட்சியம் செய்யவில்லை. ஆனால் அவன் என்னவோ நினைத்துவிட்டுச் சொன்னான், "மன்னிக்கணும், நான் அதெல்லாம் குடிக்கறதில்லே..."

"இதென்னப்பா! மேல் நாட்டிலே இருந்துக்கிட்டுக் குடிக்கறதில்லேங்கறே! அந்தக் குளிர் தேசத்திலே குடிக்காமே எப்படித்தான் காலந்தள்றே? குளிர் தேசங்கறதையே விட்டுடு... நம்ம சூட்டுத் தேசத்திலே கூட இதெல்லாம் வேண்டித் தானிருக்கு. கள்ளுக் குடிக்கலேன்னா இவ்வளவு கடுமையா உழைக்க முடியுமா நம்ம கூலி வேலைக்காரங்களாலே? தவிர, குடிக்கலேன்னா மூளை கூடச் சரியா... நம்ம முதல் மந்திரியோட வீண்பிடிவாதத்தைப் பாரு!.... ராஜ்யம் பூரா மது விலக்கு!... இந்த விஷயத்திலே நம்ம பிரதம மந்திரி எவ்வளவோ தாராளம். அவர் தானும்தான்.... ஹி ஹி ஹி" என்று அசிங்கமாகச் சிரித்தான் சுஸான்.

பிறகு தொடர்ந்து சொன்னான், "நீ இங்கே இருக்கறதாலே ரொம்பப் பேர் வருவாங்க, போவாங்க. அவங்களுக்கு உபசாரம் பண்றதுக்காகவாவது டிரிங்க்ஸ் வாங்கி வச்சுக்கணும். அநேகமா இந்த ஊர்ப் பெரிய மனு சங்க எல்லாருக்குமே குடிக்கப்பிடிக்கும். நீ கொஞ்சம் குடிவகைகள் வாங்கி வை. நீ உன் வேலைக்காரனை என்கிட்டே அனுப்பிவை. எங்கே கிடைக்கும்னு அவன்கிட்டே சொல்றேன். நல்ல சரக்கு எல்லா இடங்களிலேயும் கிடைக்காது. ஏய், ஏய்..." என்று வேலைக் காரனைத் தானே கூப்பிட்டான் சுஸான்.

ஒரு வேலைக்காரன் அங்கு வந்து நின்றான்.

சுஸான் அவனிடம் சொன்னான்– "பெரிய தெருவிலே முத்து சாமி நாடார் ஸ்டேசனிரிக் கடை வச்சிருக்காரே, தெரியுமா? அங்கே போய் என் பேரைச் சொல்லி ஒரு நல்ல போத்தல் வேணும்னு கேளு. அவர் கொடுக்கறதை ஒரு பையிலே போட்டு ஒளிவு மறைவா எடுத்துக்கிட்டு வா... என்ன விலைன்னு கேட்டுக் கிட்டு வந்து அப்பறம் எசமான் கிட்டே வாங்கிக்கிட்டுப் போய்ப் பணம் கொடுத்துடு!... அவசரமில்லே... புரிஞ்சுதா?"

நாடகத்தில் போக்கிரிக் கோமாளியின் பாத்திரத்தில் நடிக்கிறான் சுஸான். நாடகம் பார்க்கச் சுவையாகத்தானிருந்தது அந்தோனிக்கு. என்ன நடக்கிறது பார்க்கலாம்...

போத்தல் வந்தது– 'பிளாக் லேபெல்!' சுஸான் கண்ணாடி டம்ளர் வரவழைத்துத்தானே போத்தலைத் திறந்து கொஞ்சம் திரவத்தை டம்ளரில் ஊற்றிக் கொண்டு சொன்னான், "நீயும்

கொஞ்சம் ருசி பாரு, தம்பி, மீனவ சமூகத்துப்பையன் கொஞ்சங் கூடக் குடிக்கலேன்னா, அதெப்படி! தவிர, நீ லண்டன்காரன். குடிக்கல்லேன்னா சமூகத்திலே எப்படி பழகுவே? மத்தவங்க என்ன நினைப்பாங்க?..." சுஸான் டம்ளரை அந்தோனியிடம் நீட்டினான்.

அந்தோனி சிரித்துக் கொண்டே மழுப்பினான்– "வேண்டாம், வேண்டாம்! அப்பறம் பார்த்துக்கலாம்..."

"அப்பஉன்னா நான் கொஞ்சம்..."

"நீங்க சாப்பிடுங்க!..."

சுஸான் இரண்டு மடக்கு குடித்துவிட்டு 'ஆகா!' என்று திருப்தியுடன் சொன்னான். பிறகு நன்றாக உட்கார்ந்து கொண்டு கேட்டான், "தம்பி, சொந்த ஊரை விட்டு எங்கேயோ வெளி நாட்டிலே போய் உட்கார்ந்துக்கிட்டு இருக்கியே, உனக்குப் பிடிக்குதா?"

அந்தோனி பேசாமல் சுஸானைப் பார்த்துக் கொண்டேயி ருந்தான்.

சுஸான் குரலைத் தாழ்த்திக் கொண்டு கிசுகிசுத்தான் – "இவ்வளவு பெரிய சொத்தை விட்டுட்டு வெளி நாட்டுக்குப் போறது அசட்டுத்தனம். கண்டவங்கள்ளாம் உன் சொத்தைச் சூறையாடுவாங்க.... நீ இந்த ஊர்லேயே இருந்துடு. இப்ப முதக் கொண்டே ஜனங்களோடே தொடர்பு வச்சுக்க ஆரம்பி... நீ என் னென்ன செய்யணும், எப்படிச் செய்யணும்னு நான் சொல்லிக் கொடுக்கறேன். சமீபத்திலே இடைத்தேர்தல் ஒண்ணு வருது. கொஞ்சம் பணம் செலவு பண்ணணும். ஜாஸ்தியில்லே– அம்ப தாயிரம் போதும்... நான் உன்னைப் பார்லிமெண்ட் மெம்பராக் கிடறேன்!..."

இன்னுங்கொஞ்சம் விஸ்கியருந்தி விட்டுத் தொடர்ந்தான் சுஸான்– "உன் மாதிரி கெட்டிக்காரன், படிச்சவன்தான் இப்போ நம்ம அரசியலுக்குத் தேவை. நீ எம்.பி. ஆயிட்டா நிச்சயம் மந்திரிப் பதவி கிடைக்கும் உனக்கு. மீன் வளத்துறை மந்திரி ஆயிடுவே நீ... ஜே. எல். பியைத்தான் பாரேன்! அவர் மேசைக்காரர். நாம கம்மகாரர். இருந்தாலும் நாம எல்லாருமே மீனவ சமூகந்தானே! இப்போ அவர் ராஜ்ய மந்திரி சபையிலே மீன்வளத்துறை மந்திரி. அவர் என்னோட அண்டை வீட்டுக் காரர். நீ அவரைப் பார்க்கணும்னாச் சொல்லு... அவர் ரொம்ப சந்தோசப்படுவார்..."

சுஸான் இரண்டு பெக் சாப்பிட்டுவிட்டு மூன்றாவது பெக் அருந்தத் தொடங்கியிருந்தான். அவனுடைய சுபாவம் தாராள மாகிவிட்டிருந்தது. கடுகுக் கண்களில் ஒளி – செயற்கை யொளி. அவனுடைய உளறலும் அதிகமாகியிருந்தது.

"நான் ஜாஸ்தி குடிக்கக் கூடாது. ஆனால் நீ எனக்கு ரொம்ப வேண்டியவன். உன் வீட்டிலே இன்னிக்குத்தான் முதல் தடவை என்ன சொல்றே!... உன்னோட அப்பா எனக்கு எவ்வளவு வேண் டியவர் தெரியுமா!... நாடார்ப் பய ஏமாத்தலே. நல்ல சரக்குத் தான் கொடுத்திருக்கான் – அசல் ஸ்காட்லாந்துச் சரக்கு! ஸ்காட்ச் போத்தல்லே எப்போதும் அசல் சரக்கு இருக்கற தில்லே... கலப்படம்.. நாடே நாசமாப்போச்சு!...

அந்தோனி கேட்டான், "நீங்க ஏதோ சொன்னீங்களே, மேசைக்காரர், கம்மகாரர்... அப்படீன்னா என்னங்க?"

"மேசைக்காரங்கன்னா மேசைக்கு முன்னாலே உட்கார்ந்துக் கிட்டுச் சாப்பிடறவங்க. அதாவது சமூகத்திலே பணம், அந்தஸ்து படைச்சவங்க. அந்தக் காலத்திலே அவங்கதான் டச்சுக்காரங்க போர்ச்சுகிஸ்காரங்களோடே சேர்ந்து பழகு வாங்க, சாதாரண ஜனங்களை மட்டமா நடத்துவாங்க. பார்க்கப் போனால் அவங்களும் நம்ம மாதிரி கத்தோலிக்க மீனவங்க தான், ஒரே ஜாதிதான்... அவங்க போர்ச்சுகீஸ் காலத்து 'மோஸஸின் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள்' மாதிரி, அவ்வளவு தான்! உழைச்சுப் பிழைக்கறவங்க, கடல்லே போய் மீன் பிடிக் கறவங்க, தண்ணியிலே முழுகிச் சங்கும் முத்தும் எடுத்துக்கிட்டு வரவங்க இப்படிப்பட்ட மீனவங்கள்ளாம் கம்மகாரர். இவங்க தரையிலே உட்கார்ந்துக்கிட்டுத் தட்டிலே கஞ்சி சாப் பிடறவங்க. ஆனால் இந்த இருபதாம் நூற்றாண்டிலே அந்த வித்தியாச மெல்லாம் ஏது? அப்படியும் இப்போகூட இந்த இரண்டு வகைகளுக்குள்ளே பெண் கொள்றது கொடுக்கறது கிடையாது. மேசைக்காரங்களுக்கு நாம எல்லாம் தீண்டத்தகாத வங்க. மேல் குடியிலே பிறந்தவங்கன்னு அவங்களுக்கு ரொம்ப கர்வம். பையிலே ஒரு காசு இல்லாட்டாக்கூட அவங்க கர்வம் போகாது... நான் தான் முதல் முதல்லே அவங்களை எதிர்க்கத் துணிந்தவன் நான் கம்மகாரங்களை ஒண்ணு சேர்த்துக் கம்மகார மகாஜன சமிதி அமைச்சேன். உன் அப்பா அந்த சமிதியோட பெரிய தூண்கள்ளே ஒருத்தர். அந்தத் தூண் இடிஞ்சு போனதிலே எனக்கு எப்பேர்ப்பட்ட அதிர்ச்சி!...

தொண்டையை அடைத்துக் கொண்டது சுஸானுக்கு. பக்கா நடிகன்! நாடக மேடையிலே ஏறினால் வெற்றிகரமாக நடிப்பான்! சார்லஸ் லாட்டன் எல்லாம் இவனுக்கு முன்னாலே எம் மாத்திரம்!

நாலாவது பெக்குக்கு வந்த போது சுஸான் விஸ்கி உறிஞ்சுவதும், அவனது சொற்பொழியு இரண்டுமே தளர்ந்து போய் விட்டன– "இந்த மேசைக்காரங்க நம்ம வீட்டுச் சத்துரு, கம்யூனிஸ்டுங்க நம்ம இனத்துக்கே சத்துரு, மதத்துக்கே சத்துரு. கம்யூனிஸ்டுகளுக்குக் கடவுள் நம்பிக்கையில்லே, நம்ம பாரம் பரியத்திலே நம்பிக்கையில்லே. அவங்க பயங்கரவாதிங்க. நீ தான் செய்திப் பத்திரிகையிலே பார்த்திருப்பியே–தெலிங்கானா இயக்கங்கற பேரிலே கொலை, கொள்ளை!.... தேச உணர்வே கிடையாது அவங்களுக்கு. அவங்களுக்கு ரசியாதான் எல்லாம். ஜவகர்லாலும் காந்தியும் அவங்களுக்கு ஒண்ணுமே இல்லே. லெனினும் ஸ்டாலினும்தான் அவங்க தலைவர்கள், கார்ல் மார்க்ஸ்தான் குரு, தாஸ் கேப்பிடல் தான் பைபிள். பார்த்துக்க!... நம்ம காங்கிரஸ் சர்க்கார் செஞ்சது சரிதான்–அவங்களை நல்லா உதைச்சுச் சரிபண்ணிட்டாங்க.... ராஜாஜி அவங்களைப் பத்திக் கொஞ்ச நாளுக்கு முன்னாலே தான் நாட்டுக்கு எச்சரிக்கை பண்ணியிருக்கார்..."

சுஸான் கையை நீட்டி அந்தோனியின் கையைப் பிடித்துக் கொண்டு இன்னும் நெருக்கமானான். அந்தோனியின் காதுக்கருகே வாய் வைத்து ரகசியமாகச் சொன்னான்– "உனக்கு ஒரு புத்திமதி சொல்லணும்.... அன்னிக்கு உன்னோடே அந்த ராஸ்கல் பீட்டரைப் பார்த்தேன்... அவனை ரொம்ப நெருங்கவிடாதே! அவன் ரொம்ப ஆபத்தான ஆள். பயங்கரக் கம்யூனிஸ்ட்!..."

திடீரென்று புலியைப் பார்த்தவனின் கிலி சுஸானின் குரலில் எதிரொலித்தது....

☆ ☆ ☆

மறுநாள் காலை. அந்தோனி இட்டிலி, காபி சாப்பிட்டு முடித்து விட்டான். சேதுராமன் வரப்போகிறார் இன்று.

சேதுராமன்தான் இப்போது காட்வினின் கணக்குப்பிள்ளை. காட்வினின் மரணச் செய்தி கேட்டு சிலோனிலிருந்து வந்தார். சில நாட்கள் விடுப்பு எடுத்துக் கொண்டு சொந்த ஊரான கல்லிடைக் குறிச்சி போயிருக்கிறார்.

தொழில் நிலவரங்களை அவரிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். தேவைப்பட்டால் சிலோனுக்கும் ஒரு தடவைபோக வேண்டியிருக்கும். சிலோனுக்கு வந்துவிட்டுப் போகச் சொல்லி வற்புறுத்துகிறார் சேதுராமன். சொத்து யார் கையிலிருந்தாலும் இந்த ஏற்பாடுகள் அவசியம்தான்.

ஒரு வேலைக்காரன் வந்துசொன்னான், "ஒரு பாதிரியார் வந்திருக்கார்."

அந்தோனி அந்தப்புரப்பகுதியிலிருந்து படியில் இறங்கு முன் பாதிரியாரே அங்கே வந்துவிட்டார். அந்தோனிக்கு எரிச்சல் வந்தது. இந்த வேலைக்காரர்கள் ஏன் இவரை உள்ளே வரவிட்டார்கள்!

அவன் எரிச்சலை அடக்கிக் கொண்டு சொன்னான், "வாங்க, வெளியறையிலே போய் உட்காரலாம்..."

பாதிரியார் பற்கள் பளீரென்று தெரியச்சிரித்தார். "வெளியே எதுக்கு? உள்ளேயே உட்காரலாம். நாங்கள்ளாம் வீட்டு மனுசங்கதான்"

பாதிரியார் நடுத்தர வயதுக்காரர். கறுப்பும் வெள்ளையும் கலந்த தாடி மீசை கவனமாக வெட்டப்பட்டிருந்தது. ஆகிருதியான முரட்டு உடம்பு. பாதிரியார் ஆகாவிட்டால் பெரிய போக்கிரியாக ஆகியிருப்பார். சிரிப்பு வெறும் வேடம். கழுத்தின் முன் பக்கம் விறைப்பாயிருந்தது. முன்பக்கம் சதை மடிப்பு மடிப்பாய்த் தொங்கியது.

"ரொம்ப நாளா வரணும் வரணும்னுதான் நினைக்கிறேன். ஆனால் எங்க மாதிரி ஆளுகளுக்கு நேரமே கிடைக்கறதில்லே... என்னைத் தெரியுதா உனக்கு? நான் தான் கொன்சால்வெஸ். உன் அப்பாவை அடக்கம் பண்றபோது நான்தான் இருந்தேன், ஞாபகமிருக்கா?"

"உம்..." அந்தோனியின் சுருக்கமான பதில்.

"காட்வின் எவ்வளவு பெரிய மனிதர்! ஆனால் அவரோட சடங்குகள் அவ்வளவு விமரிசையா நடக்கல்லே..." வருத்தத்துடன் சொன்னார் பாதிரியார்.

"ஆடம்பரமெல்லாம் வேண்டாம்னு அவர்தான்..."

"ஓ, அப்படியா?" என்று சொல்லிக் கொண்டே நன்றாக அமர்ந்து கொண்டார் பாதிரியார்.

அப்போது சேதுராமன் வந்திருக்கும் செய்தியுடன் அங்கே நுழைந்தான் மரியதாசன். அவன் பாதிரியாரைக் கண்டதும் பரபரப்படைந்து முழந்தாளிட்டுக் கைகளிரண்டையும் சேர்த்து நெஞ்சின்மேல் வைத்துக்கொண்டான். பாதிரியார் அவன் தலை மேல் தன் கைகளை வைத்துக் கண்களை மூடிக் கொண்டு ஆசிய ளித்தார்– "கர்த்தர் உன்னைக் காப்பாராக!"

மரியதாசனின் குருபக்தி மெச்சத்தக்கதுதான்.

பாதிரியார் அந்தோனியை நேருக்கு நேர் பார்த்தவாறு சொன் னார் – "எசமானுக்கேத்த வேலைக்காரன்!.... மரியதாசன், நீ போய் எனக்கு ஏதாவது சாப்பிடக் கொண்டுவா. கூடவே காபியும் கொண்டா..."

மரியதாசன் தன் வாதம் பிடித்த கால்களைத் தூக்கிக் கொண்டு வேகமாக ஓடினான்.

பாதிரியார் அந்தோனி பக்கம் திரும்பினார்– "நீ வந்து இவ்வளவு நாளாச்சு. ஆனால் உன்னைக் கோவில்லே பார்க்கற தில்லையே, ஏன்?"

பாதிரியாரின் குரலும் கேட்கும் தோரணையும் பள்ளி ஆசிரியரை நினைவூட்டின.

பாதிரியார் தன்னை 'நீ' என்று ஒருமையில் அழைத்ததில் அந்தோனிக்கு எரிச்சலாக வந்தது. வெளியார் யாரும் அவனை இப்படி அழைப்பது அவனுக்குப் பழக்கமில்லை; இருந்தாலும் வெளி நாட்டு அடக்கம் அவனிடம் ஊறிப்போயிருந்தது. அவன் தன் எரிச்சலைச் சாதாரணமாக வெளிக்காட்டிக் கொள்வ தில்லை. அதுதான் வெளிநாட்டில் அவன் கற்ற பண்பு, ஆகவே அவன் மரியாதையாகவே பதிலளித்தான் "அது தனிப்பட்ட விஷயம் அதை விடுங்க... நீங்க வேறே என்ன சொல்ல வந்தீங்க?"

பாதிரியாரின் புன்னகை உடனே மறைந்தது. ஆனால் உடனேயே திரும்பியும் வந்தது. அவர் சிரித்த முகத்துடன் சொன் னார், "என்ன சொல்றே நீ? நீ ரொம்பப் படிச்சிருக்கே, பெரிய அறிவாளின்னு கேள்விப்பட்டேன், நீ இந்த மாதிரி பேசறது நல்லாயில்லே.... நீ கத்தோலிக்கக் கிருஸ்துவப்பிள்ளை. மதம் ஒரு முக்கியமான விசயம், அதை அவனவன் இஷ்டத்துக்கு விட முடியுமா? அப்படியானா உலகத்திலே மாதா கோவிலே இருக்காது..."

"இல்லாட்டா என்ன மோசம்?" தணிந்த குரலில், ஆனால் தெளிவாக அந்தோனியிடமிருந்து வார்த்தைகள் வந்தன.

"என்ன சொல்றே!" பாதிரியாரின் புன்னகை இப்போது உண்மையிலேயே மறைந்துவிட்டது. கண்களை உருட்டி விழித்துக் கொண்டு, புருவங்களைச் சுருக்கிக் கொண்டு கேட்டார்– "உலகத்திலே சைத்தான் குடியிருக்கணும்னு உனக்கு ஆசையா?"

பாதிரியாரால் தம் முகபாவத்தை அனாவசமாக மாற்றிக் கொள்ள முடியும் போலும். அவரது முகத்தில் புன்னகை மறுபடி திரும்பி வந்துவிட்டது. அவர் கை தேர்ந்த நடிகர்–தொழில் முறை நடிகர். நீண்ட காலமாகப் பயிற்சி செய்து செய்து அவர் இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றிருக்கிறார். இவர் ஒரு வகைத் தொழில் முறைக் கோமாளி என்று நினைத்தான் அந்தோனி.

புன்னகையுடன் அந்தோனியைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு சீரியஸாக முகத்தை வைத்துக் கொண்டு சொன்னார். "மனிதன் பிறந்தது முதல் அவன் பாவி. பாவம் செய்யறது அவனோட சுபாவம். பாவம் செய்யறவனுக்கு நரகந்தான் கிடைக்கும். கத்தோலிக்க மதம் ஒண்ணுதான் ஜீவனை அந்த நரகத்திலேருந்து கரையேத்தும்..."

அதே வழக்கமான பாட்டுத்தான். கேட்டுக்கேட்டு அந்தோனிக்குக் காது புளித்துவிட்டது.

ஆனால் பாதிரியார் விடவில்லை– "மனிதன் ஒரு அப்பாவிக் குழந்தை மாதிரி – சாதுவான ஆட்டுக்குட்டி மாதிரி. அவன் இங்குமங்கும் ஓடித்திரிந்து வழிதவறிப் போறான். அப்படி வழி தவறிப்போன மனிதனைச் சரியான வழிக்குக் கொண்டு வரதுக்குத் தான் நாங்க..."

அந்தோனிக்கு உள்ளூற எரிச்சல். பாதிரியாரின் சளசளப்பு எப்போது தான் ஓயும்?

"... அதுக்காகத்தான் நாங்க இருக்கோம். குழந்தைகளுக்கு நல்லது செய்யறது தான் எங்க வேலை. நாங்க கடவுளோட பிரதிநிதிகள்..."

சிரிப்பு சிரிப்பாக வந்தது அந்தோனிக்கு. மரணப் படுக்கையிலிருந்து கொண்டு வால்டேர் பாதிரியைக் கேட்டாரே, "உன்னோட நற்சான்றுப் பத்திரம் எங்கே?" என்று, அதுமாதிரி இந்தப் பாதிரியையும் கேட்கத் தோன்றிற்று.

வால்டேருக்குப் பின் நூற்றைம்பது வருடங்கள் கழிந்துவிட்டன. ஆனால் சமூகம் இன்னும் சற்றுக்கூட முன்னேறவில்லை.

மரியதாசன் ஒரு பாத்திரம் நிறைய முறுக்கும் ஒரு பெரிய பாத்திரத்தில் காபியும் கொண்டு வந்தான். வேலைக்காரப் பையனொருவன் ஒரு தட்டில் ஒரு சீப்பு வாழைப்பழம் எடுத்து

வந்தான். மரியதாசன் அவற்றையெல்லாம் கடவுளுக்குக் காணிக்கை செலுத்தும் பாவனையில் ஒரு முக்காலியில் அழகாக வைத்து முக்காலியைப் பாதிரியாரின் முன்னால் கொண்டு வந்து வைத்தான்.

பாதிரியாருக்கு ரொம்ப மகிழ்ச்சி. அவர் அவனை ஆசீர்வதித்தார்– "நீ நல்லா இருக்கணும், மரியதாசன்! நீ இந்த வீட்டிலே இருக்கறவரையிலே பாதிரியாருக்குப் பணிவிடையிலே குறையிருக்காது. இருந்தாலும், இதையெல்லாம் உனக்குப் பதிலா இந்த வீட்டுப் பெண் பிள்ளை யாராவது கொண்டு வந்திருந்தால்.... நீ கலியாணம் பண்ணிக்கலே?..." நாலைந்து வாழைப்பழங்களைத் தின்று விட்டு முறுக்கைத் தின்று கொண்டே அந்தோனியைக் கேட்டார் பாதிரியார்.

"இல்லே... அந்த வாய்ப்பு இன்னும் ஏற்படலே..." பாதிரியார் இன்னும் சில முறுக்குகள் தின்றார், 'கடக் கடக்' என்ற ஒலியெழுப்பிக் கொண்டு. காபி சாப்பிட்டுவிட்டு மீசையைத் தடவிக் கொண்டு சொன்னார், "நீ வெளி நாட்டிலே கலியாணம் பண்ணிக்காமே இருந்தது நல்ல காரியந்தான். இப்போ ஊர் திரும்பிட்டே. நல்ல கத்தோலிக்கக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணாப் பாத்து கல்யாணம் செஞ்சுக்கிட்டுக் குடித்தனம்வை. உன் வம்சம் வளரட்டும். கத்தோலிக்கர்களோட எண்ணிக்கை பெருகட்டும்... என்னதான் இருந்தாலும் நீ இந்த ஊர்ப்பிள்ளை தானே!"

பாதிரியார் காபியை முழுவதும் குடித்துவிட்டுத்திருப்தியுடன் ஏப்பம் விட்டு விட்டுச் சொன்னார்– "கிழக்குக் கரையில் மன்னார்ப் பக்கத்திலே தூத்துக்குடிதான் அசல் கத்தோலிக்கர்களோட கோட்டை. உலகத்திலே பல இடங்களிலேருந்தும் கத்தோலிக்கர்கள் இங்கேதான் பெண் தேடவராங்க... நான் உனக்காக இந்த ஊரிலேயே ரொம்ப அழகான பெண்ணைப் பார்த்து வச்சிருக்கேன். ரொம்பப் பெரிய இடத்துப் பெண். ராஜகுமாரிதான். கூடவே ரொக்கம்..." பாதிரியார் ஒரு விரலை நீட்டிக் காட்டினார். "ஒரு லட்சத்துக்கு ஒரு பைசா குறையாமே கிடைக்கும்... நீ கலியாணத்துக்கு ஒப்புத்துக் கலேன்னா உனக்குத்தான் நஷ்டம்..."

அந்தோனி உள்ளூறச் சங்கடப்பட்டுக் கொண்டு பாதிரியாரை உற்றுப்பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான்... வாசலில் சேதுராமன் காத்துக்கொண்டிருக்கிறார்...

"என்ன, சம்மதமா?"

"இல்லே, இன்னும் முடிவு பண்ணலே நான்" என்று மெதுவாகச் சொன்னான் அந்தோனி.

பாதிரியாரின் புன்னகை மறுபடி மறைந்துவிட்டது. இவ்வளவு நல்ல வாய்ப்பை நழுவவிடுகிறானே, இந்த அசட்டுப் பையன்!... மறுநிமிடமே அவர் சிரித்துக் கொண்டு சொன்னார். "சரி, நான் உனக்கு ஒரு வார டயம் தரேன். அதுக்குள்ளே ஒரு முடிவுக்கு வா. நல்ல சரக்கு ரொம்ப நாள் அப்படியே கிடக்காது. இப்பவே ரொம்பப்பேர் வந்து பார்த்துக்கிட்டிருக்காங்க... புரிஞ்சுதா. என்ன...? அந்த ஒரு லட்ச ரூபாய்க்காக! நீயானா... உன் சமாசாரமே தனி, சீக்கிரம் முடிவு பண்ணு, நல்லா யோசனை பண்ணி முடிவுக்குவா... அடுத்த ஞாயித்துக்கிழமை கோவிலுக்கு வா..."

சகிப்புத் தன்மைக்கு ஒரெல்லையுண்டு. அந்தோனி எழுந்து நின்றான். அவனுடைய முகத்தில் புன்னகை குறையவில்லை. குரலின் மென்மையும் முன்போலத்தான். சொன்னான்– "எனக்குக் கொஞ்சம் முக்கியமான வேலை இருக்கு, மிஸ்டர் கோன்சால்வெஸ்... தயவு செஞ்சு..."

"இல்லேயில்லே, நான் இன்னிக்கு உன் கிட்டேயிருந்து உறுதி மொழி வாங்கிக்கிட்டுத்தான் போவேன். நீ ஞாயித்துக்கிழமை கோவிலுக்கு வரத்தான் வேணும்!... ஒரு கத்தோலிக்கனோட பிள்ளை நரகத்திலே போய் விழறதைப் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்கற ஆள் நானில்லே!"

"தாசன் சித்தப்பா!" அந்தோனி கூப்பிட்டான்.

கதவுக்கு வெளியே நின்று கொண்டிருந்த மரியதாசன் உள்ளே வந்தான்.

"இவரைக் கொஞ்சம் வெளியே கொண்டுபோய் விட்டுட்டு வா!" என்று சொல்லிவிட்டு அந்தோனி யாரையும் திரும்பிப் பாராமல் தடதடவென்று மாடிப்படிகளில் இறங்கிச் சென்றான்.

மரியதாசனின் பார்வை பாதிரியாரின் மேல் பதிந்திருந்தது. பாதிரியாரோ அந்தோனி போவதையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தின் புன்னகை மறைந்துவிட்டது....

☆ ☆ ☆

கடற்கரை ரஸ்தாவில் அமைந்திருந்த கார்தோஸா பிரதர்ஸ் அலுவலகம் அந்தி வேளையில் கலகலப்பாயிருக்கும். அலு வலகத்துக்குள்ளிருந்து சிறிது வெளிச்சம் வெளியே நடை பாதை யில் விழும். நடைபாதையில் ஏராளமான மீனவர்கள் குழுமி யிருப் பார்கள். தெற்கு, வடக்குப் பகுதிகளில் வசிக்கும் மீனவர்களில் பெரும்பாலோரின் குடுமி இங்கு அகப்பட்டுக் கொண்டிருக்கும்.

மீன் பிடிக்கப் படகு இல்லையா? வலை இல்லையா? போ கார் தோஸா பிரதர்ஸ் அலுவலகத்துக்கு! பணம் கடன் கிடைக்கும். வட்டி அதிகம்தான். அதற்குப் பயப்பட்டால் எப்படி நடக்கும், தம்பி? இங்கே அடைமானமில்லாமலேயே கடன் வாங்கலாமே! இந்த அபாயத்துக்கு ஒருவித ஈடு வேண்டாமா? மீனவர்களெல்லா ரும் சோற்றுக்குத் திண்டாடுபவர்கள். அவர்களிடமுள்ள சொத்து பனையோலைக் கூரை வேய்ந்த குடிசையும் நசுங்கிய அலுமினி யத் தட்டு, சட்டிகளும் மண்பானைகளும் ஒருசில பன்றிகள், கோழிகளும்தான்.

எழுதப்படிக்கத் தெரிந்திருந்தால் ஒரு வசதி - கையெழுத்துப் போட்டுப் பணம் வாங்கிக் கொள்ளலாம். எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும் ரொம்பக் கஷ்டமொன்றுமில்லை. தழும்பேறி, நுனி தேய்ந்து கூழையாகிப் போன இடது கைப்பெருவிரலில் மஜெந்தா நிற மையைத் தடவி வெள்ளைக்காகிதத்தில் பதித்து விட்டால் போதும். அந்தக் காகிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்பதை நீ அறியத் தேவையில்லை. உனக்கு வேண்டியது பணம்தானே? ஆனால் கேட்கிற பணம் முழுதும் கைக்கு வராது. அந்தப் பணத்திலிருந்து முதல் மாத வட்டி கழித்துக் கொள்ளப் படும். பாக்கிப் பணமும் ரொக்கமாகக் கையில் கிடைக்காது, எல்லாப் பணத்தையும் ரொக்கமாகக் கொடுத்தால் கள்ளுக் குடித்து இரண்டே நாளில் அழித்து விடுவாய். பணத்துக்குப் பதிலாக நாங்களே படகைச் செய்து தருகிறோம். எங்களிடம் கைதேர்ந்த மேஸ்திரிகள் இருக்கிறார்கள். உனக்கொரு கவலையு மில்லை. அசல் ஆயினிப்புரிசி மரத்தின் விலை கொஞ்சம் அதிகந்தான். அதற்காகக் கவலைப்பட்டுப் பிரயோஜனமில்லை. கடலிலே புயலைச் சமாளிக்கத்தக்க படகு தயாரிக்க உயர்ந்த ரக மரம் வேண்டும். அதற்கு விலை கொஞ்சம் கூட ஆகத்தான் செய்யும்.

அடைமானம் ஒன்றும் வேண்டாம். ஆனால் ஒன்றை மட்டும் மறக்காதே-நீ ஒரு கத்தோலிக்கக் கிருஸ்துவன். நம்பிக்கை தான் உன்னுடைய முதல்-கடவுள்கிட்டே, மதத்திலே, பாதிரிகிட்டே நம்பிக்கை. மோசம் பண்ணினால் கடவுள் இருக்கார். கடல்லே

அப்பாவும் அம்மாவும் இல்லை. அப்படிப்பட்ட இடத்திலே கடவுள் ஒருத்தர்தான் கதி. மேரியும் ஏசுவுந்தான் கதி. அவங்க பேரைச் சொல்லிப் பணம் வாங்கிக்க. தினம் பிடிக்கற மீனிலே பாதியை வட்டியாக்கட்டு, முதலைப் பத்திக்கவலையே படவேண்டாம். முதலை நீ அடைக்கலேன்னா உன் பிள்ளைங்க அடைப்பாங்க....

ஆனால் ஒரு கண்டிசன். பணம் கடன் வாங்கினால் கம்மகார மகாஜன சமிதியிலே மெம்பாரகணும். பிடிச்ச மீனிலே ஒரு பாகத்தை மாதச் சந்தாவாகக் கொடுக்கணும். சந்தா ஒண்ணும் ஜாஸ்தியில்லே. படகிலே வேலை செய்யறவங்க எண்ணிக்கைக் கேற்பச் சந்தா ஏறும். வலைக்கும் சந்தா உண்டு.

இதுதான் கார்தோஸா பிரதர்ஸின் மூலதனம். இதிலிருந்து தான் அவர்கள் சரக்கேற்றும் தோணிகள் கட்டிக் கொண்டார்கள். பர்மா, மலேயா, சிங்கப்பூர், ஹாங்காங்குக்கு மீன் வற்றல் ஏற்றுமதி, லட்சத்தீவுகளிலிருந்து டூனா மீன் வற்றல் இறக்குமதி, ஆகிய ஏகபோகத் தொழில்களைப் பிடித்துக் கொண்டார்கள்.

டூனாமீன் வற்றல் நூக்கமரத்துண்டு போலிருக்கும். அதை நறுக்கி வெங்காயத் துண்டுகளுடன் கலந்து சீனி சாம்பார் செய்யலாம். பெரிய குடும்பத்துக் கத்தோலிக்கர்கள் 'ஸ்ட்ரிங் அப்ஸ்' என்று சொல்லும் இடியாப்பத்துடன் சேர்த்துச் சாப்பிட் டால் பிரமாதமாயிருக்கும். கத்தோலிக்கர்களுக்கு மிகவும் பிடித்தமான உணவு இது.

கார்தோஸா பிரதர்ஸின் பங்காளிகள் இரு சகோதரர்கள் மூத்தவன் சுஸான், இளையவன் மானுவல். சுஸான் சமூகத் தொண்டன், காங்கிரஸ் ஊழியன். அவனுக்கு நிறைய வெளி வேலை. தொழிலைக் கவனித்துக் கொள்வது மானுவல் தான். ஆனால் உண்மையில் தொழிலை நிர்வாகம் செய்பவன் கிரிகரி லோபோ. படகுக்காரர்களும் மீனவர்களும் கிரிக்கிரி லோபோ என்பார்கள். ஓநாய் போன்ற நீண்டமுகம், பூனைக் கண்கள், இருபுறமும் சற்று வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் பற்கள், விறைப்பாக நீட்டிக் கொண்டிருக்கும் காதுகள், பார்க்கப் பல்லி மாதிரிஇருப்பான்....

மீனவர்கள் கூட்டம் கலைய இரவு பத்துமணி ஆகிவிட்டது.

கிரிகரி "வீட்டுக்குப் போங்க, சின்னையா" என்றான். சீக்கிரம் வெளியே புறப்பட அவசரம் அவனுக்கு.

மானுவல் உணர்ச்சியின்றி கிரிகரியைப் பார்த்தான். அவனுக்கு அவசரமில்லை. அவன் சொன்னான், "நீ போ.... எனக்கு வேலையிருக்கு..."

கிரிகரி தனக்குள் சிரித்துக் கொண்டே தெருவில் இறங்கினான்.

மானுவல் காவற்காரனிடம் சொன்னான் "வாசக்கதவைச் சாத்து... வதக்கின மாமிசம் வாங்கிக்கிட்டு வந்தியா?" காவற்காரன் தலையாட்டினான்.

மானுவல் அலுவலகத்தின் பின்புறத்து அறைக்குள் நுழைந்தான். அழகாக அலங்கரிக்கப்பட்ட அறை அது. கட்டிலின் மேல் வெள்ளை வெளேர் விரிப்புடன் கூடிய படுக்கை. அதன் கால் பக்கம் சாய்வு நாற்காலி. பக்கத்தில் ஒரு முக்காலி. அறையின் இன்னொரு பக்கத்தில் ஆடைகள் வைக்கும் அலமாரி. பிரகாசமான வெளிச்சம் தரவும், மங்கிய வெளிச்சம் தரவும் இரண்டு பல்புகள். அறையின் பின்புறம் ஒரு கதவு. கதவைத் திறந்தால் பின் பக்கத்துச் சந்து.

இது கார்தோஸா பிரதர்ஸின் விருந்தாளிகள் அறை. கார்தோஸா சகோதரர்கள் தங்கள் தொழில் வளர்ச்சிக்காகவும் அரசியல் காரணங்களுக்காகவும் நிறைய விருந்தினர்களை உபசரிக்க வேண்டியிருக்கிறது...

கிரிகரி இதற்குள் கடற்கரை ரஸ்தாவின் முனைக்கு வந்துவிட்டான். வேகமாக நடந்தான். அவன் வேட்டை தேடும் பல்லி போல. அவன் துறைமுகப் பகுதியைக் கடந்து சென்றான்.

கடற்கரையில் ஒரு நடுத்தர அளவுள்ள, பழுதடைந்த தோணி வெகு நாட்களாக நின்று கொண்டிருந்தது. சொந்தக்காரனுக்கு அதைப் பழுது பார்க்கப் பணமில்லை போலும். கிரிகரி அதன் பலகையொன்றை நகர்த்தி உள்ளே நுழைந்து கொண்டு பலகையை மறுபடி அதனிடத்தில் பொருத்துவிட்டான். பிறகு கிசுகிசுத்தான், "என்ன, வந்துட்டியா?"

"எப்...பவே வந்துட்டேன்! ஐயாவுக்காகக் காத்திருந்து காத்திருந்து தூக்கங் கூட வந்திருச்சி..." ஒரு பெண் குரல்.

மீனவர்கள் தாங்கள் பிடித்த மீனின் ஒரு பகுதியைக் கொடுத்துச் சரியாக வட்டி கட்டுகிறார்களா என்று பார்ப்பதற்காகக் கிரிகரிக்கு அடிக்கடி சந்தைக்குப் போக வேண்டியிருக்கும். அங்கேதான் சில நாட்களுக்கு முன் இந்த மீனவப் பெண்ணைப் பார்த்தான். அவள் முகத்தைப் பார்த்தால் புளிய மரத்துப்பேய் மாதிரி இருக்கும். காக்கைக் கூடு மாதிரி தலைமுடி. ஆனால் அவளுடைய உடம்பு...ஆகா! ஒரு சிறிய

கந்தைத் துணிக்குப் பின்னால் அவளுடைய மார்பகங்கள் காண்டா மிருகத்தின் கொம்புகள் மாதிரி! அவை கிரிகரியின் நெஞ்சைத் துளைத்துவிட்டன. கொடி போன்ற இடை. அவள் குலுக்கி குலுக்கி நடப்பதைப் பார்ப்பவர்கள் கிறங்கிப் போவார்கள்.

"யாருடா இவ?..."

"ஜொனாத்தன் ஃபெர்னாண்டோவோட பெண் சாதி. மீன் விற்க வந்திருக்கா....

மீன் சந்தையின் இரைச்சலுக்கு நடுவில் கிரிகரி அவள் காதருகில் சென்று கிசுகிசுத்தான், "உனக்குப் பணம் வேணும்னா ராத்திரி இந்தப் பாழடைந்த தோணிக்குள்ளே போய் உக்காந்திரு..."

மீன் தூண்டிலை விழுங்கிவிட்டது. சரியாக வந்து சேர்ந்து விட்டாள் அவள்.

கிரிகரி அவளைப் பிடிக்கப் போனான். அவள் பக்கவாட்டில் நகர்ந்து கொண்டு அவனைத் தவிர்த்தாள். கிரிகரிக்குக் கோபம் வந்துவிட்டது-"என்னடி வெளையாடறே!"

"அந்தத் தேவடியாப் பயஜோக்கிம் இவ்வளவு நெறைய வெலை வச்சு மீன் ஏலம் போடறான். அந்த வெலையை நாங்க கொடுக்க முடியுமா? அவன் பெரிய முதலாளிங்களோட கையாள். நாங்க ஏழைங்க, நாலனா ஆறணா லாபத்துக்கு மீன் விக்கிறவங்க..." ஜோக்கிம் கிரிகரியின் கைப்பொம்மை என்பது அவளுக்குத் தெரியும்..."நீ என்னைச் சந்தோசப்படுத்தினா நான் உனக்கு சுகம் தருவேன்...சுகங்கொடுக்கறது எப்படீன்னு எனக்குத் தெரியும்..."

"உன்னைச் சந்தோசப்படுத்த என்ன செய்யணும்?"

"ரொம்பப் பெரிய மீனை ரொம்பக் குறைச்ச விலைக்குத் தரணும்...."

"சரி, கிட்டவா!" கிரிகரிக்குப் பொறுக்கவில்லை.

"என் ஆம்பிளையோட வட்டியைத் தள்ளுபடி பண்ணு... நான் உனக்கு அடிமையா இருப்பேன்..."

"சரி..." கிரிகரியின் நிலை பரிதாபம். அவனுடைய இரத்தத்தில் வெறி. உடம்பில் விறைப்பு நெற்றி நரம்புகள் புடைத்து விட்டன... கூடவே ஒரு சந்தேகம்..."தினம் வருவியா? உன் ஆம்பிளை..."

"அவன் தினம் இந்த சமயம் கடல்லே தூண்டில் போடப் போறான். ராத்திரி பன்னெண்டு மணிக்கு முன்னாலே திரும்ப மாட்டான்...நீ நிச்சயம் ஜோக்கிம் கிட்டே சொல்லுவியா? சத்தியம் பண்ணு!..."

"அன்னை மேரி மேலே சத்தியம்! ஏசு ஆணையா சத்தியம்!... வா, நானே இப்போ உன்னை சந்தோசப்படுத்தறேன்...."

இந்த சமயத்தில் மானுவல் விருந்தாளிகள் அறையில் சாய்வு நாற்காலியிலமர்ந்து கொண்டு மிளகாய் சேர்த்து வதக்கிய மாமிசத்தைத் தின்று கொண்டிருக்கிறான். ஒரு போத்தல் கள் தீர்ந்து போய்விட்டது. பக்கத்தில் இன்னொரு போத்தல் இருக்கிறது. அவன் இரவு இரண்டு மணிக்கு முன்னால் அதாவது லிண்டா உறங்குவதற்கு முன்னால் வீடு திரும்பப் போவதில்லை. லிண்டாவைத் திருப்திப்படுத்த அவனால் முடியாது. லிண்டா என்ன, எந்தப் பெண்ணையுமே திருப்திப்படுத்த முடியாது அவனால்...இந்த ராஸ்கல் டாக்டர்களை விளக்கு மாற்றாலே அடிக்கணும்! சித்தவைத்தியர்களை வேகவச்சுக் குழம்பு பண்ணணும்! இவங்க கொஞ்சம் கூட உபயோகமில்லை!

மானுவலின் பெரிய பெரிய கண்கள் சிவந்து விட்டன. கன்னங்களில் கண்ணீர் வழிகிறது. ஆசை அவன் நெஞ்சை அரிக்கிறது. ஆனால் உடம்பு இடம்கொடுக்கவில்லையே! எவ்வளவு முயற்சி பண்ணியும் பிரயோசனமில்லை. சித்த வைத்தியன் மதனானந்த லேகியத்தைக் கொடுத்து நூற்றுக்கணக்கில் பணம் பிடுங்கிக் கொண்டிருக்கிறான்.

லிண்டா பெரிய துரைசானி. ஒப்பனையில் ரொம்ப மாடர்ன். கவர்ச்சியான தோற்றம். நல்ல சிவப்பு. கொழு கொழுவென்று இருப்பாள். அவள் அலங்காரம் செய்து கொண்டு வந்தால் எல்லாரும் மயங்கி விடுவார்கள். அவள் வந்துவிட்டால் ரோட்டரிகள் விருந்தில் ஆண்களிடையே பெரும் சலசலப்பு ஏற்படும். அவளை மகிழ வைக்க இளைஞர்களும் வயது வந்தவர்களும் போட்டி போடுவார்கள்.... ஒரு காலத்தில் ஐரோப்பிய கிளப்பாக இருந்தது ரோட்டரிகிளப், இப்போது அதில் பெரும்பான்மை இந்தியர்கள் தான்.

லிண்டா ஆண்களின் பரபரப்பை ரசிப்பாள். இளைஞர்கள் சிலர் ஒவ்வொரு சமயம் ரொம்ப நெருக்கமாக வருவார்கள். லிண்டா ஒளிவுமறைவில் அவர்களுக்குத் தன் கன்னத்தைக் காட்டுவாள். அல்லது தன் மார்க் கச்சையைச் சற்று நெகிழ விட்டுக் கொள்வாள்.

நல்ல கட்டு மஸ்தான வாலிப அதிகாரி புதிதாக ஊருக்கு வந்தால் அவனை வீட்டில் டின்னருக்கு அழைப்பாள். அவனுடைய தட்டில் பிரெட் கட்லெட்டைப் போட்டுக் கொண்டே "நான் உனக்குப் பிரெஸ்டைத் தரேன்" என்று சொல்லி இனிமையாகக் கிளுகிளுப்பாள்.

சாறு நிரம்பிய நீலம் மாம்பழம் மாதிரி இருப்பாள் லிண்டா. ஆனால் அவளுக்கு எப்போதும் வியாதி. தினம் காலையில் ஒரு தடவை வந்து அவளைப் பார்த்து விட்டுப் போவது சிஸ்டர் சோபியாவின் வேலை. கான்வென்டுக் கன்னிமார்கள் தங்கள் கையால் தயாரித்த திராட்சை மதுவைத் தினம் கொண்டு வரு வாள் சோபியா. அது இரத்தச் சிவப்பாயிருக்கும். அது தான் லிண்டாவுக்கு மருந்து. அது சில சமயம் ஸ்ட்ராங்காயிருக்கும், மயக்க முண்டாக்கும். இந்தப் பிராந்தியத்து மருத்துவர்கள் அவளுடைய நோயைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் தோற்றுப் போய் விட்டார்கள். கார்தோஸா சகோதரர்கள் மாதாகோவிலுக் கும் கான்வென்டுக்கும் நிறைய நன்கொடை கொடுப்பார்கள். அத்துடன் மானுவலின் வேண்டுகோள் வேறு. ஆகவே சோபியா தினம் வர நேர்ந்தது.

அந்தி நேரமானதுமே லிண்டாவின் உடல் நிலை மோசமாகி விடும். தலை வலிக்கும். ஒன்றும் சாப்பிடப் பிடிக்காது. உடம்பு கதகதக்கும்.

வீட்டுக்குப் பின்பிறம் தோட்டிவருவதற்கான சந்து. அங்கு வேறுயாரும் நடமாடுவதில்லை. பின்புற வராந்தாவிலிருந்து கீழே சந்துக்குள் ஒரு கயிற்றேணி தொங்கும். அதன் வழியே ஏறிவரு வான் கார்தோஸா பிரதர்ஸின் ஒரு தோணியின் மேஸ்திரி பெஞ் சமின் கார்தோஸா இரவு பத்து மணிக்கு.

அதற்கு முன்னாலேயே லிண்டாவின் அந்தரங்க வேலைக்காரி ராகேலா அவளுடைய அறையில் வதக்கிய மாமிசமும் அரை போத்தல் கள்ளும் கொண்டு வந்து வைத்து விடுவாள். பிறகு ராகேலா அறைக்கதவைச் சாத்திவிட்டு வெளியே காவலுக்கு உட்கார்ந்து விடுவாள்-காவல் நாய் மாதிரி. யாரும்-மானுவல் எசமான் உட்பட-அங்கு வர அனுமதி இல்லை. எசமானியம்மாள் உத்தரவு.

அறையில் இரவு விளக்கு மங்கிய பச்சை நிறத்தில் எரியும். லிண்டா நீள கவுனையணிந்து கொண்டு நாற்காலியிலமர்ந் திருக்கப் பெஞ்சமின் தரையில் உட்கார்ந்து கொண்டு மாமிசத்தை அள்ளிப் போட்டுக் கொள்வான். இடையிடையே கொஞ்சம் கள்ளைக் குடிப்பான். இன்னும் கொஞ்சம் கூடக் கள் இருந்தால் நல்லதுதான். ஆனால் எசமானியம்மாள் இந்த விஷயத்தில் ரொம்பக்கடுமை. கள் இதற்குமேல் கொடுக்க மாட்டாள். கள் கொஞ்சம் குடித்தால் வீரியம் பெருகும், நிறையக் குடித்தால் மயக்கம் வந்துவிடும்.

சாப்பாடு முடிந்ததும் பெஞ்சமின் எசமானியின் கவுனை அவிழ்ப்பான். சிவந்த உடல் வெளிப்படும். பெஞ்சமினுக்கு மிகவும் பரிச்சயமான உடல். அவன் டால்கம் பவுடரை எடுத்து அவளது உடலெங்கும் பூசுவான். லிண்டா படுக்கையில் மல்லாந்து படுத்துக் கொள்வாள். பெஞ்சமின் அவளது உடலைப் பிடித்து விடத் தொடங்குவான்–முதலில் கால், பிறகு தொடை, அப்புறம் அதற்கும் மேலே...

பெஞ்சமினுக்கு முப்பது வயது இருக்கும். கட்டுமஸ்தான உடல். பிரும்மாண்டான தோணியின் சுக்கானைக் கையாண்டு கையாண்டு உள்ளங்கைத் தோல் தடித்துத் தழும்பேறி விட்டது. அவன் தன் தழும்பேறிய கைகளால் துரைசானியின் கொழு கொழு உடம்பை அழுத்திப் பிடித்து விடுவான்–வெண்ணெயைப் பிசைவதுபோல, கிமா தயார் செய்ய இறைச்சியைப் பிசைவது போல....

அவன் முறுக்குவது கொஞ்சம் வலியாக கொஞ்சம் இதமாக இருக்கும். சுமார் இரண்டு மணி நேரங்கழித்துத் துரைசானிக்குக் கொட்டாவி வரும். அவள் சோம்பல் முறிப்பாள். அவளது மூக்கு விடைக்கும். அவள் கீழுதட்டைக் கடித்துக் கொள்வாள். வேக மாக மூச்சுவிடுவாள். அவளுக்கு வெறி பிறக்கிறது என்று பெஞ் சமினுக்குப் புரியும்...இப்போது அவளுக்கு இன்னும் பலமாகப் பிடித்துவிடவேண்டும். கூடவே மெதுவாக அடிக்க வேண்டும்–குதிரையின் உடலைப் பட்பட்டென்று அடித்துவிடுவது போல... இப்போது லிண்டா சட்டென்று விளக்கையணைத்து விட்டு மலைப்பாம்புபோலப் பெஞ்சமினைச் சுற்றிக் கொண்டு விடுவாள்.

அப்போது பெஞ்சமினுக்கு சூஸியின் நினைவுவரும். அவள் அவனுடைய மனைவி. இருபத்திரண்டு வயதுச் சிறுக்கி. உடலால் சுகந்தருவதில் சூஸிக்கு இணைகிடையாது. அவர் களுடைய காதல் விளையாட்டு பிரமாதம். பெஞ்சமின் சொல்லு வான், "சூஸி, உனக்குச் சமமா யாரும் இல்லே!"

"அப்பமன்னா அந்தத் தடிச்சிகிட்ட ஏன் போறே?" சூஸி கேட்பாள்.

"கடாவச்சிருக்கறவன் காசு வாங்கிக் கிட்டு அதைப் பசு மேலே ஏறவிடறான் இல்லையா? அந்த மாதிரி கடா நான். இல் லாட்டி நிறையப் பணமும் நல்ல சாப்பாடும் எனக்கு எங்கே கிடைக்கும் சொல்லு! உன்னை சுகமா வச்சுக்கறதுக்காக நான் என்ன வேணும்னாலும் செய்வேன்..."

வேலை முடிந்ததும் பெஞ்சமின் லிண்டாவின் அறையைவிட்டு வெளியே வந்து கயிற்றேணி வழியே இறங்கிப் போய் விடுவான். லிண்டா நன்றாக அடிக்கப்பட்டபஞ்சு போல் அயர்ந்து தூங்கி விடுவாள்.

இரவு இரண்டு மணிக்குத் திருடன் போல் அரவமின்றி நுழைவான் மானுவல். அவன் படுக்கையில் படுத்ததும் குறட்டை விடத் தொடங்கி விடுவான். குறட்டை இடி மாதிரி ஒலிக்கும். லிண்டாவின் உறக்கம் கலைந்துவிடும். அவள் எழுந்து விளக்கு சுவிட்சைப்போட்டு இரண்டு டம்ளர் தண்ணீரைக் கடகடவென்று குடித்துவிட்டுப் படுக்கைக்கு வந்து மானுவலைப் பார்ப்பாள். அவனைப் பார்க்க அருவருப்பாயிருக்கும். அவன் ஒரு பக்கம் ஒரு களித்துக் கொண்டு குறட்டை விட்டுக் கொண்டிருப்பான். அவன் வாயிலிருந்து சாளை கொட்டிக் கொண்டிருக்கும்...

இதுதான் தினசரி வழக்கம். திடீரென இன்று அதில் மாறுதல் நேர்ந்துவிட்டது...

இரவு மணி பத்து... பத்தரை...பதினொன்று ஆகிவிட்டது. பெஞ்மினைக்காணோம்..."ராகேலா, இந்த ஆளுக்கு என்ன ஆச்சு?...போய்ப்பாரேன்!"

ராகேலா தெருவில் இறங்கிப் பின்புறச்சந்துக்குப் போனாள். அங்கே ஒருமுரட்டு இளைஞன் நின்று கொண்டிருந்தான். "ஏய், கொஞ்சம் இரு. ஒரு காரியம் இருக்கு" என்று அவனிடம் சொல்லி விட்டு எசமானியிடம் போய்ச் சொன்னாள், "பெஞ்சமின் காட்வின் துரை வீட்டிலே திருடப்போய் ஆம்பிட்டுக்கிட்டு இப்போ லாக்கப்பிலே இருக்கான்...ஒரு புது ஆள் வந்திருக்கான் இங்கே. கதவைத் திறந்து வச்சுக்கிட்டு இரு..."

"அழுக்காயிருக்க மாட்டானே? திருடன் கிருடன் இல்லியே? ஏதாவது வியாதி...?"

"நீயே பார்த்துக்கோ...பிடிச்சால் வச்சுக்க...இல்லேன்னா விரட்டிடு...ஆனால் ஆளு புதிய சரக்கு. இன்னும் கலியாணமே ஆகல்லேன்னுதோணுது..."

"புது ஆளுக்கு வேலை சரியாத் தெரியுமா?"

"நீதான் கொஞ்சம் சொல்லிக் கொடேன்!" என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு மறுபடி சந்துக்குப் போனாள் ராகேலா.

புதிய ஆளுக்குக் கயிற்றேணியைக் காட்டவேண்டும்...

☆ ☆ ☆

கடல் சலனமற்று இருக்கிறது. சிற்றலை கூட இல்லை. பிற்பகலின் கடுமையான வெயிலில் மங்கலான நீல நிற வானம். அங்கங்கே பாதரசம் சிதறினாற் போல மேகங்கள். காற்று கொஞ்சங்கூட இல்லை. மாலை நேரக்காற்று இன்னும் தொடங்க வில்லை.

தண்ணீரில் பார்வையைப் பதித்தவாறு உட்கார்ந்திருந்தான் சிங்கராயன். படகு மனம் போனபடி மிதக்கிறது. மீன் சினைக்கூட்டம் இப்போது தண்ணீருக்குக் கீழே. சிறுசிறு இறால் மீன்களைக் காணவே காணோம்.

தண்ணீருக்குக் கீழே தரை கூடத் தெரிகிறது. அங்கே சிவப்பு, நீல, பச்சை, கத்திரி நிறப் பூச்செடிகளின் புதர்கள் அழகான பூந்தோட்டம்போல. பாறைகளுக்கு மேலே பூச்செடிகள், கரையி லிருந்து தண்ணீருக்குக் கீழே நேரே இறங்கி வருகிறது அந்த அற்புதப் பூங்கா. கரை அதிகத் தொலைவில் இல்லை, கரை நிழலாக இருக்கிறது. அங்கே நகர சபை, மரங்கள் நட்டுப் பூங்கா அமைத்திருக்கிறது. மாலையில் நகரத்துப் பெரிய மனிதர்களின் குழந்தைகள் இங்கு வந்து விளையாடுவார்கள். பிற்பகலில் இந்த இடத்தில் ஆள் நடமாட்டம் இல்லை.

'டங்'...

சிங்கராயன் காலடியில் ஒரு சிறுகல் வந்து விழுந்தது. சிங்க ராயன் கரைப்பக்கம் பார்த்தான். கல்லெறிந்தது யார்? ஒருவரை யும் காணோம். இந்த வெயிலில் யார் இங்கே வருவார்கள்? அவனுடைய தோழர்களெல்லோரும் வயிறு நிறைய விழுங்கி விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பார்கள். இன்று ஞாயிற்றுக் கிழமை எல்லோருக்கும் விடுமுறை. ஆகையால் மீனவர் யாரும் கடலில் போகவில்லை. பெரியண்ணாமட்டும் தன் படகை எடுத்துக் கொண்டு நல்ல தண்ணித் தீவுப் பக்கம் போயிருக் கிறார்.

இந்தப் படகு சிங்கராயனின் அப்பாவுக்குச் சொந்தமானது. அவ்வப்போது அப்பாவின் படகிலேறிக் கொண்டு கடலில் மனம் போனபடி சுற்ற ரொம்பப் பிடிக்கும் சிங்கராயனுக்கு.

'டங்...டங்...டங்...'

சின்னஞ்சிறு கற்கள் ஒன்றன் பின் ஒன்றாகப் படகுக்குள்ளே விழுந்தன. இங்குமங்கும் கரையைக் கூர்ந்து பார்த்தான் சிங்க ராயன்...

"ஹீ..ஹீ..." என்று சிரித்துக் கொண்டு திடீரென்று ஒரு மரத்தின் மறைவிலிருந்து வெளியே வந்தாள் பதினைந்து வயதுச் சிறுமியொருத்தி. அவள் வெள்ளை கவுன் அணிந்திருந்தாள்.

முழங்கால்வரை நீண்ட வெள்ளைக் காலுறைகள். குட்டையாக வெட்டப்பட்டதலைமுடி. களையானமுகம்...

இந்தப் பெண் யார்? ரொம்பப் பரிச்சயமான முகமா யிருக்கிறதே!

"எப்படித் திடுக்கிடவச்சேன் உன்னை! நீ தண்ணிக்குள்ளே அப்படி என்னதான் பார்த்துக் கிட்டிருந்தே?" என்று கேட்டாள் அந்தப் பெண் சிரித்துக் கொண்டே.

"மீன்சினை" – நல்ல பிள்ளை போல் பதிலளித்தான் சிங்க ராயன். இதற்குள் சிறுமியை அடையாளம் கண்டு கொண்டு விட்டான் அவன். அவள் பேனி மிராண்டாவின் பெண் ஜேன்.

பேனி மிராண்டா ஊர்ப் பெரிய மனிதர்களில் ஒருவன். சிங்கராயனின் தந்தை ஒருசில ஆண்டுகள் பேனி மிராண்டாவின் படகோட்டியாக இருந்தான். அப்போது சிங்கராயன் மிராண் டாவின் வீட்டுக்குப் போவதுண்டு. ஜேனுக்கு எட்டு ஒன்பது வயதா யிருந்த போது அவன் அவளோடு நிறைய விளையாடி யிருக்கிறான். அவளுக்குப் பட்டம், வில் அம்பு தயாரித்துக் கொடுத்திருக்கிறான், அவளுக்கு சேவகம் செய்திருக்கிறான். அவனுக்கு அவளிடம் ரொம்பப்பிரியம். அவளுக்கும் அவனில் லாமல் விளையாடப் பிடிக்காது...

எவ்வளவு பெரியவளாயிட்டா இப்போ! எவ்வளவு அழகா யிருக்கா!

"அதுக்குப் பேரு மீன்சினை இல்லே, பிளாங்க்டன்!...எங்க டீச்சர் சொல்லிக் கொடுத்திருக்காங்க..."

"ஓ அப்படியா! எனக்கு அவ்வளவெல்லாம் தெரியா தும்மா!...நீ ஸ்கூல்லே படிக்கிறியா?" என்று கேட்டுக் கொண்டே சிங்கராயன் படகைக் கரைக்குக் கொண்டு வந்தான்.

"ஸ்கூல்லே இல்லே...காலேஜிலே...முதல்வருசம்..." மிடுக் காகப் பதில் சொன்னாள் ஜேன்.

"ஓ, துரைசானியம்மாதான்!" என்று சொல்லிக் கொண்டே தரையில் குதித்தான் சிங்கராயன்.

"சிங்கராயன், நீ இப்பல்லாம் ஏன் எங்க வீட்டுக்கு வரதில்லே?"

"நேரம் எங்கே?" படகை ஒரு மரத்தில் கட்டிக் கொண்டே பதில் சொன்னான் சிங்கராயன். "மீன் பிடிக்கக் கடல்லே போறேன் ... சரி, இந்த நடுப்பகலே நீ இங்கே தனியா என்ன செய்யறே?"

"பிளாங்க்டன் பார்க்கறேன், கடல் அனிமோன் பார்க்கறேன்".

"ஒண்ணுதான் மீன்சினை. இன்னொண்ணு என்ன சொன்னே?"

"தண்ணிக்குக் கீழே பூச்செடிப் புதர் மாதிரி இருக்கே, அது தான். அதுவும் ஒருவகைப் பிராணி, நம்ம இறால் மீன், தாரா மீன், ஜெல்லி மீன் மாதிரி..."

"அப்படியா?" என்ற ஆச்சரியப்பட்டான் சிங்கராயன். அவனும்தான் பத்தாம் வகுப்பு வரை படித்திருக்கிறான். ஆனால் அவனுக்கு இதெல்லாம் தெரியாது. "இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?"

"சிஸ்டர் சோபியா இதெல்லாம் சொல்லிக் கொடுத்திருக்காங்க. இயற்கையைப் போல ஆச்சரியமான பொருள் எதுவுமே இல்லேன்னு அவங்க சொல்லுவாங்க ... நீ அந்தக் கடல் அனிமோனைப் பூச்செடின்னுதானே நினைச்சே, அது செடியே இல்லே. அதிலேருந்து ஆயிரக்கணக்கிலே தும்பிக்கை மாதிரி ஒண்ணு நீட்டிக்கிட்டிருக்கும். அவை மெதுவா அசைஞ்சுக் கிட்டிருக்கும் ... சிஸ்டர் சோபியா சொல்லுவாங்க, தனிமையான இடத்திலே இருந்துக்கிட்டு இயற்கையை அனுபவிக்கணுமாம். இன்னொரு விஷயம் பார்க்கிறியா?" ஜேன் கப்பென்று சிங்கராயனின் கையைப் பிடித்தாள். "இங்கே வா. சத்தம் செய்யாமே, மெதுவாக் கால் வச்சு வா..."

சிங்கராயனின் உடலில் மயிர்க்கூச்சம் ஏற்பட்டது. அந்த இடத்தில் வேறு யாருமே இல்லை. அந்த அழகி அவனைக் கை பிடித்து அழைத்துச் செல்கிறாள். அவளுக்கு வயது வந்து விட்டது. அவளுக்குக் கூச்சமே இல்லை - யாராவது பார்த்து விட்டால்! ...

ஒரு புதரருகில் இருவரும் நின்றனர்.

"அதோ பார்!"

ஜேன் காட்டிய இடத்தைப் பார்த்தான் சிங்கராயன். இரண்டு வண்ணத்துப்பூச்சிகள் புணர்ந்து கொண்டிருந்தன. அவற்றின் தலைப்பகுதிகள் எதிரெதிர் முனைகளிலிருக்க, பின் பகுதிகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருந்தன—சித்திரம் போல் அசையவில்லை அவை ... நாய்கள் புணரும் காட்சி நினைவுக்கு வந்தது அவனுக்கு. அந்தக் காட்சியை அவன் அடிக்கடி தெருவில் பார்த்திருக்கிறான்.

அவனுக்கு வெட்கமேற்பட்டது – "சீ, சீ! அசிங்கம்!"

ஜேன் தன் உதட்டின் மேல் விரலை வைத்து, "உஷ்! பேசாதே!" என்றாள், பள்ளியில் டீச்சரம்மா மாதிரி. அவனைக் கொஞ்ச தூரம் இழுத்துக் கொண்டு வந்து கேட்டாள் "ஏன் சீங்கறே?

அசிங்கம்னா என்ன?" அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. முகம் சிவந்து விட்டது. "இது என்ன தெரியுமா? இதுதான் படைப்பு. இந்த முறையிலேதான் பிராணிகள் குழந்தைகளை உண்டாக்கும். இது ரொம்ப சீரியஸான சமாசாரமாக்கும்!..."

சிங்கராயன் சிரித்து விட்டான் : " தெரியுமே!"

"தெரியும்னா ஏன் இப்படிப் பல்லைக் காட்டறே? இந்த மாதிரி விசயங்கள்ளே சிரிச்சா எங்க சிஸ்டருக்கு ரொம்பக் கோவம் வந்துடும்..."

சிங்கராயன் தன் முகத்தைப் பரிதாபமாக வைத்துக் கொண்டான் - ஏதோ ஒரு பெரிய தவறு செய்தவன் போல. சிறிது நேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள். பிறகு சிங்கராயன் சொன்னான், "இனிமேல் அப்படிச் செய்யமாட்டேன்!"

"நீ என்னைக் கடல்லே கூட்டிக்கிட்டுப் போறியா?"

"உம், இப்பவே!... வாயேன்!" சட்டென்னு சொன்ன பிறகு சிங்காரயனுக்குப் பயம் வந்து விட்டது. "யாராவது பார்த்து விட்டால்..."

"யாரு பார்க்கப் போறாங்க?"

"உன்னோட அப்பா ..."

"அப்பா மெட்ராஸ் போயிருக்கார். அங்கேயிருந்து டில்லி போகப் போறார். நிலக்கரி காண்ட்ராக்டுக்காக அலைஞ்சுக்கிட்டிருக்கார்... வா, போகலாம் ..."

கடல் தண்ணீர் இப்போது இறங்கியிருந்தது, கரைக்கு மிகவும் கீழே போய்விட்டது. சிங்கராயன் படகைக்கயிற்றால் இழுத்துக் கொண்டு வந்தான். "படகிலே குதி!"

'அடேயப்பா! படகு ரொம்பக் கீழேன்னாஇருக்கு! படகிலே குதிக்கிறப்போ தண்ணியிலே விழுந்துட்டேன்னா? ..." இப்போது ஜேனின் குரலில் பயம். இப்போது அவள் ஒரு சிறிய, இனிமையான பெண். பள்ளி ஆசிரியைத் தனம் அவளிடம் கொஞ்சங்கூட இல்லை இப்போது.

சிங்கராயன் படகின் மேல் குதித்துவிட்டு அங்கிருந்து இரு கைகளை நீட்டினான், "எங்கே, இப்போ குதி, பார்க்கலாம்."

ஜேன் கண்களை மூடிக்கொண்டு குதித்தாள். அவளைத் தன் கைகளில் தாங்கிக் கொண்டான் சிங்கராயன்.

அவனுக்குத் தன் கைகளில் பூக்குவியலை ஏந்திக் கொண்டிருக்கும் உணர்வு ஏற்பட்டது. ஜேனின் தலைமுடியின் மிருதுவான மணம் அவன் நாசியில். மிகவும் பிடித்தமான ஏதோ ஒன்றின் ருசி அவன் நெஞ்சுக்குள் கும்மாளம் போட்டது. இப்போது தான் வாழ்க்கையில் முதன்முதலாக இந்த ருசியை உணர்கிறான்

அவன். தன் மார்பின் மேல் சாய்ந்திருந்த இனிய சுமையை இறக்கி வைக்க இஷ்டமில்லை அவனுக்கு. இப்படியே இருந்து விடலாமா என்று தோன்றியது ... மறுகணமே வெட்கம், குற்ற உணர்வு 'சீ.. சீ'.

அவன் ஜேனைப் படகின் மேல் உட்கார்த்தி வைத்து விட்டுத் துடுப்புத் தள்ளத் தொடங்கினான்.

ஜேனுக்கு ரொம்ப மகிழ்ச்சி. அவள் கைதட்டினாள். "ஆகா எவ்வளவு ஜோர்! ... எவ்வளவு அழகு! ... அப்பா, சமுத்திரம் எவ்வளவு பெரிசாயிருக்கு!"

சட்டென்று அவள் பார்வை சிங்கராயனின் பரந்து கிடந்த மார்பின் மேல், அதன் புடைத்த நரம்புகளின் மேல் விழுந்தது. அவள் தன் கையால் அவனுடைய மார்பைத் தடவிப் பார்த்தாள்.

"நீ ரொம்ப பலசாலி! ... என்னோட பளுவை எவ்வளவு அனாயசமாத் தாங்கிக்கிட்டே!... நான் இப்போ பெரியவளாயிட்டேன். இப்போ நான் அறுபது கிலோவாக்கும்!"

சிங்கராயன் சிரித்தவாறே துடுப்பு வலித்தான். அவர்கள் ஹேர்த் தீவை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

"உன்னோட அம்மா இப்பவும் உன்னைத் திட்டறாளா?" சிங்கராயன் கேட்டான்.

பேனி மிராண்டாவின் முதல் தாரத்தின் பெண் ஜேன். ஜேனின் அம்மா இப்போது இல்லை. மிராண்டாவின் இளையதாரம் எப்போது பார்த்தாலும் ஜேனைத் திட்டிக் கொண்டிருப்பாள். இது சிங்கராயனுக்குச் சற்றும் பிடிக்காது. பாவம், தாயில்லாப் பெண் ஜேன்.

ஜேனின் உற்சாகம் ஒரு நிமிடத்தில் மறைந்து விட்டது. உப்பியிருக்கும் பலூனை ஊசியால் குத்தினாற் போல, அவள் கண்களில் நீர் நிறைந்தது. அவள் பேசவில்லை. சிங்கராயனுக்குச் சங்கடமாகி விட்டது. வெகுநேரம் இருவருமே பேசவில்லை.

"யாருக்கும் என்கிட்ட பிரியமில்லே... அம்மாவுக்குக் கொஞ்சம் கூட இல்லே. அப்பாவுக்குத் தான். இல்லே... தவிர, அப்பா வீட்டிலே எவ்வளவு நேரம் இருக்கார்!"

ஜேன் சிரிக்க முயன்றாள். கூடவே கண்களில் நீர். அவளுடைய முகத்தைத் தன் இருகைகளாலும் பிடித்துக் கொண்டு முத்தமிட்டுக் கொஞ்சி, முத்தத்தாலேயே அவள் கண்ணீரைத் துடைத்துவிட விழைந்தான் சிங்கராயன்.

"எங்க சிஸ்டர் சோபியா என்னை ரொம்ப நேசிக்கறாங்க. நீ அவங்களை ஒரு தடவை பார்த்தால் அப்புறம் மறக்கவே மாட்டே. பார்க்க எவ்வளவு அழகாயிருப்பாங்க, தெரியுமா! பாடமும் அவ்வளவு நல்லாச் சொல்லித்தருவாங்க. அதனாலே எனக்குக் காலேஜிலேயே இருந்துடலாம்னு தோணறது. வீட்டுக்குப்போகவே பிடிக்கல்லே..."

இப்போது ஜேனின் முகம் மகா சீரியஸ். "என் சின்ன வயசிலே நீ என்கிட்டே எவ்வளவு பிரியமாயிருந்தே! மறுபடி அதே மாதிரி பிரியமாயிருப்பியா?"

துடுப்பு வலித்துக்கொண்டே சிங்கராயன் சொன்னான், "உன்னைப் பார்க்கறவங்க எல்லாரும் உன்னை நேசிப்பாங்க..." சொல்லிவிட்டு அவளது முகத்தைக் கூர்ந்து பார்த்தான். குட்டி அவனுடன் விளையாடுகிறாளோ? இல்லை, அவளுடைய முகத்தில் குறும்புத்தனம் எதுவுமில்லை.

பாசத்துக்கு ஏங்கும் ஒரு சிறுமிதான் அவன் கண்களுக்குத் தென்பட்டாள்.

"வேறே யாரையும் பத்தி நான் பேசலே. நான் உன்னைத்தான் கேக்கறேன்" என்று தலையையாட்டிக் கொண்டு சொன்னாள் ஜேன். அவளது தலைமயிர்க்கற்றைகள் நெற்றியின் மேல் வந்து விழுந்தன. அவள் அவற்றைத் தன் கைகளால் ஒதுக்கிக்கொண்டே மறுபடியும் கேட்டாள், "நீ என்னை நேசிப்பியா?"

"நிச்சயமா!"

"அப்படியானால் துடுப்பு வலிச்சது போதும். அதைவிட்டுட்டு என்கிட்டே வந்து உக்காரு, படகு எங்கே வேணும்னாலும் போகட்டும்".

ஜேன் மகாராணியின் கட்டளையை மீறும் துணிவு சிங்கராயனுக்கு முன்பும் இருந்ததில்லை, இப்போதும் இல்லை. அவன் துடுப்பை வைத்துவிட்டு அவளருகே வந்து உட்கார்ந்தான். ஜேன் அவனுடைய முரட்டு வலது கையை எடுத்துத் தன் நெஞ்சின்மேல் வைத்துக் கொண்டாள்– "இப்போ அன்னை மேரி ஆணையா சத்தியம் பண்ணு–என்னை எப்போதும் நேசிப்பேன்னு!...."

சிங்கராயனின் இதயத்தில் உலக்கையிடிப்பது போன்ற உணர்வு–கடுமையான சக்தியொன்றின் உந்தல். அந்த உந்தலின் வேகத்தில் அவனுடைய கைகள் அவனறியாமலேயே நீண்டு ஜேனின் உடலை இறுகக் கட்டிக் கொண்டன. அவன் ஒரு பக்கமும் திரும்பிப் பார்க்காமல் ஜேனின் முகத்தில் முத்தமாரி பொழிந்தான்.

இப்போது காற்று மெதுவாக வீசத் தொடங்கியது. படகு மிதந்து கொண்டேபோய் ஹேர்த்தீவின் மணலில் உரசியது...

☆ ☆ ☆

சென்னை சட்டக்கல்லூரி மாணவர் விடுதிக்குக் கனகம் மாளின் தந்தி வந்தது "அப்பா உடல் நிலைமோசம். உடனே வா".

மறுநாள் ராமன் சதாமங்கலத்துக்கு வந்து விட்டான்.

கனகம் நாட்டியமாடிக் கொண்டிருந்தாளாம். அவனுடைய தந்தை பக்கவாத்தியம். திடீரென்று அவரது மூளை நரம்பு வெடித்து அவருக்கு மயக்கம் வந்துவிட்டதாம். அப்புறம் நினைவு திரும்பவேயில்லை.

பிழியப்பிழிய அழுகிறாள் அம்மா. "அந்த மோகினிப் பிசாசு தான் உன் அப்பாவை உசிரோட முழுங்கிட்டா!" என்று சொல்லிக் கனகத்தைத் திட்டுகிறாள், சபிக்கிறாள்.

அப்பா இறந்த பின் கனகம் எல்லாவற்றையும் விட்டுவிட்டாள். முழங்கால் வரை நீண்டிருந்த தலைமுடியை வெட்டி விட்டாள். விதவைக் கோலம் பூண்டாள். வீட்டில் பாட்டுக்கும ஆட்டத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள்.

அம்மாவின் சகோதரி கணவன் சுந்தரராஜன் சென்னைக் கிருஸ்துவக்கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவன். இப்போது சென்னையில் போலீஸ் அதிகாரி. தேவதாசி முறை எதிர்ப்பு இயக்கத்தில் ஒரு பிரமுகன். கனகத்தை ஊரைவிட்டு விரட்ட வேண்டும் என்று அவன் ராமனின் தாய்க்கு யோசனை சொன் னான்.

அப்போது இரண்டு பெரிய இயக்கங்கள் தமிழ் நாட்டைக் கலக்கிக் கொண்டிருந்தன. ஒன்று சுதேசி இயக்கம், மற்றது தேவதாசி முறை எதிர்ப்பு இயக்கம். ராமனின் மனமும் குழும்பிக் கொண்டிருந்தது.

சுதேசி இயக்கத்தின் ஒருபுறம் காங்கிரஸ் கோரிக்கை, விண் ணப்பம் - "எங்களுக்கு விடுதலைகொடு. எங்கள் நாட்டை.... நாங்களே ஆளுவோம்!"...மறுபுறம் போராளிகளின் இயக்கம் – வங்காளத்தில், பஞ்சாபில், மகாராஷ்டிரத்தில், தமிழ் நாட்டில்... அங்கங்கே சர்க்கார் அதிகாரிகள் கொலை, சர்க்கார் ஆதர வாளர்கள் கொலை.... செய்திப் பத்திரிகைகளில், பிடிபட்ட போராளிகளின் தூக்குத் தண்டனை பற்றிய செய்திகள்... சர்க்காருக்கு எரிச்சல். சர்க்கார் பக்தர்களுக்கும் எரிச்சல்...

ஒரு விஷயம் ராமனுக்குத் தெளிவாகத் தெரிந்தது-தேவதாசி முறை எதிர்ப்பு இயக்கக்காரர்கள் எல்லோரும் சர்க்கார் பக்தர் கள். இந்தக் கண்டு பிடிப்பின் விளைவு, ராமன் இந்த இயக் கத்தை ஆதரிப்பதை விட்டுவிட்டாள். ராமானுஜம் சொல்லியது சரிதான். ஒரு நாட்டை அடிமையாக்க விரும்பினால் அதன் முது

கெலும்பான தேசிய உணர்வைத் தாக்க வேண்டும். அதன் பண்டையப் பாரம்பரியத்தை மண்ணோடு மண்ணாக்கிவிட வேண்டும்.

இந்த சமயத்தில் ராமன் ஒரு நாள் ரயிலில் ஒரு வெள்ளையரைச் சந்தித்தான். அவர் மேலைநாட்டில் ஆசிரியராயிருந்தவர். பெயர் டாக்டர் ஜி.எஸ். அருண்டேல். அவர் ஆனிபெசன்ட் அம்மையாரின் அழைப்பையேற்று வீடுவாசல், வேலை எல்லாவற்றையும் துறந்துவிட்டு பாரத நாடு வந்திருக்கிறார். பாரதந்தான் இப்போது ஆனிபெசன்டுக்கும் அருண்டேலுக்கும் தாய்நாடு.

"இந்தியாவில் என்ன இருக்கிறது? நீங்க உங்க நாட்டை விட்டுவிட்டு..."

"பண்டையப் பாரம்பரியச் சிறப்பில் இந்தியாவுக்கு இணை ஏது?"

"தத்துவத்துறையில் இது உண்மைதான்...ஆனால் இதன் சமூகம்..."

"அதற்கும் நீண்ட பாரம்பரியம் உண்டு. அதில் நல்லது, கெட்டது இரண்டுமே இருக்கிறதே!"

"நல்லது எங்கே இருக்கு? இந்தத் தேவதாசி முறைதானே இந்த நாட்டோட பண்டைய அருங்கலைகளை இசையை, நடனத்தை- வாழவைத்துக் கொண்டிருக்கு இவ்வளவு காலமா! தேவதாசிகள் இல்லேன்னா இந்தக் கலைகள் என்றைக்கோ அழிந்து போயிருக்கும். என் மனைவி ருக்மணி தேவி நல்ல கண்ணியமான பிராமண குடும்பத்துப் பெண். அவர் நடனம் கத்துக் கொண்டிருக்கார்...பரத நாட்டியம் உலகத்திலேயே மிகச் சிறந்த நாட்டியக்கலை என்று ஆனி பெசன்ட் சொல்றாங்க..."

ராமனுக்கு ஒரே வியப்பு.

இதன் பிறகு அவன் ஆனிபெசன்டைச் சந்தித்தான். அவர் தான் அவனுக்கு அவனுக்குரிய வழியைச் சுட்டிக்காட்டினார். "நீ ரசிகன். அதுமட்டுமல்ல, இசைக்கலைஞனும்கூட உன் தந்தை பெரிய இசைக்கலைஞராயிருந்தார். நீ உன்கலையைப் போற்றி வளர்! இந்த நாட்டிய எதிர்ப்பாளர்களுக்குத் தக்க பதில் சொல்லு!..."

மோஸஸ் பாதிரியாரின் கறுப்பு நாயின் மேல் பலமான அடிவிழுந்தது. நாய் ஊளையிட்டுக் கொண்டு ஓடிவிட்டது.

நாட்டிய எதிர்ப்பாளர்களுக்குச் சரியான பதில்! அப்படியானால் நாட்டியம் கற்றுக் கொள்ள வேண்டும்.

அவன் கனகம்மாளிடம் சென்றான் "கனகம்மா, எனக்கு நாட்டியம் கத்துத் தரியா?"

"அப்போ ஒரு கலாரசிகரோட மனசைத் திருப்திப்படுத்தத் தான் நான் நடனமாடினேன். அந்தரசிகர் என்னோட அப்பா இப்போ இல்லே. நானும் நாட்டியமாடறதை விட்டுட்டேன். ஆகையாலே நாட்டியம் கத்துக்க என்கிட்டே வராதே. வேணும்னா என் குருகிட்டேபோ. அவர்தான் மெலட்டூர் நடேசய்யர்? சாட்சாத் நடராஜபகவானோட அவதாரம்...."

தஞ்சாவூர் மாவட்டத்தில் வெட்டாற்றங்கரையில் மெலட்டூர் கிராமம். ராமன் மெலட்டூர் போய் நடேசய்யரிடம் நாட்டியம் கற்கத் தொடங்கினான். நடுநடுவே சதாமங்கலத்துக்கும் போவான் சுந்தர ராஜன் அவனுடைய தாயைத் தன் வசப் படுத்திக் கொண்டு ராமனின் பூர்வீகச்சொத்தை அபகரித்துக் கொள்ள முயல்வது அவனுக்குத் தெரிந்துவிட்டது. அவன் சுந்தர ராஜனை அவமானம் செய்து விரட்டிவிட்டான். சுந்தரராஜன் மறுபடி அவன் வீட்டுக்குள் வரக்கூடாது என்று கட்டளை யிட்டான்...

ஆனி பெசன்ட் 'ஹோம் ரூல் லீக்' என்ற இயக்கத்தை அமைத்தார். அதன் நோக்கம் இந்தியா சுயாட்சி பெறுவது நாட்டு மக்களே நாட்டை ஆண்டு கொள்ளும் உரிமை. ராமன் சென்னையில் ஹோம்ரூல் லீகின் ஊழியர்களில் ஒருவன். லீகின் பத்திரிகையான 'நியூ இந்தியா'வுக்குக் கட்டுரைகள் சேகரிப்பது, அவற்றைச் சரிபார்த்து அச்சுப் பிழை திருத்துவது இவையெல்லாம் ராமனுடைய பணிகள்

1917ம் ஆண்டு கல்கத்தாவில் ஆனிபெசன்டின் தலைமையில் தேசிய காங்கிரஸ் கூட்டம் நடைபெற்றது. அதில் கலந்து கொள்ளச் சென்னையிலிருந்து ஒரு தொண்டர் படையுடன் வந்தான் ராமன்.

சென்னைக் கல்லூரி மாணவர்களில் பெரும்பாலோருக்கு நாட்டைப் பற்றி அக்கறையில்லை. அவர்களுடைய இலட்சியம் தேர்வில் வெற்றி, நல்ல வேலை அல்லது நிறைய வருமானம் தரும் தொழில், அழகான மனைவி, செல்வாக்குள்ள மாமனார், கவலையற்ற வாழ்வு...

இவர்களுடைய கண்களைத் திறக்க மாணவரியக்கம் வேண்டும். ராமன் இந்த முயற்சியிலிறங்கினான். மற்ற மாணவர்களுடன் விவாதித்தான். கூட்டங்கள் போட்டுப் பேசினான். கடுமையாக உழைத்தான்.

இந்த உழைப்பின் விளைவாக 1918 ம் ஆண்டு 'ஸ்டுடண்ட்ஸ் கன்வென்ஷன்' என்ற அமைப்பு பிறந்தது. அதன் இணைச் செயலாளராகத் தலைமைக் கமிட்டியில் இடம் பெற்றான் ராமன்.

அதன் இன்னொரு இணைச்செயலாளர் ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த லிங்கராஜ்பானக்ராஹி...

இந்த சமயத்தில் தான் அவன் மெலட்டூர் போய் நடேசய்யரைச் சந்திந்தான்.

அவர் வீட்டில்தானிருந்தார் "நான்தான் நடேசய்யர். நீ யாருப்பா?"

அவர் பார்க்கக் கடுமையாக இருந்தார். முகபாவத்தில் மென்மை சிறிது கூட இல்லை. கூரிய பார்வை. அகலமான தாடை பரந்தமார்பு, புடைத்த நரம்புகள் மார்பிலும் கைகளிலும். தலையின் முன் பகுதியில் பெரிய வழுக்கை.

நாட்டியக்கலைஞர்களைப் பற்றி ராமன் நினைத்திருந்ததற்கு முற்றிலும் மாறாகத் தோற்றமளித்தார் நடேசய்யர். முகத்தில் ஆண்மையின் பாவம் தெரிந்தது. கரடுமுரடான உடலில் அனாவசியமான கொழுப்பு இல்லவேயில்லை. வெயிலில் காய்ந்து உரமேறிய மூங்கில் தடியை நினைவூட்டியது அவரது தோற்றம்.

"என்னப்பா வேணும்?" குரல் மென்மையாக ஒலித்தது.

ராமன் அவரிடம் கனகம்மாளின் கடிதத்தைக் கொடுத்து விட்டுத் தரையில் விழுந்து அவரை வணங்கினான்.

"நீ நிறையப் படிச்சிருக்கியாமே! பண்டித அப்பாவுக்குப் பண்டிதப்பிள்ளை! முதல்லே பரதரோட நாட்டிய சாஸ்திரம்படி. சிதம்பரம் நாராயணசாஸ்திரி இன்னும் உசிரோடே இருக்கார். இந்த விஷயத்திலே அவரை மிஞ்சின அறிவாளி இல்லை. முதல்லே அவர்கிட்டே போய் நாட்டிய சாஸ்திரம் படிச்சுட்டு அப்புறம் இங்கே வா. நான் உனக்கு நாட்டியம் கத்துத் தரேன்."

மெலட்டூரிலிருந்து சிதம்பரத்துக்குப் பயணம்...

நாராயண சாஸ்திரிக்கு வயது தொண்ணூறை எட்டிக் கொண்டிருந்தது. விறைப்பான உடலில் கூனல் விழவில்லை. தோல் சுருங்கியிருந்தது. ஆனால் இந்த வயதிலும் முகம் அழகாயிருந்தது. எங்கேயோ பார்த்த முகம் போலிருந்தது ராமனுக்கு. பற்களில் ஒன்றுகூட விழவில்லை. நரைத்த தலைமுடி குட்டையாக வெட்டப்பட்டிருக்க, பின் தலையில் அகலமான குடுமி, நெற்றியில்பட்டைவிபூதி.

ராமன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

சாஸ்திரி இனிமையாகப் பழகினார். அறிவின் கர்வம் சற்றும் இல்லை அவரிடம்--"வாப்பா, வா...உன்னோட அப்பா வாசிப்பு இன்னும் என் காதுலே எதிரொலிக்கறது. ஆகா, கனகத்தோட நாட்டியத்துக்கு ரொம்ப எடுப்பா இருக்கும், நீ இங்கேயே வெளிப்பக்கத்து அறையிலே தங்கிக்க..."

"ஆனால்" என்று ஏதோ சொல்ல முயன்ற ராமனை இடை மறித்து அவர் தொடர்ந்து பேசினார்-"ஆனால் கீனால் எல்லாம் வேண்டாம்...நடேசன் உன்னை அனுப்பியிருக்கார். இனிமேல் நீ என் பொறுப்பு. உலகத்திலே இருக்கற பாடகங்க, வாத்தியக் காரங்க, நாட்டியக்காரங்க எல்லாரும் எனக்கு உறவுக் காரங்க..."

இதைக் கேட்டு வியப்பிலாழ்ந்தான் ராமன்.

"நாட்டிய சாஸ்திரம் கத்துக் கொடுக்கறதுக்கு முன்னாலே நான் உன்னைக் கூட்டிக்கிண்டு போய் வெவ்வேறுவகை நாட்டிய நிலைகளைக் காண்பிப்பேன். நீ அவைகளைப் பார்த்தால் மட்டும் போதாது. அந்தப் பேர்களை மனப்பாடம் பண்ணணும். இதுக்கு ஒரு மாசமாவது ஆகும். அந்த ஒரு மாசம் இங்கே என்னோடே இரு..நான் யார்பொறுப்பிலே இருக்கேனோ அவ பொறுப்பிலே நீயும் இரு...சுந்தரீ!"

உள்ளறையிலிருந்து வெளிவந்தாள் ஒரு பெண். அவளைப் பார்த்துத் திடுக்கிட்டாள் ராமன். இதென்ன ஆச்சரியம்! ஹோம் ரூல் கிடைத்துவிட்டது என்றால் கூட இவ்வளவு ஆச்சரியப் பட்டிருக்க மாட்டான் அவன்...

நாராயண சாஸ்திரி ருக்மணி அம்மாளின் பெண் ரத்தினம் மாளின் பொறுப்பில்!... நம்பவே முடியவில்லையே!

"இதுதான் கோதண்டராமன்...சதாமங்கலம் அனந்த கிருஷ்ண னோட வயலின் கேட்டிருப்பியே! அவரோட பிள்ளை இவன். நிறையப் படிச்சிருக்கான். என்கிட்டே நாட்டிய சாஸ்திரம் கத்துக்க வந்திருக்கான். இது ஒரு பெரிய அதிருஷ்டம் எனக்கு... இவனுக்கு ஒரு அசௌகரியமும் இல்லாமே பார்த்துக்கவேண் டியது உன் பொறுப்பு..."

பிறகு ராமனிடம் திரும்பிச் சொன்னார், "இவ என் பேத்தி ரத்னா. இவ பொறுப்பிலேதான் நான் இருக்கேன்..."

ரத்னா குனிந்த தலையுடன் நின்றாள். பிறகு மெதுவாக உள்ளே போய்விட்டாள்.

இப்போது ராமனுக்கு ருக்மணியம்மாளின் முகம் நினைவு வந்தது. அதற்கும் சாஸ்திரியின் முகத்துக்கும் நல்ல ஒற்றுமை.

ராமனின் மனதில் அநேக சிந்தனைகள், கையில் பல வேலை கள்-ஹோம் ரூல் லீக், 'நியூ இந்தியா' பத்திரிகை, ஸ்டூடண்ட்ஸ் கன்வென்ஷன், பிரபல வழக்கறிஞர் பதஞ்சலி சாஸ்திரியிடம் தொழிற்பயிற்சி....

இவ்வளவு அலுவல்களுக்கிடையிலும் அவன் அவ்வப்போது நள்ளிரவில், அதிகாலையில், வேலை நேரத்தில் ஒய்வு

கிடைக்கும் போது தான் பாதுகாத்துவரும் நினைவுப் பெட்ட கத்தைத் திறந்து பார்ப்பான். மிருதுவான வெல்வெட் வைத்துத் தைத்த பெட்டி. அதை ஜாக்கிரதையாகத் திறப்பான். உள்ளே அந்த முகம் தெரியும் புடைத்த புருவங்கள், அவற்றுக்குக் கீழே நீர்தளும்பும் ஏரிபோல் அமைதியான கண்கள், விடைத்த மூக்கில் வைரமூக்குத்தி, சாறு நிரம்பிய ஆரஞ்சுசுளை போன்ற உதடு கள், குலாப்ஜாம் பழம்போல் அமைந்த முகம்...

அந்த இரத்தினம் இப்போது உயிரோவியமாக அவன் முன் னால் வந்திருக்கிறது. முன்பு அது கிடைத்தும் அவன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அப்போது அவனை ஆசாரப் பேய் பிடித்திருந்தது. இப்போது அவன் மாறிவிட்டான். அவன் மாறிவிட்டா னென்பது அவளுக்குத் தெரியுமா?...

அன்று மாலையில் நாராயண சாஸ்திரி அவனிடம் சொன் னார். "இந்தியாவில் சிவனுக்கு ரெண்டு உருவங்கள் ஒன்று லிங்கம், இன்னொன்று மகாகாலன். ரெண்டு உருவங்களுக்கும் பொருள் ஒண்ணு தான் சிவன் அழகின் தேவதை, ஆனந்தத்தின் தேவதை...உனக்கு நாடி பார்க்கத்தெரியுமா தம்பி? கைமணிக் கட்டிலே விரலை வச்சு அமுக்கிப்பாரு. நாடி நரம்பிலே ரத்தம் அலையாய்ப் பாய்ஞ்சுக்கிண்டிருக்கும். ஏறும் இறங்கும். ஏற்றத் துக்கும் இறக்கத்துக்கும் நடுவிலே ஒரு சின்ன இடைவெளி. அதிலே ஒரு ஒழுங்கு. ஒரு லயம் உண்டு. அதேலயம் நெஞ்சுத் துடிப்பிலேயும் உண்டு. அங்கேயும் இந்த ரத்தத்தோட நாட்டியந் தான். ஆமா, இது ஒரு நாட்டியம். ஒரே லயத்திலே ஏற்றம் இறக்கம். நேரம்தான் காலம். முதலும் முடிவும் இல்லாத நேரம் மகாகாலம். அதன் உருவகந்தான் மகாகாலன், அவனோட நாட்டியம் எப்போ தொடங்கித்துன்னு யாருக்கும் தெரியாது. அதுக்கு முடிவுமில்லே. இந்த நாட்டியத்திலேருந்து தான் இரவும் பகலும் பிறந்தது. பூமி தன்னையே சுற்றிக் கொள் வதும் இந்த நாட்டியத்தாலேதான். பூமி சூரியனைச் சுற்றிக் கொள்வதும் இந்த நாட்டியத்தாலேதான். பூமி சூரியனைச் சுற்றிச் சுழல்வது, கிரகங்கள், உபகிரகங்கள், நட்சத்திரங்கள் இதுகளோட சுழற்சியும். அந்த நாட்டியத்தின் விளைவுதான். இந்த ஆகாசம் இருக்கே ஆரம்பமும் முடிவுமில்லாத வெட்ட வெளி இதில்தான் நடக்கறது மகாகாலனுடை நாட்டியம்...

"இந்த மகாகாலன்தான் நடராஜன். அவனைச் சுத்தி அக்கினிப் பிண்டமாச் சுத்தறது சூரியன், சந்திரன், தாரா கணங் கள். இந்த நாட்டியத்தாலே ருதுக்கள் வந்து போகின்றன. வருஷம் கழியறது. பழசு அழியறது, புதுசு பிறக்கிறது. இதெல்

லாமே ஒரு லயத்திலே நடக்கிறது-நாட்டியத்தோட லயத்திலே, தாளத்திலே, மனமாகிய ஆகாசந்தான் சிதம்பரம். இந்தச் சிதம்பரத்திலே நீ மகாகாலன் நடராஜனோட நாட்டி யத்தைத் தரிசனம் பண்ணு..."

இப்போது சாஸ்திரியின் குரலில் சிறிது கேலி கலந்தது "தம்பி, நீ அய்யங்கார்ப் பையன். ஆனால் நாட்டியங்கறது சிவ னோட லீலை. நீ நாட்டியம் கத்துக்கணும்னா வைஷ்ணவத்திலே பிடிவாதத்தை விடணும்...ஹா..ஹா!..." சாஸ்திரி சிரித்தார்.

ராமனுக்கு முகம் சிவந்து விட்டது. "இல்லே, எனக்கு அந்தப் பிடிவாதமெல்லாம் கிடையாது!... ஆனி பெசன்டும், ஜார்ஜ் அருண்டேலும் என்னோட ஆசாரவெறியைத் தகர்த்துட்டாங்க."

"ஓ, அப்படியா! ரொம்ப நல்லது! உண்மையிலே பாடகங்க, நாட்டியக்காரங்க, ஓவியங்க, கவிகள் எல்லாரும் ஒரே ஜாதி தான்-ரசிக ஜாதி. அவங்களுக்கு ரசத்தை உணர, உண்டாக்க, உணரவைக்கற சக்தி இருக்கு. அவங்க எல்லார் மனசிலேயும் நடராஜன் ஆடறான். அவங்களோட மனசுதான் சிதம்பரம் கோவில்..."

ராமனுக்கு நினைவு வந்தது-ஆனிபெசன்ட் அடிக்கடி 'காஸ்மிக்' என்ற ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்துவார். 'முதலும் முடிவுமற்ற ஆகாயத்தைச் சார்ந்த' என்பது அச்சொல் லின் பொருள். இந்த ஆகாயத்தில் தான் நடராஜன் ஆடுகிறான். -'காஸ்மிக் டான்ஸ்'. பொங்கியெழும் கடலின் நினைவு வந்தது ராமனுக்கு. அவனது உடலெங்கும் மயிர்குத்திட்டு நின்றது கதம்ப மலரின் கேசரம் போல...

உட்பக்கத்துக் கதவருகே இனிய குரல் "தாத்தா, சாப்பிட வாங்க."

ராமன் சாஸ்திரியுடன் உள்ளே நுழைந்தான். நிலைப்படியைக் கடந்ததும் ஒரு முற்றம். அதன் இடது புறம் சமையலறை. வலது புறமும் எதிரிலும் இரண்டு அறைகள்.

சமையலறையில் தரையில் இரண்டு பலகைகள் போடப் பட்டிருந்தன. அவற்றுக்கு முன்னால் இலைகள். ரத்னா அவர் களுக்குச் சாப்பாடு பரிமாறினாள்-சாதம், கறி, சாம்பார், தயிர், மோர். ஆனால் வாய் திறந்து பேசவேயில்லை அவள். "போதுமா, அல்லது இன்னுங் கொஞ்சம் போடட்டுமா?" என்று கேட்கக் கூட இல்லை.

சாஸ்திரி உற்சாகமாகச் சாப்பிடுகிறார். ஆனால் பேச வில்லை. சாப்பிடும் போது பேசமாட்டார் போலும்.

இரவில் வெளியறையில் மிருதுவான வெள்ளை மெத்தை. ஆனால் ராமனுக்குச் சற்றும் உறக்கமில்லை. பலவிதச் சிந்தனை களின் குழப்பத்தில் மனதில் சூடேறிவிட்டது. சங்கடம், குற்ற உணர்வு. அமைதியான ஒளிநிறைந்த கண்களிரண்டு அவன் முன்னே தோன்றுகின்றன. அவள் எதுவும் பேசவில்லை தான், ஆனால் அவளுடைய கண்கள் அவனைக் குற்றஞ்சாட்டுகின் றன-"நீ குற்றவாளி!...ராமன், நீ பெரிய அறிவாளியா இருக்க லாம். ஆனால் மனிதனை மனிதனாக மதிக்கத் தெரியலே உனக்கு. ஒரு கலைஞனுக்குரிய மரியாதையைக் கொடுக்கத் தெரியலே.. நீ ஒரு கலைஞரோட வேண்டுகோளை மதிக்கலே, நீ குற்றவாளிதான்!..."

ரத்னாவிடம் மன்னிப்புப் பெறவேண்டும். தான் மாறிவிட்ட செய்தியை அவளுக்குத் தெரிவிக்க வேண்டும். "நீ இல்லாமே என்னாலே இருக்க முடியாது!" என்று அவளிடம் சொல்ல வேண் டும்.

நாட்டிய சாதனைக்கும் இசைச் சாதனைக்கும் உறுதுணையா யிருக்கும் ரசத்தை மாற்றிய மனம். இந்த உண்மையைக் கடந்த சில மாதங்களாகவே உணர்ந்து வந்திருக்கிறான் ராமன். அவனது உடல், மனம் இரண்டுமே ஏங்குகின்றன. ஒரு பெண் ணுக்காக, ஆயிரம் அலுவல்களுக்கு நடுவே அவன் தன் மனதுக் கிசைந்த பெண்ணைப் பெறத் துடிக்கிறான். இந்தத் துடிப்பிலும் ஏக்கத்திலும் அவனது நேரமும் சக்தியும் விரயமாகின்றன. அவன் மனம் பஞ்சத்திலடிபட்ட மனிதன் போல, நீரின்றிக் கடும் வெயிலில் காய்ந்து போன வயல் போல இருப்பதை அவன் உணர்கிறான்.

வெளிப்புற அறையில் படுக்கையில் புரள்கிறான் அவன். அவனது மனமோ குருடனைப் போல் உட்புற அறையொன்றின் கதவைத்தேடும் முயற்சியில் தடுமாறிக் கொண்டிருக்கிறது. எந்தக் கதவைத் தட்டினால் அது-அவனது நெஞ்சிலுள்ள பெட்டகத்தின் மென்மையான மூடி போல-அனாயாசமாகத் திறக்கும்?

☆ ☆ ☆

சிதம்பரம் நடராஜர் கோவில் ஸ்ரீரங்கம் கோவிலைப் போல் அவ்வளவு பெரியதல்ல. இருந்தாலும் ரொம்பச் சிறியதுமல்ல. அதன் நாற்புறமும் நான்கு தோரண வாயில்கள், நான்கு கோபுரங்கள்.

ஒரு நாள் அதிகாலையில் சாஸ்திரி ராமனை அழைத்துக் கொண்டு போய்ச் சுற்றிக் காட்டினார். அப்போது கோவிலில் ஜன நடமாட்டம் அதிகமில்லை.

மங்கள ஆரத்தி அப்போது தான் முடிந்திருந்தது. சாஸ்திரி "வா, நாட்டியத்துக்கு ராஜாவைப் பார்த்துட்டு வருவோம்" என் றார்.

இருவரும் கருவறைக்கு முன்னால் போய் நின்றனர்.

நடராஜன் நடனத்துக்கு அரசன், இசைக்கு அரசன். இசைவல்லானுக்கும் ஆசான்.

"பரதரின் நந்தன சாஸ்திரத்திலே கலைகள் அறுபத்து நாலு வகை. அவற்றில் மிகச் சிறந்தது நாட்டியக்கலை. நடனம், இசை, அபிநயம் இந்த மூன்று வெவ்வேறு கலைகள் நாட்டி யத்தில் அடக்கம்" சாஸ்திரி சொன்னார் தணிந்த குரலில்.

நடராஜர் ஆடிக்கொண்டிருக்கிறார். அவரது வலது காலைச் சற்று மடக்கிக் கொண்டு நிற்கிறார். இடது காலை மேலே தூக்கிக் கொண்டிருக்கிறார் காலை மாற்றிக் கொள்ளப்போவது போல. அந்தநிலை ஒரு கடலலையின் நிலை அலைகீழே மடிந்து சிதறுவதற்கு முன்னால் உள்ள நிலை.

நடராஜரின் ஒரு கையில் உடுக்கை, இன்னொரு கையில் தீச்சுடர். அவரைப் பார்த்தால் சிலையாகத் தோன்றவில்லை. ஜீவகளை ததும்புகிறது. அவரைச் சுற்றியிருக்கும் திருவாசியில் தீச்சுடர்கள் சித்திரிக்கப்பட்டுள்ளன. அவை ஆகாயத்திலுள்ள சூரியன், சந்திரன், நட்சத்திரங்களைக் குறிக்கின்றன. சந்திரன் சூரியன் நட்சத்திரங்கள் எல்லாமே நாட்டியமாடுகின்றன. நடராஜர் மெய்மறந்து ஆடுகிறார். அவரது காலுக்குக் கீழே ஒரு குழந்தை-எப்போதும் பிறந்து கொண்டிருக்கும் உலகத்தின் உருவகம்.

ராமனுக்குத் தோன்றுகிறது-அவனும் ஆடுகிறான் உடுக்கை யின் 'டம், டம்' ஒலி கேட்கிறது.

அவன் இவ்வாறு தன்னை மறந்து எவ்வளவு நேரம் நின் றிருந்தானோ தெரியாது. சாஸ்திரி கையால் தொட்டதும்தான் அவனுக்குத் தன் நினைவு வந்தது.

இருவரும் வெளியே வந்தனர். பொழுது ஏறிவிட்டது. காலை வெயில் கிழக்குக் கோபுரத்தின் மேலும் கோவில் பிராகாரத்

திலும் விழுகிறது. சாஸ்திரி கிழக்குக் கோபுரத்தின் முன்னால் நின்றுகொண்டு சொன்னார், "தம்பி, கோபுரத்தை நன்றாக் கவனிச்சுப்பார்."

கோபுரச் சுவரில் பல காட்சிகள் செதுக்கப்பட்டிருக்கின்றன. சிவன் கலியாணம் செய்து கொள்ளச் செல்கிறார். அவருக்குப் பின் தேவர், முனிவர், பூதங்கள், மனிதர்கள். அடுத்த காட்சி சிவபார்வதி திருமணம். இருவரும் கைகோத்துக் கொண்டு நிற்கிறார்கள். பார்வதியின் முகத்தில் நாணங்கலந்த புன்னகை, இனிமை மணமகனின் கைபிடித்து நிற்கும் பதினாறு வயது மணப்பெண்ணின் பாவம். நாற்புறமும் வாத்திய இசை. மிருதங்கம், மத்தளம், வீணை, இன்னோரிடத்தில் திரிபுராசுர வதக் காட்சி...எல்லாவற்றையும் கவனமாகப் பார்த்தான் ராமன்.

சாஸ்திரி நடைபாதைக்குப் பக்கத்திலிருந்த சுவரைச் சுட்டிக் காட்டினார். சுவரில் மேலிருந்து கீழ்வரை சிறிய சிறிய சிற்பங்கள். சாஸ்திரி காட்டாவிட்டால் அவன் கவனித்திருக்கவே மாட்டான். இந்தச் சிற்பங்கள் கோபுரத்துச் சிற்பங்களைவிட மிகக் கலைத்திறனுடன் வடிக்கப்பட்டவை. இவை நாட்டியத்தின் வெவ்வேறு நிலைகளைக் காட்டும் சிற்பங்கள்.

"மொத்தம் எத்தனை சிற்பங்கள்?" ராமன் கேட்டான்.

"நூத்திஎட்டு, பரதரின் நாட்டிய சாஸ்திரப்படி கரணங்கள் நூத்தியெட்டு. ஒவ்வொரு கரணத்தையும் விளக்க ஒரு சிற்பம்."

சாஸ்திரி விளக்குகிறார் நாட்டிய சாஸ்திரத்தின் நுணுக்கங்களை...

"நாட்டியத்தைத் தொடங்குமுன் கலைஞன் ஓரிடத்தில் அசையாமல் சிலைபோல் நிற்பான், இமை கூடக் கொட்ட மாட்டான். ஒரு குறிப்பிட்ட விதத்தில் நிற்பான். இந்த நிலைதான் ஸ்தானகம். இதன் பிறகு வாத்தியத்தின் தாளத்துக்கேற்ற படி காலெடுத்து வைக்கத் தொடங்குவான், இதற்குப் பெயர் சாரீ. இந்நிலையில் காலெடுத்து வைக்கும் போது கைகளில் முத்திரை இருக்கும், முகத்தில் கண்களில் பாவம் வெளிப்படும். ஸ்தானகம், சாரீ, முத்திரை இவைமூன்றும் சேர்ந்தது ஒரு கரணம், பரதரின் நாட்டிய சாஸ்திரப்படி ஸ்தானகம் ஆறுவகை, சாரீ முப்பத்திரண்டு வகை, முத்திரை இருபத்தேழுவகை. இவை தான் நாட்டியக்கலையின் எழுத்துக்கள். இந்த எழுத்துக்களை ஒன்றொடொன்று சேர்த்தால் கரணம் அதாவது நாட்டியத்தின் சொல் பிறக்கும். பல கரணங்கள் சேர்ந்தது ஒரு அங்கஹாரம் இதுதான் நாட்டியத்தின் முழுமையான வாக்கியம். இதற்கு ஒரு முழுமையான பொருள் இருக்கும்...."

"அதோ அந்தப் பெண் கைகளை இரண்டு பக்கமும் விரிச்சுக் கிட்டு இருக்காளே அந்தநிலை ரொம்ப அழகாயிருக்கு."

"அது ஒரு கரணம். அதற்குப் பெயர் லதா விருச்சிகம். தேள் தன் கொடுக்கை உயர்த்தியிருக்கும் நிலை அது."

"அதோ அந்தப் பெண் கைகளை இரண்டு பக்கமும் விரிச்சுக் கிட்டு ஒரு காலைப் பின்பக்கம் தூக்கி...முன்னாலே குனிஞ்சு கிட்டு எங்கேயே ஓடிப்போற மாதிரி..."

"அவ ஓடலே, பறக்கறா. விரிஞ்ச கைகள் பறவையோட விரிஞ்ச இறக்கைகள் மாதிரி. இந்த நிலைக்குக் கருடப்பலுத கம்னுபேர். அதோ பார் இன்னொரு பறக்கும் நிலை. அதற்குப் பெயர் கிருத்ர வலீனகம்...அது மயூரலலிதா...."

இன்னொரு பெண் மல்லாந்த நிலையில் உடலை வில்போல் வளைத்துக் கொண்டு கைகளாலும் கால்களாலும் தரையைத் தொட்டுக் கொண்டு வயிறும் மார்பும் ஆகாயத்தை நோக்கும் நிலையில் காணப்படுகிறாள். "இது குதிரை பெயர் சகடாஸவம்" என்று விளக்குகிறார் சாஸ்திரி.

"அப்படியானால் நாட்டியமாடறவன் நிறைய உடற்பயிற்சி செய்யணும், இல்லையா?" ராமன் கேட்டான்.

"நிச்சயமா! உடலை உறுதியா, ஆரோக்கியமா வச்சுக் கிட்டிருந்தால் மட்டும் போதாது. கை, கால், நெஞ்சு, வயிறு, முகம், கண்விரல் எல்லாம் நம்மிஷ்டப்படி வளையும்படி பயிற்சி செய்யணும். உடம்பு உறுப்புகள் ஸ்வரப்படுத்தப்பட்ட வீணைத் தந்தி மாதிரி இருக்கணும். மீட்டறதுக்கேத்தாப்பலே ஸ்வரம் கிளம்பற மாதிரி, ராகம் பிறக்கற மாதிரி, உறுப்புகளின் அசைவிலே இஷ்டப்பட்ட பாவம் வெளிப்படணும். இதற்குத் தீவிரமான பயிற்சி தேவை. இது ஒருவகைத் தவம்... நீ நடேசய்யரைப் பார்த்திருக்கியே... அம்பது வயசுப் பயில்வான். அவரோட உடம்பு கட்டை மாதிரி இறுகியிருக்கும். ஆனால் அவர் மென்மையான உணர்ச்சிகளை அபிநயம் பண்றபோது அந்த ஆளா இவர் என்று நம்பமாட்டே. கல் மாதிரி இறுகிப்போன உடம்பிலே அவர் லாஸ்ய பாவத்திலே பூவோட மென்மையை வெளிப்படுத்துவார். ராதையோட விரகம், பார்வதி சிவனைச் சேர்வது இதையெல்லாம் அபிநயிக்கறபோது அவர் முகத்திலே தோன்றும் பாவம் இருக்கே!..."

"லாஸ்ய பாவம்னா என்ன?"

"லாஸ்ய பாவன்னா மென்மையான மதுர பாவம், அதாவது பெண்மையின் தன்மை – பாசம், காதல் இதெல்லாம். லாஸ்யத்தை வெளிப்படுத்தும் நாட்டியத்தைப் பெண்கள் ஆடணும்.

ஆண்களோட நாட்டியம் தாண்டவம். அதிலே காலடிவைக்கற தெல்லாம் அழுத்தமாயிருக்கும். அதிலே பயங்கரம் இருக்கும். அதிலும் ஓர் அழகு இருக்கும்-சிவனோட ருத்திர தாண்டவம் மாதிரி. பரதர் நாட்டியத்தை இந்த ரெண்டு விதமாப்பிரிச் சிருக்கார்....

"சரி. இன்னிக்கு இது போதும். போகலாம் வா. நீ தினம் இங்கே வந்து இந்தக் கரணங்களைக் கத்துக்கணும். இதுதான் நாட்டியத்தின் எழுத்துப் பயிற்சி. இதுக்கப்புறம் சொல் பயிற்சி. அப்புறம் வாக்கியப் பயிற்சி..."

"இந்த நூத்தி எட்டுக் கரணங்களையும் கத்துக்க எவ்வளவு நாளாகும்?"

சாஸ்திரி சிரித்தார்- "இது லேசான விஷயமில்லே. தம்பி. எல்லாத்தையும் கத்து முடிக்க ஒரு வாழ்நாள் கழிஞ்சுடும். ஒவ்வொரு கரணத்தைக் கத்துக்கவே ஏழெட்டு வருஷம் பிடிக்கும். இந்தத் தென்னிந்தியா முழுவதிலும் எனக்குத் தெரிந்து ஒரே யொரு கலைஞர் இருக்கார். அவளோட கலைத்திறன் அவளோட அம்மாகிட்டேயிருந்து கிடைச்சது. பாட்டிலேயும் நாட்டியத்திலேயும் அவளுக்கு இணையில்லை. ஆனால் அவளுக்குக் கூடப்பத்துக் கரணந்தான் தெரியும்... அப்பமீன்னாப் பாத்துக்கோ....

"பரத முனிவர் சிவனோட சீடர் தண்டு முனிவர்கிட்டே நாட்டியம் கத்துக்கிண்டார். அதனால் தான் இந்த நாட்டியத்துக் குத் தாண்டவம்னு பெயர் வந்தது. இந்த நாட்டியத்தின் கூறுகளையும் அடையாளங்களையும் விளக்கி அவர் எழுதி யுள்ள அத்தியாயத்துக்குத் 'தாண்டவ லட்சணம்' னு பெயர்...

"ஒரு சமயம் சுவர்க்கத்திலே ஒரு பரபரப்பான நிகழ்ச்சி. பிரும்மாவே அமிருதம் கடையற நிகழ்ச்சியை வைத்து ஒரு நாடகம் எழுதினார். பூலோகத்திலே பரத முனிவர்கிட்டே வேண்டுகோள் வந்தது- "இதை நாட்டிய நாடகமாக்கிக் கொடுக் கணும்." பரதர் அதை இரண்டு நாடகங்களாக அமைத்துக் கொடுத்தார். ஒன்று அமிருதமதனம்!; இன்னொன்று 'திரிபுர தகனம்'. இமயமலையின் திறந்தவெளி மேடையில் நாடகங்கள் அரங்கேற்றப்பட்டன. மனோகரமான சூழ்நிலை. தேவர்கள், தானவர்கள், மானிடர்கள், யட்சர்கள், ரட்சகர்கள் எல்லாரும் பார்வையாளர்கள். அவர்களில் சாட்சாத் சிவனும் உண்டு. நாட்டிய நாடகத்தைப் பார்த்துச் சிவனே மகிழ்ந்து பரதரைப் பாராட்டினார். இதைக் கண்ட பிரமன் தனக்கும் நாட்டியம் கற்றுத்தரச் சொல்லிப் பரதரைக் கேட்டுக் கொண்டார். பரத முனிவர் பிரும்மாவுக்கும் குரு.

"இந்தக் காலத்திலே இந்தியாவிலேயே ரெண்டு இடங்களிலே தான் சாஸ்திரப்படி பரத நாட்டியம் ஆடறாங்க. ஒரு இடம் ஆந்திர நாட்டிலேயுள்ள குச்சிபூடி, இன்னொரு இடம் தஞ்சாவூர். தஞ்சாவூரிலே சமங்கலம், ஊத்தக்காடு, சாலியமங்கலம், நல்லூர், தேப்பெருமாநல்லூர், மெலட்டூர் – இந்த ஆறு இடங் களிலேதான் தூய்மையான பரத நாட்டியம் இருக்கு. இந்த இடங்களுக்குள்ளே ரொம்பச் சிறந்தது மெலட்டூர். இதற்குக் காரணம் நடேசய்யர்தான். யோகி தீர்த்த நாராயணனோட அபூர் வமான பதங்களையெல்லாம் நீ அவர்கிட்டே கத்துக்கலாம்.

"பரதரின் நாட்டிய சாஸ்திரம் மென் கலைகளுக்கு வேதம், முருகியலுக்கே வேதம். நாலு வேதங்களுக்குப் பிறகு இது ஐந்தாம் வேதம். இதிலே முப்பத்தாறு அத்தியாயங்களும் ஆறா யிரம் சுலோகங்களும் உண்டு. வேதம் கத்துக்க வியாக்கியானம் படிக்கணும். அதுபோல் நாட்டிய சாஸ்திரத்துக்கும் வியாக்கி யானம் உண்டு. வியாக்கியானம் எழுதினவங்க நிறையப்பேர் உத்பட்டர், லோல்லடர், மாத்ரகுப்தர், சங்குகர், பட்டநாயகர், அபிநவகுப்தர். இவர்களிலே மிகச் சிறந்தவர் அபிநவகுப்தர் தான். அவர் எழுதின 'அபிநவபாரதி' ஒரு அபூர்வப் படைப்பு ... நீ அபிநவ பாரதியிலேருந்து உன்பயிற்சியைத் தொடங்கு, தம்பி ..."

மாலையில் சாஸ்திரி வீட்டில் ஒரு சிறுவகுப்பு நடைபெறும். சாஸ்திரிதான் ஆசிரியர், மாணவன் ராமன். சாஸ்திரிக்கு முன் னால் ஒரு பிரும்மாண்டமான சரஸ்வதி வீணை. ருக்மணியம் மாளின் வீணையும் இதுமாதிரித்தானிருக்கும்.

விணையில் சாஸ்திரியின் பாணியைத்தான் ருக்மணியம்மா ளும் பின்பற்றினாள் என்பது ராமனுக்குப் புரிந்தது.

வகுப்பில் ரத்னாவின் உடை விசித்திரமாயிருக்கும். அவள் கச்சம் வைத்துப் புடைவை அணிந்திருப்பாள். அது முழங்கால் வரை தூக்கியிருக்கும். கால்கள் முழுமையாக வெளியே தெரியும். கால்களிலும் உள்ளங்கைகளிலும் மருதோன்றி பூசப்பட்டி ருக்கும். புடைவை நுனி தோள் பட்டையையும் முதுகையும் போர்த்தி வந்து இடுப்பில் கெட்டியாகக் கட்டப்பட்டிருக்கும் மார்க்கச்சையும் இறுக்கமாயிருக்கும். மார்க்கச்சுக்குக் கீழே தொப்புள் வரை திறந்திருக்கும்.

இது ரத்னாவின் நாட்டிய உடை. ஆனால் இது கனகம்மாவின் உடைபோல் ஆடம்பரமாயிருக்காது. புடைவையும் மார்க்கச்சை யும் சாதாரணம்தான். ஆனால் கண்களில் மட்டும் அஞ்சனம் தீட்டப்பட்டு ஓரங்களில் நீட்டிவிடப்பட்டிருக்கும். வலியன் பறவை

யின் வால் போல, பெரிய கொண்டையைச் சுற்றி குண்டு மல்லிகைச் சரம் சுற்றப்பட்டிருக்கும். ரத்னா முழந்தாளிட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

ராமனின் பார்வை ரத்னாவின் முகத்தில், மார்பகத்தில், தோளில், கால்களில் மோதுகிறது. அவனது நெஞ்சுக்குள் பலமான அதிர்ச்சி. ஏதோ ஒன்று அவனுள்ளிருந்து வெளியே பீறிட்டுக் கிளம்ப முற்படுகிறது. அவன் தன் உதடுகளைக் கடித்துக் கொண்டு அதை அடக்கி வைத்துக் கொள்கிறான். இந்த அழுத்தத்தின் காரணமாக அவனுடலெங்கும் விறைத்திருக்கிறது.

"ஏன் இப்படி வில்நாண் மாதிரி விறைப்பா இருக்கே, தம்பி?" வீணையில் ஸ்வரம் சேர்த்துக் கொண்டே கேட்டார் சாஸ்திரி.

ராமன் திடுக்கிட்டு அவரைப் பார்த்தான். அவனுடைய காதுகள் வெட்கத்தால் சிவந்தன. உடம்பில் சூடேறியது. சாஸ்திரியின் உதடுகளின் குறும்புப் புன்னகை. அதில் எவ்வளவோ அர்த்தங்கள்.

புன்னகை ததும்ப சாஸ்திரி சொன்னார்-"ஆட்டமும் பாட்டும் இன்பத்துக்காக, மனத்தின் தந்திகளைத் தளர விட இன்பமும் அதிகமாகும். கற்பதும் எளிதாகும்".

வீணைத்தந்தியில் டுங்-டாங் ஒலியெழும்புகிறது. ராகத்தின் தொடக்கம். பிருந்தாவன சாரங்கா. ஆலாபனை-கமகம்-ஆரோகண அவரோகணம். ராகம் வெள்ளமாய்ப் பாய்கிறது. கண்களை மூடிக்கொண்டு அனுபவிக்கிறான் ராமன். 'பிரமாதம், பிரமாதம்!' என்று ஆசிரியரை உள்ளூறப் பாராட்டுகிறான்.

பிற்பகல் வெயில் சிவந்து பளபளக்கிறது-யாரோ பீச்சாங்குழலிலிருந்து சிவப்புக் குழம்பைப் பீச்சினாற்போல.

திடீரென்று ஒரு பாட்டு மிதந்து வந்தது. ராமனுக்கு மிகவும் பரிச்சயமான பாட்டு, முத்துசாமி தீட்சிதரின் படைப்பு 'ஸ்ரீரங்கபுர விஹார...'

ரத்னா பாடுகிறாள், சாஸ்திரி பாடலை வீணையில் இசைக்கிறார். ராமன் கண் திறந்து பார்த்தான் ......

கண்முன்னால் நிற்கிறான் சாட்சாத் ராமன். சற்றுப் பின்னே சாய்ந்த நிலை. இடது கால் சற்று முன்னால் வைக்கப்பட்டிருக்கிறது. கோதண்டத்தைப் பிடித்திருப்பதை உணர்த்தும் முத்திரை கைகளில். ரத்னாவின் மென்மையான உடலையும் முகபாவத்தையும் மீறிக் கொண்டு தோன்றுகிறது வீரத்தன்மை. அவளது கண்ணிமை மூடவில்லை, உடல் அசையவில்லை.

சாஸ்திரி வீணையிசையை நிறுத்திவிட்டுச் சொன்னார்-"இவர் கோதண்டராமர், இந்தியாவோட மிகப் பெரிய நாயகர்-தீரோதாத்த நாயகர்."

ரத்னாவும் பாட்டை நிறுத்திவிட்டு ஸ்தானக நிலையில் நின்றாள். சாஸ்திரி அவளை அமரச் சொல்லிவிட்டுத் தொடர்ந்து பேசினார்-"இதோ பார், தம்பி, உலகத்திலே மிக முக்கியமான விஷயம் ரசம்தான். வானளாவி நிற்கிற காட்டு மரமாகட்டும், அற்பப்புல்லாகட்டும், எல்லாமே இந்த ரசத்தால்தான் பிழைச் சிருக்கு. ரசத்தாலேதான் அதன் பசுமை, அதன் வீரியம், அதன் வளர்ச்சி. இந்த ரசம்தான் பூவாகப் பூக்கிறது, பழமாகப் பழுக் கிறது. வாழ்க்கையின் உயிர் நாடியே இந்த ரசம்தான். ரசமில்லாவிட்டால் உலகத்தில் எல்லாமே வெறும் உலர்ந்த மணல்தான்.

"மனித வாழ்வுக்கும் இது பொருந்தும். ரசமற்ற வாழ்க்கை வாழ்பவன் வெறும் மணல்தான். அவன்பிணம்-சாகாப்பிணம். ரசமயமான வாழ்க்கை நடத்துபவனின் பேச்சு ரசம், நடையுடை பாவனை ரசம். அவன் பாடுவான், ஆடுவான், வாத்தியமிசைப் பான், ஓவியந்தீட்டுவான், காவியமியற்றுவான், காதல் செய் வான், தானும் இன்பம் பெறுவான், பிறருக்கும் இன் பளிப்பான்....

"சாஸ்திரப்படி ஒன்பதுரசங்கள்-சிருங்காரம், காருண்யம், வீரம், அற்புதம், ஹாஸ்யம், பீபத்சம், பயம், ருத்திரம், சாந்தம்... இதைக்கேளு ....." என்று சொல்லி ஒரு ராகத்தை வீணையில் இசைத்தார் சாஸ்திரி-"இது கானடா ராகத்தில் ஒரு வகை. பெயர் நவரசகானடா."

ரத்னா இப்போது மறுபடி ராமச்சந்திரனாக அபிநயம் பிடித்தாள். கூடவே பாடினாள்-'சிருங்கார க்ஷிதி நந்தினி விஹரணே ....'

பாடலின் கருத்துக்கேற்ப ஆடல், முக பாவங்கள், கைமுத்திரை கொண்டு கொஞ்சுகிறாள்! வலது கையால் சீதை யின் மோவாயைத் தூக்கி அவளை முத்தமிடுகிறாள்! சீதையின் விம்மிய மார்பகத்தின் மேல் கை... சிருங்காரத்தின் அற்புத வெளிப்பாடு!

ராமனது உடலெங்கும் சஞ்சலமடைந்தது. பசித்த உடல், மனம் ரசத்துக்காக ஏங்குகிறது. கலைஞனின் வாழ்வில் ரசம் தேவை. அவனுக்கு அந்தப் பெண் வேண்டும்! அவன் பெருமூச்சு விடுகி றான். அவனது மூக்கு விடைக்கிறது.

ரத்னா பாடிக் கொண்டே கரணங்களை ஒவ்வொன்றாக ஆடிக்காட்டுகிறாள். சாஸ்திரி அவை ஒவ்வொன்றின் பெய ரையும் சொல்லி வருகிறார்-"இது விபர்த்திதகம், இது அட்சிப் தம், இது வித்யுத் பிராந்தம், இது லலாட திலகம். இரண்டு கரணங்கள் சேர்ந்தால் பிறக்கும் பாவம் மாத்ருகா ; மூன்று சேர்ந்

தால் கல்பகம் ; நான்கு சேர்ந்தால் பாண்டகம் ; ஐந்தில் சங்கடகம். ஒவ்வொரு அங்க ஹாரத்திலும் இந்த மாதிரி பல பாவங்கள் ....

"கரணங்களைத் தவிர வேறுசில செயல்களும் உண்டு. ஒன்று ரேசகம். இது நான்கு வகை—கை, கால், தோள், இடை. ஆடிக் கொண்டே இந்த உறுப்புக்களைத் தூக்கி வட்டமாகச் சுற்ற வேண்டும்.

"இன்னொன்று பிண்டி. இது அங்கஹாரத்தின் ஒரு பாகம் தான். அங்கஹாரம் மாலை யென்றால் ஒவ்வொரு பிண்டியும் அந்த மாலையின் ஒரு பகுதி. ஒவ்வொரு தேவதைக்கும் ஒரு பிண்டி உண்டு. சிவனுடைய பிண்டிக்குப் பெயர் ஈசுவரி. நந்தியின் பிண்டி பட்டாசி. சந்திரிகாவின் பிண்டி சிம்ம வாகினி ...."

சுற்றிச் சுற்றி ஆடுகிறாள் ரத்னா—'தா-தின்-தின்-தா' என்று பாடிக் கொண்டு. சாஸ்திரி கையால் தாளம் போடுகிறார். இடையிடையே "ஆகா! அபாரம்!" என்று பாராட்டுகிறார்.

"இந்த அங்கஹாரத்தைப்பாரு, தம்பி. அங்கஹாரம் ஒரு சில உணர்ச்சிகளின் வெளிப்பாடு. இதில் ஒரு முழுமையான உணர்ச்சி வெளிப்படுத்தப்படுகிறது. நாயகி தன்னை முற்றிலும் நாயகனுக்கு அளிக்க விரும்புகிறாள். அவளுடைய இளமை, அவளுடைய வாழ்க்கை எல்லாவற்றையும் அவனுக்கு முன் சமர்ப்பிக்கிறாள்—ஒரு தட்டு மலர்களைப் போல—"வா, நாயகனே! வந்து அனுபவி!"

நாட்டியம் நிறைவு பெற்றுவிட்டது. ரத்னாவின் முகத்தில் பொட்டுப் பொட்டாக வியர்வை. நாசித்துவாரங்கள் விரிந்திருக்கின்றன. நாட்டியமும் உடற்பயிற்சிதான். நடனமாடினால் மூச்சுத் திணறும்.

"பரத நாட்டியத்தில் இரண்டு வகை நடனம் உண்டு. ஒன்று சதிர். இதில் கலைஞன் தான் ஒருவனே நவரசங்களையும் கரணங்களால், அங்கஹாரங்களால் வெளிப்படுத்தி ஒரு நாடகத்தின் சாயலைத் தோற்றுவிப்பான்.

"இன்னொரு வகை நாட்டியம் பலர் பங்குகொண்டு ஆடும் நாட்டிய நாடகம்.... நடேசய்யர் இந்த வகை நாட்டியத்தில் மிகவும் தேர்ந்தவர். மெலட்டூரில் இது அடிக்கடி நடக்கும். நீ பார்க்கலாம்".

இரவு வெகு நேரம் வரை ராமனுக்குத் தூக்கம் வரவில்லை. நள்ளிரவில் அவன் படுக்கையை விட்டு எழுந்தான். மறுபடியும் படுத்தான். அவனுள்ளே தாங்கமுடியாத சூடு. புகை வண்டி

இஞ்சினின் நீராவியின் சூடு, அழுத்தம். அது அவனை உட்புறம் இழுத்துச் சென்றது. அவன் முற்றத்தைக் கடந்தான். சாஸ்திரியின் குறட்டைச் சத்தம் கேட்டது. பக்கத்து அறைக் கதவருகே நின்று காதுவைத்து உற்றுக் கேட்டான். அரவமே இல்லை.

கதவு உட்புறம் தாழ்ப்பாளிடப்பட்டிருந்தது. ராமனின் கை கதவின் வெளித்தாழ்ப்பாளை ஒரு முறை தொட்டது. சிறிது ஒலி எழுந்தது. அதைக் கேட்டு ராமனே திடுக்கிட்டான். அவன் சற்று நேரம் நின்றான். கதவு திறக்கவில்லை, அவன் திரும்பிப் படுக்கைக்குவந்தான்......

தினமும் மாலையில் சாஸ்திரியின் ஆடல் பாடல் வகுப்பு தொடர்ந்தது.

ஒரு நாள் அவர் ராமனைத் தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோவிலுக்கு அழைத்துச் சென்றார். நேரே கருவறை வாசலுக்குக் கூட்டிக் கொண்டு போனார். அங்கு சில அர்ச்சகர்கள் இருந்தனர். சாஸ்திரி அவர்களுடன் ஏதோ பேசினார். அவர்களில் ஒருவர் இவர்களிருவரையும் கருவறையின் மாடிப் பகுதிக்கு அழைத்துச் சென்றார்.

அந்த அறை பிரும்மாண்டமான சிவலிங்கத்துக்கு மேலே இருந்தது. வெகுகாலமாக அடைப்பட்டுக் கிடந்ததால் ஒரு தீவிர நெடி. கூடவே கருவறையில் எண்ணெயும் நெய்யும் சுட்ட நாற்றம். இருட்டில் அறையில் ஒன்றும் தெரியவில்லை.

சாஸ்திரி கேட்டுக் கொண்டபடி அர்ச்சகர் ஒரு தீவட்டி கொண்டு வந்தார். அதன் வெளிச்சத்தில் ராமன் அந்த அறையின் விதானத்தைப் பார்த்தான். அது அரைவட்ட வடிவத்தில் குவிந்திருந்தது. அதன் அடிப்பாகத்தில் நாட்டியத் தோற்றங்கள் சித்திரிக்கப்பட்டிருந்தன.

கீழே கருவறைக்கு முன்னால் பக்தர்கள் கூட்டம், பூஜை மணி ஒலிக்கிறது. அத்துடன் நாதஸ்வர இசை, மத்தள ஒலி. இவற்றையெல்லாம் விட்டு விட்டுச் சித்திரத்தில் சிவன் நர்த்தனம் செய்கிறார். வியப்பில் தன்னை மறந்து அக்காட்சியைப் பார்க்கிறான் ராமன். அவன் இமைக்க மறந்துவிட்டான். நடனமாடும் சிவனுக்கு நான்கு கைகள். குவிந்த விதானம் அண்டவெளியின் உருவகம். சிவன்தான் சாஸ்திரி குறிப்பிட்ட மகாகாலன். சிவன் ஆட்டத்தில், ..' டத்தின் ஆனந்தத்தில் மூழ்கிப் போயிருக்கிறார்; மூவுலகிலும் என்ன நிகழ்கிறது என்ற நினைப்பே இல்லை அவருக்கு.

எல்லாச் சிற்பங்களிலும் சிவன்தான் ஆடுகிறார். ஆனால் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நடன நிலை, ராமன் எண்ணிப் பார்த்தான். மொத்தம் எண்பத்தோரு சிற்பங்கள். அவற்றுள்

ராமனை மிகவும் கவர்ந்தது சிவன் தன்னை மறந்து ஆடும் சிற்பந்தான். நடனத்தின் ஆனந்த போதையில் தன்னை மறந்த நிலையில் அவரது வலதுகால் தோள்வரை உயர்ந்துவிட்டது. இவ்வளவு அற்புதச் சிற்பத்தை ராமன் தன் வாழ்க்கையில் பார்த்ததில்லை.

"அது தான் ஆனந்ததாண்டவமூர்த்தி. அதை நன்றாகப் பார்த்துக்கோ, தம்பி" சாஸ்திரி கூறினார்.

'அபிநவ பாரதி' பாடம் மூன்று வாரங்களில் நிறைவு பெற்றது. அதன்பின் சாஸ்திரி புண்டரீக விட்டலின் புகழ்பெற்ற நூல் 'நர்த்தன நிர்ணய'த்தைக் கற்பிக்கத் தொடங்கினார் அதுவும் கற்பித்து முடிந்தபின் சாஸ்திரி சொன்னார் "இப்போ சங்கீ தத்தைப் பத்திக் கொஞ்சம்படி. கர்நாடக சங்கீதத்தின் பிறப்பு, அதன் வரலாறு, ராகங்களை உருவகப்படுத்தும் சித்திரங் கள் தாளம் லயம். சங்கீதமும் நடனமும் ஒன்றோ டொன்று இணைந்தவை......."

ராமன் இசை பற்றிய நூல்களைக் கற்றான் கும்பகர்ண ராஜாவின் 'சங்கீதராஜ்', ஹரிபால தேவரின் 'சங்கீத சுதாகரம்', சோமேசுவர தேவரின் 'மானசோல்லாசம்'; கடைசியில் சாரங்க தேவரின் 'சங்கீதரத்னாகரம்! சாரங்கதேவரின் படைப்புக்கு இணையில்லை – அவ்வளவு இனிமை, அவ்வளவு நுணுக்கமான தத்துவ விளக்கம். ரசிகத்தன்மை படைத்த கலா பண்டிதரை மகிழ வைக்கும் படைப்பு அது.

ராமன் நாட்டிய சாத்திரத்தை சாஸ்திரியிடம் நன்றாகக் கற்றுக் கொண்டுவிட்டான். அவன் இன்னும் இரண்டு நாட்களில் சிதம்பரத்தை விட்டுப் புறப்பட வேண்டும். ஆனால் சிதம் பரத்திலிருந்து கிளம்ப அவனுக்கு மனமில்லை.

அவன்தினம் இரவில் ஒரு முறை ரத்னாவின் அறைக்கு முன்னால் வந்து நிற்பான். கதவை மெதுவாகத் தட்டுவான். ஆனால் கதவு திறக்காது.

ரத்னாவின் சேவையில் குறைவில்லை. அவள் முழு ஈடுபாட்டுடன்தான் அவனுக்குப் பணிவிடை செய்தாள். ஆனால் அவள் அவனோடு ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை இது வரை.

"தம்பி, உனக்குக் கலியாணமாச்சா?" சாஸ்திரி கேட்டார்.

"இல்லே"

"யாராவது பெண்ணைக் காதலிச்சிருக்கியா? அனுபவிச்சிருக்கியா? அவளுக்கு இன்பங் கொடுத்திருக்கியா?" கேள்வி மேல் கேள்வி தொடுத்தார் சாஸ்திரி.

வெட்கத்தால் சிவந்த முகத்துடன் ராமன் சொன்னான், "இல்லே....."

"அப்பமுன்னா நீ எப்படி நாட்டியம் கத்துக்குவே? சிவனுக்குப் பார்வதி, கிருஷ்ணனுக்கு ராதை, ராமனுக்கு சீதை நாயக நாயகி பாவம் தான் நாட்டியத்திலேயே மிகவும் முக்கியமான பாவம். அந்த பாவத்தை நீ எப்படி நாட்டியத்தின் மூலம் வெளிப்படுத்துவே? நாட்டியம் கத்துக்கறதுக்கு முன்னாலே நீ உன் மனசுக்குப் பிடிச்ச பெண்ணைச்சேர் ....."

இவ்வாறு சாஸ்திரி பேசியபோது ரத்னா அங்கே இல்லை. அவர் குறும்புச் சிரிப்புடன் ராமனைப் பார்த்துக் கண் சிமிட்டினார்.

"நம்ம சுந்தரியைப் பிடிக்கறதா உனக்கு?"

ராமன் கீழே விழுந்து அவருடைய கால்களைப் பிடித்துக் கொண்டு சொன்னான், "குருவே, நீங்க எல்லாம் அறிஞ்சவர்!".

"அப்பமுன்னா இன்னிக்கு ராத்திரி ஆத்தங்கரைக்குப்போ...... அவரொம்ப வீம்புக்காரி. அவளோட அன்பு மட்டும் உனக்குக் கிடைச்சுட்டா....அவ மாதிரி கெட்டிக்காரப் பெண் இந்தப் பிராந்தியத்திலே கிடைக்கமாட்டா.... அவ உனக்குத் தோழியானால் நீ தான் நாட்டியத்துக்கு ராஜா ....".

வீட்டுக்குப் பின்னாலேயே ஆற்றுப்படித்துறை. இரவில் அவன் துறைக்கு வந்தான. அங்கு ரத்னா வானத்தை அண்ணாந்து நோக்கியவாறு உட்கார்ந்திருந்தாள். நிலவொளியில் எங்கும் அமைதி. காற்றில் பிச்சிப் பூவின் மணம் மிதந்து வந்தது. ரத்னா பிச்சிப் பூமாலையொன்றைக் கொண்டையில் சுற்றியிருந்தாள். இன்னொன்றைக் கழுத்தில் அணிந்திருந்தாள் இப்போதே மேடையேறி நாட்டியமாடப் போகிறவள்போல.

அவன் அருகில் சென்றபோது அவள் தியாகராஜர் பாடலை மெல்லப் பாடிக் கொண்டிருப்பது கேட்டது 'நின்னு நேரே நம்மி நானுரா . . . ஓ ராமா ராமையா . . .'.

கோமுகியிலிருந்து பெருகிவரும் கங்கையின் பிரவாகம் ராமனின் நெஞ்சில். அவன் ரத்னாவின் முன்னால் போய் நின்றான்.

"நான் நாளைக்குப் போகப் போறேன் ....... போறதுக்கு முன்னால் உங்களுக்கு ....".

ரத்னாவின் பாட்டு நின்று விட்டது. அவள் எழுந்து நின்றாள்.

"......உங்களுக்கு ..... உங்களுக்குச் சொல்ல விரும்பறேன்...." உணர்ச்சிப் பெருக்கில் முழுகித் திணறுகிறான் ராமன். வார்த்தைகள் ஒன்றோடொன்று கலந்து குழம்பி விட்டன. அதன்பின் எல்லாமே விழுந்தடித்துக் கொண்டு ஒரே சமயத்தில் வெளி வந்தன-"எனக்கு நீ வேணும்! ..... நீ வேணும் ...." அவன் கைகளை நீட்டி அவளைக் கட்டிக் கொண்டான்.

அவள் தன்னை மெதுவாக அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டாள், சொன்னாள், "சீ, நான் தாசி, என்னைத் தொடக் கூடாது!..."

ஊசி குத்திய பலூனின் நிலையில் ராமன். அமாவாசை இருள் அவனைச் சூழ்ந்தது. அவன் தன்னை நொந்து கொண்டான்-"சீ, என்ன அசட்டுத்தனம் செய்துவிட்டாய்! அவசரப்பட்டு விட்டாயே! ...நீ உன் நோக்கத்தைத் தெளிவாக்காமல், அவள் உன்னைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டாளே! ....."

பேசத் தோன்றாமல் நின்று பார்த்துக் கொண்டிருந்தான் ராமன், ரத்னா படிகளின் மேலேறிப் போய்க் கொண்டிருக்கிறாள்.....

"ரத்னா, இதைக் கேளு!..."என்று சொல்லத் திரும்பினான் அவன், ஆனால் வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வரவில்லை...

மறுநாள் அவன் சிதம்பரத்தைவிட்டுப் புறப்பட்டான். அவன் விடை பெறும் போது சாஸ்திரி அவனை ஆசீர்வதித்துவிட்டுச் சொன்னார்-"தீர்க்காயுசா இரு, அப்பா! .... ஞாபகம் வச்சுக்கோ, கலைத்தேவி ஒரே நாளிலே யாருக்கும் பிடி கொடுக்கமாட்டா. அவளை அடைய விடாப்பிடியா முயற்சி பண்ணிக்கிட்டே இருக்கணும்!....."

☆ ☆ ☆

படகு வெகு தூரத்தில் இருந்தது. இருந்தாலும் பீட்டர்தான் வருகின்றான் என்று புரிந்து கொண்டான் அந்தோனி. அலைகளின் மேல் ஏறித் தாவிக் கொண்டு ஓடிவருகிறது படகுக் குதிரை. பீட்டரின் கையில் கடிவாளக் கயிறு - அதாவது பாயின் கயிறு. அவன் கயிற்றை வேண்டியபடி இழுத்துப் பாயின் மீது காற்று வீசச் செய்கிறான். பீட்டர் படகின் முன் பகுதியில் நெப்ட்யூன் தேவதைபோல் கம்பீரமாக நிற்கிறான். மற்ற படகுகள் பின் தங்கி விட்டன. படகுகள் போட்டி போட்டுக் கொண்டு வருவதைக் காண உற்சாகமாயிருக்கிறது.

தெற்குப் பக்கம் மீன் சந்தை. இன்னும் சூடு பிடிக்கவில்லை. ஆனால் வாடிக்கைக் காரர்கள் சிலர் வரத் தொடங்கி விட்டனர். ஜோக்கிம் மாசாதோ இங்குமங்கும் அலைந்து கொண்டிருக்கிறான். அவன் அந்தோனியைப் பார்த்தாலும் கைதூக்கி வணக்கம் தெரிவிக்காமல் நகர்ந்து போய் விட்டான்.

சற்றுத் தொலைவில் ரஸ்தாவில் ஏதோ களேபரம். சிலர் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அடிதடி. ஒருவன் கரையில் வந்து விழுந்தான். அவன் வாயிலிருந்து திட்டுகள் சரமாரியாக வந்து கொண்டிருந்தன - 'பன்னிப்பயலுக ! நாசமாப் போக !"

மற்றவர்கள் ஓடிவந்து அவனைப் பிடித்துக் கொண்டனர். மறுபடி குஸ்தி, அடிதடி. இந்தக் காட்சியை வேடிக்கை பார்ப்பவர்களுக்கு ரொம்ப உற்சாகம். அவர்கள் கைகொட்டிச் சண்டைக் காரர்களைத் தூண்டி விட்டார்கள்.

அந்த ஆளுக்கு நடுத்தர வயதிருக்கும். கண்ணியமானவனாகத் தோற்றமளித்தான். அவனுடைய தோற்றத்துக்கும் இந்தச் சண்டைக்கும் பொருத்தமேயில்லை. ஆனால் இப்போது அவன் ஸ்பிரிங் வைத்த ஜப்பானிய பொம்மை மாதிரி குதிக்கிறான், பைத்தியம் போல் கை காலை ஆட்டுகிறான். வாயில்வந்தபடி திட்டுகிறான்.

அந்தோனி பீட்டரை மறந்துவிட்டு இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அந்த ஆளுக்கு நல்ல பலம். கட்டுமஸ்தான இரண்டு இளைஞர்களால் அவனைச் சமாளிக்க முடியவில்லை. ஒரு தடவை அவர்கள் அவனைப் பிடித்து அமுக்கி விடுகிறார்கள். ஆனால் அவன் உடனே திமிறிக் கொண்டு தண்ணீரை நோக்கி ஓடுகிறான். - "நான் தண்ணியிலே விழுந்து சாகப்போறேன் ! . . ."

அவன் தண்ணீரில் விழுந்து விட்டான், மற்றவர்கள் கத்தினார்

பீட்டர் இதற்குள் வந்துவிட்டான், அவன் உடனே தண்ணீரில் குதித்து நீந்திப் போய் அந்த ஆளை இழுத்துக் கொண்டு வந்தான் பீட்டரின் பிடியில் அந்த ஆள் இப்போது நனைந்த பூனைக்குட்டி மாதிரி பரம சாது.

கரையேறியதும் மறுபடி திட்டத் தொடங்கிவிட்டான் அவன் – "பன்னிப்பயல்களா ! நாசமாய் போறவங்க ? நாய்ப்பசங்க! . . என்னைச்சாகவும் விட மாட்டேங்கறீங்க!. . நான் செத்துப் போறேன் ! என்னைச் சாக விடுங்க, நீங்களும் பிழைச்சுப் போங்க ! . . . ."

பீட்டர் சிரித்துவிட்டான், " அதுக்குள்ளேயா சாகப்போறே! . . அதெல்லாம் நடக்காது, சித்தப்பா !"

அந்த ஆள் பீட்டரைப் பார்த்து மிரள மிரள விழித்தான். பிறகு அவனை அடையாளங்கண்டு விம்மி விம்மியழத் தொடங்கினான் "பீட்டர், உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். என்னை இந்த ஒநாய்கள் கிட்டேயிருந்து காப்பாத்து ! . . ."

அவன் வாயிலிருந்து குப்குப்பென்று கள் நாற்றமடித்தது. அந்தோனி பீட்டரிடம் வந்தான். பீட்டர் அவனிடம் சொன்னான். "நீ வந்தது நல்லதாய் போச்சு, அந்தோனி . . நீ செபாஸ்டியன் சித்தப்பாவைக் கூட்டிக்கிட்டு வீட்டுக்குப்போ, விசயம் என் னன்னு விசாரிக்கணும் . . . நான் இந்த மீன்களை விற்க ஏற்பாடு செஞ்சுட்டு இதோ வரேன் . . . "

பிறகு அவன் ரஸ்தாவில் போய்க் கொண்டிருந்த ஒரு குதிரை வண்டியை நிறுத்தி அதில் செபாஸ்டியனை உட்கார வைத்து விட்டுச் சொன்னான். "சித்தப்பா, ஒழுங்காப் போகணும் ! வழி யிலே ஏதாவது தகராறு பண்ணினால் சும்மா விட மாட்டேன் . . "

இளைஞர் இருவரும் கோபத்துடன் பீட்டர் பக்கம் திரும்பினார் கள் "எங்க அப்பாவைக் கூட்டிக்கிட்டுப் போக நீ யாரு ?"

பீட்டர் அவர்களுக்குப் பதிலேதும் சொல்லாமல் படகை நோக்கிப் போனான்.

ஆச்சரியம் ! வண்டியில் போகும் போது ஒரு தொந்தரவும் செய்யவில்லை செபாஸ்டியன். சற்று நேரத்துக்குமுன் கோமாளி மாதிரி குதித்தவனா இவன் என்று நினைக்கத் தோன்றியது.

அந்தோனியின் வீடுவந்ததும் அவனும் செபாஸ்டியனும் வண் டியிலிருந்து இறங்கினர். அந்தோனி வண்டிக்காரனுக்குப் பணங்கொடுக்கப் போனான். செபாஸ்டியன் அந்தோனியைத் தடுத்து விட்டுத் தன் ஈரச் சட்டையின் பையிலிருந்து எட்டணா எடுத்து வண்டிக்காரனுக்குக் கொடுத்தான்.

வண்டி போனபின் செபாஸ்டியன் அந்தோனியிடம் சொன்னான் "கடற்கரையிலே நடந்த நாடகத்துக்காக உங்ககிட்டே மன்னிப்புக் கேட்டுக்கறேன். வேறே வழியில்லாமேதான் அப்படி செஞ்சேன் . . ."

அந்தோனி அவனை வீட்டுக்குள் அழைத்து வந்து ஒரு வேலைக்காரனைக் கூப்பிட்டு ஒரு வேஷ்டியும் துண்டும் கொண்டு வரச் சொன்னான். பிறகு செபாஸ்டியனிடம் "நீங்க அந்த அறையிலே போய் நனைஞ்ச துணிகளை அவிழ்த்துப் போட்டுட்டு இந்த வேஷ்டியைக் கட்டிக்கிட்டு வாங்க."

உலர்ந்த வேஷ்டி துண்டு அணிந்து கொண்டபின் கண்ணியமாக ஒரு பள்ளியாசிரியர் போலத் தோற்றமளித்தான் செபாஸ்டியன். அவன் எதுவும் பேசாமல் நேரே காட்வினின் ஓவியத்துக்கு முன்னால் போய் நின்றான். கண்களை மூடிக்கொண்டு கை கூப்பிப் பிரார்த்தனை செய்தான், "ஐயா, நீங்க நம்ம சமூகத்திலே இலட்சிய மனுசர். உங்ககிட்டே தைரியம் இருந்தாப்பலே திறமையும் இருந்தது. உங்களோட நெஞ்சுத் துணிவிலே கொஞ்சம் எனக்குக் கொடுங்க. நான் இந்தக் கோள் சொல்லிப் பசங்களுக்கு நல்ல பாடங் கற்பிக்கறேன். இவங்களெல்லாம் கத்தோலிக்க மீனவங்களாம்! இவங்க பன்னிகள், கழுகுகள் . . என் பிராணனை எடுக்கறாங்க . . .

அந்தோனியின் முன்னால் இது ஒரு நாடகம், செபாஸ்டியன் பெரிய நடிகன் என்பதை இதற்குள் புரிந்து கொண்டு விட்டான் அந்தோனி. செபாஸ்டியனின் பேச்சில் நாடகம், நடையில் நாடகம் . . .

அவன் அந்தோனி பக்கம் திரும்பிச் சொன்னான் – "என் பேர் செபாஸ்டியன் கொரேரா. இந்த ஊரிலே நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன். உங்களுக்கு என்னைத் தெரியாது. நீங்க காட்வின் துரையோட பிள்ளைதானே? நான் உங்களை முன்னால் பார்த்ததில்லே, இருந்தாலும் உங்களை எனக்குத் தெரியும் . . . நீங்க லண்டனிலேயா இருக்கீங்க? . . ."

அந்தோனி பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். பிறகு வீட்டுக்குள்ளே போனான். காபி கொண்டு வரச் சொல்லிவிட்டு அவன் மறுபடி அறைக்குள் நுழைந்தபோது செபாஸ்டியன் கண்களை மூடிக் கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தான். அந்தோனியின் காலடிச்சத்தம் கேட்டு அவன் கண்களைத் திறந்தபோது அந்தோனி அவன் முன்னால் நின்று கொண்டிருந்தான். அந்தோனிக்குப் பின்னால் வேலைக்காரன் தட்டில் காபியும் சிற்றுண்டியும் வைத்துக் கொண்டு நின்றிருந்தான்.

அந்தோனி காபி டம்ளரை செபாஸ்டியனிடம் நீட்ட அவன் அதை வாங்கிக் கொண்டு சொன்னான், " ரொம்ப நன்றி, மிஸ்டர் ஃபெர்னாண்டோ, விருந்தாளிகளை உபசரிக்கிறதிலே உங்களை மிஞ்சமுடியாது. . .ஒரு கப் காபி இருந்தால் நல்லாயிருக்கும்னு இப்பத்தான் நினைச்சேன் . . . ஒரு வேண்டுகோள் . . ."

"என்ன, சொல்லுங்க . . ."

"ஒரு பாக்கெட் வில்ஸ் சிகரெட்டும் ஒரு தீப்பெட்டியும் வாங்கிக்கிட்டு வரச் சொல்லுங்க... என் சட்டைப்பையிலே இருந்த சிகரெட் நனைஞ்சு போயிடுச்சு . . ரூபா நோட்டும் நனைஞ்சு போச்சு . . " செபாஸ்டியன் நனைந்து போன கரன்சி நோட்டை அந்தோனியிடம் நீட்டினான்.

சிகரெட் வீட்டிலேயே இருந்தது. அந்தோனி வேலைக்காரனை அனுப்பி அதைக் கொண்டு வரச் சொன்னான். ஐநூற்று ஐம்பத்தைந்தாம் நம்பர் சிகரெட் பாக்கெட். செபாஸ்டியன் காபியைக் குடித்தான். சிகரெட் பாக்கெட்டைப் பார்த்துவிட்டு, "அடே, அசல் வெளி நாட்டு சிகரெட் ! . . ." என்று ஆனந்தப்பட்டான்.

"பாக்கெட்டை நீங்களே வச்சுக்கங்க. . ."

"இல்லேயில்லே, அதெப்படி . . "

செபாஸ்டியன் சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு நீண்ட இழுப்பு இழுத்தான். ஒரே இழுப்பில் சிகரெட் பாதியாகி விட்டது. அவன் வாயிலிருந்து நிறையப் புகை விட்டுவிட்டுச் சொன்னான், "வெளி நாட்டுச் சரக்கோல்லியோ, ரொம்ப லைட்டாயிருக்கு . . ஆனால் அபூர்வமணம் . . . ரொம்பக் காலத்துக்கு முன்னாலே நானும் இந்த சிகரெட் தான் குடிச்சுக்கிட்டிருந்தேன். இப்போ இது போதல்லே. இன்னும் ஸ்ட்ராங்கா வேண்டியிருக்கு. இல்லேன்னா. . சரி, நீங்க இன்னும் எவ்வளவு நாள் இருப்பீங்க?"

"நிச்சயமாகச் சொல்ல முடியலே . . ."

"நான் ஒண்ணு சொல்றேன், கேட்பீங்களா ?" தயக்கத்துடன் கேட்டான் செபாஸ்டியன்.

"சொல்லுங்களேன் . . . "

"இங்கே இருக்காதீங்க . . .உடனே போயிடுங்க. அப்பாவோட சொத்தையெல்லாம் வித்து ரொக்கத்தை எடுத்துக்கிட்டுப் போயிடுங்க. . . இந்த இடம் ரொம்ப மோசம் . . "

அந்தோனி இதுவரை அதிக அக்கறையில்லாமல் செபாஸ்டியனின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். செபாஸ்டியன் கடைசியாகப் பேசியது அவனை அக்கறை எடுத்துக் கொள்ள வைத்தது. அவன் கேட்டான், " ஏன் அப்படிச் சொல்றீங்க ? "

"பீட்டரோட அப்பா படுகொலையான செய்தி கேள்விப்பட்டீங்களா ? . . . அப்பா, என்ன பயங்கரம் ! அநியாயப்படுகொலை . . . யாரு சாட்சி சொல்லுவாங்க ? இந்த ஊர் மீனவங்க யாரும் சாட்சி சொல்ல முன்வரல்ல. . . யாருக்குத் தைரியம் வரும் சாட்சி சொல்ல? . நான் சாட்சி சொல்ல ஒப்புத்துக்கிட்டேன்... எனக்குத் தெரிஞ்சதையெல்லாம் கோர்ட்டிலே சொல்றேன்னேன்... "

அந்தோனிக்கு ஆச்சரியம். அவன் செபாஸ்டியனைப் புதிய பார்வையில் பார்த்தான்.

"என்ன நடந்தது, தெரியுமா ? இந்த விஷயம் எப்படியோ வெளியே தெரிஞ்சு போச்சு . . . எனக்கு மூளை கெட்டுப் போச்சுன்னு போலீஸ்காரங்க ரிப்போர்ட் எழுதிட்டாங்க ! ஆகையாலே என் சாட்சியம் செல்லாதாம் ! எப்படி இருக்கு ? . . . என்ன அயோக்கியத்தனம் பாருங்க ! "

செபாஸ்டியன் டம்ளரில் இன்னும் கொஞ்சம் காபி ஊற்றிக் கொண்டான் ; இன்னொரு சிகரெட் பற்றவைத்துக் கொண்டான்.

"அந்தக்காலம் இப்போ இல்லை. அப்போ இங்கிலீசுக்காரங்க மூணாம் மனிசனாயிருந்தாங்க. நம்ம ஜனங்களுக்குள்ளே சண்டை வந்தால் இங்கிலீசுக்காரங்க கோர்ட்டிலே நியாயம் கிடைக்கும். அதனால்தான் அந்தக் கோர்ட்டுக்கு இப்பவும் நல்ல பேர்... நாம விடுதலையான பிறகு கோர்ட்டிலே நியாயமும் போயிடுச்சு. கூச்சங்கீச்சமில்லாமே பகிரங்கமாக அநியாயம் நடக்குது. இப்போ நாடு பூராவும் பெருச்சாளிகள், பிசாசுகளோட ராஜ்ஜியந்தான். இதை விட இங்கிலீசுக்காரங்க ஆட்சியிலே நாம எவ்வளவோ நல்லாயிருந்தோம். . ."

"அதென்ன அப்படிச் சொல்றீங்க ? நாடு விடுதலையாக எவ்வளவு போராட்டங்கள், எவ்வளவு தியாகங்கள் ! எவ்வளவு பேர் தூக்கு மேடை ஏறினாங்க ! ஜனங்கள் எவ்வளவு எதிர்பார்த்தாங்க !"

"இந்த மாதிரி பெரிய பெரிய பேச்செல்லாம் கேட்கறதுக்குத்தான் நல்லாயிருக்கும்.... பிறத்தியான் தலைமேலே பலாப்பழம் உடைச்சுச் சாப்பிடற சுயநலக்காரங்க இந்த விஷயங்களையெல்லாம் தங்களோட லாபத்துக்குப் பயன்படுத்திக்கறாங்க . . ."

பேசாமல் செபாஸ்டியனையே பார்த்துக் கொண்டிருந்தான் அந்தோனி.

செபாஸ்டியன் நல்ல சூடான காபியை அவ்வப்போது குடித்துக் கொண்டான். சூடாகக் காபி குடிக்கும் பழக்கம் போலும். அத்துடன் சிகரெட்டிலும் நீளமான இழுப்பு இழுத்துக் கொண்டான்.

"எல்லாம் பொய், பொய் ! . . எல்லாம் மோசடி!" திடீரென்று உரக்கக் கூவினான் செபாஸ்டியன். அவன் கண்கள் சிவந்து விழிகள் பிதுங்கும் போலிருந்தன.

பெரிய கிறுக்கன் போலிருக்கிறதே !

"சுதந்திரம் ! ஜனநாயகம் ! எல்லாம் பொய் !" நாய்போல் உறுமினான் செபாஸ்டியன். "நீங்க வெளிநாட்டிலே இருக்கீங்க. இந்த நாட்டு நடப்பு ஒண்ணும் தெரியாது உங்களுக்கு. ஒரு சில ஆளுங்க பூரா நாட்டையும் சுரண்டிக் கொழுக்கறாங்க. நெத்தி வேர்வை நிலத்திலே விழ ராப்பகலா உழைக்கறவங்க ரெண்டு வேளைச் சோறு கிடைக்காமே தவிக்கறாங்க. அவங்களோட பொம்பளைங்களோட மானத்தைக் காக்கக் கந்தை கிடைக் கல்லே அவங்களுக்கு. . ."

அந்தோனிக்கு ஓரிரவில் கடற்கரையில் தான் கண்ட மர மறுப்பவர்களின் நினைவு வந்தது. இருந்தாலும் அவன் அந்த நினைவை அடக்கிக்கொண்டு விவாதித்தான் - "அவங்களோட நிலைமையை ரெண்டு வருசம் நாலு வருசத்திலே மாத்திட முடி யுமா ? அதுக்குப் பல வருசங்கள் முயற்சி பண்ணிக்கிட்டே . . ."

அந்தோனியை இடைமறித்து அழுத்தமாகப் பேசினான் செபாஸ்டியன் - "இப்ப இருக்கற அமைப்பிலே ஏழைங்களோட கஷ்டம் ஜன்னி மாதிரி ஏறிக்கிட்டே போகுமே தவிரக் குறையாது"

"என்ன சொல்றீங்க ?"

"சரியாகத்தான் சொல்றேன்... நீங்க வெளிநாட்டிலே இருக் கீங்க. நம் நாட்டுச் சேரிகளைப் பார்த்திருக்கீங்களா ? ஐரோப்பா அமெரிக்காவிலே இருநூத்தம்பது வருசத்துக்கு முன்னாலிருந்த சேரிகளை இந்த நம் நாட்டுச் சேரிகளோடு. ஒப்பிட்டால் சுவர்க்கம் ! . . ."

அந்தோனியின் மனக்கண்ணில் அவன் ரயில் பாதை யோரத் தில் பார்த்த சேரிகள் தோன்றின - விருது நகர், மணியாச்சி, சாத்தூர், தூத்துக்குடி . . எல்லா இடங்களிலும் சேரிகள் ஒரே மாதிரிதான். பாரத நாடெங்கும் சேரிகள் நரகம். அவற்றில் வசிப்பவர்களை மனிதர்களாகவே கருதமுடியாது.

செபாஸ்டியனின் வாயிலிருந்து குப்குப்பென்று கள் நாற்றம் வருகிறது. கோமாளி மாதிரி நடந்து கொள்கிறான். அப்படிப் பட்டவனா இப்படிப் பேசுகிறான்! அந்தோனிக்கு ஒரே ஆச்சரியம்.

"நான் உங்களைச் சும்மாவா ஓடிப் போயிடச்சொல்றேன் ?. . இந்த நாடு எப்பவுமே குழப்பமாத்தானிருந்தது. இப்போ இன் னும்மோசம்."

அந்தோனி ஒன்றும் புரியாமல் விழித்தான்.

செபாஸ்டியன் விளக்கினான் – "பாருங்களேன்! நம்ம நாட்டிலே நூத்தில நாலு பேருக்குக்கூட எழுதப் படிக்கத் தெரியாது. அதைத்தவிர, ஜனநாயகம் எவ்வளவு பயங்கரமான விசயம்! யாரோ ஒரு அரசியல் ஞானி சொல்லியிருக்கார் – 'முட்டாள்கள் கையிலே ஜனநாயகம் ஒரு பயங்கரமான ஆயுதம்'னு. . ." ஹாஹா வென்று சிரித்தான் செபாஸ்டியன். "ஜாக்கிரதை, மிஸ்டர் ஃபெர்னாண்டோ! ஆயிரமாயிரம் வருசமா வறுமையும் பணத்திமிரும் பக்கத்திலே பக்கத்திலே இருந்துக்கிட்டு இருக்கிற நாட்டிலே ஜனநாயகம். . ."

அந்தோனி சொன்னான், " அதுக்காகத்தான் ஐந்தாண்டுத் திட்டங்கள். ஏழுபத்தி மூணு எழுபத்தி நாலுக்குள்ளே நம்ம நாட்டு வருமானம் ரெட்டிக்கும். விவசாயத்தை நம்பி வாழறவங்க அறுபது சதவிகிதமாக் குறைஞ்சுடுவாங்க. பத்து, பதினோரு வயதுக்குட்பட்ட குழந்தைகள் எல்லாருக்கும் கட்டாய இலவசப் படிப்பு. 1966க்குள்ளே இதெல்லாம் நடந்துடும். நமக்கு வேண்டியது நேரமும் பொறுமையும்தான். . ." ஹைகமிஷனர் ஆபீசில் ஐந்தாண்டுத் திட்டக் காகிதங்களைப் படித்து இதெல்லாம் மனப்பாடமாகிவிட்டது அவனுக்கு. "நீங்க இந்த நாட்டிலே குழப்பம்னு ஏன் சொல்றீங்க?"

"குழப்பம் இல்லையா பின்னே? . . நானும் கொஞ்ச காலம் எகனாமிக்ஸ் புத்தகங்கள் படிச்சுப்பார்த்திருக்கேன். அதிலே தெரிஞ்சது ரெண்டு வித அமைப்பு உண்டுன்னு. ஒண்ணு முதலாளித்துவம் – அமெரிக்கா, மேற்கு ஐரோப்பாவிலே இருக்கற மாதிரி. இன்னொன்ணு, ரஷியா, சைனாவிலே இருக்கற பொதுவுடைமை. மனிதன் நல்லவனாயிருந்தா ஏதாவதொரு வகையிலே சமூகத்தை முன்னேற்ற முடியும். இலட்சியத்திலே ஈடுபாடு இருந்தால் கொள்கையைச் சிந்தித்துப் பார்த்து முடிவு செய்யத் திறமைவரும். தவறு நேர்ந்தால் திருத்திக் கொள்ளவும் முடியும். ஆனால் ஒருவகையையும் பூரா எடுத்துக்காமே இதிலே கொஞ்சம் அதிலே கொஞ்சம்னு எடுத்துக்கதம்பமா ஒண்ணு தயார் பண்ணினா அது குழப்பமில்லாமே என்ன? அரைக் கழுதையையும் அரைக் குதிரையையும் சேர்த்து ஒட்டவச்ச மாதிரின்னா இது! . . ."

வங்காளி எழுத்தாளர் சுகுமார் ராய் ஏழுதிய 'ஆபோல் தாபோல்' என்ற வேடிக்கைக் கவிதைத் தொகுப்பு நினைவு வந்தது அந்தோனிக்கு. அதில் கொக்கும் ஆமையும் சேர்ந்த ஒரு பிராணிவரும், யானையும் திமிங்கிலமும் சேர்ந்த ஒரு பிராணி

வரும். இயற்கையில் இல்லாத விசித்திரப் பிராணிகள்.. . அந்தோனி விவாதத்துக்காகச் சொன்னான்," ஏன், இது ரெண் டையும் சேர்த்துப் புதுசா ஒன்று தயார் செய்யக் கூடாதா?"

"செய்யலாமா முடியாதாங்கறதைப் பத்திப்பெரிய நிபுணர்கள் கவலைப்படட்டும். நான் பார்க்கறது வேறே. எகனாமிக்ஸ் கொள்கையாலே மனிதர்களுக்குள்ளே பரஸ்பர அன்பு வளர ணும், பொறமை குறையணும் . . நீங்க ஒரு மாசம் இங்கே இருந்து பாருங்க - இங்கிலீஷ்காரன் ஆட்சிக்கும் நம்மளவங்க ஆட்சிக்கும் உள்ள வித்தியாசம் தெரியும் . . நிறையப் பேசி என்ன லாபம்? நான் என் அனுபவத்திலே பார்க்கறேன், மனுசங்களுக்குள்ளே அவநம்பிக்கை ஜாஸ்தியாயிடுச்சு, பொறாமை பெருகிடுச்சு. நாம கெட்டவங்களா ஆயிக்கிட்டிருக்கோம்.. நம்ம வாழ்க்கை யிலே பெரிய குழப்பம். . 'எப்போதும் உண்மை பேசணும்'னு பாட புத்தகத்திலே போட்டிருக்கும். ஆனால் சமூகம் பொய் சொல்லக் கத்துத்தர்றது. பொய் சொல்லலேன்னா வாழ்க்கையிலே தோல்வி தான். 'பிறரை ஏமாத்தாதே'ன்னு புத்தகம் சொல்றது. நாம ஏமாத்தியே பிழைக்கறோம். . எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர் வெளிநாட்டிலே போய் விஞ்ஞானத்திலே டாக்டர் பட்டம் வாங்கிக்கிட்டு வந்திருக்கார். அவருக்கு சர்க்காரோட விஞ்ஞான ஸ்தாபனம் ஒண்ணிலே நல்ல வேலையும் கிடைச்சது. ஆனால் அவர் அந்த வேலையிலே சேரலே. ஏன் தெரியுமா? அவரோட குரு ஆருடம் பார்த்துச் சொல்லிட்டாராம் - இந்த வேலை அதிருஷ்டமில்லேன்னு! . .. இதைவிட வேறே என்ன குழப்பம் வேணும் சொல்லுங்க! மார்க்ஸ் படிச்ச நம்மூர் கம்யூனிஸ்ட்டுகள் ஜாதியை நம்றாங்க, நெத்தியிலே விபூதி பூசிக்கறாங்க, சாமிக் குப் பூஜை பண்றாங்க. இந்தக் குழப்ப நாட்டிலே ரெண்டு படகிலேயும் கால்வச்சுக்கிட்டு ஒரு பொருளாதாரக் கொள்கை நம்ம கழுத்துக்குச் சுருக்கு தான், வேறே என்ன! ஹா ஹா! . . ."

சிரித்துச் சிரித்து செபாஸ்டியனின் கண்களில் நீர் வந்து விட்டது. அவன் சிரித்துக் கொண்டிருக்கும்போது பீட்டர்வந்து அறைக்குள் நுழைந்தான்.

☆ ☆ ☆

பீட்டர் இதற்குள் வீட்டுக்கு வந்து குளித்து விட்டு உலர்ந்த வேஷ்டியும் கையில்லாத பனியனும் அணிந்து கொண்டிருந்தான். அவன் கையில் காபி டம்ளர். அவன் செபாஸ்டியனைக் கேட்டான், "ஏன் சித்தப்பா இப்படி ஆயிட்டே?"

செபாஸ்டியனின் மனதை நோகச் செய்யும் கேள்வி.

செபாஸ்டியன் தலையைக் குனிந்தவாறு சற்று நேரம் பேசாம லிருந்தான். பிறகு அவனிடமிருந்து பெருமூச்சொன்று வெளிப் பட்டது.

இருவரையும் பார்த்துக் கொண்டிருந்தான் அந்தோனி.

பீட்டர் காபியைக் குடித்தவாறே மறுபடி கேட்டான், "நீ ஏன் முழுகிச் சாகப்போனே?"

"ஏன் உசிரோட இருக்கணும், சொல்லு!"

செபாஸ்டியனின் முகம் குழந்தையைப் பறிகொடுத்த தாயின் முகம் போல் பரிதாபமாயிருந்தது. வருத்தம் தோய்ந்த குரல்.

"ஏன்? வீட்டிலே அழகான மனைவி - சித்தி ஊருக்குள்ளே பெரிய அழகின்னு பேர் வாங்கினவ - குழந்தை குட்டிகள் - வசதி யான குடும்ப வாழ்க்கை..."

செபாஸ்டியனிடமிருந்து பதில் இல்லை.

"உனக்கு உப்பளம் இருக்கு. ரயில் இலாகாக் காண்டிராக்ட் இருக்கு. ஏற்றுமதி வியாபாரம் இருக்கு. உனக்கு என்ன கஷ்டம்?"

இன்னொரு பெருமூச்சு விட்டான் செபாஸ்டியன், "உன்னோட சித்தி இப்போ உசிரோட இல்லே ..."

"என்ன? ... என்ன ஆச்சு?"

"போன ஜூலை மாசம் கருப்பையிலே கட்டி வந்து..."

"ஐயோ பாவம்! ... சித்தி ரொம்ப நல்லவ ... அவ ஆத்மா சாந்தியடையட்டும்!"

"சாந்திக்கென்ன குறைச்சல்!" ஒருநொடியில் செபாஸ்டிய னின் குரல் மாறிவிட்டது. வறண்ட குரலில் கேலி, எரிச்சல். "ஒரு நல்ல மனுசனைக் குட்டிச் சுவராக்கிட்டு எவ்வளவு சாந்தியோ டே இருக்க முடியுமோ அவ்வளவு ..."

பீட்டருக்கு ஒரே ஆச்சரியம். அந்தோனிக்கும்தான். நாட்டு நடப்பைப் பற்றி இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்த செபாஸ்டியன் இல்லை இவன்.

"வாழ்நாள் பூரா என் பிராணனை வாங்கிட்டுப் போய்ச் சேர்ந்துட்டா!"

"என்ன சொல்றே நீ?... சித்தி எவ்வளவு நல்லவ! எவ்வளவு கெட்டிக்காரி! ரொம்ப ஈவிரக்கமுள்ளவ..."

"அப்பா பீட்டர், நீ என் மகன் மாதிரி. நீ குழந்தையா இருந்த காலத்திலிருந்து உன்னை நேசிச்சிருக்கேன். உங்கிட்ட சொல்றேன்... ஆவ்..." பெரிதாக ஏப்பம் விட்டான் செபாஸ்டியன். அதிலிருந்து கள்ளின் நெடி அறையெங்கும் பரவியது.

"கள்ளுக் குடிச்சுக் குடிச்சுத்தான் உன் நிலை இப்படி ஆயிடுச்சு" - " பீட்டர் கடுமையாகச் சொன்னான்.

"இல்லே பீட்டர். இப்போ நான் குடிக்கிறது உண்மைதான். நான் இப்போ குடிகாரன் ... பேய் ... ஒழுக்கங்கெட்டவன்!"

"நீ அந்தக் காலத்திலே எப்படி இருந்தே? ஏழை மீனவர்கள் கிட்டே எவ்வளவு அன்பாயிருந்தே!... அப்பா உன்கிட்டே யோசனை கேட்கப் போவார்... ஒரு தடவை புயல்லே மீனவங்களோட குடிசைகள் அழிஞ்சு போன போது நீதான் அவங்களுக்கு உதவி செய்ய முன் வந்தே. அப்போ நானும் உன்னோட ... அதை நான் மறக்கல்லே... அன்னிக்கு ஒரு நாள் நீ எனக்கு முதல் முதல் கார்ல் மார்க்ஸைப் பத்திச் சொன்னதை, மார்க்ஸீயம்கிறது என்னன்னு தெளிவா விளக்கியதை என்னாலே மறக்க முடியாது சித்தப்பா ... உன்னோட படிப்பு, உன்னோட லட்சியம், உன்னோட காரியங்கள் எல்லாம் சேர்ந்து நீ என் லட்சிய மனுசனாயிருந்தே சித்தப்பா!...

செபாஸ்டியன் வேஷ்டி முனையைத் தன் வாயில் அடைத்துக் கொண்டு விம்மி விம்மியழத் தொடங்கினான். சற்றுநேரம் அழுத பின் மூக்கைச் சிந்திக் கொண்டான், கண்களைத் துடைத்துக் கொண்டான். பிறகு பேச ஆரம்பித்தான், "வயித்துப் பசி, மனசோட தாகம் இந்த ரெண்டும் ரொம்ப ஆபத்தானது பீட்டர். இது ரெண்டையும் தீர்த்துக்க முடியலேன்னா மனிசனுக்கு வேறென்ன நல்ல குணம் இருந்தாலும் பிரயோசனமில்லை. இந்தப் பசியையும் தாகத்தையும் தீர்த்துக்கத்தான் நான் கலியாணம் பண்ணிக்கிட்டேன். ஆனால் உன் சித்தி..." செபாஸ்டியனின் தொண்டை அடைத்துக் கொண்டது.

"உன் பசியும் தாகமும் உலகத்தையே முழுங்கப் பார்த்தால்," பீட்டர் கடுமையாகப் பேசினான்.

"இல்லே பீட்டர்... பாக்கிப் பேருக்கு இருக்கற மாதிரிதான் என் பசியும் தாகமும். ஆனால் பசியெடுக்கற போது அதைத் தீர்க்கலேன்னா இன்னிக்கு எள் மாதிரி இருக்கிறது நாளைக்குப் பனங்காயா வளர்ந்துடும்... அதுவும் பசியைத் தணிக்கக்கூடிய ஆள் பக்கத்திலேயே இருக்கற போது ... வயித்துப் பசியை வெளியிலே சொல்லலாம். ஆனால் உடல் பசியை வெளியே சொல்ல முடியுமா? சொன்னால் பாவம், அசிங்கம் ... என்னோட இளமை

பட்டினி கிடந்து துடிச்சது... டான்டலஸ் கதை தெரியுமில்லையா உனக்கு? அவனுக்குக் கடுமையான தாகம். ஆனால் தண்ணீர்ப்பாத்திரத்தை வாய்க்கருகே கொண்டு போனதும் தண்ணி மாயமா மறைஞ்சுடும். அவன் தாகம் தீராமே துடிப்பான். அது மாதிரிதான் என் நிலையும். அழகான பெண்டாட்டி பக்கத்திலே படுத்திருக்கா. அவ உடம்போட வாசனை மூக்குக்கு வரது. அவளைத் தொடவும் தொடறேன். ஆனால் என் பசி தணிய வழியில்லை. என்ன கோரமான தண்டனை!..."

அந்தோனியின் புருவங்கள் சுருங்கின. அவன் விஷயத்தைப் புரிந்து கொள்வதற்காகக் கேட்டான், "ஏன்?"

'ஆண் பெண் உறவு ரொம்ப அசிங்கம்னு அவ நினைப்பு. அவளோட அப்பா அம்மா அவளுக்கு அப்படித்தான் சொல்லிக் கொடுத்திருக்காங்க. மாதாகோவில் பாதிரிமார், கன்னிமடத்துக் கன்னிமார் எல்லோரும் இதையேதான் திருப்பித் திருப்பிச் சொல்லியிருக்காங்க. ஆண் பெண் சேர்க்கை மகாபாவம். அதைப் பாவம்னு நினைக்கறவங்க சுத்தமானவங்க, புண்ணியம் செஞ்சவங்க... இன்னும் இந்த மாதிரி பெரிய பெரிய உபதேசங்கள் ..."

"அப்படியானால் கன்னிமாடத்திலே சேர்ந்திருக்கணும்" அந்தோனி சொன்னான்.

"வாஸ்தவம்தான். ஆனால் இந்தக் குழப்ப நாட்டிலே எல்லாமே தலைகீழ்தான். எது நடக்கணுமோ அது நடக்காது. அதனாலே அவளுக்குக் கலியாணம் ஆச்சு. அதுவும் என்னோட! நான் ஒரு படிச்ச முட்டாள்! பெரிய இடத்துப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்க ஆசைப்பட்டேன். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கிட்டார் கோன் சால்வெஸ் பாதிரி. க்ரூஸ் ரோச்சோட பெண் உயர்ந்த குடும்பம் - அபார அழகி. நான் வலையிலே விழுந்துட்டேன். க்ரூஸ் ரோச்சோட கடன் ஒரு லட்ச ரூபாயை நான் கொடுக்கணும்னு நிபந்தனை. அதையும் ஒப்புத்துக்கிட்டேன். அழகான பெண்டாட்டி கிடைச்சா. ஊரிலே எல்லோரும் ரொம்ப அதிருஷ்டக்காரன்னு பாராட்டினாங்க. ரொம்பப் பேர் பொறாமைப்பட்டாங்க..."

இந்த இடத்தில் பேச்சை நிறுத்திவிட்டு செபாஸ்டியன் பக்கத்து அறைக்குப் போய்ச் சட்டைப் பையிலிருந்த போத்தலை எடுத்துக் கொஞ்சம் கள்ளை கடகடவென்று குடித்தான். பிறகு திரும்பி வந்து பேச்சைத் தொடர்ந்தான் " அதுக்கப்புறம் ஒவ்வொரு ராத்திரியும் ... ரொம்ப அசிங்கம்!... முதல்லே நல்ல வார்த்தை, அப்புறம் கெஞ்சல்... அதுக்கும் மசியல்லேன்னா திட்டு, வசவு, அடி, பலாத்காரம் ... கோபம், இரைச்சல், அழுகை ... பயங்கரம்!"

"அப்படீன்னா குழந்தைகள் எப்படிப் பிறந்தாங்க?"

"அதெல்லாம் தற்செயல் நடப்பு... ஒரு கத்தோலிக்கன் கலியாணம் பண்ணிக்கிட்டாப் பண்ணிக்கிட்டது தான். அதிலேருந்து அவனுக்கு விடுதலை இல்லே ... சாகிறவரைக்கும் ... "

"என்ன பயங்கரமான ஏற்பாடு!" என்றான் அந்தோனி. சில நாட்களுக்கு முன் கோன் சால்வெஸ் பாதிரியார் தன்னிடம் பேசிக் கொண்டிருந்தது அவனுக்கு நினைவு வந்தது. பீட்டர் தரை குனிந்து கொண்டு மௌனமாயிருந்தான்.

"அதுக்கப்புறம் நான் குடிக்கு அடிமையாயிட்டேன். கள்ளே என்னைக் குடிச்சிடுச்சு. வாழ்க்கையிலே மோசம் போயிட்ட உணர்வு ஏற்பட்டது எனக்கு. வாழ்க்கையிலே மகிழ்ச்சி இல்லே, ஆர்வம் இல்லே, தொழில்லே அக்கறை இல்லே, நல்லாச் சிந்திக்க முடியல்லே. நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டு சீர்கெட்டுப் போயிட்டேன்... இல்லாட்டா அந்த ராஸகல் பேனிமிராண்டா நிலக்கரி காண்டிராக்டை என் கிட்டேயிருந்து பிடுங்கிக் கிட்டிருப் பானா? என் நெஞ்சுத் துணிவே போயிடுச்சு அப்பா!"

"கூலிகள் நிலைமை இப்போ எப்படி இருக்கு?" பீட்டர் கேட்டான்.

"என் காலத்திலே அவங்களுக்கு ரெட்டிப்பு போனஸ் கொடுத்தேன். இலவச வைத்திய வசதி செஞ்சு கொடுத்தேன். சேரி முன்னேத்தத்துக்காக என் நேரம் பணம் ரெண்டையும் செலவு செஞ்சேன்... இப்போ எல்லாம் போச்சு. பேனி மிராண்டாவுக்கும் கூலிகளுக்கும் பெரிய தகராறாம். சீக்கிரம் வேலை நிறுத்தம் ஏற்படலாம்..."

"அப்படியா?" கவலையுடன் கேட்டான் பீட்டர். பிறகு கூலிகள் பற்றிய கவலையை ஒதுக்கி வைத்து விட்டுக் கேட்டான், 'அதுசரி ... நீ ஏன் இன்னிக்குத் தண்ணியிலே முழுகிச் சாகப்போனே?"

"இதோபாரு!" செபாஸ்டியன் மேல் துண்டைத் தூக்கி முதுகைக் காட்டினான். அதில் பெரிய பெரிய சிவப்புத் தழும்புகள் - சவுக்கடித்தழும்புகள்.

"ஐயோ!" துள்ளிக் குதித்தான் பீட்டர். "இதென்ன?"

"என்னோட பிள்ளைகளும் அவங்களோட போக்கிரி சகாக்களும் என்னை அடிச்சாங்க..."

"ஏன்?"

"ஏன்னா நான் மதம் மாறி முஸ்லிமாயிட்டேன்..."

"இதென்ன திடீர்னு?"

"என் வாழ்க்கை முழுவதிலும் எனக்குக் கிடைக்காத மகிழ்ச்சியைக் கொச்சினைச் சேர்ந்த ஒரு மாப்பிள்ளை ஜாதிப்பெண்

மூலம் அடைஞ்சேன். அதனாலே மதம் மாறி கல்மா ஓதி அவளைக் கலியாணம் பண்ணிக்கிட்டேன். நான் அவளை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வர ஆசைப்படறேன். இதை வச்சிக்கிட்டு மாதாகோவில்காரங்களும் அரசியல்வாதிகளும் தகராறைக் கிளப்பியிருக்காங்க. பிறத்தியான் தலையிலே பலாப்பழத்தை உடைச்சுச் சாப்பிடறதுதான் அவங்க வழக்கம். என்னைத் துரத்திவிடச் சொல்லி அவங்க என் பிள்ளைகளைத் தூண்டி விடறாங்க. நான் போயிட்டேன்னா அவங்களுக்குக் கொண்டாட்டம். நிலக்கரி காண்டிராக்டை என்கிட்டேயிருந்து பிடுங்கிக் கிட்டாங்க. அதுக்காக மதராசிலே, டில்லிலே ஒரு லட்ச ரூபாய் லஞ்சம் கொடுத்தாங்க... நான் இங்கேயிருந்து நகர்ந்தால் என்னோட உப்பளங்களெல்லாம் சுஸான் கார்தோஸாவோட வயத்துக்குள்ளே போயிடும்..." ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அதில் இழுப்பு இழுத்தவாறே சொன்னான் செபாஸ்டியன்.

மற்றவர்கள் பேசவில்லை. அப்போது இரவு மணி பத்து.

"அதனாலே முடிவு பண்ணிட்டேன் எல்லாத்தையும் வித்துட்டு ரொக்கப் பணத்தை எடுத்துக்கிட்டு இந்த ஊரை விட்டே போயிடலாம்னு..."

"ஊஹும், நான் உன்னை ஓடிப்போக விடமாட்டேன்!..." பீட்டர் அழுத்தந்திருத்தமாகச் சொன்னான். "ஊருக்குள் மனிசனைத் திங்கற புலி நுழைஞ்சிட்டா ஊர் ஜனங்க ஊரைவிட்டு ஓடுவாங்களா? அல்லது புலியைக் கொல்ல ஏற்பாடு பண்ணுவாங்களா?...நீ ஓடக் கூடாது! அவங்களை எதிர்த்து நிக்கணும்!..."

பரிதாபமான குரலில் செபாஸ்டியன் சொன்னான், "ஆனால் அவங்களை எதிர்த்து நிக்க எனக்குத் திராணியில்லையே, பீட்டர்!"

"இல்லேன்னு யார் சொன்னாங்க? உன்னுள்ளே அந்த சக்தி இருக்கக் கண்டுதான் நீ சமூகத்திலே கெட்ட பேர் ஏற்படறதைப் பொருட்படுத்தாமே ஒரு முஸ்லிம் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கிட்டிருக்கே. நீ நம்ம கத்தோலிக்க சமூகத்திலே எவ்வளவு பெரிய புரட்சி பண்ணியிருக்கேன்னு உனக்கே தெரியாது. நீ புதுச்சித்தியைக் கூட்டிக்கிட்டு வா. அதனாலே ஏற்படற நல்லதுக்கும் கெட்டதுக்கும் நான் பொறுப்பு!"

செபாஸ்டியன் பதில் பேசவில்லை.

"என்ன யோசனை, சித்தப்பா? போ, சித்தியைக் கூட்டிக்கிட்டு வா! ... ஆனால் ஒரு விஷயம் கள்ளுப் பழக்கத்தை விட்டுடணும்!"

செபாஸ்டியன் பீட்டரின் கையை இறுகப் பிடித்துக் கொண்டு சொன்னான், "என்னை நம்பு, பீட்டர்! உன் புதுச் சித்தி வந்துட்டா எனக்குக் கள்ளே தேவைப்படாது..."

ஏதோ நினைத்துக் கொண்டு செபாஸ்டியன் பக்கத்து அறைக்குப் போனான். கையில் கள் போத்தலுடன் திரும்பி வந்தான். நேரே காட்வினின் ஓவியத்துக்கு முன்னால் நின்று கொண்டு உரக்கச் சொன்னான் "ஐயா, எனக்கு மனோதிடம் கொடுங்க! நான் இனி கள்ளைத் தொடமாட்டேன்!"

அவன் போத்தலை வாசலுக்கு வெளியே விட்டெறிந்தான். போத்தல் உடைந்து சிதறும் ஒலி கேட்டது.

☆ ☆ ☆

அந்தோனி சிரில் ஃபெர்னாண்டோவைப் பற்றி விசாரிக்கத் தூத்துக்குடி ரயில் நிலையத்துக்குப் போயிருந்தான். சிரில் தான் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்னால் அந்தோனியைக் கூட்ஸ் வண்டியின் கார்டுப் பெட்டியில் சென்னைக்குக் கூட்டி வந்து அவன் அங்கிருந்து ஹௌரா போக ரயில் கட்டணத்தையும் கொடுத்தவன். அவனை மறுபடி சந்திக்க விரும்பினான் அந்தோனி.

அந்தோனி வேண்டிய செய்தி கிடைத்து விட்டது. சிரில் இப்போது திருநெல்வேலி எக்ஸ்பிரஸ் வண்டியில் கார்டு. தூத்துக்குடியின் வட பகுதியில் மாதா கோவிலுக்குப் பின்னால் வீடு வாங்கிக் கொண்டு வசிக்கிறான்.

செய்தி தெரிந்து கொண்டு அந்தோனி வந்த போது ரயில் நிலையத்தில் ஒரே கூட்டம். பெரிய பரபரப்பு. பலர் கைகளில் பெரிய பெரிய பூ மாலைகளுடன் நின்று கொண்டிருந்தனர். சிலரிடம் ஜரிகை மாலைகள். பலர் சூட் அணிந்திருந்தனர். அவர்கள் அரசாங்க அதிகாரிகளாயிருக்க வேண்டும். வேஷ்டியும் அரைக் கை சட்டையும் அணிந்தவர்களும் நிறைய இருந்தனர். அவர்களைப் பார்த்ததும் அடையாளங்கண்டு கொள்ளலாம் – அவர்கள் இந்த ஊர் மீனவர்கள், கட்டுமஸ்தான உடல் : வெயிலால் கறுத்துப் போன நிறம் ; மார்பிலும் கைகளிலும் வலுவேறிய தசை நார்கள்.

தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் வண்டி வந்து நின்றது. எல்லோரும் ஒரு முதல் வகுப்புப் பெட்டியை நோக்கி ஓடினார்கள் - 'அதோ, அதோ . . ."

பெட்டியின் கதவருகில் உயர்ந்த சர்ஜ் துணியாலான சூட் அணிந்தவர் ஒருவர் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான் அந்தோனி. நடுப்பகலின் அனற்காற்று அடிப்பதைப் பற்றி அவர் கவலைப் படுவதாகவே தெரியவில்லை.

ரயில் நிலையத்தில் கூடியிருந்தவர்கள் ஒவ்வொருவராக அந்த மனிதன் கழுத்தில் மாலைகளைப் போட்டார்கள். அவர் முகத்தில் வாய் கொள்ளாச்சிரிப்பு. தாம் ஒரு தேசத்தலைவர் என்று நினைத்துக் கொண்டார் போலும்.

அவர் யார் ? யாராவது மந்திரியாயிருக்குமோ ?

அந்தோனி வேடிக்கை பார்க்க விரும்பிக் கூட்டத்தின் ஓர் ஓரத்தில் நின்று கொண்டான்.

சூட் அணிந்திருந்தவர்கள் மாலையணிவித்து முடித்து விட்டார்கள். இப்போது வேஷ்டியணிந்திருந்தவர்களது முறை.

மாலைபோட்டுக் கொண்டவர் புருவத்தைச் சுருக்கிக் கொண்டு கேட்டார், " பி.கே. எங்கே ?"

"சார், அவரோட மனைவிக்கு உடல்நிலை ரொம்ப மோசம் ..."

"நான் வந்த போதெல்லாம் இதே சாக்குத்தான் ? பி. கே. ஸ்டேஷனுக்கு வர்றதில்லை. . ." கோபத்துடன் சொன்னார் அவர்.

மாலைபோடும்படலம்முடிந்தது.

இதற்குள் அந்தோனிக்குப் புரிந்துவிட்டது. வந்திருப்பவர் மீன் வளத்துறையில் பெரிய அதிகாரி.

அதிகாரி ரயிலிலிருந்து இறங்கினார். அவருக்குப் பின்னால் சூட் அணிந்த சிறிய, நடுத்தர, பெரிய அதிகாரிகள் நிறையப்பேர் வந்தார்கள்.

அவர்களுக்கு நடுவில் பருத்தித் துணிப் பாண்டும் அரைக் கை சட்டையும் அணிந்த ஒருவர் வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் அடையாளங்கண்டு கொண்டான் அந்தோனி. கல்கத்தா மாநிலக்கல்லூரியில் அவனுடன் படித்த சதானந்த முகர்ஜி 'சதா'. சரித்திரத்தில் 'ஆனர்ஸ்' எடுத்துக் கொண்டு படித்தான். அத்துடன் எடுத்துக் கொண்ட இன்னொரு விஷயம் 'மானிடவியல்'. அதைப் படிக்க அவன் பாலிகஞ்சிலுள்ள விஞ்ஞானக் கல்லூரிக்குப் போவான். அந்தக் கல்லூரி ஒரு பெரிய பூங்காவின் நடுவில் அமைந்திருக்கும். அங்கே 'சதா' ஒரு காதல் விவகாரத்தில் மாட்டிக் கொண்டதாக ஒரு மங்கலான நினைவு வந்தது அந்தோனிக்கு.

சதாவின் கழுத்திலும் சிலமாலைகள். மீன்வளத்துறை அதிகாரி சதாவை உள்ளூர் அதிகாரிகளுக்கு அறிமுகப்படுத்தினார் "இவர் தான் டாக்டர் முகர்ஜி. ஆந்த்ரபொலாஜிகல் சர்வேயிலேருந்து வந்திருக்கார்."

சதா திரும்பிப் பார்த்த போது அந்தோனியைக் கவனிந்தது விட்டான். அவன் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு வந்து அந்தோனியைப் பிடித்துக் கொண்டான் "என்ன டுன்டுனி ! நீ இங்கே எங்கே வந்தே ? . . நீ லண்டன் ஹைகமிஷன் ஆபீசிலே. . ."

"இப்பவும் அங்கேதானிருக்கேன். . . திடீர்னு என் அப்பா தவறிப் போனதாலே . . ."

"ஓ, இப்போ ஞாபகம் வருது. நீ தூத்துக்குடிக்காரன்தானே !"

"நீ எங்கே இந்த ஃபிஷரீஸ் ஆபீசர்களோடே ? . . ."

"நான் இப்போ ஆந்த்ரபொலாஜிகல் சர்வேயிலே இருக்கேன். அதன் சார்பாகத்தான் வந்திருக்கேன் இங்கே. இந்த மன்னார்க் கரை மீனவர்கள் ஒரு விசேஷ இனம். அவங்களைப் பத்தி ஆராய்ச்சி பண்ணப் போறேன். . . இங்கே வா . ."

சதா அந்தோனியைக் கூட்டிக் கொண்டு மீன்வள அதிகாரியிடம் அறிமுகப்படுத்தி வைத்தான். அதிகாரி கத்தோலிக்க மீனவர் அல்ல, பிராடெஸ்டெண்ட் நாடார். அவருடைய வீடும் அந்தப் பக்கத்தில் தான். அந்தோனி லண்டனில் ஹைகமிஷனில் வேலை பார்க்கிறான் என்று கேட்டதும் அவன்மேல் மிக்க மதிப்பு ஏற்பட்டு விட்டது அவருக்கு. 'வாங்க, வாங்க . . . எங்களுக்கு வண்டி வந்திருக்கு. உங்களையும் வீட்டிலே கொண்டு போய் விடறோம். . ."

சதா அந்தோனியை விடவில்லை. அவனைச் சந்தித்ததில் சதாவுக்கு ரொம்ப மகிழ்ச்சி. "நீ இந்த ஊர் மீன் பறவ இனத்தைச் சேர்ந்தவங்கறதை மறந்தே போயிட்டேன்" என்றான்.

அவர்கள் ரயில் நிலையத்தைவிட்டு வெளியே வந்தபோது சுஸான் கார்தோஸா ஓடிவந்தான். பின்னாலேயே ஒருவன் பெரிய ஜரிகை மாலையொன்றைத் தூக்கிக் கொண்டு வந்தான். சுஸான் மாலையை அதிகாரியின் கழுத்தில் போட்டு விட்டுச் சொன்னான், "எக்ஸ்கியூஸ் மி சார், ஒரு முக்கியமான வேலை இருந்ததாலே கொஞ்சம் தாமதம் ஆயிடுச்சு..."

அரசாங்க அதிகாரிகளுக்கு நடுவில் அந்தோனியைக் காண சுஸானுக்கு மிகவும் ஆச்சரியம். இதற்குள் பெரிய அதிகாரியே சுஸானுக்கு சதாவையும் அந்தோனியையும் அறிமுகம் செய்து வைத்தார்.

சுஸான் அந்தோனியைச் சுட்டிக்காட்டி அதிகாரியிடம் சொன்னான் – "ஆமா ஆமா ! இவர் எங்க சமூகத்திலே ரொம்ப முக்கியமானவர். இந்த ஊரிலே மிகவும் முக்கியப் பட்டவர் மந்திரி ரோச் விக்டோரியா, அவருக்கு அடுத்தபடி இவர்தான் . . . ஹிஹி. . . வாங்க, என்வண்டியிலேயே போயிடலாம். . . ."

"தாங்க் யூ, எங்களுக்கு வண்டி இருக்கு . . ."

"ஓ, அதுவும் என்னுதுதான் . . எதிலே வேணும்னாலும் ஏறிக்கங்க . . ". சுஸான் மிகவும் பணிவுடன் சொன்னான்.

அதிகாரியும் சதாவும் அந்தோனியை விடவில்லை. அவனும் அவர்களுடன் காரில் ஏறிக் கொள்ள நேர்ந்தது.

முதலில் பெரிய அதிகாரியின் கார், அதற்குப் பின்னால் மற்ற அதிகாரிகளைச் சுமந்து கொண்டு பத்துக் கார்களின் ஊர்வலம். பெரியவர் பின்னால் திரும்பிப் பார்த்து விட்டு மிகவும் மகிழ்ச்சியுடன் சொன்னார், " நமக்குப் பின்னாலே குறைஞ்சது இருபதாயிரம்!. . ."

இதைக் கேட்ட சதாவுக்கும் அந்தோனிக்கும் ஒன்றும் புரியவில்லை.

அதிகாரி விளக்கினார், " நம்ம பின்னாலே வர்ற அதிகாரிகள், ஊழியர்களோட மாசச் சம்பளத்தைக் கூட்டினால் இருபதாயிர ரூபாய்க்குக் குறையாது! . . ."

தொந்தி குலுங்கச் சிரித்தான் சதா.

"இங்கே நீ தங்கறதுக்கு என்ன ஏற்பாடு ? " அந்தோனி சதாவைக் கேட்டான்.

"இவங்களே ஏதோ ஏற்பாடு பண்ணியிருக்காங்க. அது சரிப்படல்லேன்னா இருக்கவே யிருக்கு டுன்டுனி வீடு ! . . நான் இங்கே ஏழு நாள் இருப்பேன் . . ."

"அவசியம் ஏற்பட்டால் நேரே இங்கு வந்துடு" என்று சொல்லி சதாவிடம் விடை பெற்றுக் கொண்டு அந்தோனி தன் தெரு முனையில் இறங்கிக் கொண்டான்.

இரண்டு மணி நேரத்துக்குள் அச்சடிக்கப்பட்ட அழைப்பிதழ் அந்தோனி வீட்டுக்கு வந்து விட்டது. இரவில் அதிகாரிக்கு அளிக்கப்படும் விருந்துக்கான அழைப்பு. அழைப்பிதழின் ஒரு பக்கத்தில் அதிகாரியே தம் கைப்பட எழுதியிருந்தார், " மிஸ்டர் ஃபெர்னாண்டோ, நீங்க அவசியம் வரணும் ! வரல்லேன்னா நான் ரொம்ப வருத்தப்படுவேன். சாயங்காலம் உங்களைக் கூட்டிக் கிட்டு வரக்கார் வரும். . ."

இரவு ஏழுமணிக்குக் கார் வந்து விட்டது. கூடவே வந்திருந்தார் சென்னை மீன் வள இலாகா ஊழியரொருவர்,

அவர் வந்து அழைத்ததும் அந்தோனி புறப்பட்டான், அவனுடைய உடையை வியப்புடன் பார்த்தார் ஊழியர். வேஷ்டி, சட்டை, சாதாரணச் செருப்பு - இது தான் அவனது உடை,

அந்தோனி கேட்டான், "விருந்து ரொம்ப சம்பிரதாயமானதாயிருக்குமோ ?"

"அதெல்லாமில்லை. மிஸஸ் லோபோதான் விருந்து கொடுக்கறாங்க..."

"மீனவர் சங்க விருந்துன்னா போட்டிருந்தது?"

"மீனவர் சங்கத்தோட செலவுகள் தான். ஆனால் நடக்கிறது மிஸஸ் லோபோவோட வீட்டிலே. அவங்கதான் விருந்தை நடத்தித்தறாங்க. வேறே சாதாரண ஆளுங்களாலே இந்த மாதிரி விருந்தை நடத்த முடியாது. மிஸ்டர் கார்தோஸாதான் இந்த ஏற்பாடு செஞ்சார். இதுக்கு இங்கே இருக்கிற மீன் வளத்துறை உதவி இயக்குனரும் ஒப்புத்துக்கிட்டார்..."

காரில் ஏறிக் கொண்டு அந்தோனி கேட்டான்," உங்க பேரு ?"

"என் பேரு பெனலூர் கருணாநிதி. நான் மீன்வளத்துறையிலே இன்ஸ்பெக்டர்."

அப்படியானால் இவர்தான் மற்றவர்களால் பி.கே. என்று குறிப்பிடப்பட்டவர் ?

"உங்க மனைவிக்கு உடல் நிலை ரொம்ப மோசம் அதனால் தான் நீங்க உங்க அதிகாரியை வரவேற்க ஸ்டேஷனுக்குப் போகலே..."

பி.கே க்கு ஒரே ஆச்சரியம்," ஆமா சார், உங்களுக்கு எப்படித் தெரியும் ? . . . என் மனைவி பதினேழு நாளாப் படுத்தபடுக்கையா இருக்கா. டைபாய்டு. காலையிலே ரத்தபேதி ஆயிக்கிட்டிருந்தது. ரொம்பப் பயந்து போய் டாக்டர் கிட்டே ஓடினேன்... அதனால் தான் ..."

"இப்போ எப்படி இருக்கு?" அனுதாபத்துடன் கேட்டான் அந்தோனி,

"இப்போ கொஞ்சம் தேவலை. ரத்தபேதி நின்னிருக்கு. அதனால் தான் வரமுடிஞ்சது என்னாலே... வீட்டிலே மூணாவது ஆள் இல்லே. எதிர்த்த வீட்டுக் கிழவியை கெஞ்சிக் கூத்தாடி என் மனைவிக்குத் துணையா வச்சுட்டு வந்திருக்கேன்..."

"உங்க வீடு எங்கே ?"

" இங்கே பக்கத்திலேதான் " - பி.கே கையை நீட்டி இடது பக்கம் புதிதாகக்கட்டப்பட்டிருந்த வீடுகளைச் சுட்டிக் காட்டினான். இந்தப் பகுதி ஊர்க் கோடியில் இருந்தது.

அந்தோனிக்குப் பெரிய அதிர்ச்சி, இந்த ஆபத்தான நிலையில் மனைவியை விட்டுவிட்டு இவர் ஏன் வந்திருக்கிறார் ? அவனுள்ளத்தில் இனம்புரியாத வேதனை. இதில் ஏதோ ஒரு பெரிய கோளாறு இருக்கிறது !

அவன் பி.கே.யின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். உணர்ச்சிகள் மரத்துப்போய் வெளிறிய முகம். குழிவிழுந்த கண்கள். பரிதாபமான தோற்றம்.

திருநெல்வேலி ரஸ்தாவில் நடமாட்டமே இல்லை. அதன் இருபுறமும் பரந்த வெளி. கார் வலப்பக்கம் திரும்பியதும்தான் அந்தோனிக்குத் தன்னினைவு வந்தது. இடது பக்கம் வல்லநாட்டு மலை கண்ணில் பட்டது. வலதுபுறம் புதர்கள் நிறைந்த சமவெளி. கார் சக்கரங்களின் கரகரச் சத்தத்திலிருந்து செம்மண் ரஸ்தாவில் கார் போய்க்கொண்டிருப்பது தெரிந்தது. வண்டி ஒரு வீட்டுக் காம்பவுண்டுக்குள் நுழைந்தது. பாலைவனத்து நடுவில் ஒரு சோலை.

பெரிய பங்களா. அதன் இரும்புக் கதவுகள் இரண்டின் மேலும் விளக்குகள். இந்த ரஸ்தாவும், காம்பவுண்டும், வீட்டின் ஒவ்வொரு மூலையும், அந்தோனிக்கு மிகவும் பரிச்சயமானவை. அவன் கண்ணில் துணியைக் கட்டி விட்டால் கூட அவன் இந்த வீட்டுக்குள் அனாயசமாக நடமாடுவான். இது காட்வினின் தோட்டவீடு. இங்கே பல நாடகங்கள் நடைபெற்றிருக்கின்றன. அவை எல்லாவற்றிலும் காட்வின்தான் கதாநாயகன்.

அந்தோனி வண்டியை விட்டு இறங்கியதும் இரண்டு பக்கங்களிலிருந்து அவனை வரவேற்க வந்தார்கள் சுஸான் கார்தோஸாவும், இன்னொரு பெண்மணியும். அவள் தான் மிஸஸ் லோபோ. சுஸான் அவளை அந்தோனிக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

இரத்தச் சிவப்பான உதடுகளுக்கு நடுவில் முத்துவரிசை. "வாங்க, வாங்க !" கண்கள் ஒளிவீச அவனை வரவேற்றாள் மிஸஸ் லோபோ.

மிஸஸ் லோபோ தான் ஜயம்மா அப்பாவின் வைப்பு. ராமய்யங்கார் அவளைக் கண்டியிலிருந்து கூட்டிக் கொண்டு வந்தார். நடனக்காரி. அப்பாவை ஆட்டிவைத்தாள். அந்தோனியையும் ஆட்டி வைக்க முயன்றாள். பலிக்கவில்லை. தசை வெறி பிடித்தவள். கடைசியில் காட்வினிடமிருந்து தோட்ட வீட்டைப் பிடுங்கிக் கொண்டு விட்டாள்.

ஆனால் மிஸ்டர் லோபோ யார் ?

மிஸஸ் லோபோவின் முகத்தில் இப்போது கறுப்புக் கண்ணாடி இல்லை. செவ்வரி படர்ந்த கண்களிலிருந்து சிரிப்பு பொங்கி வழிகிறது. செழிப்பான வெற்றிலைபோல் முகத்தில் எண்ணெய்ப் பளபளப்பு. மாநிறத் தோலில் முகப்பூச்சு தடவியிருக்கிறாள். கன்னங்கரிய தலைமுடியில் பெரிய கொண்டை. அதைச் சுற்றிப் பன்னீர் பூச்சரம். பூக்கள் பாம்பு படம் போல் தலையை நீட்டிக் கொண்டு மிருதுவாக வாசம் பரப்புகின்றன.

மிஸஸ் லோபோவின் வயது பதினான்கு வருடங்களுக்கு முன் என்னவாக இருந்ததோ அப்படியேதான் இப்போதும் இருக்கிறது. பளபளப்பான மயில் கழுத்து மைசூர்பட்டுப் புடைவையும் ஜரிகை வேலைப்பாடமைந்த குட்டைக்கை ரவிக்கையும் அணிந்திருக்கிறாள். தோளும் நெஞ்சும் பெரும் பகுதி திறந்தேயிருக்கின்றன. விறைப்பான தோல், ஈ உட்கார்ந்தால் அதற்கு வழுக்கும். மார்பகங்கள் அப்பழுக்கற்ற செப்புக் குடங்கள். வயதின் பாதிப்பால் ஒரு சுருக்கம்கூட இல்லை அவற்றில். நெஞ்சுக்குக் கீழேயிருந்து தொப்புளுக்குக்கீழ் வரை திறந்திருக்கிறது. கழுத்தில் ஒரு சரம் அசல் முத்துமாலை. தூத்துக்குடி முத்து. ஒவ்வொரு முத்தும் பட்டாணியளவு பெரிது. நிச்சயம் அப்பாதான் கொடுத்திருக்க வேண்டும். சேலைத்தலைப்பு தோள் வழியே வந்து கீழே இறங்கியிருக்கிறது. பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருக்கிறாள்.

பங்களாவின் நாற்புறமும் சைனா விளக்குகள் தொங்குகின்றன. வீட்டுக்குள்ளே இருக்கும் விளக்குகளுக்கும் பெரிய பெரிய காகிதக் கூண்டுகள். வெளிச்சம் நிழலாகத் தெரிகிறது. இருந்தாலும் எல்லாம் தெளிவாகத் தெரிகிறது.

ஹாலின் தரை பலகையாலானது. பாலிஷ் செய்யப்பட்டிருக்கிறது. அதை நடனத்துக் கேற்றதாகக் கட்டி வைத்தார் காட்வின். ஒரே சமயத்தில் ஐம்பது ஜோடிகள் நன்றாக நடனமாடலாம். தரையின் மேல் வாசனைத் தூள் தூவப்பட்டிருக்கிறது. சுவரையொட்டி சோபாக்கள். ஓர் ஓரத்தில் மதுவகைகள் கொண்ட பார்! பளபளப்பான சீருடையும் டவாலியும் அணிந்த வேலைக்காரர்கள் இங்கும் அங்கும் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆண்களும் பெண்களும் சோபாக்களில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆண்கள் எல்லாருமே மேலை நாட்டுப் பாணியில் உடையணிந்திருக்கின்றனர். பெண்களின் அலங்காரம் பிரமாதம். அவர்கள் அணிந்திருக்கும் பிச்சி, குண்டு மல்லிகையின் வாசனை ஹாலில் பரவியிருக்கிறது.

அரசாங்க அதிகாரிகள் இன்னும் வந்து சேரவில்லை. ஜெயம்மா அந்தோனியைக் கூட்டிக் கொண்டு போய் 'பாரு'க்கு அருகில் சோபாவில் அமரச் செய்து தானும் அவனருகில் உட் கார்ந்து கொண்டாள். பிறகு சுஸானிடம் சொன்னாள், "நீங்க வெளியிலே போய் விருந்தினர்களை வரவேற்று உள்ளே அனுப்புங்க..."

"சரி" என்று சொல்லிவிட்டு வெளியே போனான் சுஸான்.

ஜயம்மா அந்தோனியின் ஒரு கையைத் தன்னிடம் இழுத்துக் கொண்டு கேட்டாள், " என்னைத் தெரியுதா?"

"தெரியாமே என்ன ? நீங்க ரொம்ப மாறலியே..."

"நீ தான் சரியான பிள்ளை. அப்பாவுக்கே தண்ணி காட்டிப் பிட்டே ! . . . இந்த வீட்டிலே நடந்த விஷயம் ஞாபகமிருக்கா?"

அந்தோனி பேசவில்லை. பதினான்கு வருடங்களுக்கு முந்தைய நிகழ்ச்சி. இருந்தாலும் மறக்கக் கூடிய விஷயமில்லை...

காட்வினின் உடல்நிலை மோசமாயிருக்கிறது என்று செய்தி யனுப்பி இரவு பன்னிரண்டு மணிக்கு அந்தோனியை அந்த விட்டுக்கு வரவழைத்தாள் ஜயம்மா. ஆனால் உண்மையில் காட்வின் அவ்வளவு ஆபத்தான நிலையில் இல்லை. நிறையக் கள்ளைக் குடித்து விட்டுப் போதையில் மயங்கிக் கிடந்தார். ஜயம்மாவுக்கு அப்போது அளவுக்கு மீறிய தசைவெறி. அவள் அவனை மூலையறைக்கு இழுத்துச் சென்று படுக்கையில் கிடத்தி மலைப்பாம்பு போல் அவனைச் சுற்றிக் கட்டிக் கொண்டு விட்டாள். அவள் வெறியுடன் அவனுடைய உதடுகளைக் கடித்த தில் அவை துண்டு பட்டு விடும் போலிருந்தது. அந்தோனி தன் முழுப்பலத்தையும் உபயோகித்து அவளைப் படுக்கையின் மேல் தள்ளிவிட்டு வெளியே ஓடினான்.

ஓடும்போது அவள் சீறுவது அவனுக்குக் கேட்டது "இருக்கட்டும், உன்னைப் பார்த்துக்கறேன்!"

எல்லாம் நினைவில் இருக்கிறது. . .

"மம்மி, நீ இங்கேயா இருக்கே ? ... நான் உன்னை வீடு பூராவும் தேடிக்கிட்டிருக்கேன். . ." என்று சொல்லிக்கொண்டே சுஸான் கார்தோஸாவுடன் உள்ளே நுழைந்த பெண்ணுக்கு இருபது வயது இருக்கும். மெலிந்த உடல். வெளிர்முகம். பாப் செய்யப்பட்ட தலைமுடி. அவள் தோடுகளும் வளையங்களும் போட்ட பர்மிய லுங்கியும், கையில்லாத, அகலக் கட்டையான, இறுக்கமான ரவிக்கையும் அணிந்திருந்தாள். கொஞ்சிக் கொஞ்சிப் பேசி னாள். பேச்சும் நடத்தையும் பத்து வயதுப் பெண்ணைப்போல.

"வா, பேபி, உனக்கு இவரை அறிமுகப்படுத்தறேன்..." என்று சுஸான் அவளை அந்தோனியிடம் அழைத்து வந்தான். "இது தான் பேபி, மிஸஸ் லோபோவோட ஒரே...பேபி, இவர் தான் அந்தோனி ஃபெர்னாண்டோ, லண்டன் வாசி..."

"லண்டனா? நிசம்மாவா! ..." பேபியின் குரலில் அவ நம்பிக்கை. வேஷ்டி கட்டிக் கொண்டிருக்கும் இவரா லண்டனில் இருக்கார்?

வாசலில் வண்டிவரும் அரவம். சுஸானும் ஜயம்மாவும் வெளியே ஓடினார்கள்.

அந்தோனிக்கருகில் சோபவில் உட்கார்ந்து கொண்டு பேபி தான் பம்பாயில் கற்றுக் கொண்ட கொச்சை ஆங்கிலத்தில் வார்த்தைகளை உதிர்த்தாள்.

"நீங்க நிசம்மாவே லண்டன்லே இருக்கீங்களா? . . . எனக்கு லண்டன் பார்க்க ரொம்ப ஆசை. . நான் பம்பாயிலே வால் சிங் ஹாமிலே படிச்சிக்கிட்டிருந்தபோது என்னோட கிரெஸ்ஸி டான்னு ஒரு பொண்ணு படிச்சிக்கிட்டிருந்தா. அவளோட அப்பா அம்மா லண்டன்லே இருந்தாங்க. அவ வருசத்திலே ரெண்டு தடவை லண்டன் போவா. லண்டனைப் பத்தி எவ்வளவோ சொல்லியிருக்கா அவ. . சரி, உங்களுக்கு என் னென்ன டான்ஸ் ஆடத் தெரியும்?"

அந்தோனி பேபியைக் கூர்ந்து கவனித்தான். புருவங்களின் மயிர் பிடுங்கப்பட்டு புருவச்சாயம் தீட்டப்பட்டிருந்தது. இயற்கைக் கண்ணிமைகளுக்குப் பதிலாகச் செயற்கை இமை கள். புருவங்களுக்குக் கீழே பச்சைப்பூச்சு. இரண்டு கன் னங்களிலும் 'ரூஷ்'. உதட்டுச் சாயம் பச்சை நிறத்தில். கைநகங் களிலும் பச்சை பாலிஷ். அதற்கேற்ப நெற்றியிலும் பச்சைப் பொட்டு. கழுத்தில் விலையுயர்ந்த கற்கள் பதித்த நெக்லேஸ். இடது கையில் கல்பதித்த வளையல்கள். வலது கையில் பெரிய கைக்கடிகாரம். பிரமாதமான அலங்காரம். இளம் பெண் ணல்லவா!..

"உங்களுக்கு நல்லா ஆடத் தெரியும், இல்லையா? "ஓரப் பார்வை பார்த்தவாறு கேட்டாள் பேபி.

"ஏதோகொஞ்சம்..."

"அப்பமன்னா டான்ஸ் டிரஸ் ஏன் போட்டுக்கிட்டு வரல்லே?"

அந்தோனி யோசித்துப்பார்த்தான். பதினான்கு வருடங் களுக்கு முன் அவன் இந்தப் பெண்ணைப் பார்த்ததில்லை. ஜெயம்மாவுக்கு ஒரு பெண் இருக்கிறாள் என்றும் கேட்டதில்லை.

அப்படியானால் இவள் யார் பெண்? மிஸ்டர் லோபோவின் பெண்ணோ?

"பம்பாயிலே இருந்தபோது நான் நிறைய டான்ஸ் கத்துக் கிட்டேன் - ஃபாக்ஸ் டிராட், டாங்கோ, சாம்பா, வால்ட்ஸ். . . எனக்கு டான்சிலே பிரைஸ் கிடைச்சிருக்கு . . "

"அப்படியா! பேஷ், பேஷ்! நீ என்ன படிக்கறே?"

"எனக்கு படிக்கப்பிடிக்கலே, டான்ஸ் ஆடத்தான் பிடிக்கும்... அதுசரி, இப்போ லண்டன்லே என்ன டான்ஸ் ரொம்ப ஃபாஷன்?"

"தெரியாதே எனக்கு . . ."

"என்ன, இது கூடத் தெரியாதா! ... என்னோட பாய் ஃபிரண்டு ஒருத்தன் இருக்கான் பம்பாயிலே. அவன் கப்பல்லே ஆபீசர். அவன் சொன்னான் - 'ராக் அண்ட் ரோல்', 'ட்விஸ்ட்' அப்படீன் னெல்லாம் புதுசு புதுசா டான்ஸ் வந்திருக்காம். இடுப்பை ஆட்டி ஆட்டிக் காண்பிச்சான். ரொம்ப இண்டரெஸ்டிங்! எனக்குக் கத்துத்தரேன்னான். நான்தான் இங்கே வந்துட்டேன் . . உங்க மிஸஸ் எங்கே?"

"எனக்குக் கலியாணம் ஆகல்லே . . ."

"அடடே! இன்னுங் கலியாணமாகல்லியா? லண்டன்லே உங்களுக்குக் கேர்ல் ஃப்ரண்டு ஒருத்தரும் இல்லே?"

அந்தோனி பதில் சொல்லவில்லை.

"ஹலோ மிஸ்டர் ஃபெர்னாண்டோ, குட் ஈவினிங்!"

அரசாங்க அதிகாரி தன் கூட்டத்துடன் வந்துவிட்டார். கூடவே சதாமுகர்ஜி.

"உங்க தூத்துக்குடியிலே இப்படியொரு நைட்கிளப் - கித்தான் பையிலே நல்ல அரிசி மாதிரி!... மதுவிலக்கு ராஜ்யத் திலே ஒரு பார்!" சதா வங்காளியில் அந்தோனியிடம் சொன் னான் சிரித்துக் கொண்டே.

சுஸானும் மிஸஸ் லோபோவும் விருந்தினர்களை உபசரிப் பதில் மும்முரமாயிருந்தார்கள் - "யார் என்ன குடிப்பீங்க - விஸ்கி, பிராந்தி, பீர் ... ஷாம்பெயின் கேட்டாலும் கிடைக்கும்..."

பெரிய அதிகாரி முதல் நடுத்தர, சிறிய அதிகாரிகள் வரை யில் எல்லோரும் ஒரு முகமாக ஸ்காட்ச் வேண்டினார்கள் - ஜானிவாக்கர், பிளாக் லேபில் . .

"மிஸ்டர் ஃபெர்னாண்டோ, உங்களுக்கு? . . ."

"தாங்க் யூ . . ஆரஞ்சு ஜூஸ் தான் . . ."

"அடே, இதென்ன?" அதிகாரிக்கு ஒரே ஆச்சரியம்.

''எனக்கும் ஆரஞ்சு ஜூஸே கொடுங்க... .எனக்கு மத்த டிரிங்க்ஸ் ஒத்துக்கறதில்லே ... '' என்றான் சதா முகர்ஜி. பிறகு சற்றுத் தயக்கத்துக்குப்பின் கேட்டே விட்டான், ''இங்கே மது விலக்கு அமுல்லே இருக்கே... இதெல்லாம் எப்படிக் கிடைச்சது உங்களுக்கு?''

''மது விலக்கு இருக்கு தான்... எல்லாம் ராஜாஜியோட பிடிவாதம். ஆனால் எங்களுக்கு இதெல்லாம் வாங்கி வச்சுக்கத் தான் வேண்டியிருக்கு... தவிர இந்தப் பொட்டைக் காட்டிலே யார் கண்டுபிடிக்கப் போறாங்க !''

''தவிர இது ஒரு இரண்டுங்கெட்டான் பிராந்தியம்... அந்தப் பக்கம் பாளையங்கோட்டை, இந்தப் பக்கம் தூத்துக்குடி. ரெண்டுக்கும் இடையிலே இந்தப் பகுதி எந்தப் போலீஸ் எல்லைக்கும் உட்படாத இடம். அதனாலே... '' சுஸான் விளக்கினான். அவனுக்குப் பின்னால் மானுவல் நின்று கொண்டிருந்தான்.

ஒரு பக்கத்தில் லிண்டாவைச் சூழ்ந்து கொண்டு நிறைய ஆண்கள் உரையாடிக்கொண்டிருக்கிறார்கள். அவள் ராணியைப் போல் நடந்து கொள்கிறாள்.

வாசலில் ஒரு ஜோடி தம்பதியர் வந்து நிற்கிறார்கள். சுஸான் அவர்களை எதிர்கொண்டு அந்தோனியிடம் அழைத்து வந்து அவனுக்கு அறிமுகப்படுத்துகிறான் ''இவர் இந்த ஊரிலே ரொம்பப் புகழ் பெற்ற குடும்பத்தைச் சேர்ந்த டேவிட் பெரேரா. தொழிலதிபர். இவர்தான் மிஸஸ் பெரேரோ... இவர் அந்தோனி ஃபெர்னாண்டோ, நம்ம சமூகத்திலே ஒரு முக்கியமான மனிதர். லண்டன்லே ஹைகமிஷனர் ஆபீசிலே டிப்ளோமாட்...''

மிஸஸ் பெரேராவை - அதாவது மார்ஸியை - அடையாளங் கண்டு கொள்வது சிரமமாயில்லை அந்தோனிக்கு. டேவிடின் தலை முழுவதும் வழுக்கை. பெரிய தொந்தி, திறந்த கோட்டுக்கு மேல் இரண்டரை அங்குல அகலமான கலர் டை தொங்குகிறது.

டேவிட் புருவத்தைச் சுருக்கிக் கொண்டு அந்தோனியைப் பார்த்து விட்டு சுஸானைக் கேட்டான், ''காட்வின் ஃபெர்னாண்டோவோட பிள்ளை தானே ?''

''ஆமா ... உன் மனைவிக்குக்கூட ஏதோ உறவு ... ஓ, இப்போ ஞாபகம் வருது. ஒரு காலத்திலே உன் மனைவியை இவருக்குத் தான் கொடுக்கிறதா ... '' என்று சுஸான் சொல்லிக் கொண்டிருக்க டேவிட் மார்ஸியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அங்கிருந்து நகர்ந்து விட்டான்.

சுறுசுறுப்பாகச் செயல் பட்டுக் கொண்டிருக்கிறான் கிரிகரி லோபோ. பணியாளர்களுக்குக் கட்டளையிடுகிறான் ''இங்கே

போ ... அங்கேபோ ... இங்கே விஸ்கி கொடு. . அங்கே பிராந்தி கொடு.... இவருக்கு ஜின்னும் எலுமிச்சைச் சாறும் ..."

பெண்களெல்லாரும் ஜின்னும் எலுமிச்சைச்சாறும் அருந்துகிறார்கள். விதிவிலக்காக மிஸஸ் லோபோவும் லிண்டாவும் மட்டும் ஸ்காட்ச் அருந்துகிறார்கள்.

கிரிகரியைப் பார்த்தால் பல்லி மாதிரி இருக்கிறது. அவன் தொள தொளாப் பாண்டும் கோட்டும் டையும் அணிந்திருக்கிறான். டையின் முடிச்சு கழுத்துக்கு இரண்டங்குலம் கீழே போயிருப்பதைக் கூட அவன் பொருட்படுத்தவில்லை. அவனுக்கு அவ்வளவு வேலை.

சுஸான் பெரிய அதிகாரியுடன் ஒரு சோபாவில் உட்கார்ந்து கொண்டு ஏதோ கிசுகிசுக்கிறான். மற்ற அதிகாரிகள் கையில் மதுபானக்கிளாசுடன் அங்கங்கு நின்று கொண்டிருக்கிறார்கள். ஒரு சிறு மேஜை மேல் வறுத்து உப்புக் கலந்த முந்திரிப்பருப்பும் வறுவலும் வைக்கப்பட்டிருக்கின்றன. மிஸஸ் லோபோ பெரிய அதிகாரிக்கும் சுஸானுக்கும் நடுவே போய் உட்காருகிறாள்.

லிண்டா வேடிக்கையாக ஏதோ சொல்ல எல்லோரும் சிரிக்கிறார்கள். ஆனால் லிண்டா சிரிக்கவில்லை. அவள் பார்வை மிஸஸ் லோபோ இருக்கும் திக்கில். ஒரு தடவை அவள் பார்வை அந்தோனியின் மேல் பதிந்தது "யாரிந்தப் பட்டிக் காட்டான் வேஷ்டியும் சட்டையும் போட்டுக் கிட்டு ?" என்ற பாவம் அந்தப் பார்வையில்.

அந்தோனியும் சதா முகர்ஜியும் கையில் ஆரஞ்சு ரசத்தை வைத்துக்கொண்டு உரையாடுகிறார்கள்.

சதா முகர்ஜி சொன்னான் " இங்கே இந்த மாதிரி குடிகார வியாபாரம்னா நான் இவங்களோடே வந்திருக்கவே மாட்டேன். இதெல்லாம் எனக்குப் பிடிக்கலே . . உன்னோடதான் வந்து தங்கணும் போலே இருக்கு . ."

"வாயேன். என் வீட்டிலே நிறைய இடம் இருக்கு. எனக்கு ஒரு அசௌகரியமும் இல்லே. உன்னோட பேசிக்கிட்டாவது இருக்கலாம்..."

"நீ இந்த மாதிரி சமூகத்திலே எப்படித்தான் இருக்கே ?"

"எப்படியோ . . ."

சதா திமீரென்று சிரித்து விட்டான்.

"என்ன விஷயம் ?" அந்தோனி கேட்டான்.

"பல்லி மாதிரி இருக்கானே, அந்த ஆளைத் தெரியுமா ? அவன் கார்தோஸா கம்பெனி மானேஜராம். என்கிட்டே வந்து ரெண்டு தடவை கேட்டுட்டான் 'ராத்திரி படுக்கைக்குத் துணை

வேணுமா'ன்னு. 'சர்க்கார் ஆபீசர்களுக்குப் படுக்கையிலே துணையில்லேன்னாத் தூக்கம் வராது' ங்கறான் ..." தொந்தி குலுங்கச் சிரித்தான் சதா.

"நீ என்ன சொன்னே ?"

"நான் சொன்னேன் - 'உங்க ஊர் ஒரே சூடு. இந்தச் சூட்டிலே படுக்கையிலே ரெண்டு பேரா ! ... வேர்வைப் பிசுபிசுப்பிலே எனக்குத் தூக்கம் வராது' . . ."

ஒரு வாலிபன் தன் தோளில் பியானோ அக்கார்டியன் வாத்தியத்தை வைத்துக் கொண்டு இசைத்துக்கொண்டே கால்களால் தரையில் தாளம் போட்டான். ஜோடிகள் ஃபாக்ஸ்டிராட் நடனமாடத் தொடங்கினர். பெரிய அதிகாரியுடன் ஜோடி சேர்ந்து கொண்டாள் மிஸஸ் லோபோ.

சதா அதிகாரியைச்சுட்டிக்காட்டி அந்தோனியிடம் சொன்னான் - "ஒது ஒரு பீப்பாய். மத்தியானத்திலே குளிர்ந்த பீர் ஆறு போத்தல் குடிச்சிருக்கார். அதுக்குக் குறைஞ்சா அவர் தாகம் தீராதாம். இதுக்குள்ளேயே இங்கே ரெண்டு கிளாஸ் விஸ்கி குடிச்சாச்சு. அந்த மிஸஸ் லோபோ அவர் கையிலே மூணாவது கிளாஸ் கொடுத்தா.. . சுஸான் கார்தோஸா பெரிய ஆளாயிருப்பான் போலே இருக்கு. எப்போ பார்த்தாலும் பெரிய அதிகாரியோடே குசுகுசுக்கறான். இவன் தான் இந்த ஊர் மீனவ சமூகத்துக்குத் தலைவன் போலே இருக்கு. ரோச் விக்டோரியா பேருக்குத்தான் மீன் வள மந்திரி. இவன் பத்துலட்ச ரூபாய்க்கடனுக்காக அதிகாரியைக் குழையடிக்கறான். மீனவ சங்கம் இவன் கையிலே இருக்கறதாலே இங்கே இருக்கற சின்ன அதிகாரிகள் இவன் கிட்டே பயப்படறாங்க. . இவன் புகார் பண்ணியதாலே ஒரு ஆபீசரைக் குருசடைத் தீவுக்கு மாத்திட்டாங்களாம் . . ."

வாத்திய இசையின் ஒரு பாட்டம் முடிந்ததும் ஜோடிகள் பிரிந்து மது பானங்கள் அருந்தத் தொடங்கினர். தொட்டுக் கொள்ள சுடச் சுட மீன் சட்டினி, மிளகாய் அரைத்துவிட்டு வதக்கிய சூர்மா மீன். பணியாளர்களின் சுறுசுறுப்பான நடமாட்டம் . . மறுபடி இசை, மறுபடி நடனம் வால்ட்ஸ், வழுக்கைத்தலை டேவிடுக்கு ஜோடியாக பேபி அவனுடைய தொந்தியைக் கட்டிக் கொண்டிருக்கிறாள்.

மார்ஸி மெதுவாக அந்தோனியிடம் வந்தாள்.

"மார்ஸி, வா, உட்காரு."

சதா எழுந்து போய் ஹாலில் இங்குமங்கும் உலாவினான். எல்லாவற்றையும் பார்க்கும் ஆவல் அவனுக்கு.

"மார்ஸி, நீ முந்தி மாதிரி இல்லையே !" அந்தோனி அனுதாபத்துடன் சொன்னான்.

மார்ஸியின் பெருமூச்சு புயல் போல் வெளிப்பட்டது. அவள் தன் கையிலிருந்த ஜூஸ் எலுமிச்சை ரசக் கலவையைக் கொஞ்சம் ருசித்து விட்டுத் தளர்ந்த குரலில் சொன்னாள். "நான் இப்பவே கிழவியாயிட்டேன் அந்தோனி. . நான் தீர்ந்து போயிட்டேன். . என் வாழ்க்கை சக்கையாக் காஞ்சு போச்சு . . ."

"உனக்குக் குழந்தை குட்டிகள் ? . . ."

"ஒண்ணு கர்ப்பத்திலேயே மூணாம் மாசம் அழிஞ்சு போச்சு அதுக்கப்புறம் ஒண்ணுமில்லே. .

"டாக்டர் கிட்டே காண்பிக்கல்லியா?"

"காண்பிச்சாச்சு. . அவர் கிட்டே குழந்தை உண்டாக்கிற சக்தி இல்லையாம். . என்னோட டான்ஸ் ஆடு, வா . ."

"நல்லாயிருக்கு, இந்த வேஷ்டி, செருப்போடே டான்ஸ் !"

"ஒரு நாள் எங்க வீட்டுக்கு வாயேன்!"

மார்ஸி எழுந்து போய் அருகில் உட்கார்ந்திருந்த இளைஞன் ஒருவனை ஜோடி சேர்த்துக் கொண்டு நடனமாடத் தொடங்கினாள். அவன் துறைமுக அலுவலகத்தில் குமாஸ்தா. பெயர் ஜூலியன்.

சதா மறுபடி அந்தோனியின் அருகில் வந்தமர்ந்தான். "உன்னோட கேர்ல் ஃபிரண்டா ?" என்று கேட்டான்.

"என் மாமா பெண் . . நான் அவளைக் கலியாணம் பண்ணிக்கிறதா ஒரு காலத்திலே பேச்சு இருந்தது . ."

"ஆமா ஆமா, இங்கே தென்னிந்தியாவிலே மாமா பெண்ணும் அத்தை பிள்ளையும் கல்யாணத்துக்கு ரொம்பப் பொருத்தம் . . அப்போ. . நீ அந்தப் பெண்ணை . . அவ பேரென் ? உம், சாருபமா தத்தா . . ."

அந்தோனி சிரித்தான்.

"அந்தப்பெண் ரொம்பப்பிரமாதம் ! நீ அவளைக் கலியாணம் பண்ணிக்கிட்டிருக்கலாமே !. .. சரி, நீ கலியாணம் பண்ணிக்கிட்டியா இல்லையா? "

"இன்னும் பண்ணிக்கல்லே . . சீக்கிரமே பண்ணிக்குவேன்"

"இங்கிலீஷ் பெண்ணா ?"

"ஆமா . . . கலியாணம் நிச்சயமாயிடுச்சு. இனிமேல் நடக்க வேண்டியதுதான். . உன் சமாசாரம் என்ன? அந்தப் பிரதிமா சென்?. . ."

"ஆமா, அவ இப்போ பிரதிமா முகர்ஜி. நாலுகுழந்தைகளுக்கு அம்மா. ஒல்லியாகக்கொடி மாதிரி இருந்த பிரதிமா ரெண்டு

பங்கு பெருத்துட்டா. உருண்டையா இருக்கா. இடுப்பிலே வாதம். நெஞ்சிலே மூச்சுத்திணறல், பித்தம். . நொண்டி நொண்டிக்கிட்டு பெண்கள் காலேஜிலே வாத்தியார் வேலையையும் குடும்ப நிர்வாகத்தையும் செஞ்சுக்கிட்டிருக்கா. . " தொந்தி குலுங்கச் சிரித்து விட்டு சதா எங்கோ போய் வந்தான். பிறகு சொன்னான், " சீ, என்ன அசிங்கம் ! . . பிறந்தியான் சரக்குன்னா இப்படியா குண்டியை அடைச்சிக்கிட்டுக் குடிப்பாங்க ! கக்கூசிலே ஒரே வாந்தியெடுத்திருக்காங்க இந்த ஆபீசர்கள் ! . . பெரியவருக்கு விஸ்கி குடிச்சுத் திருப்தியில்லே போலே இருக்கு. பாய்ச்சி குடிக்கற ஆசை வந்துடுத்து. . மிஸஸ் லோபோவோட பிரேசியரை இழுத்துட்டார். அந்தப் பல்லி வந்து அவர் சட்டைக் காலரைப் பிடிச்சுத் தள்ளிக்கிட்டுப் போச்சு. பார்க்கப் பல்லி மாதிரி இருந்தா என்ன! அந்த ஆளுக்கு நல்ல பலம். . " சதா சிரித்தான்.

இரவு பன்னிரண்டு மணிக்குச் சாப்பாட்டு அழைப்பு வந்தது. நான்கு நீளமான மேஜைகளில் விதவிதமான உணவுவகைகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. 'பஃபே' முறை விருந்து.

அந்தோனியின் மனக்கண் முன்னால் அவன் அன்றொரு நாள் கடற்கரையில் கண்ட காட்சி தோன்றியது. மண் சட்டியிலிருந்து சோற்றைச் சுரண்டித் தின்னும் குழந்தைகள். . திடீரென்று மேஜைக்கருகிலிருந்து அதிகாரி குழறிக் குழறிப் பேசுவது கேட்டது.

"நாம இப்போ சுதந்திர நாட்டு மக்கள். எல்லா விஷயங்களையும் புதிய நோக்கிலே பார்க்கணும். இந்த மீன் பறவ சமூகத்தை வெறும் மீனவங்கதானேன்னு ஒதுக்க முடியாது. இவங்க உதவியில்லேன்னா நாடு முன்னேறாது. நம்ம முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக்க . . நாம இந்த மீனவ சமூகத்தோட உதவியாலே எப்படி நாட்டை உயர்த்தறதுன்னு ஆராய்ச்சி பண்ணி ஒரு கட்டுரை எழுதியிருக்கேன். அதிலே ஒரு பிரதி உங்க ஒவ்வொருத்தருக்கும் தரப்போறேன். பி.கே.யைப் பிரதிகள் கொண்டு வரச் சொல்லியிருக்கேன். . . பி.கே. எங்கே ?"

வெளியிலிருந்தவர்கள் பி.கே.யை அழைத்து வந்தார்கள். பி.கே.யின் முகம் கல்மாதிரி சலனமின்றி இருந்தது. அவர் பிரதிகள் கொண்டு வரவில்லை. யாரும் அவரைக் கொண்டு வரச் சொல்லவில்லையாம்.

அதிகாரி சீறினார் - "சில்லிஃபூல் ! ஒரு காரியங்கூட ஒழுங்காச் செய்யறதில்லே ! . . ஒர்த்லெஸ்!"

"என்கிட்டே பிரதிகள் இருக்கு. நான் நாளைக்கே எல்லோருக்கும் அனுப்பிடறேன்" சுஸான் சொன்னான்.

அந்தோனியின் வாயில் சாப்பாடு இறங்கவில்லை. நினைவு வருகிறது- பெண்ணொருத்தி கடும் நோய் வாய்ப்பட்டுத் துடிக்கிறாள். அவளுடைய கணவன் நள்ளிரவுக்குப்பின்னும் ஒரு குடிகாரக்கும்பலுக்குப் பணி விடை செய்து கொண்டிருக்கிறான்.

இரவு இரண்டு மணிக்கு விருந்து முடிந்தது. அந்தோணி பி.கே.யிடம் 'என்னை வீட்டிலே கொண்டு போய் விட்டுடுங்க" என்றான். சதாவும் அந்தோனியுடன் புறப்பட்டான்.

வண்டி ஊருக்குள் நுழைந்ததும் அந்தோனி பி.கே.யிடம் சொன்னான் " நான் உங்களை உங்க வீட்டிலே இறக்கி விட்டுடறேன்..."

"இல்லே, வேண்டாம் சார்?.."

"அதெல்லாமில்லே!... உங்களை உங்க வீட்டிலே இறக்கி விடத்தான் போறேன்" பிடிவாதம் பிடித்தான் அந்தோனி.

வேறு வழியின்றி பி.கே. வண்டியோட்டிக்குத் தன் விலாசத்தைக் கொடுத்தார்.

பெரிய ரஸ்தாவிலிருந்து ஒரு சந்தில் திரும்பியதுமே பி.கே.யின் வீடு, ஒரே அறை கொண்ட ஓரடுக்கு வீடு, வண்டி வீட்டை நெருங்கியதும் சிலர் வீட்டுக்குள்ளிருந்து வந்து பி.கே.யை உள்ளே அழைத்துச்சென்றனர், "வா, வா... கடைசி நேரத்திலே வந்து சேர்ந்திருக்கே! இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தே?.. வாயிலே கொஞ்சம் தண்ணி ஊத்து!...

அந்தோனி கல்லாய்ச் சமைந்து நின்றான். ஏதோ ஆபத்து என்று ஊகித்துக் கொண்ட சதா வண்டியிலிருந்திறங்கி வீட்டுக்குள் ஓடினான். வெளியே வந்து வண்டியோட்டியிடம் சொன்னான். "சீக்கிரம் ஒரு டாக்டர் வீட்டுக்கு என்னைக் கூட்டிக்கிட்டுப்போ..." பிறகு அந்தோனியிடம் கூறினான், "நீ இங்கேயே இரு, அந்தோனி.. நான் டாக்டரைக் கூட்டிக்கிட்டு வரேன்..."

அரை மணிக்குள் மருத்துவரைக் கூட்டிவந்தான் சதா. ஆனால் அதற்குள் நோயாளியின் இதயத்துடிப்பு நின்று போயிருந்தது.

பி.கே.யின் மனைவியின் ஈமச்சடங்குகளுக்கான ஏற்பாடுகள் செய்துவிட்டு சதா முகர்ஜியுடன் அதிகாலையில் வீடு திரும்பினான் அந்தோனி. அவன் வெளியறையில் கால்வைத்த போது அங்கே பீட்டர் தரையில் தூங்கிக் கொண்டிருந்தான். அவர்கள் நுழைந்த அரவத்திலும் அவனது உறக்கம் கலையவில்லை.

☆ ☆ ☆

எதிரில் காட்வினின் முழுநீள ஓவியம். அதைக்காட்டி சதா சொன்னான், "இந்த மாதிரி தோற்றத்தைப் பார்த்துத்தான் ஹார்னெல் தவறாக எண்ணிவிட்டார். என்ன அபார வீரியம் அந்த முகத்திலே! 'நான் இந்த உலகத்தையே அடக்கிடுவேன்' என்கிற மாதிரி பாவம். ராயல் வங்காள் புலி மாதிரி பார்வை. அதைக் கண்டால் சாதாரண ஆளுக்கு நெஞ்சு பக்பக்குன்னு அடிச்சுக்கும் நிச்சயமா. அந்த ஏழடி நீள உடம்பு, அகல அகலமா எலும்பு, மலேயா போலி நீஷியா சர்தார்கள் மாதிரி தோற்றம்... அதனால் தான் மீன் பறவங்க மலேயா போலி நீஷியாவிலேருந் வந்திருக்கணும்னு ஹார்னெல் நினைச்சார் ...."

"ஹார்னெல் யாரு?" அந்தோணி கேட்டான்.

"இருபத்தஞ்சு முப்பது வருசம் முன்னாலே மதராஸ் மீன் வளத்துறைத் தலைவராயிருந்தவர்."

பீட்டர் சொன்னான் "நாங்க ஆசியாமைனர், சிரியா, பிநீஷியாப் பிரதேசங்களிலிருந்து வந்தவங்கன்னு ரோட்ரிகோ சித்தப்பா சொல்லுவார். எங்க இனத்துக்கு இன்னொருபேர் பரதர். ஆரியங்கவரதுக்கு ரொம்பகாலம் முன்னாலேயே நாங்க இந்த நாட்டுக்கு வந்தோமாம். அதனால்தான் இந்த நாட்டுக்குப் பாரததேசம்னுபேராம்......"

"அப்பமன்னா மொகெஞ்சதாரோ ஹரப்பா இதெல்லாம் நம்ம முன்னோர்களோட சாதனையா?" அந்தோணி கேட்டான். சதா பதிலளித்தான். "இருக்கலாம். மொகெஞ்சதாரோ ஹரப்பா திராவிட நாகரீகச் சின்னங்கன்னு ரொம்பப் பேர் நினைக்கறாங்க. ஆதிகாலத்துத் திராவிடர்களோட தொடக்கமே இந்த மீன்–பறவ இனமாயிருக்கலாம்....ஆனால் நான் தலை, மூக்கு, மோவாய், தாடை இதையெல்லாம் அளந்து பார்க்காம ஒண்ணும் நிச்சயமாச் சொல்ல மாட்டேன். இந்த விஷயத்தைப் பத்தித்தான்நான் ஆராய்ச்சி பண்ணிக்கிட்டிருக்கேன்....."

"எங்க இனம் ரொம்பப் பழசுதான்" பீட்டர் சொன்னான்

"எப்படிச் சொல்றீங்க?" சதாவின் கேள்வி.

"ரொம்பப் பழங்காலத்து இனங்கள் மாதிரி எங்க சுபாவமும். கோபம் வந்தா ரத்தங்குடிக்கற ஓநாய் மாதிரி, பிசாசு மாதிரி ஆயிடுவோம். சண்டை ரத்த வெள்ளத்துல போய் முடியும். அதைப் பார்த்தால் மயிர் நிலைகுத்தி நிக்கும். ராட்சசப்பசி வயித்திலே... சதைப் பசியும் அதே மாதிரிதான்...."

சதா சிரித்தான் "அப்படியா? பெண்பிள்ளைகளுக்கும் அப்படித்தானா?"

"அவங்களுக்கு இன்னும் ஜாஸ்தி. அவங்க ரத்தம் பொங்கு முகத்திலே சமுத்திரம் மாதிரி. மனசு ஒருத்தன்கிட்டே போயிட்டா அவனை ஆசை வெள்ளத்திலே முழுக்கடிப்பாங்க. தாங்களும் முழுகிடுவாங்க. ஒழுக்கம், சமூகக்கட்டுப்பாடு எதைப் பத்தியும் கவலையில்லை......"

"நல்ல வேளை! படுக்கையிலே துணைக்கு ஆள் வேணும்னு கேட்காமே பிழைச்சேன்!" என்று சொல்லித்தொந்தி குலுங்கச் சிரித்தான் சதா. பிறகு பீட்டரைக் கேட்டான்," உங்களைப் பற்றிய பழைய கதையெல்லாம் யார்கிட்டே கேட்கலாம்?"

பீட்டர் சொன்னான், "ரோட்ரிகோ சித்தப்பாதான். நிறையப் படிச்சிருக்கார் ...."

"அவர்கிட்டே என்னைக் கூட்டிக்கிட்டுப்போங்க ...."

மூவரும் ரோட்ரிகோவைப் பார்க்கச் சென்றனர். பெரிய கோவிலுக்குப் பின்புறச் சந்தொன்றில் அவரது வீடு. ரோட்ரிகோ ஒல்லியாக, குட்டையாக இருந்தார். நரை மயிர் குட்டையாக வெட்டப்பட்டிருந்தது. தடிமனான லென்ஸ் கொண்ட மூக்குக் கண்ணாடி. அத்துடன் பூதக் கண்ணாடி ஒன்றையும் கையில் வைத்துக் கொண்டு சிறியசிறிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருந்த கட்டுரையொன்றைப் படித்துக் கொண்டிருந்தார்.

வந்தவர்களை உட்காரச் சொல்லிவிட்டுப் படிப்பைத் தொடர்ந்தார். பத்து நிமிடங்களுக்குப் பிறகு மூக்குக் கண்ணாடி வழியே உற்றுப் பார்த்துவிட்டுக் கேட்டார்", "என்ன பீட்டர், என்ன சமாசாரம்?...இவங்க யாரு ?"

இதற்குள் அந்தோனியும் சதாவும் அந்தக் கட்டுரையைக் கவனித்து விட்டார்கள் ஹெராஸ் பாதிரியாரின் கட்டுரை 'தி சுமீரியன் சிவிலிசேஷன்'....

சதா கேட்டான், "இதை எழுதினவர் பம்பாய் செயின்ட் சேவியர்ஸ் காலேஜ் பேராசிரியர் ஹெராஸ் பாதிரியார்தானே?"

"ஆமா, உங்களுக்குத் தெரியுமா அவரை?" ரோட்ரிகோவின் முகத்தில் புன்னகை.

"நேரடியாப் பார்த்ததில்லே, ஆனால் அவரோட கட்டுரைகள் நிறையப் படிச்சிருக்கேன்..."

ஆவலுடன் கேட்டார் ரோட்ரிகோ, "அவர் மொகெஞ்செதாரோ எழுத்துக்கள் பத்தி எழுதியிருக்காரே அதைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?" வந்தவர்களுடன் முறையாக அறிமுகம் ஆகவில்லை என்பது கூட மறந்து போய் விட்டது ரோட்ரிகோவுக்கு.

"நான் படிச்சிருக்கேன். அது பழைய தமிழ் எழுத்துன்னு அவர் சொல்றார். ஆனால் ...."

ஒரு நிமிடத்தில் ரோட்ரிகோவின் முகபாவம் மாறிவட்டது. அவர் புருவங்களைச் சுருக்கிக் கொண்டு கேட்டார், "பாதிரியார் கொடுத்திருக்கிற சான்றுகள் தவறுன்னா சொல்நீங்க?.... நீங்க யாரு? ...." அவரது குரலில் காரம். பிறகு ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மாறினார் "கற்றது கைமண்ணளவு, கல்லாதது உலகளவு"....

அறையின் ஒரு மூலைக்குப் போனார் ரோட்ரிகோ. அறை நிறையப் புத்தகங்கள் பெரும்பாலும் பழைய புத்தகங்கள், சுவரையொட்டி மரஷெல்புகளில் வைக்கப்பட்டிருந்தன. அதுதவிர, தரையிலும் கட்டிலின் மேலும் பத்திரிகைகள், காகிதக் குவியல்கள்.. பாலிஷ் அழிந்துபோன மேஜை மேலும் காகிதங்கள் தான்..... அவற்றில் எதையோ தேடினார் ரோட்ரிகோ.

பீட்டர் சொன்னான், "இவர் ஆந்த்ரபொலாஜிகல் சர்வேயிலேருந்து வந்திருக்கார். சதானந்த முகர்ஜின்னு பேரு, நம்ம மீன் பறவ இனத்தைப் பத்தித் தெரிஞ்சுக்கணுமாம்....... நம்ம அந்தோனியோட நண்பர் ........

"அந்தோனியா?,,,, அந்தோனி யார்?"

அந்தோனி சொன்னான்,"நான் தான் அந்தொனி ஃபெர்னாண்டோ...."

"அந்தோனி ஃபெர்னாண்டோவா?...நம்ம ஜாதியா?...... அப்பா பேரு?........"

"காட்வின் ஃபெர்னாண்டோ....."

"அப்படிச்சொல்லு!....காட்வினோட பிள்ளை.....காட்வின் என்னை அண்ணேன்னு கூப்பிடுவான். என்னை விட மூணுவயது சின்னவன். அதிகம் படிக்கல்லே, ஆனால் மகா கெட்டிக்காரன். நீ அப்பாவுக்குச் சரியான பிள்ளை. உன் வயசு முப்பத்திரண்டு. நீ கல்கத்தாவிலே படிச்சுப் பட்டம் வாங்கிக்கிட்டு லண்டன்லே இருக்கே இப்போ....சரி தானே?.... நம்ம இனத்தைப் பத்தி ஏதாவது தெரியுமா உனக்கு?"

அந்தோனி அடக்கத்துடன் தனக்குத் தெரியாது என்பதை ஒப்புக்கொண்டு சொன்னான், "இவர் என்னோட நண்பர். இவருக்குச் சரித்திரத்திலே ரொம்ப ஆர்வம்....."

ரோட்ரிகோ சதாவைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் சதா விடவில்லை. "நீங்க இந்த நாட்டிலே மிகப் பழைய நாகரீக இனம்" என்று சொல்லத் தொடங்கினான்.

"பழசுன்னா சும்மாவா?" சதாவை இடைமறித்துச் சவால் விடும் தொனியில் பேசத் தொடங்கினார் ரோட்ரிகோ. "நீங்க ஆரியங்க இந்த நாட்டுக்கு வரதுக்குப் பலகாலம் முந்தியே நாங்க-பரதங்க-இங்கே வந்துட்டோம்....ருக்வேத காலம் ஐயாயிரம் வருசத்துக்கு முந்தியதுங்கறாங்க. எங்க நாகரீகம் அதுக்கும் இரண்டாயிரத்தைந்நூறு வருசம் முந்தியது... இந்த 'பாரத்' வார்த்தை இருக்கே, இதிலேருந்து எவ்வளவு வார்த்தை வந்திருக்கு தெரியுமா? பாரா, பாலா, பால்லா, பார், பாகர், மாரா, மாலா, மால்லா, பாலவா, பல்லவா, பார்த்தவா, பற வா..... அதிலேயிருந்துதான் பிராகுயி, பில்லா, வில்லா ளா.... பிராகுயிக்கள் பலுசிஸ்தான் திராவிடங்க, பில்லாகள் மத்திய இந்தியாவோட ஆதிவாசிகள்...."

சதா சொன்னான். "மல்லர்கள் வங்காளத்திலே இருக்காங்க....பல்லவர்களும் திராவிடர்கள்தானா?"

"சந்தேகமே இல்லை! நரசிம்மவர்ம பல்லவன் மராத்திய ராஜா ரெண்டாம் புலிகேசியை ஜெயிச்சான். பல்லவங்களோட புகழுக்கு அடையாளம் மாமல்லபுரம்... அதிலே பாதி இப்போ கடலுக் குள்ளே முழுகிப் போச்சு...."

"அப்பமன்னா மீன் பறவர்கள் திராவிடர்களா?"

"ஆமா!...ஹார்னெல் என்ன வேணும்னாலும் சொல்லட்டும்! அவரைவிட ஹெராஸுக்குத் தமிழுங்களைப் பற்றி நல்லாத் தெரியும்...."

அந்தோனியும் பீட்டரும் இந்த விவாதத்தை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

சதா ஜாக்கிரதையாகப் பேசத் தொடங்கினான் "ஆனால் ..... ஆனால்...'மீன்' என்ற வார்த்தையே சம்ஸ்கிருதந்தானே?..." ரோட்ரிகோவுக்குக் கோபம் வந்துவிடுமோ என்று அவனுக்குப் பயம்.

கிழவரின் முகத்தில் அலாதியாக ஒரு சிரிப்பு சிறு குழந்தைகள் உளறுவதைக் கேட்டுப் பெரியவர்கள் சிரிப்பது போல். "இல்லே தம்பி, இல்லே! மீன், மயில், முத்து இதெல்லாம் அசல் திராவிட வார்த்தைகள். பின்னாலே சம்ஸ்கிருதத்திலே சேர்ந்துடுச்சு. உங்க அறிஞர் டாக்டர் சுநீதி சாட்டர்ஜியோட கருத்தும் இதுதான்....."

சதாவுக்கு ஆச்சரியம். "டாக்டர் சாட்டர்ஜியைத் தெரியுமா உங்களுக்கு?"

"ஓ, தெரியுமே! அவர் மதராசுக்கு வந்தால் என்னைக் கூப்பிட் டனுப்புவார். பெரிய அறிஞர், வறட்டுப் பிடிவாதம் கிடையாது அவர்கிட்டே..."

"பறவ'ங்கற வார்த்தை எப்படி வந்தது?

".....'பறவை'ன்னாத் தமிழிலே பட்சின்னு அர்த்தம்,,, ஆதிகாலத்திலே தமிழுங்க மூணுவித நெருப்பைப் பூஜை செஞ் சாங்க-ஒண்ணு சூரியன், இன்னொண்ணு சந்திரன். மூணாவது அசல் நெருப்பு. தமிழுங்களிலே பல குழுக்கள் இருந்தன. ஒவ் வொரு குழுவுக்கும் ஒரு தனிச் சின்னம் இருந்தது. ஒரு குழுவோட சின்னம் மீன், அவங்களுக்குப் பேர் 'மீனவர்' ...

"ஒருநாள் அந்தி நேரத்திலே அவங்க சூரியனைப் பார்த்துக் கிட்டு இருந்தாங்க. அப்போ சூரியனுக்குள்ளே ஒரு பறவையைப் பார்த்தாங்க. சூரியனுக்கு ஒப்பான ஒளி அந்தப் பறவைக்கும். அது சூரியனின் நண்பனாயிருக்கணும்... இது கருடன் பற்றிய தத்துவந்தான்.....

"அன்னியிலேருந்து அவங்க மீன் சின்னத்தை மாத்தி பறவையை சின்னமா வச்சுக்கிட்டாங்க. அவங்க பேரும் மாறிப் 'பற வர்'னு ஆயிடுச்சு...... இது ஒரு சங்கேதக் கதை. ஒவ்வொரு பழைய இனத்துக்கும் இந்த மாதிரி ஒரு சங்கேதக்கதை இருக் கும். ஆனால் இந்த சங்கேதக் கதையெல்லாம் முழுவதுமே பொய் யில்லே. அதிலே ஏதாவதொரு உண்மை மறைஞ்சிருக்கும். அந்த உண்மையைத் தேடிக் கண்டுபிடிக்கணும்..."

"இங்கே உண்மை என்ன?" சதா கேட்டான்.

"நான்தான் முன்னாலே சொன்னேனே-'பறவ'ங்கற வார்த்தைக்கும் 'பாரத்' ங்கற வார்த்தைக்கும் உள்ள ஒற்றுமை பத்தி .... நாங்க தான் அசல் திராவிடங்க, முழுத்தமிழுங்க... இதுக்கு ருசு இந்தத் திருநெல்வேலியும் சிலோனும்தான். இங்கேதான் சுத்த மான தமிழ் பேசறாங்க. இதுக்குச் 'செந்தமிழ்'னு பேரு...மத்த இடங்களிலே தமிழ் இவ்வளவு சுத்தமா இருக்காது...."

"ஏன்?"

"வடக்கேயிருந்து ஆரியங்க அவங்க மொழியைக் கொண்டு வந்தாங்க. இனங்கள் ரெண்டும் கலந்து போச்சு. வடக்கேயிருந்து வந்த ஆரியங்க இங்கே தமிழ்ப் பிராமணர்களாகித் தமிழிலே நிறைய சம்ஸ்கிருத வார்த்தைகளைக் கலந்துட்டாங்க. ஆனா சுத்தத் தமிழிலே சம்ஸ்கிருதம் ஒரு துளிகூட இருக்காது. இந்திய நாகரீகத்தோட தொடக்கத்தைக் கண்டுபிடிக்கணும்னா ஆராய்ச்சியை கங்கைக் கரையிலே செய்யாமெ வைகை அல்லது

தாமிரவருணிக் கரையிலே செய்யணும்.... ஆனால் நாங்க சொல் றதை யாரு கேட்கறாங்க?.....ஜவகர்லால் காஷ்மீரத்துப் பிராம ணர். அவரோட உடம்பிலே ஆரிய ரத்தம் ஓடறது. அவருக்கு வால்பிடிக்கிற ராஜகோபாலச்சாரியும் ஆரியர். அவரோட தாய் மொழி மட்டுந்தான் தமிழ்..."

"சுத்த ரத்தம் உள்ள மனுசன் இந்தியாவிலே இல்லை..." அழுத்தத் திருத்தமாகக் கூறினான் அந்தோனி "எல்லா இனங்க ளோடே ரத்தமும் கலந்து ஒண்ணாயிடுச்சு. ஆரியர், திராவிடர், கோலர், முண்டா எல்லாம் ....."

"உண்மைதான்.....'மானிடத்தின் கடற்கரையில் ...' தாகூர் சொன்னது சரிதான். சுத்தமான ரத்தம் இப்போ எங்கேயும் இல்லே .....நம்ம ரத்தத்திலே இப்போ போர்ச்சுகீஸ், டச்சு, கிரேக்க, ரோமன், எகிப்திய, பெர்பெர், மூர், அரபு எல்லாம் இருக்கு ....ஹா ஹா ஹா?.....மன்னார்க்கரை முத்துக்கு ஆசைப் பட்டு இங்கே வந்தவங்க ரத்தத்தைக் கொடுத்தாங்க, எடுத்துக் கிட்டும் போறாங்க.... தூத்துக்குடி ஒரு சந்தை. உலகத்துச் சந்தை!..." குண்டு வெடித்தாற்போல் உரக்கச் சிரித்தார் கிழவர்.

பிறகு அவர் பீட்டரிடம் சொன்னார், "மூணு கப் காபியும் கொஞ்சம் முறுக்கும் கொண்டுவரச் சொல்லு மேரியாவை".

பீட்டர் உள்ளே போய்ச் சொல்லிவிட்டு வந்தான்.

சதா சொன்னான், "நான் மீன் பறவர்கள் சிலரோட ரத்த வகையைச் சோதிக்க விரும்புகிறேன்...."

"அதுக்கென்ன! பல ரத்த வகைகளையும் பார்க்கலாம் இங்கே.....மன்னார் முத்துக்கு நீண்டகால வரலாறு உண்டு. முத் தோட வரலாறுன்னா மீன் பறவங்களோட வரலாறுதான். எங்க ளோட முன்னோர்கள்தான் ரெண்டாயிரம் வருசமா மன்னார்க் கடல் ஆழத்திலேருந்து முத்தும் சங்கும் எடுத்துக்கிட்டு வந்திருக் காங்க.....".

இந்த வரலாறு அந்தோனிக்குத் தெரியாது. "ரெண்டாயிரம் வருசமாவா!" என்று வாயைப் பிளந்தான் அவன்.

ரோட்ரிகோ பதிலளித்தார் – "ஆமா .. கிருஸ்துவோட மரணத் துக்குப் பிறகு நூறு வருசத்துக்குள்ளே இந்தியாவுக்கு வந்தார் ரோம அறிஞர் பிளினி. அவர் மன்னார் முத்தைப்பத்தி எழுதியிருக்கார். ....இன்னொரு ருசியான செய்தி ... கிளியோ பாத்ரா உலகத்து அழகிகளிலேயே முதல் வரிசையில் உள்ளவள். அவள் மார்க் அந்தோனிக்குக் கொடுத்த விருந்திலே மன்னார் முத்தாலான காதணி போட்டுக்கிட்டிருந்தாள். அதோட பிரகாசத்தை வர்ணிக்க முடியாது. தலைசிறந்த வைரமெல்லாம்

அதுக்கு முன்னாலே ஒண்ணுமேயில்லை. அது ஜூலியஸ் சீஸர் அவளுக்குப் பரிசாகக் கொடுத்தது. இந்தக் காலத்துக் கணக்கிலே அதோட விலை இருபத்திரண்டு லட்ச ரூபாய் ...."

"அட... இப்படிப்பட்ட முத்து நம்ம மன்னாரிலே உண்டாச்சா. – அந்தோணி கேட்டான்.

"ஆமா....இதுக்கு ருசு பைபிளிலேயே இருக்கு... ராணி ராஜா சாலமனைப் பார்க்கப் போற போது ஒரு கொத்து மன்னார் முத்து..."

"அது மன்னார் முத்துதான் என்பதற்கு ருசு என்ன?" சதா கேட்டான் மெதுவாக.

"கொற்கைதான் ருசு. தூத்துக்குடிக்குப் பக்கத்திலே தாமிர வருணிக் கரையிலே பழைய காலத்துறைமுகம் கொற்கை. அதுக்கு அந்தக் காலத்திலே கொள்ளைன்னு பேரு. இங்கேருந்து ரொம்ப தூரமில்லே. போய்ப் பார்த்துட்டுத் தான் வாயேன். அங்கே சீஸர் காலத்து ரோமன் நாணயம் கிடச்சிருக்கு அந்தக் காலத்திலே கொற்கையிலே லட்சக்கணக்கிலே சிப்பி யெடுப்பாங்க. சிப்பி வயித்திலேருந்து முத்தெடுப்பாங்க. சங்கு எடுப்பாங்க. கடல்லேருந்து நானே அங்கே குப்பையிலே ருந்து ரம்பத்தால் அறுத்த சங்கு எடுத்திருக்கேன்... இப்போ வங் காளத்திலே மட்டுந்தான் சங்கையறுத்து வளையல் பண்றாங்க. முன்பு டாக்காவிலேயும் கல்கத்தாவிலேயும் இந்தத் தொழில் நடக்கும். டாக்கா இந்தியாவை விட்டுப் பிரிஞ்சப்புறம் இப்போ கல்கத்தா ஒண்ணுதான் இந்த ஊர் சங்குக்கு மார்க்கெட் ......"

கறுப்பாக, வற்றிய தோற்றமுள்ள ஒரு பெண் ஒரு தட்டில் மூன்று கப் காபியும் இன்னொரு தட்டில் கொஞ்சம் முறுக்கும் கொண்டு வந்து வைத்தாள். சதா அந்தோனியின் காதில் வங்கா ளியில், "அந்தப் பல்லையுடைக்கற சாமான் எனக்கு வேண்டாம் பா" என்று சொல்லிவிட்டு ஒரு கப் காபியை மட்டும் எடுத்துக் கொண்டான். ரோட்ரிகோ ஒரு முறுக்கை எடுத்து உடைத்துப் பல்லால் கடித்துச் சாப்பிட்டார். பீட்டரும் அந்தோனியும் அவ்வாறே செய்தார்கள்.

"சித்தப்பாவுக்குப் பல்லு கல்லு யந்திரம் மாதிரி நல்லா வேலை செய்யுதே!" என்று வியந்தான் பீட்டர்.

"ஒரு தடவை உன்னோட அப்பாவோடே முறுக்குத் திங்கற போட்டி. நான் அம்பது முறுக்குத் தின்று ஜெயிச்சேனாக்கும்! ஹா ஹா ஹா!...." மறுபடியும் கிழவரின் வெடிச்சிரிப்பு.

"பிளினியோட வரலாறுதானா ரொம்பப் பழையது?" சதா கேட்டான்.

"ஏன், மகாவம்சம் இருக்கே! சிலோன் வரலாறு...பாலி மொழி யிலே எழுதப்பட்டது.கிருஸ்து பிறக்குறதுக்கு முன்னாலே அதை எழுதினாங்க. கதை ரொம்ப சுவையா இருக்கும். அந்தக் காலத்திலே இது பாண்டியர்களோட ராஜ்யம், இளவரசி படகிலே ஏறி உல்லாசமாப் போயிக்கிட்டிருந்தார். திடீர்னு புயல் வந்து படகை சிலோன் கரையிலே கொண்டு போய்ச்சேர்த் துடுச்சு. வங்காளி விஜயசிம்மன் அப்போ சிலோனிலே ராஜ்யம் அமைச் சிருந்தான். வாலிப வயசு அவனுக்கு. இளவரசி யோட அழகிலே மயங்கி அவளை அரண்மனைக்குக் கூட்டிக் கிட்டுப் போய்க் கலி யாணம் பண்ணிக்கிட்டான், அவன் மாமனாருக்குப் பரிசா மூட்டை மூட்டையா மன்னார் முத்து அனுப்பினான்...."

"ரொம்ப இண்டரெஸ்டிங்!...." சதா சொன்னான்.

"டாலமி எகிப்துக்காரர். கி.பி. ரெண்டாம் நூற்றாண்டிலே கடல் வழியா இந்தியா வந்தார். அவர் இந்தப் பக்கத்து முத்தைப் பத்தி எங்க இனத்தைப் பற்றி எழுதியிருக்கார். சசிக்குரை மிகப் பெரிய முத்துச்சந்தை அப்படீன்னு சொல்றார் அவர். தூத்துக் குடி தான் சசிக்குரை....... அந்தக் காலத்துத் தமிழ் இலக்கியங் ளிலே எங்க இனத்தைப் 'பறத் தேவர்' னு குறிப்பிட்டிருக்காங்க. அவங்கதான் அந்தக் காலத்திலே படகோட்டிகள். அவங்க மீனும் பிடிப்பாங்க, கடல்லேருந்து முத்தும் சங்கும் எடுப்பாங்க. அபார பலம் அவங்களுக்கு, மீனும் மாமிசமும் சாப்பிடுவாங்க. அவங்ககிட்டே எப்போதும் வில் அம்பு இருக்கும்......"

"அந்தக் காலத்திலே இந்த முத்து வயல்கள் யாருக்குச் சொந்தம்?" பீட்டர் கேட்டான்.

"இதெல்லாம் வடக்கத்தி ராஜாக்களுக்குத்தான் சொந்தம். ஆனால் அவங்க எங்க இனத்தாரோட ஒரு ஏற்பாடு பண்ணிக் கிட்டிருந்தாங்க...... ஆதிகாலத்திலேருந்து எங்க இனத்துக்கு ஒரு தலைவன் ஜாதித்தலைவன் உண்டு. ஒரு ஜாதித் தலைவன் இறந்து போனால் அடுத்த தலைவனை எங்க இனத்து ஜனங் களே தேர்த்தெடுப்பாங்க. யார் வேணும்னாலும் ஜாதித்தலை வன் ஆயிட முடியாது. அவனுக்கு சமுத்திரத்தைப்பத்தி நல்ல அறிவு இருக்கணும். சுறா, பேய், பிசாசு இதெல்லாம் விரட்டற மந்திரம் தெரிஞ்சிருக்கணும். அவன் இனத்தார் எல்லாரையும் ஒரே மாதிரியா நடத்தணும். எல்லாரோட நல்லதும் பொல்லாத தும் அவன் கையிலே...... குறிப்பிட்ட காலத்திலே குறிப்பிட்ட அளவு வரியும் முத்துக்களும் கொண்டு போய் ராஜாகிட்டே சேர்ப் பிக்க வேண்டியது அவன் கடமை ....

"இப்படித்தான் வெகுகாலமாக நடந்துக்கிட்டிருந்தது. கிபி. பதினொண்ணாம் நூற்றாண்டிலே எங்க இனத்துக்கும் பாண்டிய ராஜாவுக்கும் தகராறு வந்தது. ராஜா முத்தெடுக்கற உரிமையைத் தன்கிட்டே வச்சுக்கிட்டான். கோயில் பட்டினம் துறைமுகத்திலே தூக்குத் தண்டனை பெற்ற கைதிகளைக் கொண்டு முத்தெடுக்க ஆரம்பிச்சான்.... ஆனால் அதிலே நல்ல பலன் கிடைக்கல்லை. முத்து எடுக்கறது மரத்திலேருந்து பழம் பறிக்கற மாதிரியா?....... ஆயிரம் வருசமா இந்தக் காரியத்தைச் செஞ்சுக்கிட்டுவர்ற இனத்தை ஒதுக்கிட்டு முத்தெடுக்க முடியுமா?.........

"பதினொண்ணாம் நூற்றாண்டிலேயே இந்த முத்து வயல்கள் பாண்டிய ராஜாகிட்டேயிருந்து சோழ ராஜா கைக்குப் போயிடுச்சு. சோழ ராஜாக்கள் முத்தெடுக்கற உரிமையைத் தாங்களே வச்சுக்கிட்டாலும் எங்க இனத்தவரைக் கொண்டுதான் முத்தெ டுத்தாங்க. எடுத்த முத்திலே எங்க இனத்தவருக்கு பங்கு உண்டு. பதினொண்ணாம் நூற்றாண்டிலேருந்து பதினாலாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரையிலே இந்த ஏற்பாடு தொடர்ந்தது. அதுக்கப்புறம் ஐம்பது வருஷம் கர்நாடக நவாபுகளோட ராஜ்யம். இதுக்குள்ளே விஜய நகர சாம்ராஜ்யம் வளர்ந்து கிட்டே வந்தது. பதினாலாம் நூற்றாண்டுக் கடைசியிலே விஜய நகர ராஜ்யம் கொர மாண்டல் எல்லை வரையில் பரவிவிட்டது. அதன்பின் சுமார் இரு நூறு வருசம் விஜயநகரத்து ஆறாவது வம்சத்தோட ஆட்சி இந்தப் பிராந்தியத்திலே நிலைச்சு இருந்தது.

"இந்த சமயத்திலே பாரசீசக் குடாப் பிராந்தியத்தைச் சேர்ந்த அராபியர், மூர்கள், சாரசென் முத்துக்குளிப்பவர்கள் மன்னார்ப் பகுதியிலே சுத்தத் தொடங்கினாங்க. இவ்வளவு காலம் அவங்க விஜயநகர ராஜ்யத்துக்குப் பயந்துகிட்டு இருந்தாங்க. மதுரையை ஆண்ட நாயக்க ராஜாக்கள் விஜயநகர ராஜ்யத்தின் பிரதிநிதிகள் தான். பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே அவங்களோட சக்தி மங்கிப் போச்சு. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கிட்டு மூர்கள் மன்னாரில நுழைய ஆரம்பிச்சாங்க கோழிக்கோடு ஜாமொரினின் கூலிப் பட்டாளம் அவங்களுக்கு உதவி செஞ்சுது. அவங்க தங்களிஷ்டத்துக்குக் கடல்லே முழுகி முத்தெடுக்க ஆரம்பிச்சாங்க ,........"

கிழவர் சில மடக்குக் காபியருந்திவிட்டுச் சற்று இளைப்பாறினார். பிறகு மறுபடி தொடர்ந்தார், "எங்க இனத்தைச் சேர்ந்த ஜனங்க இந்தப் பகுதியிலே பல ஆயிரம் வருசங்களாக வசிக்கிறாங்க. அவங்க இந்த மண்ணின் மைந்தர்கள்! அவங்க இந்த

மூர் களோட நடவடிக்கையை அனுமதிப்பாங்களா? தகராறு வந்தது. எங்க ஜனங்க மூர்களோட கப்பல்களுக்கு நெருப்பு வச்சாங்க, ஏராளமான மூர்களைக் கொன்று கடலிலே தள்ளினாங்க. மூர்கள் ஓடிப் போனாங்க ....

"ஓடிப் போனவங்க போய் ஜாமொரின் கிட்டே உதவி கேட்டாங்க. அந்தக் காலத்திலே ஜாமொரினுக்கும் அராபியர் களுக்கும் ரொம்ப சிநேகம். அவன் சொன்னான், 'நீங்கபோய்ச் சண்டைபோடுங்க. நான் உங்களுக்கு உதவறேன்.......' மூர்கள் ஜாமொரினோட சிப்பாய்களையும் மலபார் மாப்பிள்ளை இனத்தா ரையும் கூட்டிக்கிட்டு வந்தாங்க. இப்போ அவங்க எண்ணிக்கை ஜாஸ்தி. அதோடே இங்கே நாயக்க ராஜாவோட பிரதிநிதிக ளோடே சேர்த்துகிட்டு சதி பண்ணி எங்க இனத்தாரைப் பயங்கர மாப் பழிவாங்கினாங்க. கிராமங்கிராமமா மீன் பறவங்களை அழிச்சாங்க. தரையிலேயும் கொன்னாங்க, கடல்லேயும் துரத் திக்கிட்டுப் போய்க் கொன்னாங்க. பறவங்க மதுரை நாயக்க ராஜா கிட்டே போய் உதவி கேட்டுப் பயனில்லை.....

"அந்த சமயத்திலே தூத்துக்குடியிலே கிருஸ்துவ மதத்துக்கு மாறியிருந்த மலபார்க்காரன் ஒருத்தன் இருந்தான். அவன் பேரு ஜோயாவ்த்யக்ரூஸ். ஒரு சமயம் அவன் ஜாமொரினோட தூத னாகப் போர்த்துகலுக்கும் போயிருக்கான். அவன் இவங்களைக் கொச்சிக்குப் போய் அங்கேயிருக்கற போர்த்துகீசியக் காப்டன் கிட்டே உதவி கேட்கச் சொன்னான்... இதுக்கு முன்னாலேயே ஏழு கடல்லேயும் போர்த்துகல் ராஜாவுக்கு ரொம்ப செல்வாக்கு. வாஸ் கோடகாமா இந்தியாவோட மேற்குக் கரைக்கு வந்துட்டான் கோவாவிலும் கொச்சியிலும் போர்த்துகீஸ் பட்டாளம் இருந்தது. பதினைஞ்சு மீன் பறவத் தலைவர்கள் த்யக்ரூஸைக் கூட் டிக்கிட்டுக் கொச்சிக்குப் போய்ப் போர்த்து கீஸ்காரங்க கிட்டே உதவி கேட்டாங்க.......

"போர்த்துகீஸ்காரங்க சொன்னாங்க, 'பயப்படாதீங்க....... நாங்க உங்களுக்கு உதவி செய்யறோம். ஆனால் ஒரு நிபந்தனை... நீங்க எல்லாரும் அன்னை மேரியைச் சரணடை யணும்.

"எப்படியாவது உசிரைக் காப்பாத்திக்கணுமே!... இது நடந்தது 1532லே ...."

இவ்வளவு நேரத்துக்குப் பின் சதா வாய் திறந்தான், "ஐரோப் பாக்கரங்க காலனியமைக்கக் கையாண்ட தங்கமான ரஸ்தா தானே இது! முதல்லே கையிலே பைபிளோடே பாதிரி, பின் னாலே சேனை, துப்பாக்கி பீரங்கி ........"

"ஆமாமா, இங்கிலீஷ்காரன், பிரஞ்சுக்காரன், ஜெர்மன், போர்த்துகீஸ், டச்சுக்காரன் எல்லோருக்கும் இதுதான் பொது வான முறை ....." அந்தோனி சொன்னான்.

"இங்கேயும் அதே கொள்கைதான்' என்று சொல்லித் தொடர்ந் தார் ரோட்ரிகோ "அப்போ கொச்சியிலே காப்டனாயிருந்தவன் டாக்டர் போரோ வாஸ்த்ய அட்மிரல். ரொம்ப தாராள மனசு அவ னுக்கு. 'அடடா, உங்களுக்கு ஆபத்தா...? நாங்க இருக்கோம். கவலைப் படாதீங்கன்னு–விகார் ஜெனரல் ஆஃப் இண் டியா–மைக்கேல் வாஸ் பாதிரியை அவங்களோட அனுப்பினான் அவங்களுக்கு உதவியாகக் கோவாவிலேருந்து சைனியம் வந்தது கப்பல்லே, பெரிய சண்டை, ஒரு கல்லிலே ரெண்டு மாங்காய் அடிச்சுட்டாங்க போர்த்துக்கீஸ்காரங்க. ஒண்ணு, முஸ்லிம்களான அராபிய மூர்களை விரட்டினது. ரெண்டாவது, பறவங்களை இருட்டி லேருந்து வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தது. முப்பது கிராமங்களைச் சேர்ந்த இருபதாயிரம் பறவங்க ஞான ஸ்நானம் பண்ணிக்கிட்டாங்க, பண்ணிவச்சவர் மைக்கேல் வாஸ்பாதிரி. ஆயிரத்தைந்நூத்து முப்பத்திரெண்டு, முப்பத்துமூணு, முப்பத்து நாலிலே வடக்கே வாம்பூர், கீழக்கரை யிலேருந்து ஆரம்பிச்சுத் தூத்துக்குடி, பின்னக் கோயில், மணப்பாடு, இடிந்தகரை, ஒவாரி, பெரியதாழை, லீவரம். கன் னியாகுமரி வரையிலே மன்னார் குடாக்கரை முழுக்க மீன் பறவங்க எல்லாரும் கத்தோலிக்கர்கள். அவங்க ஞாயித்துக் கிழமை மாதா கோவிலுக்குப் போவாங்க. கண்ணை மூடிக்கிட்டு மேரி மாதாவைத் தொழுது ஜபமாலையை உருட்டுவாங்க.... போர்த்துகீஸ் கோவிலோட போர்த்துகீஸ் பேர்களும் வந்தது. அதிலேருந்துதான் இந்த வாஸ், ரோச், மோத்தா, பெரேரா, கொரேரா, மாசாதோ, கார்தோஸா, ஃபெர்னாண்டோ இந்தப் பேரெல்லாம் புழக்கத்திலே வந்தது ....."

ரோட்ரிகோ காபியைக் குடித்து முடிந்து விட்டுச் சற்றுநேரம் சும்மா இருந்தார். பிறகு தொடர்ந்தார், "மன்னார்க்கரையிலே போர்த்துகீஸ் ஆதிக்கம் நிலைச்சுடுச்சு. மீன் பறவங்க போர்த் துகீசிய அதிகாரிகள் உத்திரவுப்படி கடல்லே முழுகி முத்தும் சங்கும் எடுத்தாங்க. அதிலே ஒரு சிறு பகுதிதான் அவங்க ளுக்குக் கூலியாக் கிடைக்கும். பெரும் பகுதி போர்த்துகல் ராஜா கஜானாவுக்கும் போர்த்துகீசிய அதிகாரிகளோட பையிலேயும் போயிடும். பின்னக் கோயில்தான் போர்த்துகீஸ் ஆட்சியோட தலைமையகம். பறவங்களை சத்துருக்களிடமிருந்து காப்பாத்த றதுக்காக வரி வசூல் செய்யப்பட்டது. வெளியுலகத்துக்குப்

பிரசாரம் செஞ்சாங்க போர்த்துகீஸ்காரங்க-'நாங்க இந்தக் காட்டு மிராண்டிகளை நாகரீகமாக்கியிருக்கோம். இவங்களை இந்த உலகத்திலும் காப்பாத்தறோம். மறு உலகத்திலேயும் காப்பாத்தறோம். உடலுக்கும் பாதுகாப்பு, ஆத்மாவுக்கும் பாதுகாப்பு . . ."

"பறவங்களோட நிலை எப்படி இருந்தது?" பீட்டர் கேட்டான்.

"சாறு பிழிஞ்ச கரும்புச் சக்கை மாதிரி. இப்போ எப்படி இருக்காங்களோ அப்படித்தான் அப்பவும் இருந்தாங்க.நாள் பூராக் கழுதை மாதிரி உழைச்சும் வயிறு நிறையச் சோறு இல்லே; கட்டத் துணியில்லே. அவங்க உழைப்போட பலனைப் போர்த்துக்கீஸ்காரங்க அனுபவிச்சாங்க. 1580 லே போர்த்துகீஸ் தலைமை அலுவலகம் பின்னக்கோயிலிலிருந்து தூத்துக்குடிக்கு வந்தது. கோவாவிலே இருக்கற மாதா கோவில் பாணியிலே இங்கேயும் ஒரு மாதா கோவில் கட்டினாங்க - 'அவர் லேடி ஆஃப் ஸ்நோ சர்ச்!' இது நடந்தது 1583லே. எல்லாம் மீன் பறவங்களோட உழைப்பு . . ."

"சுரண்டல்!" அந்தோனி சொன்னான்.

ரோட்ரிகோ புருவத்தைச் சுருக்கிக் கொண்டு அந்தோனியைப் பார்த்தார்.

"இது காரணமாக ஏதாவது எதிர்ப்பு, கலகம் . . ." பீட்டர் கேட்டான்.

"எதிர்ப்பும் கலகமும் இருக்கத்தான் செய்தது. ஒரு கூட்டம் ஜனங்கள் ஒரு நாளைக்கு எட்டு, பத்துத்தடவை தண்ணிக்கு அம்பது அறுபது அடி கீழே முழுகறாங்க. தண்ணிக்குள்ளே முழுகறதுன்னா என்னங்கறது உனக்கு நல்லாத் தெரியும். அப்புறம் கடல்லே புயல், சுறாமீன், பார்ரகூடா மீன்... கடல்லே அடிக்கு அடி சண்டை போட்டுக்கிட்டுத்தான் முன்னேறணும். உசிருக்கு மன்றாடணும்... இதுக்கெல்லாம் பதிலா அவங் களுக்குக் கிடைக்கறது என்ன ? அவங்களோட சொந்த இனத்து மக்களே அவங்களை இளப்பம் பண்றாங்க. வெளி நாட்டுக்காரங்களைப் பத்திச் சொல்லவே வேண்டாம். பாடுபட்டு உழைக்கிற ஆயிரக்கணக்கான மக்களை ஒரு சில மேல் குடி ஜனங்கள் வண்டியிழுக்கற மாடு மாதிரி, ஏர் உழுற எருதுமாதிரி நடத்தறாங்க. இந்தப் பெரும்பான்மை மக்கள் காலங்காலமாச் சாட்டையடி வாங்கிக் கிட்டு வராங்க ..."

"இந்தப் பறவங்களுக்குள்ளேயே உசந்தவன், தாழ்ந்தவன் என்று ...." அந்தோனி கேட்டான்.

"உம், அந்த வித்தியாசமெல்லாம் அப்பவும் உண்டு, இப்பவும் இருக்கு . . .இந்தக் கம்மகாரர், மேசைக்காரர் வித்தியாசம் அப்போதான் ஆரம்பிச்சது. தவிர ஜாதித்தலைவன் தான் இனத்துக்கே ராஜா. அவன் வெளி நாட்டானோட கைப்பொம்மை. அவனாலே சோறு கொடுக்க முடியாவிட்டாலும் கோவிச்சுக்க முடியும், உதைக்க முடியும் . . ."

"போர்த்துகீஸ்காரங்க எப்போ போனாங்க?" சதா கேட்டான்.

"ஆயிரத்து அறுநூத்தி அம்பத் தெட்டிலே . . .பணம் எங்கே இருக்கோ அங்கே தகராறு உண்டு, பொறாமை உண்டு, அடிதடி உண்டு. வரும்படியைப் பங்கு போட்டுக்கறது சம்பந்தமாப் போர்த்துகீஸ் அதிகாரிகளுக்குள்ளே சண்டை ஆரம்பிச்சது. அப்பறம் அவங்களுக்கும் பறவத்தலைவர்களுக்கும் சண்டை சச்சரவு.... .பதினேழாம் நூற்றாண்டு நடுவிலே ஐரோப்பா விலேயும் போர்த்துகீஸ்காரங்க பலம் குறைஞ்சு போச்சு. . . ."

"ஆமா, அவங்களோட கப்பற்படையை இங்கிலீஷ்காரங்களும் பிரஞ்சுக்காரங்களும் அழிச்சுட்டாங்க. தவிர அந்தசமயம் போர்த்துகீஸ் வர்த்தகமும் படுத்துப் போச்சு. . ."

ரோட்ரிகோ சொன்னார், "அப்போ டச்சுக்காரங்க வளர்ந்து கிட்டிருந்தாங்க. இந்தப் பிராந்தியத்திலே குறிப்பாக, சிலோ னிலே. அங்கே பல இடங்களிலே அவங்களோட குடியிருப்பு வந்தது. அங்கங்கே அவங்களோட மாதா கோவில், ஆபீஸ், சரக்குக்கிடங்கு. ஆட்சி, வியாபாரம் ரெண்டுமே நடத்தினாங்க அவங்க. மறவத்தலைவர்கள் போய் அவங்களை இங்கே கூட்டிக்கிட்டு வந்தாங்க போர்த்துகீஸ்காரங்களை விரட்டற துக்காக. அவங்களும் கடைசியிலே போர்த்துகீஸ்காரங்களை விரட்டிப்பிட்டு இங்கே டேரா போட்டுக்கிட்டாங்க. அவங்க காலத்திலே முதல் முத்துக்குளிப்பு நடந்தது ஆயிரத்து அறு நூத்தி அறுபத்தி மூணுலே. அதிலேருந்து ஆயிரத்து எழுநூத்தித் தொண்ணூத்தாறாம் வருசம் வரையிலே டச்சுக்காரங்கதான் மறவங்க மேலே, முத்து வயல்கள் மேலே ஆட்சி நடத்தினாங்க... அதுக்கப்பறம் வந்தாங்க இங்கிலீஷ்காரங்க..."

இங்கு சற்று நிறுத்தினார் ரோட்ரிகோ. விசித்திரமாக முகத்தை வைத்துக் கொண்டு சிரித்தார். மாறிய குரலில் சொன் னார், 'இந்தத் தூத்துக்குடி ஒரு சந்தை. பல இனத்து மக்கள் இங்கே வந்து வியாபாரம் பண்ணிட்டுப் போயிருக்காங்க. அவங்க எல்லாரும் இந்த மீன் பறவங்களோடே சண்டையும் போட்டிருக்காங்க, கொஞ்சிக்குலாவியும் இருக்காங்க. அதோட அடையாளத்தைப் பறவங்க ரத்தத்திலே பார்க்கலாம் . . "

"இந்தியக் கடலோரத்துப் பிராந்தியங்கள் எல்லாத்திலுமே இதே கதைதான்" சதா சொன்னான். "அப்படீன்னா சுத்தமாக மீன் பறவ ரத்தம்னு ஒண்ணு இல்லேன்னு சொல்றீங்களா ?"

ரோட்ரிகோவின் முகத்தில் புன்னகை. "இல்லாமே என்ன, இருக்கு. இதோ நம்ம கண் முன்னாலேயே ..." பீட்டரையும் அந்தோனியையும் சுட்டிக்காட்டினார் ரோட்ரிகோ. "இவங்க தான் சுத்தமான மீன் பறவங்க... ரத்தக்கலப்புன்னா இதுதான்.." தன் நெஞ்சை விரலால் தட்டிக் காண்பித்தார். "வித்தியாசத்தைப் புரிஞ்சுக்கோ. அந்தப் பிரும்மாண்டமான தோற்றம், அட்டைக் கறுப்பு நிறம், நீள நீளமான கைகால்கள், அகலமான எலும்பு, கறுப்புமயிர், கறுப்புக்கண் . . என்னைப் பாரு சின்னக்கண், வெளிர்நிறம். . இதெல்லாம் வெளிநாட்டு இறக்குமதி. இந்த ஊர் மேல்மட்ட ஆளுகளிலே என்ன மாதிரி ரொம்பப் பேரைப் பார்க்கலாம். எல்லாரும் பணக்காரங்கள். வடக்கேயும் தெற்கேயும் இருக்கற சேரிகளிலே கஞ்சித் தண்ணிக்குப் பறந்துக்கிட்டு இருக்காங்களே, அவங்க சுத்தமான மீன் பறவங்க. . . காரணத்தைப் புரிஞ்சுக்கோ. . ."

வீடே இடிந்து விழும்போல ஹா ஹா வென்று பலமாகச் சிரித்தார் ரோட்ரிகோ. பிறகு சொன்னார், "இங்கேயே சாப்பிட்டுட்டுப் போங்களேன் ! . . . ரொம்ப நேரமாயிடுச்சு . . . "

"இல்லே இல்லே . . . இன்னிக்கு வேண்டாம் . ." அந்தோனி சொன்னான்.

"இன்னொரு நாள் பார்த்துக்கலாம், சித்தப்பா" என்றான் பீட்டர்.

"இந்த வங்காளி பாபு எங்கே தங்கியிருக்கார் ? "

"அந்தோனி வீட்டிலே . . "

"சுஸான், மானுவல் இவரைப் பிடிச்சுக்கல்லியா ? "

"பிடிச்சுக்கப் பார்த்தாங்க . . இவர் அவங்ககிட்டேயிருந்து வந்துட்டார் . .

"சுஸானும் மானுவலும் அவங்க மேசைக்காரர் கார்தோஸாங்கன்னு நிரூபிக்க முயற்சி செய்யறாங்க. உண்மையிலே அவங்களும் ஃபெர்னாண்டோதான். அவங்களோட அப்பா பேஸில் கார்தோஸாவோட சமையல்காரனாயிருந்தான். பேஸிலுக்குக் குழந்தை குட்டி கிடையாது. அவனுக்கு சுஸான் மேலே ரொம்பப் பிரியம். அவன் சுஸானுக்கு சுஸான் கார்தோஸான்னு பேர் வச்சுப் பள்ளிக் கூடத்திலே சேர்த்தான். அவன் செத்துப் போனப்பறம் அவனோட சொத்தை மருமகன்கள் எடுத்துக் கிட்டாங்க. கார் தோஸாங்கற குடும்பப் பேரை சுஸானும்

மானுவலும் எடுத்துக்கிட்டாங்க. சுஸான் யுத்தத்துக்குப் போயிட்டு வந்து தன் பேருக்குமுன்னாலே காப்டன் பட்டத்தைச் சேர்த்துக் கிட்டு மீன் சந்தையிலே தரகு வேலை செய்ய ஆரம்பிச்சான். அவன் ஃபெர்னாண்டோ மீன் மறவன் தான். இருந்தாலும் அவன் ரத்தத்திலே என்ன இருக்குன்னு தெரிஞ்சுக்க எனக்கு ரொம்ப ஆசை . . ."

"சைத்தானோட ரத்தமாயிருக்கும் ! " சதா தொந்தி குலுங்கச் சிரித்துக் கொண்டே சொன்னான்.

"வங்காளிகள் ரொம்ப ஆபத்தானவங்க ! அதுக்குள்ளே கண்டு பிடிச்சுட்டாரே !" இடிச்சிரிப்பு சிரித்தார் ரோட்ரிகோ.

வெளியிலிருந்து யாரோ கேட்டார்கள் - "இங்கே அந்தானி ஃபெர்னாண்டோ எசமான் வந்திருக்காரா ? "

அந்தோனி வெளியே தலை நீட்டிப் பார்த்தான். அவன் வீட்டு மறவக்காவற் காரன் நின்று கொண்டிருந்தான்.

"என்ன விஷயம் ?"

'ஐயா, உங்களோடயும் அந்த வங்காளி பாபுவோடயும் பேசறதுக்காக யாரோ ஒருத்தர் வந்து ரெண்டு மணி நேரமாகக் காத்துக்கிட்டிருக்காரு . . ."

☆ ☆ ☆

சிஸ்டர் சோபியாவின் பகற் பொழுதுகள் பந்தயக் குதிரை போல் ஓடிவிடும். இரவுகள் தான் கல்லாய் உட்கார்ந்திருக்கும். நெஞ்சின் மேல் கல்லின் சுமை. இரவு வளர வளரச் சுமையும் வளரும். இப்போதெல்லாம் இந்தப் பாரத்தை தாங்க முடிய வில்லை. . .

சிஸ்டர் படுக்கையில் எழுந்து உட்காருவாள். முழந்தாளிட்டுக் கொண்டு நெஞ்சின் மேல் இருகைகளையும் வைத்துப் பிரார்த் தனை செய்வாள் "கருணை மிக்க கர்த்தரே, என் குழம்பிய மனதுக்கு அமைதியளி ! . . . கருணை மிக்க மேரியன்னையே, என் மனதுக்குப் பலம் கொடு ! . . . மாதாவே, எனக்கு உதவு, உதவு, உதவு ! . . ."

அவள் கண்களை மூடிக் கொண்டு பெரிய கோவிலில உள்ள 'அவர் லேடி ஆஃப் ஸ்நோ' வின் தோற்றத்தை மனக் கண்ணால் பார்க்க முயற்சி செய்கிறாள். அந்த சிலை ஆயிரத்து நானூறாம் ஆண்டில் தூத்துக்குடி கத்தோலிக்க பக்தர்களுக்கு மானிலாக் கன்னிமார் அனுப்பிய பரிசு.வெள்ளை வெளேர் நிறம். தலையில் தங்கக்கீரீடம். கருணை சுரக்கும் முகம். அன்னை மேரியின் மடி யில் சிசு ஏசு. அபூர்வ அழகு, புனிதம் . . .

குழந்தை சிசுவின் முகத்தை மனதில் கொணர முயற்சி செய்கிறாள் சோபியா. உடனே அவளது நெஞ்சுக்குள் சுரீரென்று வலி. அவளுக்குள் இரண்டு குட்டிக் கைகள் அவளைக் கட்டிக் கொள்ளத்துடிக்கின்றன. அவள் கையை நீட்டிக் குழந்தையை நெஞ்சோடு இறுக அணைத்துக் கொள்ள, மடியில் வைத்துக் கொள்ள விரும்புகிறாள். மெல்லிய இரவு உடைக்குள் உடம்பு சிலிர்க்கிறது. குழந்தை அவள்மேல் தவழ்கிறது. அதன் சின்னஞ்சிறுகைகள் அவளுடைய கன்னிமார்பகத்தைத் தேடு கின்றன. விரல்கள் உப்பிய மார்பைப்பிடித்து விடுகின்றன. அதன் மிருதுவான உதடுகள் முலைக்காம்பைச் சப்புகின்றன.

சோபியாவின் உடலில் மயிர் நிலைகுத்தி நிற்கிறது - மலர்ந்த கதம்ப மலர் போல. அவள் தன்னையே அன்னை மேரியாகக் கருதிக் கொள்கிறாள். உள்ளம் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக் கிறது. இதே மாதிரி எப்போதும் மகிழ்ச்சியில் திளைத்திருக்க முடியாதா?

சட்டென்று பகுத்தறிவு தலைதூக்குகிறது. மயிரைப் பிளக்கும் தர்க்கம்... 'தூயக் கருவுறுதல்' என்பது மனதின் இந்த உணர்வு தானோ? இது ஓர் உருவம்தானோ? அப்படியானால் மகாத்மா ஏசு பிறப்பு பொய்யா? ஊஹூம். அப்படியிருக்க முடியாது!

மனம் தர்க்கம் செய்கிறது - ஏசு என்ற மனிதர் இருந்தது வரலாற்று உண்மை. ஆகையால் அவர் பிறப்பும் உண்மை. மேரியின் கருவில் அவர் பிறந்தார். ஆனால் கரு தானாக உண் டவாதில்லை. ஆண்விந்து கருப்பைக்குள் வர வேண்டும். அதற்குத் தேவை ஆண் பெண் சேர்க்கை..

'ஆனால் தூயகருத்தரித்தலில் உடற்சேர்க்கைக்கு இடமில்லை. நீ கத்தோலிக்கப் புனிதக் கன்னி. நீ இப்படியெல்லாம் நினைப் பதே பாவம்!' - அவளுள்ளிருந்து யாரோ அவளைக் கடுமையாக அதட்டினார்கள். வெட்கத்தில் சுருங்கிப் போனாள் சோபியா.. "ஐயோ, என்ன பாவம் பண்ணிட்டேன்?" அவள் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு விம்மி விம்மியழுதாள்.

பல நாட்கள் சேர்ந்தாற்போல் சோறுகிடைக்காமல் வயிறு மந்தித்துப் போய்விட்டது. சாப்பாடு கிடைத்தால் கூடப் பசி யெடுப்பதில்லை. சாப்பிடப்பிடிப்பதில்லை. இது சோபியாவின் வெகு நாளைய அனுபவம்.

அவளுடைய பெற்றோருக்குப் பத்துக்குழந்தைகள். சோபியா பத்தாவது. எவ்வளவோ நாட்கள் சோறு கிடைக்கவில்லை அவளுக்கு..

அப்பா இருபத்தைந்து ரூபாய்ச் சம்பளத்தில் குமாஸ்தா. பெரிய குடும்பம். உப்பு எடுத்து வருவதற்குள் பழஞ்சோறு தீர்ந்துபோய்விடும். ஒவ்வொரு நாள் குறுணைச்சோறு கிடைக்கும். சில நாள் அதுவும் கிடைக்காது வெறுங்கஞ்சிதான். அதுவும் எல்லா நாளும் கிடைக்காது. குழந்தைகள் எலும்பும்தோலுமாக, குழிவிழுந்த கண்ணும், தள்ளாடும் காலுமாக...

சோபியாவும் அப்படித்தான். சோகை நிறம், உடல் எலும்புக் கூடு. ஆனால் பெரிய பெரிய கண்கள் பார்ப்போரைக் கவரும். கிராமத்துப் பாதிரிக்கு இரக்க சுபாவம். அவர் சோபியாவிடம் இரக்கம் கொண்டு அவள் தந்தையிடம் சொல்லி அவளை வளர்க்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார்.

பாதிரி அவளை மிஷன் பள்ளியின் மாணவி விடுதியில் அனுப்பத்தான் எண்ணியிருந்தார். ஆனால் அவளைவிட்டுப் பிரிய மனம் வரவில்லை அவருக்கு. பெரிய பெரிய சோகக் கண்களின் பாசவலை அவரைக் கட்டிவிட்டது. அவர் தம் கையாலேயே அவளுக்கு நல்ல உணவு ஊட்டத் தொடங்கினார் இறைச்சி, மீன், பால், பழம், முட்டை. பசி மந்தித்துப் போன வயிற்றில் ஜீரணச் சுரப்பிகள் சுரக்கத் தொடங்கின. ஏழுவயது சோபியா வின் உடம்பில் சத்துணவு சேர்ந்ததும் ஆறே மாதத்தில் அவள் நன்றாகத் தேறி விட்டாள். உடல் சிவந்து கொண்டது. தோல் பளபளப்பாகியது. சடை தட்டிப் போன தலைமுடிக்குப் பதிலா கத் தலையில் கருகரு வென்று முடிவளர்ந்தது. தேர்ந்த சிற்பி சமைந்த தீர்க்கமான மூக்கு. குறுகலான நெற்றியில் தீட்டப்பட்ட புருவம். அமைதி நிறைந்த பெரிய கண்களில் அறிவின் ஒளி. மெல்லிய உதடுகள். அப்போதுதான் முட்டையிலிருந்து வெளிக் கிளம்பிய மயிற்குஞ்சின் அழகு. அந்த வயதிலேயே அழகியாக மிளிர்ந்தாள் சோபியா.

பாதிரியார் தாமே சோபியாவுக்குக் கல்வி கற்பித்தார். ஏசப்பின் கதைகள் சொல்லிக் கொடுத்தார். அவற்றில் அவலட்சணமான வாத்துக் குஞ்சுக் கதை சோபியாவுக்கு இப்போதும் நினைவிலிருக்கிறது.வாத்துக்குஞ்சுக்கு இறக்கைகள் முளைத்ததும் அது அழகாகி விட்டது. கண்ணாடியில் தன் தோற்றத்தைப் பார்க்கும் போதெல்லாம் அவள் தான் முன்பு அவலட்சண வாத்துக் குஞ்சாக இருந்ததை நினைவுறுத்திக் கொள்வாள்.

அவளுக்கு கணக்கு மிகவும் பிடிக்கும். உயிரியலும் மிகவும் பிடித்தமானது. உலகத்தில் எவ்வளவு விதவிதமான தாவரங்கள், ஜந்துக்கள்! ஒவ்வொரு ஜந்துவின் வரலாறும் சுவையான நாவல் போலிருக்கும். அவள் படிப்பில் கெட்டிக்காரி. பாதிரியா

ரின் ஏற்பாட்டில் அவள் மிஷன் பள்ளியில் படித்தாள். சிறப்பாக மெட்ரிக் தேர்வில் தேறினாள். பதினான்கு வயதில் சோபியா ஒரு கொத்து ரஜனி கந்தா மலர் போல் அழகும் மணமுமாகத் திகழ்ந்தாள்.

"உனக்குத் தாவரங்கள் மேலேயும் பிராணிகள் மேலேயும் இருக்கிற ஆர்வத்தைப் பார்த்தால் நீ ஒரு பெண் மெண்டெல் ஆயிடுவே" என்று உற்சாகமளித்தார் பாதிரியார்.

செக்கோஸ்லோவகியாவின் ப்ரூன நகரின் அகஸ்டின் மடத்துப் பிரும்மசாரிப்பாதிரி கிரிகர் மெண்டெல் வம்ச பரம்பரைத் தத்துவத்தைக் கண்டுபிடித்தவர். அவர் வெவ்வேறு வகைப்பட்டாணிச்செடிகளை ஒட்டுப் போடுவார். ஒரு பூவுடன் இன்னொரு வகைப்பூவின் தாதுவைக் கலப்பார். இந்தக் கலப்பின் விளைவை ஆராய்ந்து அவர் வம்ச பரம்பரைத் தத்துவத்தைக் கண்டுபிடித்தார். மிகவும் முக்கியமான கண்டுபிடிப்பு. லட்சக் கணக்கான பிராணிகளுக்குள் ஒன்றும் மற்றது மாதிரி இல்லை. இரண்டுக்குமிடையே ஏதாவதொரு வேற்றுமை இருந்து தானிருக்கும். அந்த வேற்றுமை எப்படி ஏற்படுகிறது? மெண டெலின் கண்டுபிடிப்பு இந்த ரகசியத்தை வெளிப்படுத்தியது.

மெண்டெல் ஓர் ஒப்பற்ற அறிவாளி. அவர் உயிருடனிருந்த வரையில் அவரை யாரும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை அவர் இறந்து ஐம்பதாண்டுகளுக்குப் பின அவருடைய சடலம் மண்ணிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டது. உண்மையான உழைப்புக்கு மதிப்பு எப்போதும் உண்டு.

"நான் மெண்டெல் மாதிரி ஆகப் போறேன. கன்னியாகவே காலங்கழிக்கப் போறேன். பூ, பழம், பிராணிகளோட வாழ்க்கை ரசசியங்களைக் கண்டு பிடிக்கப்போறேன்..."

கல்லூரியில் சோபியா கற்ற முக்கிய விஷயம் உயிரியல்; துணை விஷயம் கணக்கு. மெண்டெலும் கணக்கில் மிகவும் திறமை சாலி. விதை பற்றிய கணக்கிலிருந்துதான் அவரது கண்டுபிடிப்பு.

சோபியாவின் உடலில் இளமையின் பூரிப்பு பொங்குகிறது. ரஜனி கந்தா பூத்துக் குலுங்கிறது. அதன் வாசம் சென்னைக் கன் னிமாடத்து மாணவியர் விடுதியில் பரவுகிறது.

அவள் விடுமுறையில் கிராமத்துக்கு வந்திருக்கிறாள். கிராமம் அவளை மிகவும் ஈர்க்கிறது. கடற்கரைக்கிராமம் லீவரம். கடல், பிறைச் சந்திரன் மாதிரி ஊருக்குள் நுழைந்திருக் கும். கரையில் எண்ணற்ற தென்னை மரங்கள். அவற்றின் ஓலை களின் இடைவெளிகளினூடே பகலில் வெயிலும் இரவில் நிலவும்

கண்ணா மூச்சி விளையாடுகின்றன. தங்கத்தின் நிறத்தில் மணல்மேடுகள். கரையில் கிராமத்துக் குழந்தைகளுடன் விளை யாட்டு. . கடலில் நீச்சல் . . .

கிராமத்து ஓரத்திலிருந்த கடல் அமைதியாகக் குளம் மாதிரி இருக்கும். முழங்காலிலிருந்து நெஞ்சு வரை தான் ஆழம். கடலுக் குள் வெகு தூரம் நடந்து போகலாம். காலடியில் மணல் தட்டுப் படும். சோம்பேறி அலைகள் மெதுவாக எழும்பித்தவழும். ஆனால் பக்கத்துக்கிராமமான கன்னியாகுமரியில் கடல் பயங்கர மாயிருக்கும். கன்னியாகுமரிக்கடலில் தண்ணீருக்குள் ஏராளமான குன்றுகள் அமுங்கியிருக்கும். அவை இங்கே இல்லை. அமைதி யான லீவரம் கிராமம். அமைதியான கடல்.

கடலில் இறங்கினால் எழுந்து வர மனம் வராது சோபிக்கு. குளிக்க வந்த மற்ற சிறுவர் சிறுமியர் குளித்துவிட்டு ஒவ்வொரு வராக எழுந்து போய்க் கொண்டிருப்பார்கள். சோபி மட்டும் சோம்பேறி அலைகளில் மிதந்து கொண்டிருப்பாள். ஜனநட மாட்ட மற்ற நண்பகல். தூரத்தில் கடல் கடும் வெயிலில் நீலக் கண்ணாடி போல் பளபளக்கிறது. பக்கத்தில் அங்கங்கே மீனவர்கள் விரித்து வைத்திருந்த வலைகள். சோபியின் மனம் ஒன்றிவிடும். வேறு நினைவே இருக்காது அவளுக்கு . .

திடீரென்று ஒரு மீனவப்படகிலிருந்து சுச்சல் - "சுறா, சுறா!...

சோபி தன்னினைவு பெற்றுத் திரும்பிப் பார்த்தாள். தொலை வில் அலைகளின் நுரைக்கு மேலே கறுப்புக் கோடாலி மூக்கு தெளிவாகத் தெரிகிறது. நீர் மூழ்கிக் கப்பலின் பெரிஸ் கோப் மாதிரி அது நீரைக் கிழித்துக் கொண்டு வருகிறது. சுறாவின் முதுகின் மேலுள்ள முக்கோணத்துடுப்பும் தெரிகிறது. துடுப் பின் அளவிலிருந்தே சுறா பெரியது என்றும் புரிகிறது. நீளம் பன்னிரண்டு பதினான்கு முழத்துக்குக் குறையாது.

சோபி வேகமாகக் கரையை நோக்கி முன்னேறினாள். ஆனால் கரை ரொம்பத் தொலைவு அவள் கரையிலிருந்து வெகு தூரம் கடலுக்குள் போய்விட்டிருந்தாள். அவள் உயிரைப் பிடித்துக் கொண்டு நீந்தினாள். அவளுக்கு மூச்சுத் திணறு கிறது. அவள் நெஞ்சுக்குள்ளே ஓடும் ரயில் சக்கரங்களின் கடபுடாச் சத்தம். சுறாவின் துடுப்பு போர்க் கப்பலிலிருந்து விடு பட்ட டார்ப்பிடோ போல் வேகமாகப் பாய்ந்து வருகிறது. அவளை நோக்கி. நெருங்கிக் கொண்டிருக்கிறது அவளை . . சுறாவின் நோக்கம் தெளிவு . . .

சோபியின் நெஞ்சு பயத்தால் பனியாக உறைந்து விட்டது. கைகால்கள் செயலிழந்துவிட்டன. சுறு அவளைக்கடித்துக் குதறி விடப்போகிறது... அவள் உரக்கக்கூச்சலிட்டாள்.....

மீனவப்படகிலிருந்து ஒரு வாலிபன் தண்ணீரில் குதித்துச் சுறுவை நோக்கி நீந்தி வருவதை அவள் கவனிக்கவில்லை. அப்போது அவள் மூடிய கண்களுடன், பாதி நினைவிழந்த நிலையில் தண்ணீரில் மிதந்துகொண்டிருக்கிறாள்....

இளைஞன் நீந்தாமல் நீர்ப்பூனை போல் நீரில் மூழ்குகிறான், கொஞ்சம் தூரம் சென்று தலையை நீட்டுகிறான். இன்னும் இரண்டு மீனவப்படகுகள் அந்த இடத்தை அணுகிக் கொண்டி ருக்கின்றன.

சுறுவின் வால் தண்ணீரைப் படார் படாரென்று அடிப்பதால் எங்கும் ஒரே நுரை. இளைஞனைச் சில சமயம் பார்க்க முடிகி றது, சில சமயம் பார்க்க முடியவில்லை. அப்புறம் தண்ணீரில் பெரும் சலசலப்பு. இளைஞன் சுறுவோடு போரிடுகிறான். அவன் கையில் கூர்மையான கத்தி. திடீரென்று தண்ணீரில் ஒரு பகுதி ரத்தச்சிவப்பாகி விடுகிறது. இளைஞன் சுறுவின் வயிற் றைக் கிழித்துவிட்டான். அதன் வால் கடைசித்தடவையாக அடித் துக் கொள்கிறது. பிறகு அதன் உயிரற்ற உடல் நீரில் மிதக்கிறது. இரண்டு படகுகளும் சுறுவையும் இளைஞனையும் தூக்கிப போட்டுக்கொண்டு சோபியிடம் வந்து அவளையும் படகிலேற்றிக் கொண்டன.

சோபியின் நெஞ்சு ரயில் எஞ்சின் மாதிரி அடித்துக் கொண் டது எஞ்சினின் கொதிகலன் வெடிக்கும் தறுவாயில் இருந்தால் எப்படி இருக்குமோ அப்படி. படகுகள் அவளைக் காப்பாற்றி யிராவிட்டால் அவள் நீரில் முழுகியிருப்பாள். அவள் உடல் அவள் வசமில்லை.

படகையடைந்ததும் அவள் அப்படியே படுத்துவிட்டாள். பக்கத்தில் அந்த இளைஞன். இன்னொரு பக்கத்தில் அந்தச் சுறு. படகின் முதலாளி கிழவன். அவன் தன் நெஞ்சின்மேல் சிலுவையின் அடையாளத்தைச் செய்து கொண்டு சொல்கிறான் -"அன்னை மேரி காப்பாத்திட்டா! இந்தப்பையனை அவதான் அனுப்பிச்சிருக்கா...ஏன்னா இந்தப் பையன் நம்ம ஊர்ப்பை யனில்லே...."

வாலிபனின் உடல் இங்குமங்கும் வெட்டுப்பட்டுக் காயங்களி லிருந்து இரத்தம் சொரிகிறது. கிழவன் சொல்கிறான், "இதெல் லாம் சுறுகடிச்ச காயமில்லே, சுறுவோடஉடம்போடே மோதின தாலே ஏற்பட்டகாயம்...பையன் சூரன்தான்! இவ்வளவு பெரிய

சுறுவோடே எப்படிச் சண்டை போடணும்னு தெரிஞ்சிருக்கு இவனுக்கு... நெஞ்சிலே பயமே கிடையாது..."

நடுத்தரவயது மீனவன் ஒருவன் சொன்னான், "இதிலே ஆச்சரியம் என்ன? இவன் தூத்துக்குடி சுறுக் கொல்லி மோஸஸோட பிள்ளையாக்கும்?...."

அவ்வளவு பேர்களுக்கு முன்னால் சோபி பீட்டரின் கையைப் பிடித்துக் கொண்டாள். அவள் பேசவில்லை. அவள் கண்களிலிருந்து நீர் பெருகுகிறது. அவள் எழுந்து உட்கார்ந்து இளைஞனைப் பார்க்கிறாள். கட்டுமஸ்தான உடல் அவனுக்கு. நெஞ்சின், கைகளின் நரம்புகள் எஃகாலானவைபோல. பரந்த மார்பு. வேட்டை நாயின் இடைபோல் குறுகலான இடுப்பு. அவனுடைய காயங்களைத் தடவிக் கொடுக்க வேண்டும் போலிருந்தது சோபிக்கு...

சோபியின் ஸ்பரிசம் பட்டதும் பீட்டரின் களைப்பு பறந்து போய் விட்டது. அவன்எழுந்து உட்கார்ந்து அவளை வியப்புடன் பார்த்தான். மனிதப் பிறவி இவ்வளவு அழகாக இருக்க முடியுமா? அத்தைப் பாட்டி சொன்ன சமுத்திரகுமாரி கதை நினைவுக்கு வந்தது. இவள் தான் சமுத்திர குமாரியா? அல்லது எப்படியோ தண்ணீரில் விழுந்துவிட்ட அன்னை மேரியின் பளிங்குச் சிலையா?...

"உன் பேரென்ன?" பீட்டர் கேட்டான்.

"சோபி,... சோபியா..." அழுதுகொண்டே பதில் சொன்னாள் சோபியா.

"ஏன் அழறே?...இந்த மாதிரி ஆபத்துவரும்னு யார் எதிர் பார்க்கமுடியும்?...நீ நல்லா நீஞ்சறியே!..."

அழுகைக்கு நடுலே சோபி சிரித்தாள். "இன்னும் கொஞ்சம் தாமதமாயிருந்தால்..."

"ஓ, அதனாலேதான் பயந்துட்டியா? இல்லேன்னா அது உன்னைப் பிடிக்கறதுக்குள்ளே நீ கரைக்கு வந்து சேர்ந்திருக்கலாம்..."

படகு கரைசேர்ந்ததும் பீட்டர் கீழே குதித்தான். சோபியையும் இருகைகளால் தூக்கித் தரையில் இறக்கிவிட்டான். அப்போது அவளுடைய காதில் சொன்னான், "ரத்தப் பெருக்கு இருக்கறபோது கடல்லே இறங்காதே!.....

சோபியின் முகம் சிவந்துவிட்டது. இவனுக்கு எப்படித் தெரிந்தது? இவன் என்ன தேவதையா?...

அன்று முன்னிரவு நேரத்தில் கிராமத்தில் தேடியலைந்து கடைசியில் அவளைக் கடற்கரையிலேயே கண்டு பிடித்தான்

பீட்டர். அப்போது தென்னங்கீற்றுகளுக்கிடையே நிலா கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. கடல் பரப்பிலும் ஒளிவெள்ளம். கிராமத்து மணல் மேட்டில் யாருமில்லை.

சோபி கவிழ்ந்து கிடந்த படகொன்றின் மேல் அமர்ந்து கடலைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பீட்டர் அவளருகில் போய் உட்கார்ந்தான். சோபி திடுக்கிட்டு எழுந்தாள், "யாரு?"

பீட்டர் சொன்னான், "நான்தான்... என்னைத் தெரியவில்லியா?... நான் பெரிய முட்டாள்!...உன் பேரு என்ன, வீடு எங்கே.... ஒண்ணுமே கேட்டுக்கல்லே...கடைசியிலே யாரோ ஒருத்தன் சொன்னான், 'இன்னிக்கு மத்தியானம் சுறுமீன் கிட்டேயிருந்து தப்பினது குமாஸ்தா ஆல்பிரெட்டோட பெண் தான்னு... வீட்டையும் காண்பிச்சான். வீட்டு வாசல்லே சில குழந்தைகள் விளையாடிக்கிட்டு இருந்தது. அதுகள்தான் நீ கடற்கரையிலே இருக்கேன்னு சொல்லிச்சு... நீ ஏன் எழுந்திரிச்சு நின்னுட்டே? உட்காரு..."

சோபி உட்கார்ந்து கொண்டாள் "இன்னிப்பூரா உங்களைப் பத்தித்தான் நினைச்சுக்கிட்டிருக்கேன். ஆச்சரியமாயிருக்கு எனக்கு. பயம்னா என்னன்னே தெரியாதா உங்களுக்கு? உங்களுக்கு என்னைத் தெரியாது, எனக்கு உங்களைத் தெரியாது. இருந்தாலும் கொஞ்சங்கூடத் தயங்காமே தண்ணியிலே குதிச்சீங்க. அப்பா, எவ்வளவு பெரிய சுறு! அதோடே தண்ணிக்குள்ளே சண்டைப்போட்டு..... நீங்க இல்லாட்டி சுறு என்னைக் குதறித் தின்னிருக்கும்... ஐயோ, என்ன பயங்கரம்!..."

சோபியின் கடைசிச் சொற்கள் அடைபட்டுக் கிடந்து ஓலம் போல் பீறிட்டு வெளிவந்தன. அத்துடன் அழுகையும் வந்து விட்டது. "நீங்க உண்மையிலே தேவதைதான்! கர்த்தர் என்னைக் காப்பாத்தத் தான் உங்களை அனுப்பிச்சிருக்கார். அவருக்கு நான் தேவையாயிருக்கேன்..."

பீட்டர் ஆச்சரியத்துடன் கேட்டான், "கர்த்தருக்குத் தேவையா? அவருக்கு உன்கிட்டே என்ன தேவை?"

"அடுத்தமாசம் நான் கன்னி விரதம் எடுத்துக்கப்போறேன். எல்லா ஏற்பாடும் ஆயிடுச்சு. அதுக்காகத்தான் வீட்டுக்கு வந்தேன். கன்னியானப்புறம் வீட்டோடே தொடர்பு இருக்காது"...

"நீ கன்னியாகப் போறியா? அடகடவுளே!" பீட்டர் சற்றுத்தள்ளி உட்கார்ந்தான், ஒரு நீண்ட பெருமூச்சு அவனிடமிருந்து வெளிப்பட்டது. "நான் பீட்டர் ஃபெர்னாண்டோ... பறவன், பரதன்"....

"நாங்க இந்தப்பக்கத்து முக்குவான் இனம்" மெதுவாகச் சொன்னாள் சோபி.

"தெரியும்...நான் எல்லாம் விசாரிச்சுட்டேன். நீ மதராஸிலே கன்னிமடத்துப் பள்ளியிலே படிக்கிறே...ஆனால் நான் நினைச்சது வேறே...." சிறிது மௌனத்துக்குப் பின் பீட்டர் சொன்னான்.

இப்போது கடல் தண்ணீர் பொங்கிக் கொண்டிருக்கிறது. பேரலைகள் தோன்றுகின்றன. ஆனால் அவற்றின் கும்மாளமில்லை. காற்று மெதுவாக வீசுகிறது. சோபியின் நெஞ்சுக்குள் கடுமையான கொந்தளிப்பு. அவன் சொல்ல விரும்புவது என்ன என்பது அவளுக்குத்தெரியும்.

அவள்தான் அன்றுமுழுதும் அவனுடன் மானசீகமாகப் பேசிக் கொண்டிருந்திருக்கிறாளே!

பீட்டர் சொன்னான், "நான் தண்ணிக்குள்ளே முழுகி ஒரு ரத்தினத்தை எடுத்திருக்கேன்னு நினைச்சேன். உலகத்திலே உள்ள எல்லா ராஜாக்களோட பொக்கிஷங்களைக் காலி பண்ணினாலும் இந்த ரத்தினத்தை விலை கொடுத்து வாங்க முடியாது...இந்த ரத்தினம் எனக்கே சொந்தம்னு நினைச்சேன் நான்... அது தவறு...

இருவரும் மௌனம். கீழே அலைகள் சோம்பேறித்தனமாக மெல்லக் கரையில் மோதும் ஒலி. அந்த ஒலியுடன் கலக்கிறது காற்றில் தென்னங்கீற்றுகளின் சலசலப்பு.

"நீ ஏன் கன்னியாகணும்?"

"அது என் விதி!" சுருக்கமாகப்பதில் சொன்னாள் சோபி. வயதுக்கு மீறிய கம்பீரம் அவளிடம். அவள் சற்று நெருங்கிப் பீட்டரின் முன்னால் முழந்தாளிட்டுக் கொண்டு, கைகளை நெஞ்சின் மேல் சேர்ந்து வைத்துக் கொண்டு சொன்னாள்-"நீங்க என் தேவதை! என்னை நம்புங்க...நான் உங்களை ஒருபோதும் மறக்க மாட்டேன்!"

பீட்டர் அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டான். ஆனால் என்ன செய்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை. பிறகு மெதுவாக அவளைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டான்...

☆ ☆ ☆

இதன்பின் பத்தாண்டுகள் கழிந்துவிட்டன, இடையில் ஒரு தடவை நான்கு வருடங்களுக்கு முன்னால் சோபியுடன் நாகர் கோயில் மிஷன் மருத்துவமனையில் சந்திப்பு நிகழ்ந்தது. அப் போது சோபி மொட்டையடித்துக் கொண்ட, முழுமையான கன் னியாஸ்திரீ. மருத்துவமனையில் நர்ஸ் பயிற்சி பெற்றுக் கொண் டிருந்தாள்.

பீட்டருக்கு மிகவும் துக்ககரமான நாள் அது. அவனது வாழ்க் கையில் சூடுபட்டுத் தழும்பேறிய நாள்.

"நீ என்னை மறக்கவில்லையா?" பீட்டர் கண்களைத் திறந்து கேட்டான்.

"வாழ்நாள் முழுதும் மறக்கமாட்டேன்? மறக்க முடியாது!" அவள் பார்வை பீட்டரின் மேல் பதிந்திருந்தது—வானத்தையும் பாதாளத்தையும் இணைக்கும் இருட்கடலுக்கு மேலே துருவ நட்சத் திரத்தின் ஒளிபோல,

"நான் ஒருநாள் உன்னைக் காப்பாத்தினேன்; இன்னிக்கு நீ என்னைக் காப்பாத்தினே...."

"டாக்டர்கள் காப்பாத்தினாங்க...கர்த்தர் காப்பாத்தினார்...."

"இருக்கலாம்........"

"ஏன் 'இருக்கலாம்'னு சொல்றீங்க? நீங்க கடவுளை நம்பல் லியா ?"

"நம்பறேன்னு நிச்சயமா சொல்லும்படியா ருசு ஒண்ணும் கிடைக்கல்லே எனக்கு ....உன்னைத் தெரியும், உன்னை நம்ப றேன், ஆனால் நீ ரொம்பத் தூரத்திலே இருக்கே..." சற்று மௌ னத்துக்குப்பின் தொடர்ந்துப் பேசினான், "நீ இந்த உடையைக் கிழிச்செறிஞ்சுட்டு என்கிட்டே வரமாட்டியா? எனக்கு நீ ரொம்பத் தேவை. கடவுளை விடத் தேவை...."

"சீ, அப்படிச் சொல்லாதீங்க! ...உங்க சுகத்துக்காக...."

"சுகத்துக்காக மட்டுமில்லே, சோபி, துக்கத்துக்காகவும்தான் ...நீ வரியா? நான் தனியா இருக்கேன். உலகத்திலே எனக்கு யாரு மில்லே. நடுநடுவே ரொம்ப வெறுப்பா இருக்கு ... அப்பறம் இன் னிக்கு நடந்த நிகழ்ச்சி...."

பீட்டர் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு உட்காந்திருந் தான். சோபியா அவனுடைய தலையையும் முதுகையும் தடவிக் கொடுத்தான், சொன்னாள், "என் பயிற்சி முடிஞ்சதும் நான் தூத்துக்குடிக்கு வந்துடுவேன். தேவைப்பட்ட போதெல்லாம் என் கிட்ட வாங்க ......"

வெள்ளை வங்கிக்குள் மறைந்திருந்த அவளது உள்ளத்தை அப்போது அவன் புரிந்து கொள்ளவில்லை. கன்னியாஸ்திரீ

சோபியா அவனிடமிருந்து வெகு தொலைவில் இருக்கிறாள். நோய்வாய்ப்பட்டவரிடம் நர்ஸ்கள் காட்டும் கருணையை சோபியா அவனிடமும் காட்டுகிறாள். இந்த உப்புச்சற்ற அனுதாபம் அவனுக்குத் தேவையில்லை. அவன் சொன்னான், "எனக்குத் தேவைப்படாது...நீபோகலாம்......."

"உரிய சமயத்திலே போறேன். நீங்க பேசாமே தூங்குங்க". அங்கிருந்து போக முடியவில்லை சோபியாவால். ஆனால் பீட்டரின் உடலில் கை வைக்கவும் துணியவில்லை அவள்.

கன்னி மடத்தின் கடுமையான விதிமுறைகளில் தூர்ந்து போயிருந்தது மனம். திடீரென்று ஒரு நாள் அவள் ஒரு மனிதன் தன் உள்ளம் முழுவதிலும் வியாபித்திருப்பதை உணர்ந்தாள். அவளைச் சுறாவின் வாயிலிருந்து காப்பாற்றிய நாளே அவன் அவளுள் இடம் பெற்றுவிட்டான். இப்போது அவன் சாவின் பிடியிலிருந்து தப்பிவந்து அவளையழைக்கிறான். ஆனால் இந்த அழைப்பை ஏற்றுக் கொள்ள அவளால் இயலாது. அவளது வாழ்க்கை முழுதுமே கத்தோலிக்க மதத்துக்கு அர்ப்பணிக்கப் பட்டுவிட்டது. அவள் இப்போது வாட்டிகனில் உள்ள போப்பாண்டவருக்குரியவள். அவள் இந்த நிலையில் விசுவாசமாக இருக்க விரும்புகிறாள்.

ஆனால் முடியவில்லை. ஆறாண்டுகள் உயிரியல் படித்ததன் விளைவு விபரீதமாயிருக்கிறது. பரிணாம வாதக் கருத்தை நம்புவதா, அல்லது கடவுளை நம்புவதா ?

கடவுள் உலகத்தை ஆறு நாட்களில் படைத்து ஏழாம் நாள் இளைப்பாறினார் என்று விவிலியம் கூறுகிறது. சந்திரன், சூரியன், தாவரங்கள், ஜீவராசிகள், மனிதன் எல்லாமே இந்தப் படைப்புக்குள் அடக்கம். ஒரே வாரத்தில் படைப்பு நிறைவு பெற்றுவிட்டது.

ஆனால் உலகத்தின் பிறப்பும் வளர்ச்சியும் ஏழுநாளில் என்ன, ஏழுகோடி ஆண்டுகளிலும் நிறைவுறவில்லை என்கிறது பரிணாம வாதம். ஒரு துருவத்திலிருந்து மற்றோர் உருவம், ஒருயிரிலி ருந்து மற்றோர் உயிர் என்று படிப்படியாக உலகம் வளர்ந்திருக் கிறது என்கிறது பரிணாம வாதம். இந்த வளர்ச்சியில் இடை வெளி இல்லை, தேக்கமில்லை.

சிந்தித்துப் பார்த்தால் இது உண்மை தான் என்று தோன்றுகிறது. ஒரு ஜீவனுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள தொடர்பு புரிகிறது. கை, கால், வாய் இல்லாவிட்டாலும் தாவரங்கள் உண்டு உயிர் வாழ்கின்றன. வாயுள்ள பிராணிகளும் மனிதனும் உயிர் வாழ்கின்றனர் உணவுண்டு. இவையெல்லாமே இனப் பெருக்கம்

செய்கின்றன...கடவுளைக் கண்ணால் பார்க்க முடியவில்லை. அவர் பேச்சைக்காதால் கேட்க முடியவில்லை. கூட்டல் கழித்தல் கணக்குப் போடும்போது விரல்களை எண்களாக வைத்துக் கொள்வதுபோல் கடவுளையும் நம்பிக் கொள்ள வேண்டும். குழந்தைப் பருவம் முதலே படித்து வருகிறேன், கேட்டு வருகிறேன்; "உலகைப் படைத்தது யார்?" "கடவுள்" கடவுள் நம்பிக்கை விரல்களால் கணக்குப் போடுவது போல இந்த நம்பிக்கை இல்லாவிட்டால் கடவுளும் இல்லை. ஆனால் உலகம் இருக்கிறது; லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான ஜீவன்கள், கிரகங்கள், நட்சத்திரங்கள் இருக்கின்றன. இவற்றைக் கண்களால் பார்க்க முடியும்.

சோபியாவின் உள்ளத்தில் சிந்தனைகளின் போராட்டம். ஒரு பக்கம் பரிணாமவாத ஆதரவாளர் தாமஸ் ஹென்றி ஹக்ஸ்லி. இன்னொரு பக்கம் ஆக்ஸ்போர்டின் பிஷப் புனிதம் வாய்ந்த சாமுவெல் வில்பர் ஃபோர்ஸ். வில்பர்ஃபோர்ஸ் கடுமையாக எச்சரிக்கிறார் - "நீ கன்னியாஸ்திரி. கடவுள் நம்பிக்கைதான் உன் மூலதனமே"

இடிக்குரலில் பேசுகிறார் ஹக்ஸ்லி "நீ மனிதப் பிறவி. பரிணாம விதிப்படி பல உருவங்கள், பல உயிர்கள் ஆகிய படிகளைக் கடந்து நீ மனிதப் பிறவியைப் பெற்றிருக்கிறாய். அறிவு கொண்டு சிந்திப்பது உன் கடமை. சிந்தனையின் முடிவையே நம்பு. வேறு அசட்டுப் பேச்சுக்களை நம்பி ஏமாறாதே. சிந்தனை ஒளியில் இந்த ஆசாரம் அனுஷ்டானங்களை ஜபிப்பது கிளிப்பிள்ளைப் பேச்சுப் போலத்தான். நெஞ்சில் ஆசை வெள்ளமாகப் பெருகும்போது அதை அணைகட்டித் தடுக்க முடியாது. பெண்களுக்கு வயிற்றுப் பசிபோல் உடற்பசியும் ஆணுடன் இணையும் ஆசையும் இயற்கையானது தான்...."

நாளாக ஆக இந்த ஆசை வலுக்கிறது சோபியாவின் உள்ளத்தில். அவளுடைய நம்பிக்கை தளர்கிறது. அவள் ஒவ்வொரு விஷயத்திலும் உள்ள காரண காரியத் தொடர்பைச் சிந்திக்கிறாள். எல்லாக் காரணங்களும் புரிவதில்லைதான். ஆனால் அதற்காகக் காரணங்களே இல்லையென்று சொல்ல முடியாது.

நான் கன்னியாஸ்திரீ ஆவதற்கு முக்கியக் காரணம் அப்பாவின் வறுமை. வறுமைக்குக் காரணம் அவரிம் பணமின்மை. அவரிடம் ஏன் பணமில்லை? வசதியாக வாழ்ந்து வரும் பலரை விட அவர் கல்வியிலோ, அறிவிலோ குறைந்த வரில்லையே! அப்பா மட்டும் ஏன் இவ்வளவு ஏழை? அவருக் கேன் இவ்வளவு குழந்தைகள்? குழந்தைகள் பிறப்பதைத் தடுத்துக் கொள்ள

அப்பாவுக்குத் தெரிந்திருந்தால்... தெரிந்து தான் என்ன பயன்? கத்தோலிக் மதம் அதையெல்லாம் அனுமதிப்பதில்லையே....

மெண்டெல் ஒரே சமயத்தில் பெரிய விஞ்ஞானியாகவும் கத்தோலிக்கத் துறவியாகவும் எப்படி இருந்தார்? சோபியாவுக்கு ஆச்சரியமாயிருந்தது, சிரிப்பும் வந்தது. மெண்டெல் முதலில் எலிகளை வைத்துக் கொண்டு தம் ஆராய்ச்சியைத் தொடங்கினார். ஆண், பெண் எலிகளைப் புணரச் செய்து, புணர்ச்சியின் விளைவாகப் பிறந்தத குஞ்சுகளைச் சோதித்துத்தன் ஆராய்ச்சியை நடத்தினார். விஷயம் அகஸ்டின் மடத்துத் தலைவர் காதுக் கெட்டியது. அவர் மெண்டெலுக்கு உத்தர விட்டார்-"கத்தோலிக்க மதக் கொள்கைப்படி ஆண், பெண் புணர்ச்சி பாவம். எலிகளின் புணர்ச்சியும் பாவம்தான். உன் ஆராய்ச்சியை நிறுத்து!'

மெண்டெல் கெட்டிக்காரர். அவர் யோசித்தார், பட்டாணி ஒரு தாவரந்தான். தாவரப் புணர்ச்சியைக்கத்தோலிக்க மதம்கூடத் தடை செய்ய முடியாது. ஆனால் புணர்ச்சி என்ற செய்கை அது தாவரமாகட்டும், மனிதனாகட்டும், வேறு பிராணியாகட்டும் ஒன்றுதான். இது சாதாரண மனிதனுக்குத் தெரியாது. உலகத்தின் மதங்களில் தொண்ணூறு சதவிகிதம் இந்த அறியாமையின் அடிப்படையில்தான் நிலைத்திருக்கிறது.

நமக்கு எது புரியவில்லையோ அதைக்கண்டு பயம். இந்து, கிருஸ்துவ, முஸ்லிம் மதங்களில் 'கடவுள் பயம்' என்ற பேச்சு அதிகம் அடிப்படுகிறது.

உடற்பசி பயங்கரப்பசி. அதையடக்கி வைப்பது முடியாத காரியம். சோபியாவுக்கு இது தெரியாமலில்லை. இங்கு வந்ததுமே அவளுக்கு ஒரு புதிய அனுபவம்!

அவளுடைய அறைத்தோழி மார்கரெட். கறுப்பாக, கொழுக்கு மொழுக்கென்று இருப்பாள். அவளிடம் ஆண்மையின் ஜாடை இருக்கும். பெரிய உருண்டை முகத்தில் கீற்றாக மீசை. வயதுக்கு மீறின உடல்வளர்ச்சி. அவள் தினம் இரவில் சோபியாவின் கன்னத்தில் முத்தமிட்டுக் கொஞ்சுவாள். நடு நடுவே அவளுடைய கை சோபியாவின் மார்பகத்தைத் தடவும். கடைசியில் அவள் வெறி பிடித்தவள் போல் சோபியாவின் உடம்பை அமுக்கிப் பிசையத் தொடங்கிவிட்டாள். சோபியாவின் மெல்லிய மேலங்கியும் கீழ் உள்ளாடையும் கூடக் கிழிந்து போய் விட்டன. வெட்கக் கேடு! யாரிடம் சொல்வது இதை?

வேறு வழியின்றி ஓரிரவு சோபியா மார்கரெட்டைப் பயமுறுத்தினாள் "நான் தலைவியிடம் சொல்லிக் கொடுத்துடுவேன்!" என்று.

அதுமுதல் சோபியாவின் கண்கள் திறந்து கொண்டன. கன்னிமார்களின் வாழ்க்கையில் மறைவில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அவள் கவனித்தாள். கன்னிமடத்தில் புதிதாக ஒரு இளம் அழகி சேர்ந்தால் அவளுக்காக மற்ற கன்னிமாரிடையே பெருத்த போட்டா போட்டி அருவருப்பாயிருந்தது சோபியாவுக்கு. கலியாணம் செய்து கொண்டு குடித்தனம் செய்வது இதைவிட எவ்வளவோ மேல்!

இப்படி நேர்வது ஏன்? இதற்கு விடைகாண சோபியா நிறையப் படித்தாள் ஃபிராய்டு, யூங், ஆட்லர் எல்லிஸ்... எல்லோரும் ஒன்றையே தான் சொன்னார்கள்–ஆண் பெண் புணர்ச்சிக்கான ஆசை, வயிற்றுப்பசி போல், மூச்சு விடுவது போல் இயற்கையின் விதி. இதை மீறினால் ஆபத்துத்தான். வயிற் றுப்பசி தீராவிட்டால் மனிதன் திருடத்துணிகிறான். அதுபோல் பெண்பிள்ளையின் இயற்கையான புணர்ச்சியுந்தலில் தடை நேர்ந்தால் அவள் வேறு குறுக்கு வழிகளை கோணல் வழிகளைக் கடைப்பிடிப்பாள்......

சோபியா தன் நேரத்தின் பெரும்பகுதியைப் படிப்பதில் கழித்தாள். இதுவே அவளைக் காப்பாற்றியது. இல்லாவிட்டால் அவளும்.....நினைக்கவே பயமாயிருந்தது அவளுக்கு.....

அவள் தூத்துக்குடிக்கு வந்து சேர்ந்து நான்காண்டுகளாகிவிட் டன. பீட்டர் அவளிடம் வரவில்லை. ஆனால் அவள் அவனை அவ்வப்போது பார்த்தாள் சில சமயம் அவன் படகில் வரும்போது, சில சமயம் ரஸ்தாவில் வரும் போது. அப்போதெல்லாம் அவள் தன்னை அவனிடமிருந்து மறைத்துக் கொள்வாள். ஆனால் அவன் அவளிடம் வரவேண்டுமென்று அவள் மனம் ஏங்கியது. அவனும் அவளைக் கவனித்ததாக அவளுக்குத் தோன்றும். ஆனால் அவன் கவனித்ததாகக் காட்டிக் கொள்ளாமல் நேரே நடந்து போய் விடுவான்.

இரவில் அவள்தன் அறையில் தூங்கு முன்னர் அவளுடைய மூடிய கண்களுக்கு முள் தோன்றுவான் நெப்ட்யூன் பீட்டர்-பரந்த மார்பு, முறுக்கேறிய நரம்புகள், ஆஜானுபாகுவான தோற்றம் .....

இதற்கிடையில் பீட்டரின் தந்தை படுகொலை செய்யப்பட்டார். அவருடைய நெஞ்சுக்குள் மூங்கிலைச் செருகி அவரைக் கொன்று விட்டார்கள் படுபாவிகள். அவர்கள் பீட்டரையும் மறு உலகத்துக்கு அனுப்பத்திட்டமிட்டுத் தங்கள் ஆயுதங்களைத்

தீட்டி வைத்திருந்தார்கள். இதெல்லாம் சோபியாவுக்குத் தெரியும். பீட்டரின் விரோதிகளின் திட்டங்களைத் தெரிந்து கொள்வதற்காகவே அவள் அவர்களுடைய குடும்பத்துடன் தோழமை பூண்டிருந்தாள். பீட்டரை அவர்களிடமிருந்து காப்பாற்றத்தான் அவர்களுடன் அவளது உறவு.

பீட்டர் அவளது மருத்துவமனைக்கு வந்தபோது அவளது நெஞ்சு மகிழ்ச்சியில் பூரித்தது. கூடவே பயமும் ஏற்பட்டது. பயத்தை அடக்கிக் கொண்டு அவள் அன்றிரவு பீட்டரைக் கடற்கரை யில் சந்தித்தாள். அன்று முதல் ஓர் ஆச்சரியமான உணர்ச்சி வெள்ளத்தில் மிதந்து கொண்டிருக்கிறாள் அவள்.

அவள் தனியாக இருக்கும் போதெல்லாம் பீட்டரின் அந்தச் சொற்கள் அவளது உள்ளத்தைத் தாக்குகின்றன-"எனக்கு நீ வேணும்! நீயாகிய வயலிலே நான் என் குழந்தைகுட்டிகளை உண்டாக்கப்போறேன்!....."

இந்தச் சொற்கள் அளிக்கும் அதிர்ச்சி எவ்வளவு பயங்கரமானது!

அந்த இரவு முதலே அவள் அடிக்கடி ஒரு கனவு காண்கிறாள்-அவள் மடியில் ஒரு குழந்தை...அது அவள் மார்பில் வாய் வைத்துப்பால்குடிக்கிறது.........



செய்தியைக்கேட்டது முதல் ஜேனின் மனம் தவிக்கிறது. இந்தச் செய்தியை யாரிடமாவது சொல்லிடணும். இல்லாட்டி இவ்வளவு பேர் மனைவிகள், குழந்தை குட்டிகளோடே அழிஞ்சு போயிடுவாங்க. ஒருத்தர் கூடப் பிழைக்கமாட்டாங்க.... என்ன செய்வது? துடிக்கிறாள் ஜேன்.

ஹார்வி மில்லுக்குப் பக்கத்துச் சந்தில் பேனி மிராண்டாவின் வீடு. மரத்தாலானது, இரட்டையடுக்கு. அதன் கீழ்த்தளத்து மூலையறையில் பகல் முழுதும் கிசுகிசு. பேனியும் கார்தோஸா கம்பெனி மானேஜர் கிரிகரி லோபோவும் ரகசியம் பேசிக் கொண்டிருக்கிறார்கள். வெளியில் நின்று ஒட்டுக் கேட்கிறாள் ஜேன்.

பல்லி மாதிரி இருக்கும் கிரிகிரியை ஜேனுக்குக் கட்டோடு பிடிக்காது. அவனைப் பார்த்தாலே அவளுக்கு வயிற்றைக் கலக்கும். அவன் வருகை ஏதோ ஒரு கெடுதலுக்கு அறிகுறி என்று அவளுக்குத் தோன்றும்.

பண்டைய காலத்திலிருந்து வீட்டு வேலைக்காரி காதரின். ஜேனைக் குழந்தையிலிருந்து வளர்த்தவள் அவள்தான். கிரிகரி சைத்தானோட ஒற்றன் என்று சொல்வாள் காதரின்–"எசமான் நல்லா சாப்பிட்டுக்கிட்டு, தொழிலைப் பார்த்துக்கிட்டு சுகமாயிருந்தார். அந்த ஆள் இங்கே வர ஆரம்பிச்சதிலேருந்து அவரோட நடத்தை மாறிப்போச்சு. எப்போதும் பரபரப்பு. நல்லாப் பேசறதில்லே. சரியாச் சாப்பிடறதில்லே, வீட்டு நினைவே இல்லாத மாதிரி இருப்பார். அப்புறம் ஊரிலே ஒரு விபத்து ஏற்படும்....."

சென்ற ஆண்டு கால்டுவெல் பள்ளிக்குப் பக்கத்திலே இரண்டு பேர் படுகொலை செய்யப்பட்டார்கள். போலீஸ் எவ்வளவு முயன்றும் கொன்றவன் பிடிபடவில்லை. ஆனால் இது யார் வேலை என்று ஜேனுக்குத் தெரியும்......

தேர்தலில் நிற்பது குறித்து அப்பாவுக்கும் இரண்டு இளைஞர்களுக்கும் தகராறு. அப்பாவுக்கு எம். எல். ஏ ஆக ஆசை. இரண்டு இளைஞர்கள் பேனியைத்தடுக்க முயன்றார்கள். அவன் தேர்தலில் நின்றால் அவனுடைய ரகசியங்களை அம்பலப் படுத்தி விடுவதாகப் பயமுறுத்தினார்கள். கிரிகரி அடிக்கடி பேனியின் வீட்டுக்கு வந்து ரகசியம் பேசினான்... அவ்வளவு தான், ஒரு நாள் இரண்டு வாலிபர்களும் படுகொலை. இந்த ரகசியம் காதரினுக்கும் தெரியும், ஜேனுக்கும் தெரியும்.

கடந்த சில நாட்களாகக் கிரிகரி மறுபடிவரத் தொடங்கியிருக்கிறான், பேனி சென்னைக்கும் டில்லிக்கும் போய்விட்டுத் திரும்பியதிலிருந்து. அன்று சாயங்காலம் அவர்களுடைய ரகசியப் பேச்சை ஒட்டுக் கேட்டு ஜேன் தெரிந்து கொண்டாள்... அவள் உடம்பு நடுங்கியது. கூலிகள் வசிக்கும் சேரிக்கு நெருப்பு வைக்கப் போகிறார்கள். என்ன பயங்கரம்!

தென்னிந்தியாவில் நிலக்கரி இல்லை. அது வடக்கிலிருந்து வர வேண்டும். கல்கத்தா, விசாகப்பட்டினத்திலிருந்து நிலக்கரி கப்பலில் வரும் தூத்துக்குடிக்கு. தூத்துக்குடியில் கடல் அதிக ஆழமில்லை. ஆகையால் பெரிய கப்பல் நேரே கரைக்கு வந்து நிற்க முடியாது. கப்பல் கரைக்கு ஏழெட்டு மைல் தொலைவில் கடலில் நின்றுவிடும். நிலக்கரி மட்டுமில்லை; பஞ்சு, நூல், மீன் வற்றல், உப்பு, சங்கு, வெங்காயம், பருப்பு முதலிய பல பொருள்களின் இறக்குமதி ஏற்றுமதிக்கு முக்கியமான துறைமுகம் தூத்துக்குடி– இந்தப் பிராந்தியத்திலேயே பெரிய துறைமுகம்.

இறக்குமதியாகும் பொருள்கள் கடலிலேயே கப்பலிலிருந்து இறக்கப்படும். அவற்றைத் தோணிகளில் ஏற்றித் துறைமுகத் துக்குக் கொண்டு வருவார்கள். அதுபோல் ஏற்றுமதியாகும் பொருள்களையும் தோணிகளில் ஏற்றிக் கப்பலுக்குக் கொண்டு செல்வார்கள். இம்மாதிரி பொருள்களைத் தோணிகளில் ஏற்றிச் செல்வது மீன் பறவர்களின் முக்கியத் தொழில். ரோச் விக்டோரியா, வில்லவரையர், கொரேரா, பெரேரா, மாசாதோ, கார்தோஸா இப்படி ஒவ்வொரு மீன் பறவர் குடும்பமும் பரம் பரை பரம்பரையாக ஒவ்வொரு கப்பல் ஏஜண்டோடு தொழில் செய்து வந்தது.

சுதந்திரத்துக்கு முன்னால் கப்பல் ஏஜண்டுகள் எல்லாரும் அயல்நாட்டவர்தாம். மதுராகம்பெனி. பி.ஐ.எஸ்.என் கப்பல் கம்பெனியின் ஏஜண்டுகள். அவர்களே ஓரியண்ட்லைன், பி அண்ட் ஓ, ஆங்க்கர் லைன், ஆகிய பெரிய பெரிய கம்பெனி களுக்கும் சில சிறிய கப்பல் கம்பெனிகளுக்கும் ஏஜண்டுகள். கிளான்லைனின் ஏஜண்ட் ஹார்வி கம்பெனி. பஞ்சுக்கப்பல் களின் ஏஜன்சி வோல்கார்ட் பிரதர்ஸின் ஏகபோக உரிமை.

சுமார் நூறாண்டுகள் இந்த நிலை தொடர்ந்தது. ஆனால் நாடு விடுதலை பெற்றபின் ஏஜண்டுகளுக்குக் கவலை ஏற்பட்டு விட்டது. அவர்களுடைய பழைய செல்வாக்கும் போய்விட்டது. அவர்கள் ஒவ்வொருவராக மூட்டைகட்டினார்கள்.

செல்வாக்குள்ள மீன் பறவக் குடும்பங்கள் அவர்களுடைய இடத்தைக் கைப்பற்றின. தோணிகளில் பொருள்கள் ஏற்றிவரும் தொழிலைச் செய்து வந்தவர்கள் கப்பல் ஏஜண்டுகளாக ஆயினர். துறைமுக வளாகத்தில் அவர்கள் அலுவலகம் நிறுவி விளம்பரப் பலகைகளில் எழுதிக் கொண்டார்கள்– 'கப்பல் ஏஜண்ட்ஷிப் சாண்ட்லர் அண்ட் ஸ்டீவ் டோர்.'

பிள்ளைமாரும் ஒரு சில பிராமணர்களும் இந்தத் தொழிலில் இறங்கினர். விருதுநகர் நாடார்களும் மெதுவாக இந்தத் தொழிலில் இறங்கத் தொடங்கினர். இருந்தாலும் கப்பல் ஏஜண்டு களில் பெரும்பான்மையோர் மீன் பறவர்தாம். கப்பல் ஏஜண்டு களிடையே கடும்போட்டி.

ரயில் கம்பெனியின் கையில் இருந்த வரையில் ரயிலிருந்து நிலக்கரி இறக்கும் காண்டிராக்ட் கொரேரா குடும்பத்தின் ஏகபோக உரிமையாயிருந்தது. ரயில் போக்குவரத்து சர்க்கார் கைக்குப் போன பின் ஒவ்வொரு வருடமும் காண்டிராக்ட் புதிதாகச் செய்யப்பட்டது. அதற்காக ஒவ்வோராண்டும் டெண் டர் அழைக்கப்பட்டது. கம்பெனி காலத்திலேயே ஏஜண்டாயிருந்த

செபாஸ்டியன் கொரேராவுக்கு சர்க்காரிடமிருந்து முதல் சில வருடங்கள் காண்டிராக்ட் கிடைத்தது. பரம்பரை நற்பெயரின் பலத்திலும் தீபாவளி, கிருஸ்துமஸ் சமயங்களில் அதிகாரிகளுக்குப் பரிசுகள் அனுப்பியும் இதுவரை காண்டிராக்ட் பெற்று வந்தான் செபாஸ்டியன். செல்வாக்குள்ள குடும்பங்கள் பண்டிகைக்காலத்தில் பரிசளிப்பதை யாரும் குற்றமாகக் கருதுவதில்லை. பொருளாதாரம் படித்திருந்த செபாஸ்டியன் கொரேராவும் இதைத் தவறாகக் கருதவில்லை.

ஆனால் காலம் மாறிவிட்டது. இப்போது வெறும் பரிசு அளித்தால் போதாது, ரொக்கமும் கொடுக்க வேண்டும்.

செபாஸ்டியன் பிடிவாதக்காரன். அவன் சொன்னான், "என்ன வந்தாலும் வரட்டும். நான் லஞ்சம் கொடுக்கமாட்டேன்!"

அப்போதுதான் முன்னுக்கு வந்து கொண்டிருந்த பேனி மிராண்டா இந்த வாய்ப்பை நழுவவிடவில்லை. அவன் சுமார் ஒரு லட்ச ரூபாய் செலவு செய்து சிறிய அதிகாரியிலிருந்து பெரிய அதிகாரிகள் வரை எல்லோருக்கும் லஞ்சம் கொடுத்துக் காண்டிராக்டைப் பெற்றுவிட்டான். இந்த யோசனை மிராண்டாவுக்குத் தானாகத் தோன்றவில்லை. சுஸானும் மானுவலும்தான் அவனுக்கு யோசனை கூறியவர்கள். ஆகவே அவர்கள் மிராண்டாவுக்கு வேண்டியவர்களாகி விட்டனர். அவர்களுடைய ஆள் கிரிகரி அடிக்கடி மிராண்டா வீட்டுக்கு வரத் தொடங்கினான்.

இந்தக் காண்டிராக்டைக் கார்தோஸா கம்பெனியே கைப்பற்றுவதானால் பல லட்சங்கள் லஞ்சம் கொடுக்கவே செலவாகும். கார்தோஸா சகோதரர்களுக்கு அவ்வளவு முதலீடு செய்ய விருப்பமில்லை. மீனின் உடம்பிலிருந்து வெளிவரும் எண்ணெயிலேயே மீனை வறுப்பது அவர்கள் நோக்கம். மிராண்டாவுக்குக் காண்டிராக்ட் கிடைக்கச் செய்ததற்குப் பதிலாக அவனுடைய லாபத்தில் ஐந்து சதவிகிதம் அவன் கார்தோஸா கம்பெனிக்குத் தர ஒப்புக் கொண்டான். இதற்கு எழுத்து மூலமான ஒப்பந்தம் ஏதுவுமில்லை, வாய் வார்த்தைதான். மிராண்டா கப்பலிலிருந்து நிலக்கரி ஏற்றிக் கொண்டு வரக் கார்தோஸா கம்பெனியின் நான்கு படகுகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. இன்னொரு விஷயம்—சுஸான் மிராண்டாவை எம். எல். ஏ ஆக்க ஒப்புக் கொண்டான். மிராண்டாவை வசப்படுத்திக் கொண்டு அவன் பெண் ஜேனைத்தன் அசட்டுப் பிள்ளைக்குக் கலியாணம் செயது வைத்து மிராண்டாவின் சொத்தைக் கைப்பற்றுவதுதான் சுஸானின் நோக்கம்.

காண்டிராக்ட்தான் பேனி மிராண்டாவின் தொழில். பொதுப் பணித்துறை, ஜில்லா போர்டு, பெரிய பெரிய கம்பெனிகள் இவற்றுக்கெல்லாம் அவன் காண்டிராக்ட் வேலை செய்து வந்தான். நாட்டு விடுதலைக்குப் பின் நிறைய வீடுகள், தொழிற் சாலைகள் தோன்றின. புதிய ரஸ்தாக்கள் போடப்பட்டன. அவற்றுக்கான காண்டிராக்டுகள் மிராண்டாவுக்குக் கிடைத்தன. அந்தப் பணத்தைக் கொண்டு அவன் எட்டுத் தோணிகளுக்குச் சொந்தக்காரனாகி விட்டான். அவை மலேயா, சிலோன், சிங்கப் பூருக்குச் சரக்கு ஏற்றிச் செல்லும், இரண்டு பிரும்மாண்டமான மோட்டார்கார்கள் மிராண்டாவுக்குச் சொந்தம்.

மிராண்டா கூலிகளை மேற்பார்வை செய்ய நாங்குநேரியைச் சேர்ந்த யாசின் என்ற முசல்மானை நியமித்திருந்தான். யாசி னின் இரத்தத்தில் அராபிய, மூர், நீக்ரோவின் பங்குதான் அதிகம். பழுப்புநிறத் தடித்தோல். சட்டி போன்ற முகம். சுருட்டை முடி. கழுகுக் கண்களில் சிறுத்தைப் புலியின் பார்வை. சப்பை மூக்கின் துவாரம் ஒவ்வொன்றும் அரையங்குலவிட்டம். அவனைப் பார்ப்பவர் நெஞ்சு பக் பக் என்று அடித்துக் கொள் ளும். உயரம் ஐந்தடிதான். இரும்பாலானது போன்ற உடல். அவன் எப்போதும் கையில் எண்ணெய் தடவிய பனந்தடி ஒன்று வைத்திருப்பான்.

யாசினுக்கு மனம் என்று ஒன்றிருக்கிறதா என்பது ஐயந்தான். காட்டுமிராண்டி. கொலைகாரன். யாரையாவது தடியாலடிக்கத் தொடங்கிவிட்டால் அந்த ஆளின் உயிர்போகும் வரை நிறுத்தமாட் டான். பெண்பிள்ளைப் பைத்தியம். இளம் கூலிப் பெண்கள் அவன் பிடியிலிருந்து தப்ப முடியாது. கூலிகளுக்கு அவன் யமன். அவனுக்கு முன் அவர்கள் வாய் திறக்கப் பயப்படு வார்கள். ஏற்கனவே அவர்களுக்கு முதலாளி மாறியதில் வருத் தம். போதும் போதாதற்கு இவன் வேறு. அவர்களுக்குரிய கூலித் தொகையிலிருந்து ரூபாய்க்கு நாலணாவைத் தானே எடுத்துக் கொண்டு விடுவான் யாசின். கூலிகளுக்கு ஆத்திரம் பொங்கி யது. அவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஆனால் அவர் களிடையே ஒற்றுமையில்லாததால் வேலைநிறுத்தம் தோல்வி யடைந்தது. ஆனால் யாசின் கூலிப் பெண்களைக் கெடுக்கத் தொடங்கவே கூலிகள் அவனுக்கெதிராக ஒன்றுபட்டார்கள்.

காண்டிராக்ட் கொரேராக்கள் கையில் இருந்தபோது அவர் களுக்குக் கூலிகளுடன் சுமுகமான உறவு இருந்தது. செபாஸ்டி யன் தினம் காலையில் துறைமுகத்துக்கு வடக்கே அமைந்திருந்த கூலிச் சேரிப் பக்கம் உலாவப் போவான். அப்போது கூலிகள்

அவனிடம் தங்கள் குறைகளைக் கூறுவார்கள். அவர்களுடைய பனங்கீற்றுக் குடிசைகளில் அடிக்கடி தீப்பற்றிவிடும். செபாஸ்டியன் அவர்கள் புதுக்குடிசை கட்டிக் கொள்ள, நோயுற்றவர்களுடைய சிகிச்சைக்காக, கலியாணம், திருவிழா இவை நடைபெறத் தாராளமாகப் பண உதவி செய்வான். அவன் உள்ளூற இந்த ஏழை மக்களை நேசித்தான். சில சமயம் அவர்களுடன் சேர்ந்து குடித்துக் கும்மாளம் போடுவான். "இவங்க தான் என்னோட அசல் மூலதனம். இவங்க நல்லா இருந்தாத்தான் நான் கார் சவாரி பண்ணலாம், நல்ல சாப்பாடு சாப்பிடலாம், ஆர்பாட்டம் பண்ணலாம்" என்பான்.

வீட்டில் மனைவியின் உறவு கிடைக்கவில்லை அவனுக்கு. ஆனால் ஒருபோதும் கூலிப் பெண்களை நெருங்கியதில்லை. துறைமுக வளாகத்தைச் சேர்ந்த பல ஆண்கள் கூலிப் பெண்களுக்குப் பணம் கொடுத்துத் தங்கள் தசைத்தினவைத் தீர்த்துக் கொள்வதுண்டு. இது செபாஸ்டியனுக்கும் தெரியும். வறுமைக் கொடுமையால்தான் கூலிப் பெண்கள் தங்கள் உடலை விற்கிறார்கள் என்பது அவன் அறிந்ததுதான் "இது ஒரு பெரிய சமூகக்கேடு, இதை மாற்ற யாரால் முடியும்?" என்பான் அவன்.

உடல் கட்டமைந்த இளைஞன் தங்கப்பழம் காண்டிராக்டர் மாறிச் சிறிது காலத்துக்குப்பின் கலியாணம் செய்து கொண்டு பெண்டாட்டியைக் கூட்டிக் கொண்டு வந்தான். அவள் நல்ல உயரம். கொழுக்கு மொழுக்கென்று நீளநீளமான கைகால்கள். கறுப்பாக, கரும்பாம்புபோல் பளபளப்பாக இருப்பாள். கொடியில் தொங்கும் திராட்சைக் கொத்துகள் போல் கனமான மார்பகங்கள். சாணைக்கல்லில் செதுக்கப்பட்ட காதல நாயகியின் முகம். தன் புதுமனைவியை விட்டுப் பிரியமாட்டான் தங்கப்பழம்.

ரயில் பெட்டியில் நிலக்கரி ஏற்றிக் கொண்டிருக்கிறார்கள். ரயில் பாதையோரத்தில் மலை மலையாக நிலக்கரிக் குவியல். மலையின் ஒரு புறம் தங்கப் பழமும் இன்னொரு புறம் அவன் மனைவியும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். ஒருவர் இன்னொருவரைப் பார்க்க முடியாது.

ஒரு பெட்டியில் நிலக்கரி நிரம்பிவிட்டது. "ஏ குட்டி, பெட்டிக்குள்ளே ஏறி இன்னும் இடமிருக்கா, பாரு!" என்றான் யாசின்.

தங்கப்பழத்தின் மனைவி ஒன்றும் சந்தேகிக்காமல் பெட்டிக்குள் ஏறினாள். யாசினும் கூடவே ஏறி அவளுடைய புடவையை பிடித்து இழுத்தான். அவள் மார்பு திறந்து கொண்டது. அவன் அவளைப் பிடித்துக் கீழே கிடத்தி அவள் மேல் விழுந்தான்

—"வாயைத்திறக்கக் கூடாது! திறந்தால் அப்படியே கழுத்தை நெரிச்சுக்கொன்னுடுவேன்!"

யாசினின் மூன்று மணுப்பளு உடல் அவளை அழுத்தியது. அவள் முழுமூச்சுடன் அவனை முறுக்கி அவன் கழுத்து நரம்பை அழுத்தமாகக் கடித்துவிட்டாள். நரம்பு வெட்டுப்பட்டுக் கொஞ்சம் இரத்தமும் ஒரு சிறுதசைத் துண்டும் அவள் வாயில் வந்துவிட்டன.

யாசின் தன் கைகளால் அவள் கழுத்தைப் பிடித்து நெரிக்க முயன்றான். முடியவில்லை. அவன் கைகள் சோர்ந்து போய்க் கீழே விழுந்தன. அவனுடைய கைகால்கள் இரண்டு தடவைகள் விலுக்விலுக்கென்று உதைத்துக் கொண்டன. அத்தோடு கதை முடிந்துவிட்டது. வெட்டப்பட்ட வாழை மரம்போல்— கொல்லப் பட்ட கோழி போல்—இரத்த வெள்ளத்தில் கிடந்தான் யாசின். தங்கப் பழத்தின் மனைவி தன் வாயிலிருந்த இரத்தத்தையும் தசையையும் தூதூவென்று துப்பிவிட்டு ரயில் பெட்டியிலிருந்து கீழே குதித்துத் தங்கப் பழத்தைக் கூப்பிட்டாள். கூலிகள் ஓடி வந்தனர்.

போலீஸ் வந்துவிட்டது. செய்திகேட்டு பேனி மிராண்டாவும் வந்தான். தஙகப் பழத்தின் மனைவி அப்போது தன் வாயைப் புடைவையால் துடைத்துவிட்டுக் கொண்டு யாசினைத் திட்டிக் கொண்டிருந்தாள்—"தேவடியா மவன்!..."

போலீஸ் அவளை இழுத்துச் சென்றது. யாசினின் உடல் சவச் சோதனைக்கு அனுப்பப்பட்டது.

அன்று நள்ளிரவுக்குப்பின் செபாஸ்டியன் தங்கப்பழத்தின் குடிசைக்கு வந்து அவனிடம் சொன்னான், "நான் எல்லாம் கேள்விப்பட்டேன். வக்கீல் ராமச்சந்திரய்யர்கிட்டே சொல்லி யிருக்கேன். நீ கவலைப்படாதே. உன் பெண் சாதி விடுதலை யாயிடுவா. உனக்கு ஆகிற செலவை நான் கொடுக்கறேன். இந்தா இருநூறு ரூபாய். உன் பெண்சாதிக்கு நகை பண்ணிப் போடு. அவதைரியத்துக்காக அவளோட அப்பா கொடுத்ததாச் சொல்லு..."

யாசினின் கற்பழிப்பு முயற்சியை ராமச்சந்திரய்யர் நிரூபித்து விட்டார். தங்கப்பழத்தின் மனைவி விடுதலை பெற்றாள்.

மிராண்டா நீதிமன்றத்தில் தகராறு செய்யவிரும்பவில்லை. வெட்கக்கேடான விஷயம். ஆனால் அவன் வேறுவிதமாகக் கூலிகள் மேல் பழிதீர்த்துக் கொள்ளத் தீர்மானித்தான். கிரிகரி தான் அவனுக்கு யோசனை சொன்னான், "கூலிச் சேரிக்கு நெருப்பு வச்சுடலாம். கூலிகள் வசமா நம்மகிட்டே மாட்டிக்கு

வாங்க. புதுக்குடிசைக்குப் பணம் வாங்க நம்ம காலிலே தான் விழணும்! இனிமேல் அவங்க வேலைநிறுத்தத்தைப் பத்தி நினைக்காதபடி பண்ணிடலாம். ஒரு கல்லிலே ரெண்டு மாங்காய்!..."

"ராத்திரி நெருப்பு வச்சா ஒரு சில பேராவது சாக மாட்டாங்களா?" மிராண்டா கேட்டான்.

"சாகட்டுமே, என்னமோசம்!" என்றான் கிரிகரி. இதைக் கேட்டது முதல் நெஞ்சு படபடத்தது ஜேனுக்கு. நெஞ்சுப் படபடப்பு தொண்டைக்கு வந்துவிட்டது. அவளுக்கு இருப்புக் கொள்ள வில்லை. இருட்டியதும் அவள் கன்னிமடத்துக்குப் போய் சோபியாவின் அறையில் நுழைந்தாள்.

புத்தகம் படித்துக் கொண்டிருந்த சோபியா தலைநிமிர்ந்து ஜேனைப் பார்த்து ஆச்சரியத்துடன் கேட்டாள், "என்னஜேன், இப்படி அகாலத்திலே?..."

"சிஸ்டர்!..." விம்மியழத் தொடங்கினாள் ஜேன். அவளுக்குப் பேச நாவெழவில்லை.

சோபியா அவளைத் தன் படுக்கையில் அமரச் செய்துவிட்டுக் கேட்டாள், "என்ன விஷயம்?"

ஜேன் அழுகையை நிறுத்திவிட்டு எல்லா விவரங்களையும் சொன்னாள். "சிஸ்டர், நீங்க அந்த ஏழைகளைக் காப்பாத்துங்க! இல்லாட்டி அவங்க—குழந்தை குட்டிகள், கிழவர்கள் – எல்லாரும் நெருப்பிலே பொசுங்கிச் செத்துடுவாங்க... என் நெஞ்சு வெடிக்கும் போலேயிருக்கு!..."

"சரி, நீ இப்போ வீட்டுக்குப்போ... என்ன செய்யலாம்னு பார்க்கறேன். இந்த விஷயத்தை யார்கிட்டேயும் சொல்லாதே!... சொன்னால் உனக்கே ஆபத்து..."

ஜேன் போய்விட்டாள்.

ஜேன் முன்பு இருந்த நிலை இப்போது சோபியாவுக்கு ஏற்பட்டது. கடைசியில் பயத்தையும் கவலையையும் உதறிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் சோபியா. அவள் செய்யக் கூடியதை இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் செய்தாக வேண்டும்....

அவள் யாருமறியாமல் கன்னிமடத்தைவிட்டுக் கிளம்பினாள்...

ஹோர்த்தீவில் பீட்டருக்குச் செய்தி கிடைத்தபோது இரவு மணி சுமார் பத்து இருக்கும். அப்போது பீட்டர் தன் சகாக்களுடன் வலை, தூண்டில் இவற்றை எடுத்துக் கொண்டு மீன்பிடிக்கப் படகில் புறப்படத் தயாராயிருந்தான். மைக்கேலின் ஏற்பாடுகள் அநேகமாக முடிந்துவிட்டான. அவன் படகுக்குள் சிறுசிறு கல்துண்டுகளைப் போட்டுக் கொண்டிருந்தான்.

பீட்டருக்குக் கடிதம் கொண்டுவந்தவன் தூத்துக்குடிப்பையன் தான். அவன் பீட்டரிடம் கடிதத்தைக் கொடுத்துவிட்டுக் கடலில் வலை விரிக்கப் போய் விட்டான். பீட்டர் கடிதத்தைப்பிரித்துக் கலங்கரை விளக்கத்தின் விளக்கொளியில் படித்தான். அதில் சோபியாவின் குண்டு குண்டான கையெழுத்தில் எழுதப்பட்டிருந் தது– "இன்று இரவு பன்னிரண்டு மணிக்குக் கூலிச் சேரியில் தீப்பிடிக்கப் போகிறது. நீங்கள் அவர்களைக் காப்பாற்றுங் கள்!..."

தூத்துக்குடிப் பொட்டலில் குளிர்காற்று வீசிக் கொண்டி ருந்தது. கூலிகள் நாள் முழுதும் உழைத்தகளைப்பில் பிணம் போல் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். சேரி கும்மிருட்டில் மூழ்கியிருக்கிறது. பீட்டர் தன் ஐந்து சகாக்களுடன் வேகமாகப் படகை ஓட்டிக் கொண்டு வந்தான். படகு துறைமுகத்தையடுத்த கரையை அடைந்தபோது கூலிச் சேரியில் நெருப்புப் பற்றிக் கொண்டது.

படகில் சிங்கராயனை விட்டுவிட்டுப் பீட்டரும் மற்ற நால்வரும் கூலிச்சேரியை நோக்கி ஓடினார்கள். அரையிருட்டில் மைக்கேல் யாருடனோ மோதிக் கொண்டான். ஓட முயன்ற அந்த ஆளைப் பிடித்துக் கொண்டான். அந்த ஆளின் கையில் மண்ணெண்ணெய் நிரம்பிய டின்னும் தீவட்டி மாதிரி ஏதோ ஒன்றும் இருந்தன. மைக்கேல் அவன் கைகளை முறுக்கி முதுகுப் பக்கத்தில் வைத் துக் கட்டிப் படகுக்குள் அவனைத் தள்ளிவிட்டு மறுபடி கூலிச் சேரியை நோக்கி ஓடினான்.

இதற்குள் பீட்டரும் மற்ற சகாக்களும் கூச்சல்போட்டுக் கூலிகளை எழுப்பினார்கள். மாத்யூவும் கோமஸும் எங்கிருந்தோ மண்வெட்டிகள் எடுத்துவந்து மணலை வெட்டி அங்கே கிடந்த கூடைகளில்போட, பீட்டரும் நாதனும் மணலை எடுத்துக் கொண்டு போய் எரியும் குடிசைகளின் மேல் போட்டார்கள். இரண்டு குடிசைகளில் நெருப்புப் பிடித்திருந்தது.

நெருப்பின் ஒளியில் எங்கும் வெளிச்சம். எல்லாக் கூலிகளும் எழுந்து வெளியே வந்துவிட்டனர். பெண்டுகள் பெரிதாக அழத்தொடங்கினர். கூலி இளைஞர்கள் தீயணைப்பதில் பீட்டருக்கு உதவி செய்தார்கள். பீட்டர் எரியும் குடிசையின் கூரைச் சட்டத்தின் மேலேறிக்கொண்டு எரியும் கட்டைகளை வெட்டிக் கீழே தள்ளினான். இளைஞர்கள் தீப்பிடித்த குடிசை களிலிருந்து குழந்தைகளையும் கிழவர்களையும் காப்பாற்றி வெளியே கொண்டு வந்தனர். குடிசை வாசிகள் தங்கள் பொருள் களையும் துணிமணிகளையும் வெளியே கொண்டு வந்தனர்...

அரைமணியில் நெருப்பு அடங்கிவிட்டது. பொசுங்கிய நாற்றமும் சாம்பல் குவியலும்தான் மிச்சம். கூலிப் பெண்டுகள் கூட்டமாக நின்று கொண்டு கூச்சலிட்டார்கள், சாபங்கொடுத்தார்கள்.

முக்காடு போட்ட உருவமொன்று அரையிருட்டில் குழந்தைகளையும் நோயுற்றவர்களையும் கவனித்துக் கொண்டது. ஆனால் இந்தச் சந்தடியில் மற்றவர்கள் அதை அவ்வளவாகக் கவனிக்கவில்லை.

பீட்டர் தன் சகாக்கள் நால்வரையும் படகுக்கு அனுப்பிவிட்டுத்தான் மட்டும் தனியாகக் கடற்கரை ரஸ்தாவை நோக்கி நடந்தான். ரஸ்தா ஓரத்து விளக்கின் வெளிச்சம் நீளமாக விழுந்தது. அதன் எல்லையில் இருளின் தொடக்கம். வெளிச்சமும் இருளும் சந்தித்த இடத்தில் அந்த முக்காடணிந்த உருவம் நின்று கொண்டிருந்தது. பீட்டர் அருகில் வந்ததும் அது தன் முக்காட்டை விலக்கியது.

''சோபி!... நீயா?'' பீட்டர் அவளை அங்கு எதிர்பார்க்கவில்லை.

''வராமலிருக்க முடியவில்லை'' என்றாள் சோபியா.

''விஷயம் தெரிந்துவிட்டால் உனக்குத் தண்டனை...''

''தெரியும்... அதற்கு நான் தயார்...''

இப்போது சோபியா பீட்டருக்கு வெகு அருகில் நின்று கொண்டிருந்தாள் – எதிரும் புதிருமாக பீட்டரின் உடம்பிலிருந்து பொசுங்கல் நெடி வியர்வை நாற்றத்துடன் சேர்ந்து வந்தது. அவனுடைய உடம்பின் மேல் சாம்பல், தீக்காயங்கள். சோபியா அவனைத் தன் கையால் தடவிக் கொடுத்தாள். பீட்டரின் உடம்பின் நெடி அவளுக்குப் போதையைத் தந்தது. மாதாகோவிலின் வாசனைப் புகை கூட அவளுக்கு இவ்வாறு போதையூட்டியதில்லை....

''உங்களுக்குக் காயம் படல்லியே?'' மெதுவாகக் கேட்டாள் அவள். ''எனக்கு ரொம்பப் பயமாயிருந்தது... உங்களுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் அதுக்கு நான்தான் பொறுப்புன்னு... எனக்குச் செய்தி கிடைச்சபோது நான் தவிச்சுப் போயிட்டேன். அந்த அநாதை ஜனங்களை யார் காப்பாத்துவாங்க?... அப்போ உங்க ஞாபகம் வந்தது. வேறே ஒருத்தர் ஞாபமும் வரல்லே... கடவுள் ஞாபங்கூட...''

''அடே, நிசமாவா? உன் கடவுள் நம்பிக்கை அவ்வளவு மட்டமானதா?'' பீட்டர் கேலியாகச் சிரித்துக் கொண்டே கேட்டான்.

சோபியா அவனுடைய சிரிப்பைக் கவனிக்கவில்லை. ஆனால் அவன் குரலிலிருந்த கேலி அவளது காதில் தாக்கியது.

"நான் அப்பவே வந்துட்டேன். குடிசைகள் எரியறதைப் பார்த்தேன். நல்ல வேளையா நீங்க அந்த சமயத்திலே உங்க ஆளுகளோடே வந்து, தீயணைப்பு முயற்சியிலே தீவிரமா செயல் பட்டீங்க. உங்க ஆளுகளும் இயந்திரம் மாதிரி வேலை செஞ்சாங்க... ஆகா, நான் ஒரு அற்புதமான காட்சியைக் கண்டேன்..."

"என்ன கண்டே?"

"மனுசன் கடவுளை விடப்பெரியவன் – ரொம்பப் பெரியவன்!.. இதுதான் நான் கண்டது".

இப்போது பீட்டர் சோபியாவை இறுகத் தழுவிக்கொண்டான். "சோபி, நீ என் வாழ்க்கையிலே வந்துடு! நீ எனக்குக் கிடைச்சுட்டா எனக்குப் பலம் வரும் மனசிலே. என்னாலே போராட முடியும். மனுசன் உயரணும்னாப் போராடணும்..."

சோபியா மெதுவாகத் தன்னை விடுவித்துக் கொண்டாள். அவள் நெஞ்சைப் பிளந்து கொண்டு ஒரு பெருமூச்சு வெளி வந்தது. இருவரும் மெதுவாகக் கடற்கரை ரஸ்தாவை நோக்கி நடந்தனர். எங்கும் நிச்சப்தம். இரவின் மூன்றாம் ஜாமம். ரஸ்தாவில் ஜன நடமாட்டம் இல்லை. கடற்காற்று விட்டுவிட்டு அவர்கள் மேல் வீசுகிறது.

"இந்த விஷயம் உனக்கு எப்படித் தெரிந்தது?"

"பேனி மிராண்டாவோட பெண் ஜேன் வந்து சொன்னாள்... மிராண்டாவும் கிரிகரியும் திட்டம் போடறதை அவகேட்டுட்டா..."

"கிரிகரியா?... அப்பமன்னா சுஸான்தான்... பேனி மிராண்டா இப்போ மனுசரத்தத்தை ருசி கண்ட புலி. இவங்கதான் தூத்துக் குடி கெட்டுப் போகக் காரணம். இவங்களுக்கு சர்க்கார் ஆதரவு இருக்கு, பாதிரிகள் ஆதரவு இருக்கு... இவங்களோடே தான் எனக்குச் சண்டை, யாரும் என் உதவிக்கு வராட்டாலும் நான் தனியாவே சண்டைபோடப்போறேன். ஆனால் எனக்கு நீ வேணும்!..."

பீட்டரின் மார்பு விரிந்தது; மூக்கு விடைத்தது. பேச்சு தாழ்வாக, ஆனால் கர்ஜனை போல், ஒலித்தது. சிறிது மௌனத்துக்குப் பின் அவன் மறுபடி கேட்டான், "சோபி, நீ என்னோடு வரியா?"

திடீரென்று தொலைவில் ஒரு மோட்டார்கார் வரும் அரவம் கேட்டது. சோபியா சட்டென்று பக்கத்துச் சந்தொன்றில் நுழைந்துவிட்டாள்.

☆ ☆ ☆

அந்தோனிக்குச் சற்றும் உறக்கம் வரவில்லை. அவன் மனதில் பல விதச் சிந்தனைகளின் உளைச்சல், எல்லாவற்றுக்கும் மேலே நினைவுக்கு வருகிறது சுஸானின் குரலில் தொனித்த பயம்-"பீட்டர் பயங்கரக் கம்யூனிஸ்ட்!"

சுஸானுக்கு மட்டுந்தான் இந்த பயம் என்பதில்லை. செய்திப் பத்திரிகைகளில் பக்கத்துக்குப் பக்கம் இந்த விஷயம்தான். நாடு முழுதுமே எச்சரிக்கையொலி "கம்யூனிஸ்டுகள் பயங்கரமானவர்கள். அவர்களிடம் ஜாக்கிரதையாயிருங்கள்!" எச்சரிக்கை விடுப்பவர்கள் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர்வரை இருக்கும் காங்கிரஸ் தலைவர்கள்.

பிரிட்டனின் கம்யூனிஸ்ட் கிலி நினைவு வருகிறது அந்தோனிக்கு. ஸ்டாலினை மனிதனையே கொன்று தின்னும் பிசாசாக வர்ணிக்கும் பிரிட்டிஷ் பத்திரிகைகள். ஒரு காலத்தில் பிரிட்ட னில் தாய்மார்கள் நெப்போலியன் பெயரைச் சொல்லித் தங்கள் குழந்தைகளைப் பயமுறுத்துவார்கள். இப்போது ஸ்டாலினின் நிலை ஏறக்குறைய நெப்போலியன் மாதிரிதான். ஆனால் ரஷ்யா மட்டும் ஹிட்லரைத் தடுக்காதிருந்தால் பிரிட்டன் இன்று இருக்காது.

அடர்ந்த மீசையும் வழுக்கைத்தலையுமாக ஜே.பி.எஸ்.ஹால்டேன் விஞ்ஞான முறையில் மார்க்ஸ் வாதத்துக்கு விளக்கம் தருகிறார். டிரபால்கர் சதுக்கத்துப் பொதுக்கூட்டத்தில், ஆயிரக் கணக்கான மக்கள் கிருஸ்துமஸ் பிரார்த்தனைக் கூட்டத்தில் இருப்பதுபோல் மௌனமாக இருந்து அவரது சொற்பொழிவைக் கேட்கிறார்கள்... ஹால்டேனுக்குப் பிறகு மேடையேறுகிறார் பேராசிரியர் லாஸ்கி, அவர் ஹால்டேன் மாதிரி முழங்கவில்லை. ஆனால் உரத்தகுரலில் தெளிவாகப் பேசுகிறார்-"ஒரு சில பணக்காரர்களும் லட்சக்கணக்கான ஏழைகளும் கொண்ட சமூகத்தின் அடிக்கல் மணல் மேல் போடப்பட்டதாகும். அந்த சமூகம் எந்த சமயத்திலும் இடிந்து விழுந்து விடலாம்."....

பண்டித நேருவுக்கும்தான் ஒரு காலத்தில் இந்தக் கொள்கையில் நம்பிக்கை இருந்தது. இதற்கு ருசு 1936ம் ஆண்டில் லக்னௌ காங்கிரஸில் அவரது உரை. பட்டாபி சீதாரமய்யா கூறுகிறார்-"அவர் (நேரு) சோஷலிசத்தின் தர்க்கரீதியான முடிவுக்கு-அதாவது கம்யூனிசத்துக்கு வந்துவிட்டார்." நேரு சொன்னார், "முதலாளித்துவம் ஒரு பாறாங்கல். அதை எவ்வளவு வேக வைத்தாலும் சாப்பிட லாயக்காக ஆகாது, ஆகையால் அதை எடுத்தெறிய வேண்டும். சும்மா அதன் மேல் கோபித்துக் கொண்டு பயனில்லை." அவர் தம் புதல்வி இந்திராவுக்கு எழுதிய கடிதத்தில் காணப் படும் கூற்று இது...

இவையெல்லாம் அந்தோனியின் நினைவுக்கு வருகின்றன. செபாஸ்டியன் குடிகாரன்தான். கொஞ்சம் கிறுக்கனும்கூட. இருந்தாலும் அவன் பேச்சை ஒதுக்கி விடமுடியாது.

இந்த ஐந்து வருடங்களில் நாடு முன்னேறிக்கொண்டு வரும் வழியில் நம் எதிர்காலம் என்ன?

அவனுடைய நெஞ்சில் யாரோ சூடு போட்டாற்போலிருந்தது. ஐந்தாண்டுத் திட்டத்தில் கல்வி முறையை மாற்றுவது பற்றிப் பேச்சே இல்லை. பிரிட்டிஷார் கடித்துச் சுவைத்து துப்பிவிட்டுப் போன சக்கைதான் நம் கல்விமுறை. பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் எல்லாமே குமாஸ்தா தயாரிப்புத் தொழிற்சாலைகள். நாம் அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பது தெளிவு. இந்த அழிவிலிருந்து தப்ப ஒரேவழி மனிதனைப் பகுத்தறிவாளனாக வளர்ப்பது. உணர்ச்சிவசப்படாமல் பகுத்தறிவால் சிந்திக்கச் செய்வது. அப்போது தான் அவன் நாட்டின் நலனுக்குத் தான் எப்படிச் செயல்படவேண்டும் என்பதை உணர்வான். கல்விமுறை மனிதனுக்குச் சிந்திக்கக் கற்றுக் கொடுக்க வேண்டும். இதுதான் லாஸ்கி தெரிவிக்கும் வழி.

அதெல்லாம் எங்கே?...அந்தோனி நாடு திரும்பி ஒரு மாதத்துக்கு மேலாகிவிட்டது. நாடு உண்மையாகவே முன்னேறும் வழி தயாராகும் அடையாளமே தெரியவில்லையே! வெளிப்புறத் தோற்றம்தான் பளபளப்பாயிருக்கிறது. எங்கு பார்த்தாலும் அடித்துப் பிடுங்கித்தின்னும் வெறி. சீ, சீ என்றாகிவிட்டது அந்தோனிக்கு.

பிரிட்டனில் இந்திய விடுதலைக்காக முயற்சிகள் சொற்பொழிவுகள், பிரசுரங்கள் அச்சடித்து வழங்குதல். இந்திய மாணவர் சங்கம், இந்தியா லீக், கிருஷ்ணமேனன். கிரிப்ஸ், அட்லி, சோரன்சன் எல்லாம் ஹம்பக்!...

நல்ல வருமானமுள்ள வேலை, வசதியான வாழ்க்கை, சென்ட்ரல் ஹீட்டிங் அமைந்த ஃபிளாட்டில் மிருதுவான படுக்கையில் கேர்ல் ஃபிரண்டின் உடம்பின் இதமான கதகதப்பு. வெண்ணெய் தடவிய ரொட்டியில் விலையுர்ந்த பாலாடைக்கட்டி. உணவுப் பங்கீடு இருந்தாலும் போதிய அளவில் முட்டை, மீன், இறைச்சி கிடைக்கிறது. பற்றாக்குறை ஏதுமில்லை. வேண்டுமென்றால் விஸ்கி, ஷாம்பேன் போன்ற உயர்ரக குடிவகைகள். சேமிக்கும் பணத்தில் பிராவிடண்ட் ஃபண்ட், இன்ஷ்யூரன்ஸ்... யாருக்காக விடுதலையோ அந்த நாற்பது கோடி இந்திய மக்களின் நினைவு ஏனோ ஒருதடவை கூட வரவில்லை. அவர்களில் நூற்றுக்கு எண்பத்தைந்து பேர் வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழ்பவர்கள். நாட்கணக்காக அவர்கள் வயிற்றில் சோறு விழவில்லை...

அந்தோனிக்குப் படுக்கை முள்ளாகக் குத்தியது...

நாட்டு அரசாங்கமோ மக்களை வாழ வைத்துக் கொண் டிருப்பதாக ஏமாற்று வேலை செய்கிறது. உண்மை நிலையை மறைக்கிறது. மக்கள் கண் திறந்தால் அவர்களுக்குத் தெரிந்து விடும்-அவர்களுக்குரிய உடைமைகள் எந்தப் பொந்து வழியே திருட்டுப் போகின்றன, எந்த ராட்சதர்கள் அவர்களுடைய தசையைக் குதறித் தின்கிறார்கள் என்பது. அரசாங்கத்தின் இந்த ஏமாற்றுவித்தையைப் பீட்டர் கண்டு பிடித்துவிட்டான். அவன் அந்த ராட்சதர்களுடன் தன்னந்தனியாகப் போராடு கிறான். ஆச்சரியம், அவனுக்குக் கொஞ்சங்கூடப் பயமில்லை!

"நீயும் செய்யக் கூடிய காரியம் இருக்கு, அந்தோனி!" என்று பீட்டர் அவனையழைக்கிறான். பீட்டரின் மேல் பல்கலைக்கழகப் பட்டத்தின் முத்திரை இல்லை. அப்படியானால்....

அந்தோனியின் மனதில் குழப்பம்-பீட்டர் சொல்வதைக் கேட்பதா, இல்லையா?

கைகளைப்பின்னால் கட்டிக்கொண்டு, குனிந்த தலையுடன் அறையில் இங்குமங்கும் நடக்கிறான் அந்தோனி. அவன் தற் செயலாகத் தலைநிமிர்ந்த போது எதிரே நிலைப்படியில் பீட்டர்! அந்தோனிக்கு ஒரே ஆச்சரியம்-பீட்டர் அந்தோனி மனதுக் குள்ளிருந்து வெளியே வந்துவிட்டானா?

"ஏன் இப்படிப் பார்க்கறே?...என்னை அடையாளம் தெரி யலியா?" பீட்டர் சிரித்துக் கொண்டே கேட்டான்.

"இந்த நேரத்திலே இங்கே எப்படி வந்தே?....கடல்லே வலையைப் போட்டுட்டு வந்திருக்கியா?"

"இல்லே...ஒரு பெரிய வலையை அறுத்துட்டு வந்திருக்கேன் ..ரொம்பப் பசிக்குது..."

அந்தோனிக்கு அப்போதுதான் நினைவுவந்தது, தானும் இன் னும் சாப்பிடவில்லையென்று. "ரெண்டு பேருமாச் சாப்பிடலாம் வா. ஆஞ்செலா சித்தியைக் கூப்பிடறேன்."

"முதல்லே நான் இந்தக்கரி, சாம்பலையெல்லாம் கழுவிக் கிட்டு வரேன்" என்று சொல்லிவிட்டுப் பீட்டர் பாத்ரூ முக்குப்போனான்.

அந்தோனியும் பீட்டரும் சாப்பாட்டு மேஜைமுன் எதிரெதிராக உட்கார்ந்தார்கள். ஆஞ்செலா மல்லி விதை, தேங்காய், புளி அரைத்துவிட்டு சூர்மா மீன் கறி சமைத்திருந்தாள். நாக்கை விட்டுப்பிரியவில்லை. அவ்வளவு ருசி, அதன் காரம் அந்தோனி யின் கண்களில் நீரை வரவழைத்து விட்டது. அப்படியும் அவனால் அதைச்சாப்பிடாமலிருக்க முடியவில்லை. பீட்டருக்கு உண்மையிலேயே நல்ல பசிபோலிருக்கிறது. பெரிய பெரிய கவளமாக எடுத்து விழுங்குகிறான்.

"இந்தக்கரி சாம்பலையெல்லாம் எங்கேயிருந்து அப்பிக்கிட்டு வந்தே?"

"கூலிச்சேரியிலே நெருப்பணைக்கப் போயி...இப்படியாச்சு... ஆஞ்செலா சித்தி சமையல் ரொம்பப் பிரமாதம்!"

ஆஞ்செலாவின் கண்களில் ஈரம் பளபளத்தது. அவளுடைய சமையலை யாராவது புகழ்ந்தால் அவளுக்கு மகிழ்ச்சிக்கண்ணீர் வந்துவிடும். அதுவும் இப்போது பீட்டர் பாராட்டுகிறான். அவனை அவள் பெற்றபிள்ளை என்றுதான் சொல்லவேண்டும்...அவள் அவன் தட்டில் இன்னும் நிறையச் சுடு சோறு போட்டாள். கூடவே கொஞ்சம் கறி-நாலைந்து மீன்துண்டுகள்.

"என்ன சித்தி, எல்லாத்தையும் எங்களுக்கே போட்டுட்டே! உங்களுக்கு ? "

"அதைப் பத்தி உனக்கென்ன? நீ சாப்பிடு ! . . . இவ்வளவு நாள் கழிச்சு வந்திருக்கே . . "

அந்தோனி சாப்பிடுவதை நிறுத்திச் சிந்தனையிலாழ்ந்தான். "கூலிச் சேரியிலே எப்படி நெருப்புப் பிடிச்சது?"

"தானாப் பிடிச்சுக்கல்லே . . . வச்சாங்க" என்று சொல்லிக் கொண்டே இன்னுங் கொஞ்சம் சோற்றை வாயில் போட்டுக் கொண்டான் பீட்டர்.

"நாம இன்னும் காட்டுமிராண்டி யுகத்திலேதான் இருக்கோமா?"

"அதை விடமோசம்னு சொல்லு. அந்தக் காலத்திலே ஜனங்க அடிதடி, கொலை கொள்ளை எல்லாத்தையும் பகிரங்கமாச் செய்வாங்க. நள்ளிரவிலே உழைச்சுக் களைச்ச மனிதர்கள் அசந்து தூங்கற போது அவங்க குடிசைக்கு நெருப்பு வச்சு அவங்களைக் கொல்ல நினைக்கமாட்டாங்க . . ."

"நீ தனியாவா போனே நெருப்பணைக்க?"

"இல்லே, என்னோட சகாக்கள் அஞ்சு பேர் கூட இருந்தாங்க."

"உனக்குப் பயமாஇல்லே ? . . உனக்கு ஏகப்பட்ட விரோதிகள். அவங்க உன்னையும் கொன்னு அந்த நெருப்பிலே போட்டிருந்தால் ? . . .

பீட்டர் சாப்பிடுவதைச் சற்று நிறுத்திவிட்டு அந்தோனியைப் பார்த்தான். அவனுடைய உதடுகளில் ஓர் அபூர்வப் புன்னகை.

பீட்டரின் கண்களைச் சந்தித்த அந்தோனி வெட்கத்தில் சுருங்கிப் போனான். பீட்டரிடம் அவன் இப்படிக் கேட்டிருக்கக் கூடாது. அவனுக்கு இளம் பிராயத்து நிகழ்ச்சியொன்று நினைவு வந்தது.

பீட்டர் மறுபடி சாப்பிடத் தொடங்கிவிட்டான்.

அந்தோனியின் மனக்கண்ணில் அந்த இரவு தோன்றியது . . .

அப்போது அவர்கள் வயது அதிகமில்லை. பதினைந்து, பதினாறுக்கு மேலிருக்காது. அந்தோனி விடுமுறையில் கல்கத்தாவிலிருந்து ஊருக்கு வந்திருந்தான். வந்ததும் கேள்விப் பட்டான் ஊரில் பிசாசு உபத்திரவமென்று. பெண் பிசாசு. காட்வினின் அம்மாதான் பிசாசாக நள்ளிரவில் ஒரு வெள்ளைத் துணியைச் சுற்றிக் கொண்டு ஒருவித ஒலி எழுப்பியவாறு கடற்கரை ரஸ்தாவில் புரண்டு புரண்டு போகிறாளாம். அந்த ஒலியைக் கேட்டால் இரத்தம் பனியாய் உறைந்து விடுமாம். பிசாசின் இரண்டு நீளமான கைகளைத் தவிர வேறெதுவும் கண்ணுக்குத் தெரியவில்லையாம்.

ஊரில் பலவித வதந்திகள். காப்பிக்கடைகளில், மீனவர்களிடையே இதுபற்றித்தான் பேச்சு. பயந்து போன கிழவி பிச்சம்மா மாதா கோவிலுக்கு வேண்டுதல் செய்து கொண்டாள்.

பீட்டர் ஒரு நாள் சொன்னான், "வா அந்தோனி, இன்னிக்கு ராத்திரி அந்தப் பிசாசைப் பிடிப்போம். . ."

இரவு ஒரு மணிக்கு அவன் வந்து அந்தோனியைக் கூப்பிட்டான். அந்தோனி பயந்து கொண்டே பீட்டரைத் தொடர்ந்தான். இருவரும் கடற்கரை ரஸ்தாவின் தென்புறமாகச் சென்றார்கள்.

நிசப்தமான, ஜன நடமாட்டமற்ற இரவு. ரஸ்தா ஓரத்து விளக்குகளின் ஒளி மங்கலாகத் தெரிகிறது. ரஸ்தாவின் இறுதியில் கும்மிருட்டு. அவர்கள் கடற்கரைக்கு வந்து விட்டார்கள். மணல் மேடுகள். முட்புதர்கள். விட்டுவிட்டு வீசும் கடற்காற்று. அலைகள் கரையில் மோதும் ஒலி. இங்கே அந்தோனியின் நெஞ்சுக்குள் திமுசுக் கட்டையால் அடிக்கும் சத்தம். இருவரும் ஒருமணல் மேட்டுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டார்கள். தான் உயிரோடுதான் இருக்கிறோமா இல்லையா என்று அந்தோனியால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. பயத்தால் அவனது உணர்வுகள் மரத்துப் போய்விட்டன. அவன் நடுநடுவே நெஞ்சின் மேல் கை வைத்து நெஞ்சு துடிக்கிறதா என்று பார்த்துக்கொண்டான்.

இந்த சமயத்தில் கடலில் குர்குர் என்று ஒரு சத்தம் கேட்டது. பீட்டர் அந்தோனியின் கையைப் பிடித்துக் கொண்டு சொன்னான்,"எட்டிப்பார் . . ."

கரையில் ஒரு விசைப்படகு வந்து நின்றது. நின்றதும் குர்குர் ஒலியும் நின்று விட்டது. இருவர் படகிலிருந்து குதித்தார்கள். பிறகு படகிலிருந்து ஒரு தள்ளு வண்டியை இறக்கினார்கள். பிறகு இரண்டு தடிகளில் துணியைச் சுற்றி அவற்றைத் தள்ளு

வண்டியின் இரண்டு பக்கங்களிலும் கட்டி வைத்தார்கள். ஒருவன் வண்டிக்குள் உட்கார்ந்து கொண்டான். மற்றவன் அவனைத் துணி போர்த்தி முழுமையாக மறைத்து விட்டான். பிறகு வண்டி ரஸ்தாவில் உருண்டு உருண்டு போகத் தொடங்கியது. தள்ளுவண்டிக்குள் ஏதோ இயந்திரம் பொருத்தப் பட்டிருக்க வேண்டும். தள்ளுவண்டி சிறிது தூரம் சென்றதும அதிலிருந்து ஒரு பயங்கர ஓலம் எழும்பும் "ஓ . . ஓ. . " இரவின் அமைதியில் இரத்தத்தை உறையச்செய்ய வல்ல ஒலி.

அந்தோனியும் பீட்டரும் இருட்டில் படகுகளுக்குப்பின்னால் ஒளிந்து கொண்டு தள்ளுவண்டியயைப் பின் தொடர்ந்தார்கள். தள்ளுவண்டி கடற்கரை ரஸ்தா வழியே வந்து ஒரு சந்துக்குள் திரும்பி மாசாதோ வீட்டுக் கொல்லைப் பக்கம் நின்றது. கூட வந்த ஆள் கொல்லைக் கதவை மூன்று முறை தட்டினான். கதவு சற்றுத்திறந்து ஒல்லியான மனிதன் ஒருவன் வெளியே வந்தான். தள்ளுவண்டிக்குள்ளிருந்தவன் தன்னைப் போர்த்தியிருந்த போர்வையைத் தூக்கி ஒல்லி மனிதனிடம் ஒரு தகரப் பெட்டியைக் கொடுத்தான்.

பிறகு தள்ளுவண்டி வந்த வழியே திரும்பிப் போயிற்று. போகும் போதும் அவ்வப்போது அந்தப் பயங்கர ஓலம் எழுந்தது – "ஓ . . .ஓ. . ."

கள்ளக் கடத்தல். அந்தத் தகரப்பெட்டியில் தங்கக் கட்டிகள் இருக்கலாம், அபினி போன்ற போதைப்பொருள் இருக்கலாம், வைரங்களிருக்கலாம். . . மாசாதோ குடும்பம் இவ்வளவு விரைவில் பணக்காரக் குடும்பமானதன் இரகசியம் இதுதான்.

கிழவன் மாசாதோ ரோச் விக்டோரியா குடும்பத்தின் குமாஸ்தாவாக வேலை செய்தான். அவன் மிகவும் கஷ்டப்பட்டுத் தன் மூன்று பிள்ளகளைப் படிக்க வைத்தான். கெட்டிக் காரப் பிள்ளைகள் திமுர்ப் பெரிய மனிதர்களாக ஆவதற்கு இந்த வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். . .

"என்ன பேசாமே இருக்கே?" பீட்டர் தட்டை வழித்து நக்கிக் கொண்டே கேட்டான்.

"அந்தக் காலத்து நிகழ்ச்சி ஒண்ணு ஞாபகம் வந்தது . . .
அந்தப் பிசாசு. . ."

பீட்டர் சிரித்தான், "ஓ . . . அந்தக் கள்ளக்கடத்தல் சமாசாரமா? . . . மாசாதோப் பசங்க ரொம்ப கெட்டிக்காரத்தனமாகத் தான் அந்தப்பிசாசு வதந்தியைக் கிளப்பி விட்டாங்க. அப்போ சுங்க ஆபீசராயிருந்த ராபின்சன் ரொம்பக் கண்டிப்பானவர். அவர்கிட்டேப் பிசாசு ரகசியத்தைச் சொன்னதும்

பிசாசு பிடிபட்டது. மாசாதோக்கள் மேலே குத்தமில்லை. அவங்ககிட்டே அப்போ பெரிய தோணியில்லாததாலே அவங்க இந்த மாதிரி தந்திரம் செய்ய வேண்டியிருந்தது. இப்போ தோணி வச்சிருக்கறவங்க எல்லாருக்கும் முக்கிய வரும்படி கள்ளக்கடத்தலிலே தான்...'

"இப்பவுமா?"

"ஆமா, இப்பத்தான் ராம ராஜ்யமாச்சே! மத்த சர்க்கார் இலாகாமாதிரி சுங்க இலாகாவும் பெரிய மனுசங்க கைக் குள்ளே. அவங்க முன்னாலேயே பணங்கொடுத்து வலை விரிச்சு வச்சிருக்காங்க. கடலைத் தாண்டிக் கூட விரிஞ்சிருக்கு வலை. அப்பப்போ பேருக்குச் சில சில்லறை ஆளுக ஆம்பிட்டுக்கு வாங்க. சுறாக்களும் முதலைகளும் ஆழமான தண்ணிக்குள்ளே ஆனந்தமாயிருப்பாங்க. சரி, அந்த விஷயம் ஏன் ஞாபகம் வந்தது இப்போ?..."

"சின்ன வயசிலேருந்தே உனக்குப் பயம் கிடையாதுங்கறதை நினைச்சுப்பார்க்கறபோது அந்த நிகழ்ச்சி ஞாபகம் வந்தது..."

"இல்லே..." அந்தோனியை இடை மறித்துப் பேசத் தொடங் கினான் பீட்டர். இதற்குள் அவனது சாப்பாடு முடிந்துவிட்டது. "சின்ன வயசிலே நான் ரொம்பப் பயப்படுவேன். என்னைப் பயந்தெளிய வச்சது என்னோட அப்பாதான். அப்போ எனக்குப் பத்து வயசுதான் இருக்கும். ஒரு நாள் அப்பா சொன்னார், 'என்னோட கடலுக்கு வா'ன்னு அவர் என்னைக் கடல்லே வெகு தூரத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போகப் போறார்னு எனக்குத் தெரியாது.. பாண்டியன் தீவையுந்தாண்டிப் போயிட்டோம். இதுக்கு முன்னோலே அந்த இடத்தையெல்லாம் தூரத்தி லேருந்து பார்த்திருக்கேன், அவ்வளவுதான்! அந்தப் பரந்த தண் ணீர் வெளிக்குப் போனபோது எவ்வளவு பயந்து போயிட்டேன் தெரியுமா? என்னாலே விவரிக்க முடியல்லே அதை. மரம் இல்லே, செடி இல்லை, ஆளரவம் இல்லை, வெறும் தண்ணி, கரைக்குப் போயிடணும் துடிக்கிறது மனசு. போதும் போதாத துக்கு அது ஆடிமாசம் வேறே. 'ஆடிக்காத்து அம்மியைத் தூக்கும்'னு சொல்லுவாங்க. பெரிய பெரிய அலை மதம்பிடிச்ச யானை மாதிரி குதிச்சுக்கிட்டு வந்து படகு மேலே மோதறது. படகு ஒரே ஆட்டம் ஆடறது. நான் கிலி பிடிச்சுக் கண்ணை மூடிக்கிட்டேன். என் உடம்பெல்லாம் கிடுகிடுன்னு நடுங்குது. இதோ தண்ணிக்குள்ளே முழுகிப் போயிடுவேன்னு தோணுது. நெஞ்சுத் துடிப்பு நின்று போயிடும் போலே இருக்கு. என் நிலையைப் பார்த்து அப்பா ஹோஹோன்னு சிரிக்கிறார். அப்பா

வோட சீடங்க தானீஷ் சித்தப்பாவும் நிகொலஸ் சித்தப்பாவும் துடுப்பு வலிக்கறாங்க. அப்பா கையிலே சுக்கான். அவர் சொன்னார், 'பயலே, கண்ணைத்திற. . . அதோ பாரு !' . . . கண் திறந்து பார்த்தேன். ஒரு யானைக் கூட்டத்தைக் கடந்து வந்துட்டோம். எங்களுக்கு எதிரிலே இன்னொரு யானைக் கூட்டம் குதிச்சு வந்துக்கிட்டிருக்கு. . இந்தமாதிரி சில தடவை ஆனப்பறம் பயம் தெளிஞ்சு போச்சு. குஷி வந்துடுச்சு, படகோட ஆட்டம் குடை ராட்டினத்திலே உட்கார்ந்துகிட்டு சுத்தறமாதிரி ஆனந்தமாயிருந்தது. படகு அலை மேலே ஏறிப் பனை மரத்து உசரத்துக்குப் போகும், உடனே கீழே பாதாளத்துக்கு இறங்கும் . ரொம்ப மஜாவாயிருக்கும் . .

"அப்பா சொன்னார், 'பார்த்தியா? பயந்து போய் அலை மோதற போது படகைத் திருப்பியிருந்தேன்னா படகு கவிழ்ந்து தண்ணிக்குள்ளே போயிருக்கும் . . பயத்தை உண்டாக்கிற எந்தப் பொருளுக்கும் பயந்து போய்த் திரும்பிடக் கூடாது! அதை எதிர்த்துக்கிட்டு முன்னேறு ! அதோடே சண்டைபோடு ! . . அப்போ தெரியும், உலகத்திலே பயம்னு ஒண்ணுமே இல்லேன்னு' . . . ."

பீட்டர் சிரித்துக் கொண்டே அந்தோனியைப் பார்த்தான்.

☆ ☆ ☆

"நீ கம்யூனிஸ்டுன்னு ஏற்கனவே உனக்கு ஒரு கெட்டபேர் இருக்கு, ஜாக்கிரதை!" அந்தோனி சொன்னான்.

பீட்டர் பதிலளித்தான், "இங்கிலீஷிலே ஒரு பழமொழி இருக்கு - 'நாயைக் கொல்லணும்னா, முதல்லே அதுக்கு ஒரு கெட்ட பேர் கொடு'ன்னு." சிறிது நேரத்துக்குப் பின் மறுபடி பேசினான், "நாடு முழுக்க அடிச்சுப் பிடிச்சுக் கபளீகரம் பண்ணற சீசன் ஆரம்பிச்சிருக்கு. மேல் மட்டத்துக்காரங்க வாய்ப்புக் கிடைச்சதும் உழைக்கற ஜனங்களோட உரிமைகளைக் கொள்ளையடிக்கறாங்க. நீ இந்தக் கொள்ளையை எதிர்த்தால் உனக்குக் கம்யூனிஸ்ட பட்டம் கிடைக்கும். முடிஞ்சா உன்னைக் கொலை பண்ணி உலகத்தைவிட்டே அனுப்பிடுவாங்க."

"வாய்ப்புக் கிடைச்சவங்க எல்லாரும் கொள்ளையடிக்கறாங்கன்னா, கீழ் மட்டத்து ஆளுங்கமட்டும சும்மா இருக்காங்களா ?"

"அதுதானே சங்கடம் ! கீழ் மட்டத்து ஜனங்கதான் பொருள் களை உற்பத்தி பண்றாங்க. ஆனால் அவங்களுக்குக் கொள்ளை யடிக்கற வாய்ப்புக் குறைச்சல். என்னையே எடுத்துக்க. நான் மீன் பிடிச்சுக்கிட்டு வரேன். அந்த மீனோட விலை வாங்கற வங்களோட இஷ்டத்தைப் பொறுத்தது. அவங்களே ஒரு விலை யை வச்சு 'இந்த விலைக்கு கொடுத்தால் கொடு, இல்லாட்டி உன் மீன் அழுகிப் போகட்டும்' அப்பாஎன்னு சொல்லுவாங்க. மீனவங்களுக்கு இந்த மாதிரி கிடைக்கற விலையைப் போலப் பத்து மடங்கு விலையிலே குடித்தனக்காரங்க மீன்வாங்கறாங்க. அன்றாடங்காய்ச்சியாக் காலந்தள்ற குடித்தனக்காரங்களுக்கு ரெண்டு மீன் துண்டு சாப்பிடக்கிடைக்கறது சந்தேகம் ... ஆக, லாபம் யாருக்கு? மீனவனுக்குமில்லே, பொதுமக்களுக்குமில்லே, நடுவிலே வர்ற தரகங்களுக்கு .. நீ இதை எடுத்துச் சொன்னா, சர்க்கார் உன்னை உதைக்க வரும் ...

"நம்ம திருநெல்வேலிப் பக்கத்துப் பத்தமடைப் பாய் பார்த் திருப்பே. நயமான கைவேலை, அருமையான சித்திர வேலைப் பாடு, போனவன் வந்தவனெல்லாம் அந்தமாதிரிப் பாயை நெய்ய முடியாது. அந்த மாதிரி சித்திர வேலைப்பாடு செய்ய ஒரு கலைஞனோட பார்வை வேணும். தவிர அந்தப் பாய் தயாரிக்க ரொம்ப உழைக்கணும். கடையிலே அந்தப் பாயை வாங்கப்போனால் ஏகப்பட்ட விலை. ஆனால் அதை நெய்யற வங்க பாடு பரிதாபமாயிருக்கு .. இது ஒரு விசித்திரமான நாடு. ரொம்ப முக்கியமான வேலையைச் செய்யறவங்களுக்கு விலையே கிடையாது இந்த நாட்டிலே.. ஒரு நாள் மீனவச் சேரிக்கு என்னோடே வா. நான் சொல்றது எவ்வளவு உண்மைன் னு தெரியும் ..."

அந்தோனி சொன்னான், " நானும் பார்த்துட்டேன். பண்டித நேருவே கம்யூனிஸ்ட் கொள்கையிலே அனுதாபங் கொண்டவர்னு நினைக்கிற போது ரொம்ப ஆச்சரியமாயிருக்கு... "

"அதான் சொன்னேனே, இந்தநாடு ரொம்ப விசித்திரமான நாடுன்னு. செபாஸ்டியன் சித்தப்பா குடிகாரார்தான், கொஞ்சங் கிறுக்குதான். ஆனால் உண்மை நிலையைப் புரிஞ்சுக்கிட்டிருக் கார். ஒரு காலத்திலே நிறையப் படிக்கவும் செஞ்சிருக்கார். அவர் சொன்னது அவ்வளவும் உண்மை. இந்த நாட்டு மக்க ளோட மனசும் விசித்திரம்தான். ஒவ்வொரு மனுசனுக்குள்ளே நவாபும் பக்கிரியும் சேர்ந்து இருப்பாங்க. நெறையப் பணங்காசு இருக்கும் , அப்படியும் ஆசை குறையாது. 'இன்னும் கொஞ்சம் காசு கிடைச்சால் நவாப் மாதிரி இருக்கலாமே'ன்னு ஏக்கம்....

ஆயிரக்கணக்கான வருசங்களாக ராஜாக்கள் ஆண்டதாலே வந்த பலன் இது. நம்ம மனச ரொம்ப துர்ப்பலமானது. இங்கே மார்க்ஸ் எங்கெல்ஸ் தத்துவமெல்லாம் வெறும் வாய்ப்பேச்சு தான். எல்லாத்தையும் பார்த்து எனக்கு வெறுத்துப் போச்சு. . "

"என்னத்தைப் பார்த்தே?"

"அப்பா படுகொலையானார். போலீஸ் வந்தது. போலீஸ் நாய் வந்தது. இன்னும் என்னென்னவோ நடந்தது. ஆனால் கொலை காரன் அகப்படலே. யாருக்கும் தண்டனை கிடைக்கலே. . . தானீஷ் சித்தப்பா சொன்னார், 'நீ கேரளாவுக்குப் போ. அங்கே பில்லிசூனியம் தெரிஞ்சவங்களைப்பிடி' அப்பமன்னா. . "

"பில்லி சூனியம்னா?"

"இங்கிலீஷிலே பிளாக் மாஜிக்னு சொல்லுவாங்களே, அது தான். நீ இங்கே உட்கார்ந்திருக்கே. திடீர்னு உன் வாயிலேருந்து ரத்தமாகக் கொட்டும். டாக்டர் யாரும் ஒண்ணும் பண்ண முடி யாது. செத்துப் போயிடுவே. உனக்குத் தெரியாமே உன்மேலே பில்லி சூனியம் வச்சிருப்பான் மந்திரவாதி. உன்மேலே அம்பு ஏவியிருப்பான். இந்த மாதிரி மந்திரம் ஓதி ஏவினபாணம் ரொம்ப ஆபத்தாம். ஜனங்கள் நம்பறாங்க. . . "

"நீ அந்த மாதிரி மந்திரவாதி யாரையாவது பார்த்திருக்கியா?"

பீட்டர் இந்தக் கேள்விக்கு நேரடியாகப்பதிலளிக்கவில்லை. "தானீஷ் சித்தப்பா ஒரு விலாசமும் கொடுத்தார். அதை எடுத்துக்கிட்டுக் குத்தாலம் போனேன். அங்கேயிருந்து செங் கோட்டைக்காடு ஆரம்பம். மலை, காடு . . இந்தப் பக்கம் தமிழ் நாடு, அந்தப் பக்கம் கேரளா. காட்டிலே யானை,சிறுத்தை, காடெருமை, விஷப்பாம்பு எல்லாம் ஏராளம். திடீர்னு மழை வந்தது. அந்திநேரம். நல்லவேளையா அங்கே ஒரு காபிக் கடை இருந்தது மலையடிவாரத்திலே. கடைக்காரர்கிட்டே போய் ராத்தங்க இடங்கேட்டேன். அவர் என்மேலே இரங்கி இடங் கொடுத்தார். அங்கே என் மாதிரி இன்னொரு ஆளும் தங்கி யிருந்தார். கூடையாத்தலைமுடி. காடுமாதிரி தாடி. ஒல்லியா வத்தி உலர்ந்து போயிருந்தார். முகத்திலே தாடை பிதுங்கிக் கிட்டிருக்கு. கழுகுப்பார்வை. அவர் ராப்பூராச் சுருட்டு குடிச்சுக் கிட்டே ஒரு சிம்மினி விளக்கு வெளிச்சத்திலே ஏதோ எழுதிக் கிட்டேயிருந்தார். . .

"இவர் ஒரு மந்திரவாதியா இருக்கலாமோன்னு எனக்குத் தோணிச்சு. . அந்த ஆள் திடீர்னு நிமிர்ந்து புருவத்தைச் சுருக்கிக் கிட்டு என்னைப் பார்த்தார். நான் அவரைக் கேட்டேன். 'ஐயா, நீங்க மந்திர வாதிங்களா ?'

"அவர் எழுதறதை நிறுத்திட்டு என்னைக் கேட்டார், 'ஏன், உனக்கு என்னத்துக்கு மந்திரவாதி ?'

"நான் என் கதையைச் சொன்னேன். அவர்பேசாமே எல்லாத்தையும் கேட்டுட்டுச்சொன்னார், ' உன்னோட அப்பாவைக் கொலை செஞ்சவங்க அடியாளுகள். அவங்களைத் தூண்டி விட்டவங்க முதலாளித்துவ பூர்ஷ்வாக்கள். அவங்க ஒரு மோசமான ஜாதி, அவங்க இரத்தம் உறிஞ்சிகள். பாட்டாளிகளோட சத்துருக்கள், நாட்டோட சத்துருக்கள். அவங்களை ஒழிக்கணும்னா என்னோட வா . . .?

"நான் அவரோடே கொல்லத்துக்குப் போனான். அங்கே கம்யூனிஸ்டுகளோட ரகசிய முகாம் ஒண்ணுக்கு அவர் என்னைக் கூட்டிக்கிட்டுப் போனார். அங்கே எனக்கு பல விஷயங்கள் கத்துக் கொடுத்தாங்க முதலாளித்துவ சமூக அமைப்பு - பூர்ஷ்வா, குட்டிபூர்ஷ்வா சுரண்டல் பாட்டாளி சமூகம் - வார்க்கப் போர் மார்க்ஸ் எங்கெல்ஸ் லெனின், ஸ்டாலின் . . . அவங்க புரட்சி பண்ணச் சொல்லிக் கொடுத்தாங்க. கோஷம் போட, சுவரொட்டி தயார் செய்யச் சொல்லிக் கொடுத்தாங்கள். துப்பாக்கி சுடக் கூடக்கத்துக் கொடுத்தாங்க. மூணுமாசம் மாணவனாயிருந்து கம்யூனிஸ்ட் கொள்கை பத்தி நல்லாக் கத்துக்கிட்டு முழுக்கம் யூனிஸ்ட் ஆயிட்டேன்.

"அங்கேயிருந்து நேரே தெலிங்கானாவுக்குப் போனேன். நோக்கம் - முதலாளித்துவத்தை ஒழிக்கிறது... ஜமீந்தார்களை, பெரிய பண்ணையார்களை ஒழிச்சுப்புரட்சிக்கு வழி பண்றது. கொலை கொள்ளை- கொரில்லாயுத்தம்... சர்க்கார் சும்மா இருக்குமா? நேரு கம்யூனிஸ்ட் கொள்கையனுதாபியாயிருந்து என்ன பிரயோசனம்? கம்யூனிஸ்டை நசுக்கறது தானே காங்கிரஸ் கொள்கை! கம்யூனிஸ்டுகளை ஒழிக்க எல்லா ஏற்பாடுகளும் செய்தது அரசாங்கம்... என் சகாக்கள் சிலபேர் குண்டுக்கு இரையாயிட்டாங்க. ஒரு குண்டு என் காதை உராய்ஞ்சிக்கிட்டுப் போச்சு. நான் எப்படியோ பிழைச்சேன். ஆனால் பிடிபட்டு ஜெயிலுக்குப் போனேன்...

"ஜெயிலுக்குள்ளே பலமான வதந்திகள் வெளியிலே பாட்டாளி விடுதலைப் போர் நடக்குது, ஒவ்வொரு ராஜ்யமா விடுதலையாகிக்கிட்டு வருதுன்னு அச்சடிச்ச நோட்டீஸ் எங்களுக்குக் கிடைச்சது. . . விடுதலைப் போராட்ட வீரர்கள் ஒவ்வொரு இடமா முன்னேறிக்கிட்டு வராங்க மேற்கு வங்காளம், அப்பறம் ஒரிஸ்ஸா, அப்பறம் ஆந்திரா . . முதலாளித்துவ ராட்சசர்களிடமிருந்து விடுதலை. . ஆனால் எனக்கு ஜெயில்லேருந்து விடுதலை கிடைக்கல்லே . .

"ஒரு வருசங்கழிச்சு எனக்கு எதிரா ருசு ஒண்ணுமில்லேன்னு என்னை விடுதலை பண்ணினாங்க. வெளியே வந்து பார்த்தால்... கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவருங்க எல்லோரும் சௌக்கியமா இருக்காங்க. குழப்ப காலத்திலே அவங்க தலைமறைவா இருந்தாங்களாம். அதனாலே அவங்க குடும்பங்களுக்கு அசௌகரியம் ஒண்ணும் ஏற்படல்லே. கட்சிப்பணம் கிடைச்சுது அவங்களுக்கு. அவங்களோட இன்ஷ்யூரன்ஸ் கட்டணத்தைக் கூடக் கட்சியே கொடுத்திடுச்சு ! . .

ஹோ ஹோ வென்று சிரித்தான் பீட்டர்.

"அப்புறம் ?" அந்தோணி கேட்டான்.

"அப்புறம் என்ன ? . . ஜெயில்லேருந்து வந்தப்பறம் கட்சித் தலைவங்ககிட்டே சொன்னேன், 'நான் என் அப்பாவோட கொலைகாரங்களைப் பழிவாங்க விரும்பறேன்... " தலைவங்க சொன்னாங்க, 'முதல்லே கம்யூனிசம் வரதுக்கு உதவி பண்ணு. அப்பறம் சுரண்டல்கார பூர்ஷ்வாக்கள் தாங்களாகவே அழிஞ்சு போயிடுவாங்க.'

"எனக்கு அதிர்ச்சியாயிடுச்சு. இருந்தாலும் கேட்டேன், ' நான் இப்போ என்ன செய்யணும் ?'. . ."

"தலைவங்க உபதேசம் பண்ணினாங்க, ' உன் ஊருக்குப் போய்க் கட்சியைத் தொடங்கு. நம்மகட்சிக்காரங்களுக்குக் கட்சிப் பிரசுரங்களைக் கொடுத்துப் படிக்கச் சொல்லு. கட்சிக் கொள்கையைப் பிரசாரம் பண்ணு' . . ."

"அதிலே என்ன லாபம்?"

"...'லாபம் என்னவா? அதிலே தான் லாபம் ! அடுத்த தேர்தல்லே போட்டி போட்டு ஆட்சியைப் பிடிக்கணுமே!' . . ."

"என்ன சொல்றீங்க ? பார்லிமெண்டுங்கறது பன்னிகளை அடைச்சு வைக்கற பட்டின்னு லெனின் சொல்லியிருக்கார். நீங்க என்னடான்னா, தேர்தல்லே . . ."

". . .'அரசியல்ங்கறது அவ்வளவு சாதாரண விஷயமில்லே அப்பா... தேர்தல் கீர்தல் எல்லாம் வெறும் மோசடிங்கறதைத் தேர்தல்லே நின்னு நிரூபிக்கணும். அப்போதான் ஜனங்க தேர்தல்லே நம்பிக்கை இழப்பாங்க. பாட்டாளி மக்களோட சர்வாதிகாரம் வர்ற வழி தயாராகும். . புரிஞ்சுதா அசடே ? . . . ."

"இதுக்குள்ளே என் உற்சாகம் பறந்து போயிருச்சு. சோர்ந்து போன குரல்லே சொன்னேன், 'எங்க ஜனங்க மீனவச் சேரியிலே அசிங்கமும் நாத்தமுமா வாழ்க்கை நடத்தறாங்க. எப்போ பாரத்தாலும் அங்கே தொத்து நோய் பரவுது. அவங்களுக்கு சுகாதாரமா வாழக் கத்துக் கொடுக்க ஏற்பாடு செய்ய முடியாதா? என் கூட சில கட்சித் தொண்டர்களை அனுப்புங்களேன் !. . ."

"தலைவங்க சொன்னாங்க 'அப்படியெல்லாம் நேரத்தை வீணாக்க முடியாது இப்போ. அசிங்கத்துக்கும் நாத்தத்துக்கும் காரணம் வறுமைதான். கம்யூனிசம் வந்தால் இதெல்லாம் தானாகவே போயிடும்.' . . ."

"என் கண் திறந்தது. அவங்க தங்களோட உண்மையான பொறுப்பைத் தட்டிக் கழிக்கறதுக்காகக் கெட்டிக்காரத்தன மான வார்த்தை ஜாலத்தைத்தயார் பண்ணி வச்சிருக்காங்கன்னு எனக்குப் புரிஞ்சுபோச்சு . . தூன்னு அதையெல்லாம் விட்டுத் தூத்துக்குடிக்குத் திரும்பி வந்தேன். நானே சேரியைத் துப்புரவு பண்ணத் தொடங்கினேன். சில இளைஞர்கள் என்னோடே இதிலே சேர்ந்துக்கிட்டாங்க. ஆனால் ஒநாய்கள் என்னை இங்கே இருக்க விடலே. . நான் ஒடவேண்டியதாயிடுச்சு. . "

"ஆனால் இப்போ பார்லிமெண்டிலே காங்கிரசுக்கு எதிர்க் கட்சியாக இருக்கிறது கம்யூனிஸ்ட் கட்சிதானே ? " அந்தோனி சொன்னான்.

"என்னைப் பொறுத்தவரையிலே காங்கிரஸ், கம்யூனிஸ்ட ரெண்டும் ஒண்ணுதான். ரெண்டும் ரெண்டு கால் பந்தாட்டக்கு ழுக்கள். ரெண்டுக்கும் சீருடைதான் வித்தியாசம். ஆட்சிதான் பந்து. ஆட்சி ஒரு குழுவோட பிடியிலே இருக்கு. இன்னொரு குழு அதைப் பிடுங்கிக்கப் பார்க்குது. . ஆட்சிக்கு வந்தால் கொள்ளை யடிக்கலாம். அதுதான் உண்மையான நோக்கம். . . ."

"என்ன சொல்றே, பீட்டர் ? ரெண்டு கட்சிகளும் வெவ்வேறு தேர்தல் விளம்பரங்கள் வெளியிட்டிருக்கே !'

"அப்படியொண்ணும் பிரமாத வித்தியாசம் இல்லே ரெண் டுலேயும். ரெண்டு கட்சியும் ஜனங்களுக்கு சேவை பண்ணறதாகத் தான் சொல்லுது. தேர்தலுக்கு முன்னாலே விதவிதமா வாக் குறுதி கொடுப்பாங்க. ஆனால் தேர்தல் முடிஞ்சப்பறம் ஒரு வாக்குறுதியைக் கூட நிறைவேத்த மாட்டாங்க. விஷயம் தெரிஞ்ச வங்களுக்கு இதெல்லாம் தெரியும். காங்கிரஸ் தலை வருங்க நல்லாத்தின்னு தின்னு கொழுத்திருக்காங்க. கம்யூனிஸ்ட் தலை வருங்களும் பட்டினி கிடக்கலே. அவங்ககிட்டேயும் வீடு, கார், சொத்து எல்லாம் இருக்கு. காங்கிரசாகட்டும், கம்யூனிஸ் டாகட்டும் எல்லாரும் இந்த நாட்டு மண்ணிலே உண்டான வங்கதானே ! வேஷம் போடறது அவங்க ரத்தத்திலே ஊறிப் போயிருக்கு. அவங்க சொல்றதைச் செய்யமாட்டாங்க. செய்ய றதைச் சொல்ல மாட்டங்க. மனுசனோட சக்தி, நேரம், பணம் எல்லாம் எவ்வளவு வீணாப் போகுதுங்கறதை யோசிச்க மாட்டாங்க. . அரசியலாகட்டும், சமூக மாகட்டும், ஆட்சியாகட்டும்

எங்கே பார்த்தாலும் இந்த விரயம் தான் கடல் மாதிரி அவ்வளவு பெரிய விரயம் ! . .

"மார்க்ஸ் எங்கெல்ஸோட சிந்தனையைப் படிச்சவங்க நம்ம நாட்டை முன்னேற்றப் பாதையிலே கூட்டிச் செல்லுவாங்கன்னு நான் ஒரு காலத்திலே நினைச்சேன். அவங்க மூலம் மக்களுக்குச் சுரண்டலிலேருந்து விடுதலை கிடைக்கும்னு நினைச்சேன் .இப்போ புரியுது, எல்லாமே ஹம்பக்னு . . பார்லிமெண்டரி ஜனநாயகமே பெரிய மோசடிதான். . இதிலே நம்பிக்கை வைக்கிறவங்க . .

"எனக்கு ஒரு நிகழ்ச்சி ஞாபகம் வருது. ஒரு சமயம் நான் கடல்லே வெகு தூரம் போயிட்டேன் மீன் பிடிக்க. நான் அப்போ இன்னொருத்தர் படகிலே கூலிக்கு வேலை செஞ்சுக்கிட்டிருந்தேன். என் கூட ரெண்டு பேர் இருந்தாங்க. ஆகாசத்திலே மேகமே இல்லை. திமீர்னு பெரிசாக்காத்து அடிக்க ஆரம்பிச்சது. அஞ்சு நிமிஷத்திலே கடல்லே ஒரே கொந்தளிப்பு. படகு கவிழ்ந்து போய் மூணு பேரும் தண்ணியிலே விழுந்தோம். அலைகளையும் நுரையையும் எதுத்துகிட்டு உசிரைக் கையிலே பிடிச்சுக்கிட்டு நீந்தினோம். தண்ணியிலே ஒரு கட்டை மிதந்துகிட்டு வந்தது. நாங்க மூணு பேருமே அதைப்பிடிச்சுக் கிட்டோம். என் விரல் கட்டையிடுக்கிலே ஆப்பிட்டுக்கிட்டது. உளுத்துப் போன கட்டை. நான் உடனே கையை எடுத்திட்டேன். மத்த ரெண்டு பேரும் இன்னும் கட்டையைப் பிடிச்சுக்கிட்டு மிதக்கறாங்க. எனக்கு அந்த உளுத்துப் போன கட்டையை நம்ப இஷ்டமில்லே. செத்தால் சாகறேன். பிழைச்சால் பிழைக்கறேன்னு நீஞ்ச ஆரம்பிச்சேன். கொஞ்ச நேரங்கழிச்சு கடல் அமைதியாச்சு. அதிகாலையிலே கரைக்கு வந்து சேர்ந்தேன். மத்த ரெண்டு பேரும் ரெண்டு நாள் கழிச்சு வந்தாங்க உசிரோடே இல்லே, பிணமாக. தண்ணிகுடிச்சுக் குடிச்சு அவங்க உடம்பு ஊதிக்கிடந்தது. உளுத்துப் போன கட்டையை நம்பினதுக்குப் பலன் . . . பார்லிமெண்டரி ஜனநாயகமும் அது மாதிரி உளுத்துப் போன கட்டைதான். . " பேசி முடித்தான் பீட்டர்.

அந்தோனி ஒன்றும் பேசவில்லை.

பீட்டர் சொன்னான், " ராத்திரி ரொம்ப நேரமாயிடுச்சு. கொஞ்சம் காபி கிடைக்குமா? . . ." பிறகு தானே எழுந்து கொண்டு சொன்னான், "இரு, நானே போட்டுக்கிட்டு வரேன். கீழே வேலைக்காரங்க எல்லாரும் தூங்கிக்கிட்டிருப்பாங்க. . "

பீட்டர் கீழே போனான். அந்தோனி சிந்தனையிலாழ்ந்தான். பீட்டரின் சிந்தனை இந்த வழியில் செல்வது பற்றி அவனுக்கு

இதுவரை தெரியாது. பார்க்கப்போனால் அந்தோனிதான் இந்த முறையில் சிந்தித்திருக்க வேண்டும். பீட்டர் அல்ல. அந் தோணிக்கு வியப்பாக இருந்ததது. பீட்டர் மிகவும் புரட்சிகரமாக அல்லவா பேசுகிறான் !

பார்லிமெண்டரி ஜனநாயகம் உபயோகமில்லை. மேஜை முன் அமர்ந்து பேச்சு வார்த்தை - இதெல்லாம் வெறும் சொற்சிலம் பம்தான். நாட்டின் சொத்தைக் கொள்ளையடிப்பவர்கள் தொடர்ந்து கொள்ளையடித்துக்கொண்டு தானிருக்கிறார்கள். எண்பது சதவிகித மக்களுக்கு வயிற்றில் சோறு இல்லை, சுகாதார வாழ்வு இல்லை, கல்வி இல்லை. சோஷலிச ஜனநாய கம் என்பது வெறும் பேச்சைத் தவிர வேறில்லை. . அப்புறம் ஆகட்டும், அப்பறம் ஆகட்டும்னா வயிறு கேட்குமா ? . .

அந்தோனியின் சிந்தனை இன்னும் ஆழமாகச் சென்றது. அவனுக்கு லாஸ்கியின் பேச்சு நினைவு வந்தது. ஏழை பணக் காரன் வேற்றுமை சமூகத்திலிருக்கும் வரை கொந்தளிப்பும் இருக்கத்தான் செய்யும். விரல் விட்டு எண்ணக்கூடிய மனிதர்கள் நன்றாகச் சாப்பிடுவார்கள். வாழ்க்கை வசதிகளை அனுப விப்பார்கள், நாட்டின் செல்வத்தை வீணாக்குவார்கள். . இந்த நிலைமை வெகு காலம் நீடிக்காது. மனிதன் எவ்வளவு காலம் பொறுத்திருப்பான் ! அப்போது புரட்சி வரத்தான் வரும். எப்போதும் ஒரே பக்கமாகச் சாய்ந்திருக்கும் தராசுத் தட்டைச் சரிசமனாக்கும் அந்தப்புரட்சி.

புரட்சி! . . புரட்சி என்றாலே அந்தோனியின் மனதில் சஞ் சலம். புரட்சி என்றால் குழப்பம். அடிதடி, கொலை . . எல்லாம் தலை கீழ், பயங்கர அழிவு . .

பிரெஞ்சுப் புரட்சி, ரஷ்யப் புரட்சி, சீனப்புரட்சி . . வரலாற் றின் பக்கங்கள் அந்தோனியின் மூளைக்குள் கூட்டம் போட்டன, ஒன்றோடொன்று மோதிக்கொண்டன.

பீட்டர் இரண்டு செட் டபரா டம்ளர்களில் காபி கொண்டுவந்து ஒரு செட்டை அந்தோனியிடம் கொடுத்தான். பிறகு தன் காபியை ஆற்றிக் குடித்தவாறே கேட்டான், "உன்னைப் பார்த்தால் ஏதோ சிந்தனையிலே ஆழ்ந்திருக்கே போலிருக்கே. . ."

"பார்லிமெண்டரி ஜனநாயகம் உபயோகமிலலைன்னாப் புரட்சி தான் . . " தயங்கித் தயங்கி பேசினான் அந்தோனி.

"புரட்சின்னா முழுமையான மாறுதல் . . ." அந்தோனி சொல்ல வந்ததைத் தானே சொல்லி முடித்தான் பீட்டர். "இப்போ இருக்கற அமைப்பிலே எல்லாரோட பசி, மற்றத் தேவைகள் தீரல்லேன்னா இந்த அமைப்பையே உடைக்க வேண்டியது தான் ...."

"உடைக்கறது அவ்வளவு சுலபமல்லே. யார் உடைப்பாங்க?"

"மனுசங்க தான் உடைப்பாங்க.. காட்டு மனுசன் காலத்திலே ருந்து இப்போ மனுசன் நாகரீகமாயிருக்கான். அம்மணமா யிருந்த காலம் மாறி இப்போ எவ்வளவு விதமான துணிகள், உடைகள்! மரக்கிளைக்கும் மலைக்குகைக்கும் பதிலாக இப்போ பெரிய பெரிய வீடுகள். சின்னச் சின்னக் கிராமங்களிலேருந்து இப்போ மின்சாரவசதி படைத்த பட்டணங்கள். மாட்டு வண்டி குதிரை வண்டிக்குப் பதிலாக ரயில், ஏரோப்ளேன். மனுசன் முன்னே எப்படிப்பட்ட சமூகத்திலே வசிச்சான், இப்போ எப்படி வசிக்கறான்! ஒவ்வொரு அமைப்பையும் தாண்டி அதை விட உயர்ந்த அமைப்புக்கு வர்றதுக்குப் பழைய அமைப்பை உடைச்சிருக்கானில்லையா? இப்பவும் அதையே செய்யட்டும்! இந்த சமூகத்தை உடைச்சு எரிக்கற நெருப்பு இதுக்குள்ளேயே நிரம்பியிருக்கு. ஒரே ஒரு விஷயம்! இந்த அமைப்பை உடைக்கற துக்கு முன்னாலே இது ஏன் உடையறது, ஏன் உடையணும்னு நல்லாத் தெரிஞ்சுக்கணும். இதை உடைச்சு எரிக்கற நெருப்பை யும் உணரணும். சிலபேருக்கு இந்த நெருப்பு இருக்கறது தெரி யலே. ஆனால் இது எரிஞ்சுக்கிட்டுதானிருக்கு. சிலபேர் இதைப் பார்க்க முடியலேங்கறதுக்காக இதுஇல்லவே இல்லேன்னு நினைச்சால் அது பெரிய பிசகு.."

அந்தோனி உணர்ச்சி வசப்பட்டான், பீட்டர் அவனைத் தேற்றுகிறான்! மூட்டை மூட்டையாகப் புத்தகங்கள் படித்தும், சமூகத்தில் பெரிய மனிதர்களுடன் பழகியும் இந்த ஆறுதல் கிடைக்கவில்லை அவனுக்கு.

இருந்தாலும் அவன் கேட்டான், "இதுக்காகத் தலைவன் வேண்டுமில்லையா?"

"தலைவனா?" என்று கேட்டு விட்டுக் கண்களை மூடிக் கொண்டான் பீட்டர். சற்று நேரம் காபி குடித்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு சொன்னான், "ஒவ்வொரு மனிதனும் தன் பொறுப்பை உணர்றபோது அவனே தலைவனாயிடுவான். தன் னைப் பத்தித் தம்பட்டம் அடிக்கறதாலேயோ புத்தியைக் குறுக்கு வழியிலே செலுத்தறதாலேயோ ஒருத்தன் உண்மையான தலை வனாயிடமுடியாது. மத்தமனுசங்களோட நல்லதுக்கும் கெட்டதுக்

கும் பொறுப்பைத் தானே ஒத்துக்கறவன் தான் தலைவன். இந்த சமூகமாகிய தராசோட தட்டு ரெண்டும் சமமாயிருக்கச் செய்யறது தான் அவன் வேலை. இந்த நோக்கம் நிறைவேற அவன் தன்சுகத்தை, ஓய்வை, ஏன், ராத்தூக்கத்தைக் கூட, தியாகம் செய்யணும், அமைதி, நிம்மதி, ஏன், உயிரைக் கூட அவன் இழக்கத் தயாராயிருக்கணும். . . "

"இந்த நாட்டிலே அந்தமாதிரித் தலைவன் இல்லையா?"

"எங்கே இருக்கான் ? . . . கண்ணிலே படல்லியே !"

"எப்போ வருவான் அப்படிப்பட்ட தலைவன் ?"

பீட்டர் சொன்னான், "என் சிநேகிதன் ஒருத்தன் காலேஜிலே உயிரியல் கற்றுக் கொடுக்கிறான். பரிணாம வாதத்தைப்பத்தி அவன் சொல்லியிருக்கான். ஒருவகைப் பிராணியிலிருந்து இன்னொரு வகைப் பிராணி வந்ததாம் குரங்கிலேருந்து மனிதன் வந்த மாதிரி. இப்படிப் புதுவகைப் பிராணி ரெண்டு முறையிலே தயாராச்சாம். ஒண்ணு வேகமான முறை அதாவது ஒரு சில வருஷங்களுக்குள்ளே நிகழ்வது. மற்றது மெதுவான முறை. இந்த முறையிலே முதல்லே இருக்றே பிராணியோட தோற்றம் கொஞ்சங் கொஞ்சமா மாறிப் புதிய பிராணி முற்றிலும் உருவாகப் பல லட்சம், பலகோடி வருஷங்களாகும். ஒரு சமூகத்திலே தலைவனும் இந்த மாதிரி ரெண்டு விதமா உருவாகலாம். ராவோட ராவாத் தலைவன் உருவாயிடற சமூகம் அதிருஷ்டசாலி. நம்ம சமூகத்திலே ரெண்டாவது வகையிலே தான் உண்மையான தலைவன் தோன்றுவான் போலேருக்கு. மெதுவாக மனுசன் மனம் மாறிமாறி வந்து பலவகை நிகழ்ச்சிகளோட அதிர்ச்சியால் புடமாகிப் புடமாகிக் கடைசியில் ஒரு சமயத்தில் தலைவன் தயாராயிடுவான். அதுஎப்போது நடக்கும்னு யாரும் நான் உட்பட சொல்ல முடியாது. நான் அவன் வரதுக்கான வழியைத் தயார் பண்ணி வைக்கறேன். இப்போ இதுதான் என் வேலை . . ."

"எப்படி வழியைத் தயார் பண்ணுவே ?"

" சில பேர் வெறும் பேச்சாலேயே புரட்சியைக் கொண்டு வரப்பார்க்கறங்க. கோஷம் போடறங்க - 'இன்குலாப் ஜிந்தாபாத் 'புரட்சி வாழ்க!" . . இன்னும் பிறக்காத புரட்சியை வாழச்

சொல் றதும் இன்னும் பிறக்காத குழந்தைக்கு ஆசியளிக்கறதும் ஒண்ணுதான். புரட்சிங்கறது பொம்மலாட்ட யுத்தம் இல்லே. பூகம்பம் ஏற்படறதுன்னா அதுக்கு ரொம்ப காலம் முன்னா லிருந்தே அதுக்கான ஏற்பாடு மண்ணுக்குள்ளே நடந்துக்கிட்டி ருக்கும். பயங்கரமான சூட்டிலே எரிவாயு, உலோகம், தண்ணி, மண் எல்லாம் ஒண்ணாக் கலந்து ஒரு சாந்து தயாராகும். அந்தச் சாந்து உடைஞ்சு சிதர்றபோது பயங்கர அழுத்தம் பிறக்கும். தாங்க முடியாத அழுத்தம். அந்த அழுத்தம் பீறிட்டுக்கிட்டு வெளியே கிளம்பற போது நாம பூகம்பத்தோட அதிர்வை உணர்றோம்.... நம்ம சமூகத்துக்கீழ் மட்டத்து உழவங்க, கூலிக்காரங்க, மீனவங்க, பாட்டாளி ஜனங்க–இவங்க தான் புரட்சிக்குக் கச்சாப் பொருள். இவங்களுக்குச் சூடேத்தணும். புத்தகம் படிச்சு விவாதம் செய்வதாலே புரட்சி வந்துடாது. எல்லாரும் மண்ணிலே இறங்கி வரணும் - வயலுக்கு, பண் ணைக்கு, ஆத்துக்கு, கடலுக்கு, தொழிற்சாலைக்கு வரணும். அங்கே உழைக்கிற ஜனங்களோட இருந்துக்கிட்டு அவங்களோட சுக துக்கங்களைப் பங்கு போட்டுக்கணும் - அவங்ககிட்டே இரக்கம்காட்டி இல்லே, அவங்க மேலே நாட்டாமை பண்ணி இல்லே, அவங்களோடே ஒண்ணா இருந்துக்கிட்டு. அவங்க கிட்டே கத்துக்கணும், அவங்களுக்குக் கத்துக் கொடுக்கணும். தலைவனாக ஆகிறவன் தன் உசிரைப் பணயம் வைச்சு அவங்களுக்கு வழிகாட்டணும். ஆபத்து வந்தால் அவங்களைக் காப்பாத்தணும். அவன் படகுச்சுக்கானைப் பிடிச்சிருக்கற மாலுமி போல. புயல்லேயும் சுழல் காத்திலேயும் அவனோட கை நடுங்காது, மனசு சலனப்படாது . . "

மணி டாண் டாண் என்று மூன்று அடித்தது. இரவு முடியப் போகிறது.

"அந்தோனி, கடலுக்கு வரியா?"

அந்தோனி இணங்கினான் - "வா, போகலாம்". . .

☆ ☆ ☆

வடகிழக்குத் திசையில் தொடர்ந்தாற்போல் ஒரு மணிநேரப் பயணம். கடலுக்கு மேல் பரவியிருந்த கும்மிருட்டு இப்போது வெளிறிப்போய்விட்டது. அக்கம் பக்கத்தில் கடற்கொக்குகளின் கூவல். கிழக்கு வானம் சற்றே வெளுத்துவிட்டது. காற்று மெல்ல வீசியது. அந்தோனியின் மனதில் ஓர் அபூர்வ உணர்வு...

இதுவரை அந்தோனி படகுக்குக் கீழே அலைகள் மோதும் தணிவான ஒலியையே கேட்டுக் கொண்டு வந்தான். படகின்மேல் பீட்டர் சிலைபோல் அமர்ந்திருக்கிறான். ஐந்து இளைஞர்களும் சாவி கொடுத்த பொம்மைகள் போல் துடுப்பு வலிக்கிறார்கள். திடீரென்று மனிதக்குரல் கேட்டது. பக்கத்தில் மனிதர்கள் பேசும் அரவம் காற்றுவாக்கில் மிதந்து வருகிறது.

மங்கிய இருட்டில் இங்குமங்கும் நிறையப் படகுகளைப் பார்த்தான் அந்தோணி. அவை அலைகளின் மேல் மெதுவாக ஆடிக்கொண்டிருந்தன. கடல் அமைதியாக இருந்தது. படகுகள் ஓரிடத்தில் நின்று கொண்டிருந்தன. அவை நங்கூரம் போட்டிருக்க வேண்டும்.

பீட்டரின் படகு இன்னொரு படகை நெருங்கியது. இப்போது முகத்தை அடையாளங்கண்டு கொள்ளுமளவுக்கு வெளிச்சம் வந்துவிட்டது. பீட்டர் குரல் கொடுத்தான்–'நிக்கொலஸ் பெரியப்பாவா?'

"யாரு, பீட்டரா? வா, வா...." பீட்டரின் படகுக்கருகில் தன் படகில் நின்றான் ஒரு கிழவன். அவனது இடுப்பில் ஓர் அரைஞாண் கயிறும் அதில் ஒரு கோவணமும் தவிர வேறு துணி எதுவுமில்லை அவனுடைய உடம்பில். "உன்னோடே ஒரு முக்கியமான விசயம் பேசணும் என் படகுக்கு வாயேன்..."

பீட்டர் மைக்கேலைப் படகை எடுத்துக் கொண்டுபோகச் சொல்லி விட்டுத் தான் அந்தோனியுடன் நிக்கொலஸின் படகில் ஏறினான். மைக்கேல் படகைத் தெற்குப்பக்கம் ஓட்டிக்கொண்டு போனான்.

கிழக்கு வானத்தில் செக்கச்செவேர் சூரியன். வானம் துடைத்து விட்டாற் போலப் பளபளத்தது.

"வா, வா...நீ நல்ல நாளிலே வந்திருக்கே...நான் என் பேரனுக்குச் சங்கு வயல் காண்பிக்கப் போறேன். பிரான்சிஸ், இங்கே வா, பீட்டர் கிட்டே ஆசீர்வாதம் வாங்கு...."

படகின் முன் பகுதியில் பதினைந்து பதினாறு வயதுப் பையன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். இன்னும் மீசை கூடச்சரியாக

அரும்பவில்லை. பனைமாதிரி உயரம். நல்ல உடற்கட்டு. நல்ல ஜாதிக் குதிரைக்குட்டி மாதிரி. அவன் எழுந்து வந்து பீட்டருக்கு முன்னால் மண்டியிட்டு உட்கார்ந்தான்.

நிக்கொலஸ் அந்தோனி பக்கம் திரும்பிப் பார்த்து விட்டுப் பீட்டரைக் கேட்டான், "இவர் யாரு?"

அந்தோனி நிக்கொலஸை நன்றாகப் பார்த்தான். நிக்கொலஸின் உடம்பு வைரம்பாய்ந்த கருங்காலிக் கட்டையாலான தடி மாதிரி விறைப்பாக இருந்தது. தலைமுடி முற்றிலும் வெள்ளை. முகத்தில் சிலந்திவலைபோல் எண்ணற்ற கோடுகள். நிக்கொலஸுக்கு வயதாகிவிட்டது என்பதற்கு இதுதான் அடையாளம்.

"இதுதான் அந்தோனி. காட்வின் சித்தாப்பாவோட பிள்ளை..."

காட்வினின் பெயரைக் கேட்டதும் நிக்கொலஸ் உணர்ச்சிவசப்பட்டான் "நீங்க எவ்வளவு பெரியமனுசரோட பிள்ளை!..."

"என்னை 'நீங்க' ன்னு சொல்லாதீங்க, பெரியப்பா! உங்களுக்குப் பீட்டர் எப்படியோ அப்படி தான் நானும்...என்னை 'நீ' ன்னே கூப்பிடுங்க".

"நான் உன் அப்பாவைவிடப் பத்து வயசு பெரியவன். ஆனால் நீ ரொம்பப் படிச்சவன். எப்படி உன்னை 'நீ' ன்னு கூப்பிடுவேன்?... இப்போ பெரியவனாயிட்டே...கடல்லே நீஏன்..."

"நம்ம ஜனங்களைத் தெரிஞ்சுக்க வேண்டாமா?" பீட்டர் சொன்னான்.

"வாஸ்தவந்தான், வாஸ்தவந்தான்..." என்றான் நிக்கொலஸ்.

படகில் நிக்கொலஸின் இரண்டு பிள்ளைகளும் பெரியவன் ஹாரி, சிறியவன் ஜெர்ரி இருந்தார்கள்.

"அப்பா அந்தோனி, நீயும் பிரான்சிஸை ஆசீர்வாதம் பண்ணு... வா, பிரான்சிஸ், நாம இறங்கலாம்..."

கடல் நீர் நீலமாயிருக்கிறது. தொலைவில் இங்குமங்கும் பல படகுகள், நீர்மூழ்கிகள் தண்ணீரில் இறங்கத் தொடங்கிவிட்டனர். ஹாரி அவர்களைப் பார்த்துவிட்டுச் சொன்னான், "இங்கே இறங்க வேண்டாம், அப்பா. இன்னுங்கொஞ்சம் வடக்கே போகலாம்-தடக்கல்பாடு புதுப்பார் அல்லது மெலன்பாட்டுக்குப் போகலாம். ஆதம்பாடு அல்லது தாண்டுமுக்குப் போனாலும் நல்ல சங்கு கிடைக்கும்..."

"இருந்தால் இருக்கட்டும்!..." அதட்டுவதுபோல் பேசினான் நிக்கொலஸ். அவனுடைய புருவங்கள் சுருங்கின. "புது இடத்துக்குப் போய் அங்கேயிருக்கற ஜனங்களோடே சண்டை போட என்னாலே முடியாது..."

"அதுக்கில்லே..." என்று ஏதோ சொல்லத் தொடங்கிய ஹாரி மௌனமாகி விட்டான். என்ன இருந்தாலும் தந்தை குடும்பத் தலைவன். அவனுடைய விருப்பத்துக்கு எதிராகப் பேச ஹாரிக்குத் துணிவு வரவில்லை.

"பிரான்சிஸ், இங்கே வா. இங்கே கிழக்கே பார்த்து நின்னுக்கிட்டு சூரியனைக்கும்பிடு...இந்த மாதிரி..." கிழவன் கைகளைக் கூப்பிப் பேரனுக்குக் கும்பிடக் கற்றுக் கொடுத்தான்." அப்புறம் குழந்தை ஏசுவை மடியிலே வச்சுக்கிட்டு இருக்கிற மேரிமாதாவை நினைச்சுக் கும்பிடு. பிரார்த்தனை பண்ணு- 'அம்மா மேரி, நீ என்னை ஆபத்திலேருந்து, சுறாமீன் வாயிலேருந்து, புயல்லேருந்து காப்பாத்து...நீ தான் எனக்குத் துணை'ன்னு சொல்லு..."

பிரான்சிஸ் தாத்தா கூறியபடி செய்தான்.

"இப்போ ஒரு கை தண்ணி எடுத்து ஆகாசத்தைப் பார்த்துக்கிட்டுக் கீழே விடு . . ."

படகில் பல கயிறுகள் இருந்தன. சில கயிறுகளின் ஒரு முனையில் ஒரு கல் கட்டப்பட்டிருந்தது, இன்னொரு முனையில் ஒரு சுருக்கு, தாத்தா பேரனின் இடுப்பில் ஒரு கயிற்றைக் கட்டினான். ஹாரி தன் தந்தை, தன் பிள்ளை இருவர் இடுப்பிலும் இரண்டு கம்பிக் கூண்டுகளைக் கட்டிவிட்டான்.

'இந்த மாதிரி மூக்கை அழுத்து மூடிக்கோ ! திறக்கவே கூடாது !"

தாத்தாவும் பேரனும் இரண்டு கயிறுகளின் சுருக்குகளில் தங்கள் வலது பாதங்களை நுழைத்துக் கொண்டு தண்ணீருக்குள் மூழ்கினார்கள்.

வெயில் கடல் நீரில் சாய்வாக விழுகிறது. ஒளிக்கதிர்கள் நீல நீருக்குள் துடைப்பத்தின் குச்சிகள் போல் போயிருக்கின்றன. நீர்ப்பரப்புக்குக் கீழே அவை சற்று வளைந்திருக்கின்றன. தாத்தாவும் பேரனும் தண்ணீருக்குள் போவதை அந்தோனி பார்த்தான். சற்று நேரத்துக்குப் பின் நீர்ப்பரப்பு அமைதியாகி விட்டது -அங்கு எதுவுமே நிகழவில்லை என்பது போல்.

ஹாரியும் ஜெர்ரியும் தாத்தாவையும் பேரனையும் கட்டியிருந்த கயிறுகளின் மற்ற நுனிகளைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். நீர்க்குமிழிகள் மறையுமுன்னரே அவர்கள் கயிறுகளை இழுக்கத்

தொடங்கினார்கள். அந்தோனியின் மனது சங்கடப்படுகிறது. அவனுக்கு மூச்சுத் திணறுவது போலிருக்கிறது. ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாகக்க கழிகிறது. அவன் துடிக்கிறான். ஏன் என்று அவனுக்கே சொல்லத் தெரியவில்லை.

தாத்தாவும் பேரனும் மேலே வருகிறார்கள். நிக்கொலஸ் கையால் முகத்துத் தண்ணீரை வழிக்கிறான். பிரான்சிஸ் கொப்பளிக்கும் தண்ணீர் திமிங்கிலக் குஞ்சிலிருந்து கிளம்பும் ஊற்றுப் போல் வெளி வருகிறது.

தாத்தாவும் பேரனும் படகிலேறிவிட்டார்கள். கிழவனிடமிருந்த கூண்டில் ஒரு வெள்ளை மீன் இன்னும் துடிக்கிறது. இன்னும் ஏதோ ஒரு பொருளும் இருக்கிறது. அதே போல் இரண்டு பேரனின் கூண்டிலும் - பெரிய பெரிய ஆமை மாதிரி. அவற்றைப் பாசியும் சின்னஞ்சிறு செடிகளும் அடர்த்தியாக மூடியிருக்கின்றன.

"இதெல்லாம் என்ன?" அந்தோனி கேட்டான்.

"இது தான் சங்கு" பீட்டர் சொன்னான்.

இப்போது ஹாரியும் ஜெர்ரியும் முழுகினார்கள். அவர்கள் கட்டிக் கொண்டிருந்த கயிறுகளின் மறுமுனைகளைத் தாத்தாவும் பேரனும் பிடித்துக் கொண்டார்கள்.

முழுகுவது ... மேலே வருவது . . . கொஞ்ச நேரம் இளைப்பாறுவது . . மறுபடி முழுக்கு . . .

அந்தோனி ஒரு சங்கைக் கையிலெடுத்துப் பார்த்தான். உயிருள்ள சங்கு. அதன் அடிப்புறத்தில் மிருவான தசை, மேல் பக்கம் இறுகியிருக்கிறது. சிறுபையன் போல் அதை ஆவலுடன் பார்த்தான் அந்தோனி. வங்காளி இந்து வீடுகளில் ஒவ்வொரு அந்தி நேரத்திலும் இந்தச் சங்கு ஒலிக்கும். விழா, பூஜை போன்ற மங்கல வேளைகளிலெல்லாம் சங்கு ஊதுவார்கள். உருவத்தில் வாழைப்பூ போல, நல்ல வெளுப்பு நிறமாக இருக்கிறது சங்கு. அதன் உடலெங்கும் வளைவுகள் . . .

"இங்கேயும் சங்கு ஊதுவோம், ஆனால் அமங்கலமான சூழ்நிலையில். சவத்தைத் தூக்கிக்கிட்டு போகும் போது சங்கு ஊதுவாங்க . . . " பீட்டர் சொன்னான். "நீ தான் கல்கத்தாவிலே இருந்திருக்கியே . . வங்காளிப் பெண்கள் கையிலே சங்கு வளையல் போட்டிருப்பாங்களே."

அந்தோனிக்கு ஆம்மியின் நினைவு வந்தது. கொழு கொழு என்று இருப்பாள் - துர்க்கையின் சிலை மாதிரி. நல்ல மஞ்சள் நிறம். நீண்ட கண்கள். ஒல்லியுமில்லை, பருமனுமில்லை. வகிட்டில் செக்கச் செவேலென்று சிந்தூரப் பொட்டு. ஒவ்வொரு

கையிலும் ஒரு ஜோடி சங்குவளையல் மங்கலத்தின் சின்னம். தூத்துக்குடியிலிருந்து ஆபத்தான நிலையில் அந்தோனியை அழைத்து வந்து ஆம்மியின் மடியில் போட்டு விட்டு மாமா ஓடினவர் ஓடினவர்தான். அதற்குப் பின் அவரைக் காணோம். ஆனால் ஆம்மி மட்டும் சங்கு வளையலும் சிந்தூரப் பொட்டும் அணிந்துகொண்டுதானிருந்தாள்.

"இதுக்கு உசிர் இருக்கா ?" அந்தோனி சங்கைத் திருப்பிப் பார்த்துக்கொண்டே கேட்டான்.

"இருக்கே ! . . . கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே கூட கடல் மணல்லே தும்பிக்கையை நீட்டிக்கிட்டு அலைஞ்சுக்கிட்டிருந்தது" என்று பிரான்சிஸ் சிரித்துக் கொண்டே சொன்னான்.

"இப்போ அழுக்கா, கறைபடிஞ்சு இருக்கு . . . தேய்ச்சுப் பாலிஷ் பண்ணினா உறைஞ்ச தயிர் மாதிரி பளபளப்பாயிடும்" . . நிக்கொலஸ் சொன்னான்.

பீட்டர் சொன்னான், "வங்காளம் எங்கே இருக்கு, தூத்துக்குடி எங்கே இருக்கு ! . . . ஆயிரம் வருசமாத் தூத்துக்குடியிலேருந்து வங்காளத்துக்குச் சங்கு போறது. ரோட்ரிகோ சொல்லியிருக்கார் எனக்கு. வங்காளத்திலே மட்டுந்தான் சங்கு விலைபோகுது. வங்காளித் தொழிலாளிகளுக்குத்தான் சங்கிலே நகைகள் செய்யத் தெரியும். . .

வெயில் கடுமையாகிவிட்டது. கடல் நீர் மெதுவாக அசைகிறது. கூடவே படகும் அசைகிறது. ஹாரியும் ஜெர்ரியும் இப்போது படகில்சற்று இளைப்பாறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய உடல்களிலிருந்து நீர் சொட்டுகிறது. கரும்பாறாங்கல் போல் உறுதியாக ஈர உடல்கள் வெயிலில் பளபளக்கின்றன. பிரான்சிஸ் காபி தயாரிக்கிறான்.

அந்தோனி அவர்களைப் பரவசத்தோடு பார்க்கிறான்... இரும்புக் கவசம், இரும்புத்தொப்பி, முதுகில் பிராணவாயுப் பொட்டி, முகமூடியணிந்த முகத்தில் மூக்கோடு பொருத்தப்பட்ட குழாய் இவற்றுடன் நீர்மூழ்கிகள் சிலரை அந்தோனி பார்திருக்கிறான். ஆனால் இவர்கள் வெறுங்கோவணங்கட்டிய ஆதி மனிதர்கள். சும்மா மூக்கைப் பிடித்துக் கொண்டு தண்ணீருக்குக் கீழே அறுபது அறுபத்தைந்துஅடி ஆழத்துக்குப் போய் விடுகிறார்கள். கொஞ்சமும் பயமில்லை, சுறாபோன்ற பயங்கர ஜந்துக்களைப் பற்றியகவலை இல்லை. இவர்கள் தாம் மன்னார்க்கரை மீன் பறவர்கள், அந்தோனியின் இனத்தவர். அவன் இவ்வளவு காலம் இவர்களைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. அவன் இதுவரை பார்த்ததெல்லாம் இந்த ஊரின்

பெரிய மனிதர்களைத்தான். அவர்களும் இவர்களும் ஒரே இனத்தவர்தான். ஆனால் இருவகை மனிதர்களிடையே எவ்வளவு வித்தியாசம்! . . .

மோஸஸ் சித்தப்பா சொல்வது சரிதான்.

"கல்லைக் காலிலே கட்டிக்கிட்டா சீக்கிரம் ஆழத்துக்குப் போயிடலாமா?" அந்தோனி கேட்டான்.

நிக்கொலஸ் பதில் சொன்னான், "நிச்சயமா!" ஒரு நொடியிலே அடியிலே போயிடலாம். ஆனால் ஒண்ணு என்ன ஆனாலும் மூக்கை அழுத்திப் பிடிச்சுக்கிட்டுருக்கணும். கையை எடுத்துட்டா உசிரு போயிடும்! . . . ."

"கையை எடுத்துட்டா என்ன ஆகும்?" சிறுபிள்ளைபோல் அந்தோனி கேட்டான்.

"அடேயப்பா! . . . நீ கீழே இறங்கிட்டா உன் தலைக்கு மேலேயும் நாலு பக்கமும் தண்ணியோட அழுத்தம் பயங்கரமாயிருக்கும். மூக்கிலேருந்து கையை எடுத்துட்டா, தண்ணி மூக்கு வழியே உடம்புக்குள்ளே போய் ஒரு தள்ளு தள்ளுமே பார்க்கலாம் தலைக்குள்ளே பூகமபம் ஏற்படும். மூளை சிதறிப் போகும். நாடி நரம்பு, காது ஜவ்வு எல்லாம் பிய்ஞ்சு போகும். ரத்தம் பீச்சியடிக்கும் வெளியிலே... கடல் தண்ணி சிவப்பாயிடும்... மேரியும் ஏசுவும் வந்தாலும் உன்னைக் காப்பாத்த முடியாது...'

இரண்டு வாய்காப்பி அருந்திவிட்டுப் பேச்சைத் தொடர்ந்தான் நிக்கொலஸ் ஒரு தடவை என்ன ஆச்சு தெரியுமா? . . அப்போ எனக்கு வயசு பத்தொம்பது இருபது இருக்கும். நல்ல உடல்கட்டு. என்னோட நுரையீரல் குதிரையோடது மாதிரி உறுதியாயிருக்கும். அப்பா எனக்குத் தண்ணியிலே முழுகக் கத்துக் கொடுத்துக்கிட்டிருந்தார். முதல் தடவை முப்பது முழ ஆழத் தண்ணியிலே முழுகினேன். கிர்ருனு கீழே போயிட்டேன். ரொம்ப மஜாவா இருந்தது. என்னையறியாமே மூக்கிலேருந்து கையை எடுத்துட்டேன். அவ்வளவுதான்! தலைக்குள்ளே இடியிடிச்ச மாதிரி இருந்தது. காதுக்குள்ளே மண் வெட்டியாலே இடிக்கற உணர்வு. உடனே நான் காலை உதறிக்கிட்டு மேலே வந்துட்டேன்.

"தலையிலேயும் காதிலேயும் பயங்கர வலி. யாரோ தலை மேலே இருபது மணுப் பாறங்கல்லை வைச்ச மாதிரி இருந்தது... ஆனால் என்னோட அப்பா ரொம்பக் கடுமையான ஆள். 'வலிச்சால் வலிக்கட்டும்! மறுபடியும் முழுகு. முழுகினாச் சரியாயிடும்....'' அப்பமுன்னுட்டார். முழுகினேன். ஆனால் தாக்குப் பிடிக்க முடியலே. மேலே வந்துட்டேன். அப்போ எல்லாம்

இப்போ இருக்கற மாதிரி டாக்டரும் இல்லே. ஆசுபத்திரியும் இல்லே. ஏதாவது வியாதி வந்தால் கை வைத்தியந்தான். இல் லேன்னா சாக வேண்டியது தான்... அப்போ இங்கே குவெய்த் நாட்டைச் சேர்ந்த அரபு நீர் மூழ்கி ஒருத்தன் இருந்தான். அவனுக்கு என் மேலே ரொம்பப் பிரியம். எஃகு மாதிரி இருக்கும் அவன் உடம்பு. அவன் என்னை அவனோட வீட்டுக்குக் கூட்டிக் கிட்டுப்போனான்.

"அங்கே போய் அவன் என் பின் தலையை முழுக்கச் சிரைச்சு விட்டான். பிறகு தலையும் முண்டமும் சேர்ற இடத்திலே கொஞ்சம் கீறிவிட்டான். கீறின இடத்திலே உள்ளே ஓட்டையான மாட்டுக் கொம்பு ஒண்ணைச் சொருகி அது பொருந்தின இடத்திலே மெழுகைத் தடவி நல்லா அடைச்சான். அப்பறம் கொம்போட மறு முனையிலே வாயை வச்சு உறிஞ்சினான். அப்பா, என்னமா உறிஞ்சினான்! அரை மணி நேரம் உறிஞ்சி அப்பறம் வாயை எடுத்துத் துப்பினான். கறுப்புக் கறுப்பா ரத்தம் கொட்டியது வாயிலேருந்து... அப்பறம் கொம்பை எடுத்துட்டுச் சொன்னான் 'போ, பிழைச்சுட்டே நீ! கெட்ட ரத்த மெல்லாம் வெளியே வந்திருச்சு".

"பிறகு கீறின இடத்தைத் தடவி அதிலே ஏதோ பொடியை வைச்சு அமுக்கினான். ரத்தம் வர்றது நின்றுபோச்சு. அந்த இடம் ரொட்டி மாதிரி வீங்கிப் போச்சு. அந்த வீக்கம் கொஞ்ச நாள் இருந்தது. பெரிய முண்டாசு ஒண்ணு கட்டிக்கிட்டு அந்த வீக்கத்தை மறைப்பேன். அந்த வீக்கத்தோடேயே கடல்லே மறுபடி முழுகினேன். அப்பவும் தலைமேலே இருபது மணுக் கல்லோட பாரம் இருந்தது ..

"முழுகினதும் தலையிலே ஒரே வலி. வலிதாங்காமே தண் ணிக்குள்ளேயே தலையிலே குத்து விட்டேன். உடனே தண்ணி யிலே ரத்தம். மூக்கிலேருந்து ரத்தம் கொட்டறது. சுறா மீனுக்குப் பயந்துக்கிட்டு உடனே மேலே வந்துட்டேன். ரத்தம் கொஞ்சம் வெளியேறினப்பறம் தலை லேசாச்சு. வலியும் குறைஞ்சுது!. பிழைச்சுட்டேன்..."

"பெரியப்பா, இதைப் பார்த்தால் பிசு பிசுன்னு அவலட் சணமா இருக்கு. இது எப்படி அழகா ஆகும்?. உனக்குத் தான் தெரியுமே..." என்றான் பீட்டர்.

"முதல்லே இதை சிமிட்டியைப் போட்டுத் தேய்க்கணும். தேய்ச்சா இந்தப் பாசியெல்லாம் போயிடும். அப்பறம சிலேட்டுத் துண்டாலே இதைத் தேய்க்கணும். அப்பறம் ஒரு மஞ்சள் பசை இருக்கு - கார்பைடுன்னு பேரு. இப்பல்லாம் பெண்பிள்ளைகள்

ரஞ்சியிலே பூசிக்கறாங்களே அது மாதிரி அந்தப் பசையைச் சங்கு மேலே தடவி வெயில்ல கொஞ்ச நேரம் காய வைக்கணும். அப்புறம் அதை சோப்புத் தண்ணியிலே கழுவிட்டு அது மேலே 'ரூஷ்' தடவணும். பிறகு எண்ணெய் தடவின குரோம் தோலாலே அழுத்தித் தேய்க்கணும். தேய்ச்சுத் தேய்ச்சுக் கை வலி எடுக்கும். ஆனால் தேய்க்கத் தேய்க்கச் சங்கு வெளுப்பாகும், பள பளப்பாகும் . . ."

"அப்படியானால் சங்குக்கு ஜோடனை குறைச்சலில்லே" சிரித்துக்கொண்டே சொன்னான் பீட்டர்.

"இருக்காதா பின்னே! பெண்டுகள் கைக்கு அழகு கொடுக்குது. ஆண்கள் பார்த்துப் பூரிச்சுப் போறாங்க. அதுக்கு இவ்வளவு பணிவிடை பண்ண வேண்டாமா ?" ஹோ ஹோ வென்று சிரித்தான் கிழவன். அவனுடைய பற்களில் ஒன்று கூட விழவில்லை என்பதை அந்தோனி கவனித்தான்.

"என்னோட முக்கியமா ஏதோ பேசணும்னு சொன்னியே . . ." பீட்டர்கேட்டான்.

அப்போது ஹாரியும் ஜெர்ரியும் முழுகத் தொடங்கியிருந் தார்கள். நிக்கொலஸும் பிரான்சிஸும் கயிறுகளைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

கிழவன் அந்தோனியின் பக்கம் திரும்பிப்பார்த்து விட்டுத் தயங்கினான். அந்தோனிக்கும் சங்கட மாயிருந்தது.

பீட்டர் சொன்னான், "அந்தோனி கேட்டால் பரவாயில்லை, பெரியப்பா. நீ சும்மா சொல்லு!"

சுமார் இருநூறு கஜத் தொலைவில் ஒரு படகு நின்றுகொண் டிருந்தது. அதிலிருந்த இளைஞன் ஒருவன் உரக்கக் கூவினான், "நகரு, நகரு! நாங்க இங்கே வலை போடப்போறோம்..."

"கேட்டியா, பீட்டர்?" கிழவனின் குரலில் கவலை.

"ஓ, அது அருள் ஃபெர்னாண்டோவோட பிள்ளைகளோட பிச்சையா, சூச்சையாவோட படகுன்னா!..."

"ஆமா...அவங்க கொஞ்ச நாளா ரொம்பத்தொந்தரவு பண் றாங்க. ஹாரி இங்கேயிருந்து போயிடலாம்னு சொன்னானே, அதுக்கு இவங்களும் ஒரு காரணம்...

அந்தப் படகில் ஒரிளைஞன் அசிங்கமாக உடம்பையாட்டிக் கொண்டு உரத்தகுரலில் பாடினான், "உன் குழந்தையை நான் கெடுத்தால் நான் உனக்கே மருமகனடி!"

"என்ன பாடடுப்பாடறான், கேட்டியா? எப்படி அசிங்கமா ஆடறான் பாரு! இதெல்லாம் என்னைக் கிளப்பி விடறதுக்காக, என்னை அவமானப் படுத்தறதுக்காக.. எனக்குக் கோபம்

வந்தால் அவங்களுக்குக் கொண்டாட்டம். ஏன்னா சண்டை வரும். குத்தத்தை எங்க மேலே போட்டுடலாம். என்கிட்டே விளையாடற அளவுக்குத் தைரியம்...."

"இருக்காதா பின்னே? அவங்களுக்கு ஆதரவாயிருக்காங்க கார்தோஸா அண்ணன் தம்பி...."

"அது எல்லாருக்கும் தெரியும். அதனாலேதான் எல்லாரும் அவங்கிட்டே இவ்வளவு மரியாதையா இருக்காங்க...என் காலம் அநேகமாக் கழிஞ்சுடுச்சு. இன்னும் கொஞ்சகாலம்தான் பாக்கி. நான ஏன் இவங்களுக்கு அடங்கி நடக்கணும்?...."

"எல்லாரும் அவங்களை மதிக்கறது பயத்தாலேதான், தெரியு மோல்லியோ?" பீட்டர் கேட்டான்.

"தெரியும். தெரியும்...ஆனால் நான் ஏன் பயப்படணும்? என் பிள்ளைகள் அவங்க வழிக்கே போறதில்லே. நான் கார் தோஸாக்கள் கிட்டே கடன் வாங்கலே. உன் அப்பா என்னோட ரொம்ப நெருக்கமான சிநேகிதன் நாங்க ரெண்டு பேரும் ஒண் ணாப் படகிலே போய் மீன் பிடிச்சிருக்கோம். அந்த ராஸ்கல் தரகங்களை விரட்டியிருக்கோம். மீனவச் சேரியிலே எல்லாரும் ஒண்ணு சேர்ந்துக்கிட்டு மீன் பிடிக்கப் போறதை நிறுத்திக்கிட்ட போது நானும் உன் அப்பாவும் சேரியிலே வீடுவீடா அலைஞ் சிருக்கோம். உன்னோட அப்பா என் சிநேகிதன் மட்டுமில்லே, என் குரு கூட. அவனைக் கொன்னுட்டாங்க!..."

நிக்கொலஸின் தொண்டையடைத்துக் கொண்டது அவன் மௌனமானான். பீட்டரும் ஒன்றும் பேசவில்லை. அந்தோனி அவர்களிருவரையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

நிக்கொலஸ் தொடர்ந்தான், "அந்தக் கொலைக்குப் பழி வாங்க என்னாலே முடியலே. ஆனால் அதுக்காக அவங்களை மன்னிக்கவுமில்லே நான் " அவன் தன் நெற்றி வியர்வையைத் துடைத்துக்கொண்டான்.

கடும் வெயில் தலைமேல் தணலைக் கொட்டியது. ஆனால் அந்தோனி அந்த வெயிலைப் பொருட்படுத்தவில்லை அவன் அந்தப் பரந்த நீர் வெளியில ஒரு புதிய வாழ்க்கை முறையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

நண்பகல் சாப்பாட்டு நேரம் வந்துவிட்டது. நிக்கொலஸின் பிள்ளைகள் படகின் மேலேறி வந்தார்கள் பிரான்சிஸ் படகின் கீழ்ப்பகுதியிலிருந்து மண் சட்டிகளையும் தட்டுகளையும் எடுத்து வந்தான். சட்டிகளில் கஞ்சியும் பழைய சோறும் இருந்தன. தொட்டுக் கொள்ள மீன், சீனி சாம்பார், பச்சை மிளகாய், உப்பு.

எல்லோருடனும் சேர்ந்து அந்தோனியும் சாப்பிட்டான். சாப்பிடும்போது உரையாடலும் தொடர்ந்தது.

☆ ☆ ☆

அந்தோனிக்கு முன்னால் நிகழ்ச்சிகளின் ஊர்வலம். பீட்டர் இரண்டாண்டுகளாக ஊரில் இல்லை. நிக்கொலஸ் இந்த சமயத்து நிகழ்ச்சிகளைப் பீட்டருக்குச் சொல்லும்போது பழைய கால நிகழ்ச்சிகளையும் நினைவு கூர்கிறான்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தொன்பது நாற்பதாம் ஆண்டுகள். பிரிட்டிஷ் ஆட்சிக்காலம். மன்னாரின் சங்கு வயல் சர்க்கார் சொத்து. சங்கு, முத்து எடுக்கும் உரிமை மட்டும்தான் மீன் பறவர்களுக்கு. ஒரு சங்கு எடுத்தால் கூலி ஓரணா. முத்துக்குத் தனிக் கூலி.

சுறாக்கொல்லி மோஸஸ்தான் இந்த ஏற்பாட்டை எதிர்த்தான். கஷ்டமான வேலை, ஆபத்துவேறு. இதற்கு ஓரணாதான் கூலியா! கூலியை உயர்த்து!...அவன் மற்ற பறவர்களுடன் சேர்ந்து மீன வளத்துறைக்கு மனுப்போட்டான். இலாகா இயக்குநர் ஹார்னெல் துரை இரக்கமுள்ளவர். அப்படியும் மோஸஸுடன் பேரம் நடந்தது. கடைசியில் சங்குக்கு ஓரணா ஒரு பைசா என்று முடிவாயிற்று. பூச்சிபிடித்த சங்குகளும் மிகச்சிறிய சங்குகளும் கணக்கில் சேரா.

நாற்பத்திரண்டு நாற்பத்துமூன்றாம் ஆண்டுகளில் அரிசி விலை ஏறிவிட்டது. ஏழைமக்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். வங்காளத்தில் பெரும் பஞ்சம். மீனவர் மறுபடி கூலியை உயர்த்த விண்ணப்பம் செய்தார்கள். நாற்பத்தி நான்காம் ஆண்டில் கூலி ஒன்றரையணாவாக உயர்ந்தது. ஆனால் அதுவும் போதவில்லை. கத்தோலிக்க மீனவர்களுக்கு நிறையக் குழந்தைகுட்டிகள். ஒரு மனிதன் அதிக பட்சம் பத்துத் தடவை முழுக முடியும் ஒரு நாளில். அவன் எடுக்கும் சங்குகளில் பூச்சிபிடித்தவற்றையும் சிறுசங்குகளையும் தள்ளிவிட்டால் பத்து அல்லது பன்னிரண்டு நல்ல சங்குகள் தான் தேறும். ஆயிரத்தில ஒருவனால்தான் இருபத்தைந்து முப்பது சங்குகள் எடுக்க முடியும்.

நாற்பத்தி ஆறாம் ஆண்டில் சர்க்கார் கூலியை ஒன்றே முக்காலணாவாக உயர்த்தியது. அப்படியும் மீனவர்களுக்கு வயிறு

நிறையச் சோறு கிடைக்கவில்லை. அரிசிவிலை ஏறிக்கொண் டேயிருந்தது. அத்துடன் பருப்பு, புளி, மசாலா சாமான்களின் விலையும்தான். ஒரு வேஷ்டி வாங்குவதற்குள் நாக்குத் தள்ளிப் போகும். புடைவையைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்!

நாற்பத்தியேழில் நாடு விடுதலையடைந்தது. இதுவரை ஆட்சி செலுத்திய அன்னியன் நாட்டின் செல்வத்தைச் சுரண்டியவன் கப்பலேறி விட்டான். இனி நல்ல காலம் பிறக்கும்-சாமான்களின விலை குறையும் என்று எதிர்ப்பார்த்தார்கள் ஏழை மக்கள். ஆனால் நடந்தது வேறு. சாமான்கள் விலை ஏறிக் கொண் டேயிருந்தது.

சுதேசி அரசாங்கம் சொல்லியது "கொஞ்சம் பொறுங்க. நாங்க எல்லாத்தையும் சரிபண்ணிடறோம். உற்பத்தி பெருகட்டும் விலை குறையும்..." ஆனால் விலைகுறையவில்லை. சர்க்கார் கூலியை இரண்டணாவாக உயர்த்தியது. அப்படியும் மீனவர் நிலையில் முன்னேற்றமில்லை. மறுபடியும் மீனவர்கள் கோரிக்கை விடுத்தார்கள். ஆனால் அரசாங்கம் அசைந்து கொடுக்கவில்லை.

கடைசியில் மோஸஸ் தன் சக மீனவர்களிடம் சொன்னான் "நாம தண்ணியிலே முழுகிச் சங்கெடுக்க வேண்டாம். சர்க்கார் எப்படி சங்கு எடுக்கறாங்க, பார்ப்போம்!"

இதன் விளைவு நாற்பத்தியேழாம் ஆண்டில் நீர்மூழ்கிகளின் வேலை நிறுத்தம். அவர்களது கோரிக்கை சங்குக்கு எட்டணா. சர்க்கார் கூலியை ஐந்தரையணவாக உயர்த்தியது மீனவர் ஒப்புக்கொள்ளவில்லை. இருதரப்பினரிடையே பேரம் தொடர்ந்தது.

வட்டிக் கடை முதலாளிகள் ஏழை மீனவர், நீர் மூழ்கிகளின் இரத்தத்தை உறிஞ்சுபவர்கள். மீனவர்கள் அன்றாடங் காய்ச்சிகள். வியாதி வந்தால் அல்லது வேறு தேவை ஏற் பட்டால் வட்டிக்கடைக்குப் போய் அநியாய வட்டிக்குக் கடன் வாங்குவார்கள். அதற்காக வீட்டை, படகை, வலையைக் கூட அடகு வைப்பார்கள்.

"ஒரு பழமொழியே உண்டு-மச்சம் பிடிப்பனுக்கு மிச்சம் இல்லை..." என்று சொல்லிச் சிரித்தான் நிக்கொலஸ்.

தலைக்கு மேல் சூரியன். என்ன வெயில்! கடல் நீரின் நீலம் சூரிய ஒளியில் பளபளக்கிறது. சிறிது நேரத்துக்கு மேல் பார்த்தால் கண் கூசும். ஆனால் அந்த நீலந்தான் எவ்வளவு கவர்ச்சி! அதற்குள் முழுகிவிடத் தோன்றுகிறது.

அந்தோனி கடலிலிருந்து நாலைந்து கை நீரெடுத்துத் தலையில் ஊற்றிக் கொண்டான்.

"அடேடே, வெயில்லே கஷ்டமாயிருக்கா? இந்தா, இந்தத் துண்டைத் தலைமேலே போட்டுக்க. கொஞ்சம் இதமாயிருக்கும்"என்று சொல்லி நிக்கொலஸ் தன் அழுக்குக் கந்தல் துண்டை அந்தோனியிடம்நீட்டினான்.

"இப்போ சங்குக்கு என்ன கூலி?" அந்தோனி கேட்டான்,

"அஞ்சேமுக்கால் அணா... போனவருசம் சர்க்கார் எழுபத்தாறாயிர ரூபாய்க்குச் சங்கு வித்துருக்கு. அதுக்கு முந்தின வருசம் இருபத்தாறாயிரம் ரூபாய்க்கு வியாபாரம் ஒரு சங்குக்கு ஒரு ரூபாய்க்கு மேலே சர்க்காருக்குக் கிடைக்கறது.

"இந்த விவரம் உனக்கெப்படித் தெரியும்?" பீட்டர் கேட்டான்.

"நம்ம ஆள் ஒருத்தன் சர்க்கார் ஆபீசிலே குமாஸ்தா. அவன் தான் சொன்னான். அவன் வருசா வருசம் மதராசுக்கு அனுப்புற ரிப்போர்ட்டிலே இந்த விவரம் இருக்காம்... "

கிழவனுக்கு அரசாங்கத்தின் மேலே ரொம்பக் கோபம். அவங்க கோரிக்கை எட்டணாத்தானே! சர்க்கார் விரும்பினால் கூலியை எட்டணாவாக்கலாம்...

நிக்கொலஸ் தானறிந்த விவரத்தை மற்ற மீனவர்களுக்குத் தெரிவித்தான். அவர்களிடையே ஒரே பரபரப்பு. ஒரு சங்குக்கு ஒரு ரூபாய்க்கு மேலே விலை வைச்சு விக்கறவங்க கூலி எட்டணா ஏன் கொடுக்கக் கூடாது?

அப்போது சென்னை அரசாங்கத்தில் தூத்துக்குடிக்காரரான ரோச் விக்டோரியாதான் மந்திரி. கடற்கரை ரஸ்தாவில்தான் அவருடைய பங்களா. மேசைக்காரராயிருந்தாலும் அவரும் மீன் பறவர் தான்! நீர் மூழ்கிகளின் துன்பம் அவருக்குப் புரியாதா? எல்லோரும் அவரை அவரது பங்களாவில் சந்தித்தனர்.

ரோச்விக்டோரியா பெரிய குடும்பத்துப் பிள்ளை. கண்ணியமான மனிதர். அமைதியான சுபாவம் இதமானபேச்சு. அவர் சொன்னார்," உங்க கஷ்டம் எனக்குப் புரியுது. சரி, கூலி எட்டணாவே வாங்கிக்கங்க."

நிக்கொலஸ் தன் சகாக்களுடன் திரும்பி வந்தான். எல்லோருக்கும் ரொம்ப மகிழ்ச்சி...

ஆனால் இரவோடு இரவாக நிலைமை மாறிவிட்டது. அன்றிரவு சுஸான் கார்தோஸாவின் விருந்தினர் மாளிகைக்கு மீன் வளத்துறை அதிகாரி வந்திருந்தார். அவருடன் சுஸான் இரகசியமாகப் பேசினான்– "இந்த அன்றாடங்காய்ச்சிகளோட கூலியை உசத்தினா எங்க தொழில் படுத்துப்போயிடும். நீங்க எப்படி

யாவது இதை ரத்து பண்ணிடணும்? உங்களுக்கு என்ன வேணுமோ, தரேன்..."

மிஸஸ் லோபோவை அழைத்துவரக்கார் சென்றது. நல்ல விருந்துச்சாப்பாடு, குடி வகைகள்....

மறுநாள் அதிகாரி மந்திரியிடம் என்ன சொன்னாரோ, தெரியாது. லோபோ மீனவ இளைஞர்களுக்குக் குடிக்கக் கொடுத்து, கையில் பணமுந்தந்து அவர்களை வசப்படுத்தி அதிகாரியிடம் அழைத்துச்சென்றான்.

அதிகாரி அவர்களை அதட்டினார். "நீங்க வேலை நிறுத்தம் செய்யப்போறீங்களாமே? அவ்வளவு கொழுப்பா உங்களுக்கு!"

"இல்லேங்க...அந்தப் பீட்டர் தான் எங்களைத் தூண்டி விட்டுக் கிட்டிருந்தான். நாங்க அவனை விரட்டிட்டோம்... இப்போ அந்தப் புனுகுப் பூனை நிக்கொலஸ் கிழவன்தான்..."

"சரி, இந்தாங்க இந்தக் காகிதத்திலே கையெழுத்துப் போடுங்க" "நாங்க எல்லா நீர் மூழ்கிகள் சார்பாகவும் ஐந்தே முக்காலணா கூலிவிகிதத்தை ஒப்புக் கொள்கிறோம்"

நிக்கொலஸ் தூ தூ வென்று தண்ணீரில் துப்பினான், "பீட்டர், உன் அப்பா காலத்திலே நடந்ததே அதே மாதிரிதான் இப்பவும்... முட்டாள்களுக்கு அப்பவும் ஒண்ணும் தெரியலே, இப்பவும் தெரியல்லே... ரெண்டு மணு அரிசி முப்பத்தொன்பது, நாற்பது ரூபாய். ஒவ்வொருத்தன் வீட்டிலேயும் ஒரு டஜன் ஆளுக்குக் குறைச்சல் இல்லே. இந்தக் கூலியிலே வயிறு நிரம்பச் சோறு கிடைக்காது..."

"அதுதான் பெண்சாதி, தங்கச்சி எல்லாரும் ராத்திரி டவுனுக்குப் போயிடறாங்க. இது யாருக்குத் தெரியாது?" ஹாரி சொன்னான்.

"நீ யார் மேலே கோவிச்சுக்கறே பெரியப்பா? தனக்கு நல்லது எது.. கெட்டது எதுன்னு புரிஞ்சுக்கற சக்தி இருக்கா இவங் களுக்கு? பாரேன், எல்லாரும் கார்தோஸாகிட்டே கடன் வாங்கித் திண்டாடிக்கிட்டு இருக்காங்க..."

"உண்மைதான். இதை நினைச்சா என் நெஞ்சு வெடிக்குது, பீட்டர். அவங்களுக்கு எப்படிப் புரிய வைப்பேன்?" நிக்கொலஸ் அழுது விடுவான் போலிருந்தது.

ஜெர்ரி திடீரென்று கண்களைச் சுழற்றி வெட்ட வெளியில் ஒரு குத்துவிட்டுக் கத்தினான், "அந்த சைத்தான் சுஸைானையும் மானுவலையும் கொல்லலேன்னா நான் என் அப்பனுக்குப் பிறந்த வனில்லே!..."

"வாயைமூடு!" நிக்கொலஸ் அதட்ட அவன் அடங்கிவிட்டான்.

"வருசத்திலே எவ்வளவு சங்கு தேறும்?" அந்தோனி கேட்டான்.

"அம்பதாம் வருசத்திலே பத்துலட்சம், முப்பத்தி நாலாயிரம் அறுநூத்தி எழுபத்தேழு நல்ல சங்கு அம்பத்தாறாயிரத்து எண்ணூத்தி இருபத்தாறு சின்ன சங்கு முப்பதாயிரத்தி இருநூத்தி இருபத்தைஞ்சு பூச்சிபிடிச்ச சங்கு. சின்னச் சங்குக்கும் பூச்சி பிடிச்ச சங்குக்கும் சர்க்கார் கூலி தர்றதில்லே. ஆனால் அதுகளையும் குறைஞ்சவிலைக்கு வித்துடறது...

"அம்பத்தொண்ணாம் வருசத்திலே சங்கு விளைச்சல் குறைவு. ஒம்பது லட்சம், எண்பத்திமூவாயிரம், எண்ணூத்தி பதினைஞ்சு நல்ல சங்கு பூச்சிபிடிச்ச சங்கு முப்பதாயிரத்து எண்ணூத்தி முப்பத்தொண்ணு சின்னச் சங்கு அறுபத்தி மூவாயிரத்து முன்னூத்தி நாபத்தைஞ்சு..."

"இதெல்லாம் சர்க்கார் கணக்கு. சர்க்காருக்குத் தெரியாமே எவ்வளவு சங்கு எடுத்தாங்களோ?" பீட்டர் சொன்னான்.

"அதுவும் தெரியும்பா" சிரித்துக் கொண்டே சொன்னான் நிக்கொலஸ். "இங்கே சர்க்கார் ஆபீசிலே குமாஸ்தாவிலேருந்து பெரிய ஆபீசர் வரைக்கும் ஒவ்வொருத்தனும் ஒரு பெரிய திமிங்கலம். அவங்களோட பேராசைக்கு அளவே கிடையாது... அவங்களுக்கு லஞ்சம் கொடுத்து வசப்படுத்திக்கிட்டுக் கீழக்கரை, வாம்பூர், ராமேசுவரம் இங்கேயெல்லாம் சில முஸ்லீம்கள் லட்சாதிபதியாயிட்டாங்க. வங்காளத்து மார்க்கெட்டோடே அவங்க நேரடித் தொடர்பு வச்சுக்கிட்டிருக்காங்க..."

"இந்தக்காரியத்திலே தூத்துக்குடி ஒண்ணும் சோடை யில்லே" பீட்டர்சொன்னான்.

நிக்கொலஸ் சொன்னான், "அவங்க கிட்டேயிருந்து நீர்மூழ்கிகளுக்கு நல்ல கூலி கிடைக்குது. ஆனால் இது பாவம். நான் இந்த மாதிரி திருட்டு வேலைக்குப் போகமாட்டேன். 'கடவுளை நம்பினார் காய்போனதில்லை' ன்னு சொல்லுவாங்க. படைத்தவன் கொடுக்க மாட்டானாங்கறது தான என் கொளகை. ஆனா ல் இப்போ இந்த நம்பிக்கையே ஆடிப்போச்சுப்பா..." நீண்ட பெருமூச்சொன்று விட்டான் கிழவன்.

திடீரென்று இடது புறத்தில் ஒரு கூக்குரல் "ஐயோ! அப்ஸல் இன்னும் மேலே வரல்லியே!"

எங்கும் ஒரே பரபரப்பு. கூச்சல். நாற்புறங்களிலிருந்தும் படகுகள் அந்த இடத்துக்கு விரைந்து வந்தன. தூரத்தில் அரசாங்க விசைப்படகின் சங்கொலி கேட்டது. கூச்சல்

கிளம்பிய படகின்மேல் அபாயத்தைக் குறிக்கும் சிவப்புக் கொடி ஏற்றப்பட்டது.

நிக்கொலஸும் தன் படகுடன் அந்த இடத்துக்கு விரைந்தான். 'கௌஹர்கலிலி' என்ற பெயருள்ள அரசாங்க விசைப்படகும் அங்கு விரைந்து வந்தது.

விசைப்படகின் காப்டன் கேட்டான், "என்ன விஷயம்?"

"ஒரு ஆள்முழுகினான், மேலே வரல்லே..."

"எந்த இடம்?..."

படகுக்காரன் இடத்தைக் காட்டினான், "இங்கே..."

விசைப்படகிலிருந்து இரண்டு நீர்மூழ்கிகள் நீருக்குள் இறங்கினார்கள். அவர்கள் முகத்தில் இரும்பு முகமூடி, உடலில் இரும்புக் கவசம், முதுகில் பிராணவாயுப் பெட்டி...

அதிர்ச்சியில் மூச்சு விட மறந்து விட்டான் அந்தோணி.

"இதுக்குள்ளே அவன் பிணமாயிருப்பான்" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டான் பீட்டர்.

சுமார் இருபது நிமிடங்களுக்குப்பின் இரு நீர்மூழ்கிகளும் மேலே வந்தார்கள். ஒருவன் ஒரு வாலிபனைச் சுமந்து கொண்டிருந்தான்.

"ஐயோ, என் அப்ஸல்!" படகிலிருந்த தாடிக்காரக் கிழவனின் கதறல் நெஞ்சைப் பிளந்தது.

வாலிபனின் உடலை விசைப் படகில் கிடத்தி முதலுதவி செய்தார்கள். விசைப்படகின் காப்டனே அவனுடைய முதுகையும் நெஞ்சையும் அமுக்கிப் பார்த்தான். பிறகு சொன்னான், "படகை ஆஸ்பத்திரிக்கு ஓட்டு! சீக்கிரம்!..."

விசைப் படகு கரையை நோக்கி விரைந்தது...

☆ ☆ ☆

இருட்டியதும் மந்திரவாதி ஹூடினியின் இந்திர ஜாலம்போல் கடற்காட்சி முற்றிலும் மாறிவிட்டது. கடற்பரப்பு முற்றிலும்காலி. பகலின் இரைச்சலும் கூட்டமும் மறைந்துவிட்டன.

வானமும் கடலும் நிலாவெள்ளத்தில் ஒருங்கே மிதக்கின்றன. யுவதியொருத்தியின் இளமைபோல் பூரித்திருக்கிறது கடற்பரப்பு. நாள் முழுதும் பரவியிருந்த இறுக்கத்துக்குப்பின் பெரிய அலைகள் எழத்தொடங்குகின்றன. கூடவே ஒரு பாட்டம் மழை

பெய்கிறது. அலைகள் அமைதியாகி விடுகின்றன எண்ணெய் தாளித்துக் கொட்டப்பட்ட சாம்பார் போல. இப்போது சிற்றலைகளே எழுகின்றன. அலை தீவின் கரையில் மோதும் ஒலி மேகங்களின் உறுமல் போலிக்கிறது.

தீவிலிருந்து சற்றுத் தொலைவில் நிற்கிறது படகு. மழை நின் றதும் பீட்டர் தண்ணீரில் வலை விரித்துவிட்டான். வலை தண் ணீருக்கடியில் இருப்பதால் கண்ணுக்குத் தெரியவில்லை. ஆழம் சுமார் இருபது முழும் இருக்கும்... ஐந்தாம் நம்பர் கால்பந்து மாதிரி மிதப்பும் அதன் மேல் மூங்கிலில் கட்டப்பட்டிருக்கும் கொடியும் தெரிகின்றன.

தீவும் ஒரு பெரிய படகு போலத்தானிருக்கிறது. அதில் ஒரு பழங்காலத்து இடிந்த வீடு ஆம்பியின் கதையில் ராட்சதனின் தூங்கும் பட்டினம் பாற்கடலில் மிதக்குமே., அதுபோல. அந்த வீட்டில் மைக்கேலும் சகாக்களும் சமையல் செய்து கொண் டிருக்கிறார்கள்.

அந்தோனிக்குப் பரிச்சயமான உலகம் மறைந்து போய் விட்டது. இது ஒரு கனவுலகம். விழித்துக்கொண்டே கனவு கண்டு கொண்டிருக்கிறான் அவன். சற்றுத் தொலைவில் கடலின் மேல் வெண்பனி போர்வைபோல் தெரிகிறது. எல்லாம் கண்ணுக்குத் தெரிகிறது. ஆனால் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. பனிப்போர்வைக்குப் பின்னால் ஓரிரு ஒளிப்பொட்டுகள். மீன் பிடிக்கும் படகுகள் அவை.

அந்தோனி இப்போது இருக்கும் உலகம் அவனுக்கு முற்றிலும் புதுமையானது. இதுவரை அவனது வாழ்க்கையில் இத்தகைய அனுபவம் அவனுக்கு ஏற்பட்டதில்லை உலகத்துக்கு அப்பாற் பட்ட ஒரு விசித்திர அனுபவம். எங்கும் சூனியம், அமைதி, அமைதிக்கு நடுவே அலைகள் கரையில் மோதும் அரவம் மட்டும் கேட்கிறது. வேறு ஏதாவது இருக்கிறதா இல்லையா என்று தெரியவில்லை. அவனே இருக்கிறானா இல்லையா என்பது அவனுக்கு சந்தேகமாகிவிட்டது. அவனறிந்த பீட்டரும் இப்போது இல்லை, பீட்டர் மௌனமாயிருக்கிறான். என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறானோ?...

வெகு நேரங்கழித்துப் பீட்டர் மௌனத்தைக் கலைத்துக் கேட்டான், "அந்தோனி, உனக்கு அழுகைச் சத்தம் கேக்குதா?"

அந்தோனி இதுவரை கவனிக்கவில்லை. இப்போது உற்றுக் கேட்டான். காதில் கேட்கிறது. 'உங்-உங்-உங்-உங்...' சொன் னான், "ஆமா, கேக்குது. ஆனால் அது காத்தோட சத்தம்..."

அழுகைக் குரல்கள் காற்றில் மிதந்து வருகின்றன. ஆயிர மாயிரம் ஆண்டுகளாக ஆயிர மாயிரம் மீனவர்கள் இந்த இடத்தில் சங்கும் முத்தும் எடுக்க முழுகி உயிர் துறந்திருந் திருக்கிறார்கள். சங்கு வயலில் தங்கள் உரிமையை நிலைநாட்டச் சண்டை போட்டு இறந்திருக்கிறார்கள்....

பீட்டர் மெதுவாகப் பேசுகிறான் - தனக்குத்தானே பேசிக் கொள்வது போல -சாமி வந்தவன் போல - கனவில் பேசுபவன் போல-"அந்த மீன் பறவங்களோட ஆத்மாவுக்கு இன்னும் விடுதலை கிடைக்கல்லே. அவங்க தங்கள் சந்ததியோட பரிதாபநிலைக்காக அழுதுக்கிட்டிருக்காங்க. அவங்க எந்த சொத்துக்காக உசிரை விட்டாங்களோ அந்த சொத்து அவங்க சந்ததிக்கு இன்னும் கிடைக்கல்லே, அவங்க சந்ததிக்கு எல்லா மிருந்தும் ஒண்ணுமில்லை-வயித்துக்குச் சோறில்லை, இடுப்புக்கு வேஷ்டியில்லே, படிப்பில்லே, ஆரோக்கியமில்லே. ஓநாய்க் கும்பல் அவங்க ரத்தத்தை உறிஞ்சுது. அவங்களைக் கவனிக்க யாருமில்லே. அவங்க நிர்க்கதியா, அகதிகளா..." பேசிக் கொண்டே பீட்டர் எழுந்து நின்று தன் தலையைப் பலமாகக் குலுக்கினான். இப்போது அவன் தன்னிலைக்கு வந்து விட்டான். இயற்கையான குரலில் கூறினான், "இப்போ தண் ணிக்குப் பக்கத்திலே காதை வைச்சுக்கேளு..."

அந்தோனி அவ்வாறே செய்தான். "ஆமா, தண்ணியோட சலசலப்பு கேக்குது..."

"இல்லேப்பா, அது சிப்பித்தாய்களோட மகிழ்ச்சி ஆரவார மாக்கும்!" என்றான் பீட்டர். அவனுடைய குரல் சீரியஸாக இருந்தது.

அந்தோனி வியப்புடன் பீட்டரை நோக்கினான்.

"நாம இருக்கோமே, இந்த இடத்திலே தண்ணிக்குக் கீழே எண்ணற்ற ராஜாக்களோட ஐசுவரியம் இருக்கு. இது ஒரு பெரிய முத்து வயல் - இதுக்குப் பேரு தொள்ளாயிரம் பாறை. இதோட நீளம் ஏழு மைல், அகலம் ரெண்டு மைல், இங்கே சின்னதும் பெரிசுமாத் தொள்ளாயிரம் பாறைகள் அமுங்கி இருக்கு, அந்தப் பாறைகள்ளே லட்ச லட்சம் சிப்பிகள் ஒட்டிக் கிட்டு இருக்கு. இந்தச் சிப்பித் தாய்கள் கடுஞ் சூட்டிலே இனிப்புத் தண் ணிக்காக ஏங்கிக்கிட்டு இருப்பாங்க. பௌர்ணமி இரவிலே மழைத் தண்ணி ரொம்ப இனிப்பாயிருக்கும். அந்தத் தண் ணியைச் சொட்டுச் சொட்டாய்க் குடிச்சால் அதுகளோட தாகம் தணியும். நிலவிலே கழுவின அந்தத் தண்ணிச் சொட்டு

அதுகளோட வயித்திலே போய் அதிலேருந்துதான் முத்து பிறக்கும்..."

அந்தோனி வியந்தான். "அப்படியா?"

பீட்டர் சிரித்துக் கொண்டு சொன்னான், "இப்படித்தான் எங்க ஜனங்க நம்பறாங்க. தலைமுறை தலைமுறையா இந்தக் கதை வழங்கிவருது... ஆனால் உண்மையிலே முத்து எப்படிப் பிறக்குதுன்னு என் கல்லூரி ஆசிரிய சிநேகிதன் சொல்லியிருக்கான். உனக்கு இது பற்றித் தெரியுமா?"

"தெரியாது நீ சொல்லு..."

"சிப்பியோட உடம்பு மிகவும் மிருதுவான தசை. அது கடினமான ரெண்டு மூடியிலே ஒட்டிக்கிட்டிருக்கும். ஒரு நகைப் பெட்டியை மூடி வச்சாப்பலே இருக்கும் ரெண்டு மூடியும். அந்த ரெண்டு மூடிக்கும் நடுவிலே உள்ள இடைவெளி வழியாக கடல் தண்ணி உள்ளே போகும், வெளியே வரும். இந்தத் தண்ணி மூலமாகத்தான் சிப்பி மூச்சுவிடும், தனக்கு வேண்டிய உணவைப் பெறும், இந்தத் தண்ணியோடே ஒரு சின்ன மணல் துண்டோ அல்லது அது மாதிரி கடினமான ஒரு பொருளோ சிப்பிக்குள்ளே போயிட்டால் அது சித்திரவதைப் படற மாதிரி அவஸ்தைப்படும். அந்த மணலால் அல்லது கடினப் பொருளால் அல்லது பாக்டீரியாக் கிருமிகளால் சிப்பியின் உடம்பிலே புண் ஏற்படும். சிப்பியோட இந்த வேதனை தான் முத்து உண்டாகக் காரணம்..."

"வேதனையாலே முத்து எப்படி உண்டாகும்?"

"இந்த வேதனையிலேருந்து விடுதலை பெறச் சிப்பியோட உடம்பிலேருந்து ஒரு வகை ரசம் ஊறும். இந்த ரசத்திலே சுண்ணாம்பு அதிகம். இது ஒரு ரசாயனப் பொருள். இதுக்குப் பேரு கஞ்ச்சியோலின். இந்த ரசம் புண்ணைச் சுத்திப்படிஞ்சு கொஞ்ச நேரங்கழிச்சு இறுகிப் போயிடும்–புண்ணுக்கு உறை போட்டாப்பலே. அப்பறம் அந்த உறைக்கு மேலே இன்னோர் உறை, அதுக்கு மேலே இன்னொண்ணு... கடைசியிலே இது பட்டாணி மாதிரி உருண்டையா ஆயிடும். இதுதான் முத்து. அது மேலே ஒளிபட்டால் வான வில்லின் நிறங்கள் தெரியும்..."

"அப்படியா! இந்தப் புண்ணும் வேதனையும் இல்லேன்னா முத்துப் பிறக்காதா?"

"பிறக்காது... அது மட்டுமில்லே. முத்து பெரிசா ஆயிட்டா, அதாவது பழுத்துட்டா, சிப்பித்தாய் செத்துப் போயிடும். சிப்பிக்கு வேதனை அதிகமாக ஆக முத்தோட அளவும் பெரிசாயிருக்கும். சாதாரணமாக, பெரிய பெரிய முத்து செத்துப்

போன சிப்பியிலேருந்துதான் கிடைக்கும். எது ரொம்பக் கஷ்டப் பட்டுப் பிறக்குதோ அதுக்குத்தான் உலகத்திலே மதிப்பு அதிகம். இது தான் என் அனுபவம். மதிப்புள்ள எதுவுமே வேதனை யில்லாமே பிறக்கறதில்லே...".

"சரியான பேச்சு" அந்தோணி ஆமோதித்தான்.

பீட்டர் அந்தோணிக்கருகில் வந்தமர்ந்து பேசத் தொடங் கினான்– "முத்து மாதிரி சுதந்திர மனப்பான்மையைப் பெற ணும்னா மனிதனும் துக்கத்தையும் வேதனையையும் அனுபவிக் கத்தான் வேணும் ..

"பிரிட்டிஷ்காரங்க நமக்கு விடுதலை கொடுத்துட்டாங்க. ஆனால் நமக்கு உண்மையான விடுதலை எங்கே கிடைச்சிருக்கு? அதைப் பெறத் தேவையான துக்கமும் வேதனையும் நாம எங்கே அனுபவிச்சோம்? நாம மத வெறியிலேருந்து விடுதலை யடைய அனுபவிக்க வேண்டிய பயங்கர வேதனையைத் தவிர்க்க முயற்சி செய்யறோம். தலைமுறை தலைமுறையா வழங்கிவர்ற அர்த்தமில்லாத பழக்க வழக்கங்களை நாம ஆசாரங்கற பேரிலே அழுத்திப் பிடிச்சுக்கிட்டிருக்கோம். அதுகளை விட்டு விடணும் னாலும் கஷ்டப்படணும், வேதனைப் படணும். அதுக்கு நாம தயாரில்லே. நாம ஒருத்தரை ஒருத்தர் சுரண்டறோம், ரத்தத்தை உறிஞ்சறோம். இந்தப் பழக்கத்தை விடறதுக்கும் நாம தாக்கணும், அடிபடவும் வேணும். எல்லாமே வேதனை தான். கண் திறக்கிற வேதனை. நம் நாட்டிலே எல்லாருக்கும் இந்த வேதனை பொறுக்க முடியாத அளவுக்கு வளரல்லே இன்னும். இந்த எரிச்சல் இப்போதான் ஆரம்பிச்சிருக்கு. இது கொஞ்சங் கொஞ்சமா ஜாஸ்தியாகும், ஆயிரம் மடங்கு ஜாஸ்தியாகும். ஒவ்வொரு மனிசனின் மனசிலேயும் இந்த எரிச்சல் உண்டாற போது இதிலேருந்து தப்பறதுக்காக அவன் மனசிலேயே ஒரு ரசம் உற்பத்தியாகும். முதல்லே ஒரு சுற்று ரசம். அப்பறம் அதுக்கு மேலே இன்னொரு சுற்று, அதுக்கு மேலே இன்னொண் ணுன்னு கடைசியிலே இந்த ரசம் கெட்டியாகி மாந்தாதா காலத்திலேருந்து தொடர்ந்து வர்ற சொத்தைச் சடங்குகளையும் அழுகிப் போன சட்டங்களையும் அழிச்சுடும். பழைய சமூகம் சிப்பி மாதிரி செத்துப் போயிடும். முத்துப்போன்ற, விட்டு விடுதலையாகி விட்ட சமூகம் பிறக்கும். அது முத்து மாதிரி பிரகாசமா, வஜ்ரம் மாதிரி உறுதியா இருக்கும். அது ரொம்ப உசத்தியான பொருள்...

"இந்த சுதந்திர சமூகத்திலே ஜாதி–மத வேற்றுமை இருக்காது. ஏழை–பணக்கார வித்தியாசம் இருக்காது. ஒருத்தனை ஒருத்தன் சுரண்டல் இருக்காது. அடிதடி இருக்காது. மனிசர்களோட பரஸ்பர உறவு இயற்கையா, எளிமையா, தோழமையா இருக்கும். ஒருவன் மற்றவனை முழுவதும் நம்புவான்...

"நான் இந்த முத்து வயல் மேலே உக்காந்துக்கிட்டு அடிக்கடி இந்தப் புதிய சமூகத்தைப் பத்திக் கனவு காண்பேன்... இவ்வளவு வேலை இருக்கற இடத்தை நீ உலகத்திலே வேறே எங்கேயும் பார்க்க முடியாது அந்தோனி. உன்னோட அப்பா வாழ்க்கையிலே என்ன செஞ்சிருந்தாலும் அவரும் இதே மாதிரி கனவு கண்டுக்கிட்டுத்தானிருந்தார். அதனால் தான் இந்தக் கனவை நனவாக்கற லட்சியத்துக்காக அவர் தான் இவ்வளவு கஷ்டப்பட்டுச் சேர்ந்த சொத்தை விட்டுட்டுப் போயிருக்கார்..."

"அப்பா வா?" அந்தோனி திடுக்கிட்டுக் கேட்டான்

"ஆமா... நாம ரெண்டு பேரும் சேர்ந்து அவரோட கடைசி ஆசையை நிறை வேத்து வோம்..."

"எனக்கு சம்மதம்" என்றான் அந்தோனி.

☆ ☆ ☆

கடலிலிருந்து திரும்பிய பிறகு அந்தோனிக்கு மேரியின் நினைவு அடிக்கடி வந்தது. அவள் இல்லாத குறையும் தெரிந்தது. அவளிடமிருந்து வாராவாரம் கடிதம் வந்து கொண்டிருந்தது. எல்லாக்கடிதங்களிலும் ஒரே விஷயந்தான்– "நீ சீக்கிரம் வா. எனக்குப் பொழுது போகவில்லை. எனக்கு அலுப்பாக இருக்கிறது..."

அவன் இந்தியாவில் இவ்வளவு காலம் தங்கிவிடுவானென்று லண்டனிலிருந்து கிளம்பியபோது எதிர்பார்க்கவில்லை. மேரி அவனை ஹீத்ரோ விமான நிலையத்தில் "நீ எப்போ திரும்பி வருவே?" என்று கேட்டபோது அவன் சொல்லியிருந்தான். "ஒரு மாசத்திலே திரும்பிடுவேன்... மூணுமாசம் லீவு எடுத்திருக்கேன் ஆனால் அவ்வளவு நாள் தேவைப்படாது. ஆனால் இந்தியாவைக்கொஞ்சம் சுத்திப் பார்க்க ஆசை... அப்பறம் உன்னை ரிவியராவுக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன்..."

மேரி அவசரப்படுவது இயற்கைதான். பத்துநாள் முன் அவனுக்கெழுதிய கடிதத்தில் எழுதியிருந்தாள், "நான் குளிர்லே பனிக்கட்டியா உறைஞ்சு போயிட்டேன், எனக்குக் கதகதப்புக் கொடுக்க யாருமில்லை..."

உடனேயே அவளுக்குப் பதிலெழுதி விட்டான் அந்தோனி "நான் திரும்ப இன்னும் கொஞ்ச காலம் ஆகும். அப்பாவின் சொத்து விஷயமாகக் கொஞ்சம் வேலை இருக்கு... வேறே சில பிரச்னைகளும் இருக்கு..."

பிரச்னைகள் என்ன என்பதை அவன் எழுதவில்லை. என்ன எழுதுவான்? நாட்டின் வறுமை நிலை, பால்ய நண்பன் பீட்டரின் புதிய அவதாரம், தன் மனதில் ஏற்பட்டுள்ள பெரும் அதிர்ச்சி...

மேரிக்கு இதெல்லாம் புரியாது. அவளுடைய உலகத்துக்கும் அவனுடைய இந்த உலகத்துக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. அவளுடைய கொள்கை– 'சாப்பிடு, குடி, மஜாவாய் இரு!' அவ்வளவுதான்!

மேரியின் நினைவு அடிக்கடி வருவதால் மனம் சஞ்சலப்படுகிறது. ஆனால் பீட்டர் சொல்வதும் உண்மைதான். இந்த நாட்டில் அந்தோனி செய்யக் கூடிய வேலை நிறைய இருக்கிறது. நாட்டுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்ற அவனுடைய பழங்கால ஆசையைப் பீட்டரின் பேச்சு மறுபடி கிளப்பி விட்டு விட்டது. அந்த ஆசையால்தான் அவன் ஒரு காலத்தில் கிருஷ்ணமேனனுக்கும் டாக்டர் சின்ஹாவுக்கும் சீடனாயிருந்து கொண்டு இந்தியா லீகில் பணி செய்தான்.

அவன் பீட்டருக்கு வாக்குக் கொடுத்திருக்கிறான்.

ஆனால், மேரியின் நிலை என்னாவது? அவளுக்கும்தானே அவன் வாக்களித்திருக்கிறான்! அவளைக் கலியாணம் செய்து கொண்டு இங்கே அழைத்து வரமுடியுமா? அவனுடைய கடமையை அவளும் தன் கடமையாக ஏற்றுக் கொள்வாளா?

முன்னால் உள்ள காரியம் இமயமலைபோல் பிரும்மாண்டமானது அதில் ஈடுபடுவதானால் ஆயிரம் கவலைகளையும் ஆபத்துக்களையும் எதிர்கொள்ள நேரும். கடுமையான உழைப்பும் தேவை. அதாவது, இந்த வேலையில் ஈடுபடுவது துன்பத்தை வரவழைத்துக் கொள்வதாகும்.

மேரிக்கு இதற்கேற்ற மனப்பக்குவம் இல்லை. அவள் லைலாமலர் போன்ற அழகி, ரோஜா இதழ்போல் மென்மையானவள் ; படுக்கையில் அவளது சல்லாபம் நல்ல குளிரில் கம்பளி போல் இதமாக, கதகதப்பாயிருக்கும்.

சட்டென்று அந்தோனிக்குச் சாருபமா தத்தாவின் நினைவு வந்தது. கூடவே ரவீந்திரரின் கோரா நாவலின் கதாநாயகி சுசரிதாவின நினைவ...

கல்லூரி நாட்களில் சாருபமாவுக்காக அந்தோனியின் மனம் ஏங்கும். ஒரு நாள் அவள் கையைப் பிடித்துக் கொண்டு, "நான் உன்னைக் காதலிக்கறேன். நீ என்னைக் கலியாணம் செய்துக் குவியா?" என்று கேட்டுவிடத் தோன்றும். ஆனால் கேட்கவில்லை கடைசிவரையில்.

அவள் பல்கலைக் கழக வராந்தாவில் நேராக நடந்து போவாள். இந்தப் பக்கம் அந்தப் பக்கம் பார்க்கமாட்டாள். இரு புறமும் நகர்ந்து நின்று கொள்வார்கள் மாணவர்கள். பெண் களைச் சீண்டுவதில் மன்னனான பிரஹ்லாத் கூட "அடேயப்பா! அது ஒரு ஒளி விடாத தீப்பிழம்புன்னா!" என்பான்.

அந்தோனி சுலதாவைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்பது ஆம்மியின் ஆசை. சுலதா ஆம்மியின் சகோ தரன் பெண். ஆம்மியைப் போலவே இருப்பாள். சித்திரத்தில் வரையப்பட்ட துர்க்கை மாதிரி முகம். ஆம்மியின் குடும்பத்தில் எல்லாப் பெண்களும் ஒரே மாதிரி தான். வெற்றிலை போல் பசுமையாயிருப்பாள். நீள நீளக்கண்கள். நல்ல மஞ்சள் நிறம். மண் பொம்மை மாதிரி இருப்பாள். இந்த உலகத்து ஜீவன் என்றே நினைக்க முடியாது. அவள் ஆம்மியுடன்தான் வசித்து வந்தாள். ஆம்மியை அம்மாவென்றழைப்பாள். மகாகாளி பாட சாலையில் படித்து வந்தாள். அந்தோனிக்கு அவளை மிகவும் பிடிக்கும். அவள் அவனை அண்ணா என்று தான் கூப்பிடுவாள். அவனும் அவளைத் தங்கையாகத்தான் பாவித்தான். அவளை மணந்து கொள்ளும் எண்ணம் அவனுக்குத் தோன்றவேயில்லை.

இந்த விருப்பத்தை ஆம்மி தன் மனதுக்குள் ஒளித்துவைத் திருந்தாள். அவனுக்கு ஜாடைமாடையாகக் கூடத் தெரிவிக்க வில்லை. அவன் லண்டன் செல்வதற்கான கப்பல் கட்டணத்தை ஆம்மி தன் தந்தை கொடுத்திருந்த நகைகளை விற்றுக் கொடுத்த போது மட்டுமே அவனிடம் சொன்னாள்– "நான் ஒரு நிபந்தனை மேலே உனக்குப் பணம் தரேன்..."

"என்ன நிபந்தனை?"

"அப்புறம் சொல்றேன்..."

அவன் லண்டன் போய்ச் சேர்ந்தபின் அவனுக்கு ஆம்மியின் கடிதம் கிடைத்தது– "நீ பெரிய அறிவாளியா ஆவேங்கற நம்பிக் கையிலே நான் என் நகைகளை வித்திருக்கேன் நீ திரும்பி வந்து

சுலதாவைக் கலியாணம் பண்ணிக்கிட்டுக் குடும்பம் நடத்தினா நான் அதைப் பார்த்துட்டுச் சந்தோஷமாச் செத்துப் போவேன்..."

கடிதத்தைப் பார்த்து மிகவும் சங்கடமாகிவிட்டது அந்தோனிக்கு. அவன் ஆம்மிக்கு எழுதினான், "நான் சுலதாவை என தங்கையா நினைக்கறேன். நான் எப்படி அவளைக் கலியாணம் செஞ்சுக்குவேன்?"

அவ்வளவுதான். அதன் பிறகு ஆம்மியிடமிருந்து அவனுக்குக் கடிதமே இல்லை. அவன் பல முறை கடிதமெழுதியும் பதில் இல்லை. சுலதாவுக்குக் கடிதம் எழுதியும் பயனில்லை.

ஒரு நெடுமூச்சு விட்டான். அந்தோனி– 'ஆம்மி, நீ எப்படி இந்த மாதிரி கல்லாகிவிட்டாய்? நீ என் இரண்டாவது தாய். உன்னை இழந்ததில் எனக்கு எவ்வளவு வேதனை தெரியுமா?... சுலதா, நீயும் என்னை மறந்துவிட்டாயா? உன் அண்ணனின் அன்பு கொஞ்சம் கூட நினைவு வரவில்லையா உனக்கு? என்ன ஆச்சரியம்!... ஆம்மி உயிரோடிருக்கிறாளோ இல்லையோ தெரியவில்லை...!'

ஆம்மியையும் சுலதாவையும் பற்றிய நினைவில் அவனுடைய கண்கள் பனித்தன. அவன் அமைதியின்றி வராந்தாவில் உலாவினான்.

மேரியின் நினைவிலிருந்துதான் இந்த நினைவுகள் கிளைத்தன... வெகு நாட்களாக மேரியிடமிருந்தும் கடிதம் இல்லையே...

அந்தோனியின் மனச் சஞ்சலம் நாளுக்கு நாள் வளர்ந்தது.

ஒரு நாள் அவன் நண்பகல் உணவுக்குப் பின் வீட்டில் இருக்கப்பிடிக்காமல் ஜிப்பாவையணிந்து கொண்டு வெளியே வந்தான்.

கடுமையான வெயில். ரஸ்தாவில் ஜன நடமாட்டம் அதிகமில்லை. இது சாப்பாட்டு நேரம் – பொதுமக்கள், தொழிலாளிகள், குமாஸ்தாக்கள் எல்லோருக்கும். சாப்பாட்டு விடுதிகளில் ஒரே கூட்டம்.

அந்தோனி கடற்கரை ரஸ்தாவில் தெற்கு நோக்கிச் சென்றான்.

துறைமுகத்தைக் கடந்ததும் ஹார்வி மில்லின் விருந்தினர் மாளிகை. அதையடுத்து உப்பு அலுவலகம். அதற்கப்பால் மாலையில் மீன் சந்தை கூடுமிடம். ஆனால் சந்தை கூட இன்னும் மூன்று மணி நேரமாகும். அப்போது தான் மீன்பாடகுகள் கடலிலிருந்து திரும்பும்.

இடது புறத்தில் நீலக்கடல் வெயிலில் மின்னுகிறது. சிறிய சிறிய அலைகள் அடித்த பஞ்சுபோல் எழுகின்றன. காற்று மெதுவாக வீசுகிறது. ஏதேதோ நினைத்துக் கொண்டே நடக்கிறான் அந்தோனி–ஹைகமிஷன் அலுவலக வேலை – மேரி ஆம்மி... நீர் மூழ்கி மீனவர் - மரமறுக்கும் பாட்டாளிகள்–பீட்டர்...

திடீரென்று அவன் தன்னினைவுக்கு வந்தான். எதிரில் ஒரு பூங்கா–மாஞ்செடிகள் நிறைந்த அமைதியான இடம். அவன் பூங்காவுக்குள் நுழைந்தான்.

"இந்தப் பூங்கா எவ்வளவு பெரிதாகிவிட்டது! நான் இவ்வளவு நாளாகக் கவனிக்கவேயில்லை. எவ்வளவு மரங்கள்! முன்பெல்லாம்- சிறுவயதில்–வண்டியில் இங்கு வருவதுண்டு..."

கல கல வென்று சிரிப்பொலி – ஜலதரங்கம் போல் இனிமையாக...

அந்தோனி ஆச்சரியத்துடன் இங்குமங்கும் பார்த்தான். ஒரு புதரின் மறைவில் ஒரு பருவப் பெண். அவள் விரல்களுக்கிடையே ஒரு சிகரெட். அவள் அதை வாயில் வைத்துப் புகைக்க முயற்சிக்கிறாள். அவளுக்கருகில் ஒரு வாலிபன். கையை நீட்டி அவளைத் தடுத்து அந்த சிகரெட்டைப் பிடுங்கிக் கொள்ளப் பார்க்கிறான்.

பார்த்ததுமே அவனை அடையாளம் கண்டு கொண்டான் அந்தோனி. அவன பீட்டரிடம் வேலைபார்க்கும் சூடிகையான பையன்–சிங்கராயன்.

"சிகரெட் குடிக்காதே! குடிச்சால் எனக்குக் கெட்ட கோபம் வரும். பெண் பிள்ளை சிகரெட் குடிக்கக் கூடாது. என்கிட்டே கொடுத்துடு!..."

"குடிச்சால் என்ன?" சிரித்துக்கொண்டே கேட்டாள் அவள்.

"மீசை முளைக்கும்... பெண் பிள்ளைக்கு மீசை முளைச்சால் நல்லாயிருக்குமா?"

"ஐயையே!" முகத்தைக் கோணிக் கொண்டாள் அவள். "எங்க காலேஜிலே உடற்பயிற்சி சொல்லித்தர்ற சிஸ்டர் மார்கரெட்டுக்கு மீசை முளைச்சிருக்கு. பார்த்தால் ஆண்பிள்ளையா, பெண் பிள்ளையான்னு தெரியாது. ஹா ஹா ஹா..." விழுந்து விழுந்து சிரித்தாள் பெண்.

அங்கிருந்து நகர்ந்து விடுவதுதான் நல்லதென்று அந்தோனி நினைத்தான். ஆனால் ஏனோ அவன் கால்கள் நகரவில்லை.

அவர்களிருவரும் உலகத்தைப் பற்றிய நினைவேயில்லாமல் தங்களிலேயே மூழ்கியிருக்கிறார்கள்...

தன் காதலின் தொடக்க காலத்தில் தான் மேரியுடன் கியூ பூங்காவில் கழித்த நாட்கள் அந்தோனிக்கு நினைவு வந்தன. அப்போதெல்லாம் அக்கம்பக்கத்தில் நிறையப் பேரிருந்தாலும் அவளுக்கு அவர்களைப் பற்றிய நினைவே இருக்காது. அவள் அந்தோனியைப் பாம்பு மாதிரி சுற்றிக் கொண்டு கட்டிக் கொள்வாள்...

"நான் உனக்கு சிகரெட் தரமாட்டேன். சிகரெட் குடிச்சால் என்ன நாத்தம் வருது வாயிலே! சீ!" சிகரெட்டைத் தூக்கியெறிய முற்பட்டாள் அந்தப் பெண்.

"ஜேன், நீ நல்ல பொண்ணுன்னா! இது ரொம்ப விலையுசந்த சிகரெட்டாக்கும். என்கிட்டே கொடுத்துடு! இதோட விலை ஒண்ணேகாலணா..."

"பெரிய பிரமாதம், ஒண்ணேகாலணா!" என்று சொல்லிக் கொண்டே சிகரெட்டை எறிந்து விட்டாள் ஜேன். சிங்கராயன் ஜேனை இறுகத் தழுவிக் கொண்டாள். ஜேன் அவனுடைய பரந்த மார்பில் புதைந்து கொண்டாள்.

இந்தக் காட்சி அந்தோனிக்கு மிகவும் மகிழ்ச்சியளித்தது. வெளிநாட்டுத் திரைப்படங்கள் பார்த்தால் கூட இவ்வளவு மகிழ்ச்சி ஏற்படாது. காதலரிருவரும் இளமைப் பருவத்தினர். இரகசியமாகக் காதல் புரிகிறார்கள். இதைவிட இன்பமான விஷயம் உலகத்தில் ஏது?

சிங்கராயனின் காதல் விவகாரம் பீட்டருக்குத் தெரியுமோ?... அவளைப் பார்த்தால் பெரிய குடும்பத்துப் பெண் போலிருக் கிறது... இந்தக் காதல் நிலைக்குமா? ஏழை-பணக்கார வேற்றுமை மிகப் பெரிய வேற்றுமை- ஆகாயத்துக்கும் பாதாளத் துக்கும்போல...

"நீ பெரிய ஆளு!... நீங்க எப்படி அன்னிக்கு ராத்திரி சேரியிலே நெருப்பையணைச்சீங்க? உன் வாயாலேயே சொல்லு, கேக்கறேன்..." ஜேன் சொன்னாள்.

"பெரியண்ணன் சொன்னாரு, ராத்திரி பன்னெண்டு மணிக் குள்ளே போய்ச் சேர்ந்துடணும்னு. வேக வேகமாத் துடுப்புப் போட்டோம். ஆனால் ரொம்பப் பலமான எதிர்க்காத்து. பட கோட்டறது ரொம்ப சிரமமாயிருந்தது. நான், மைக்கேல், மாத்தியூ, நாதன், கோமஸ். நாங்கபோய்ச் சேர்ந்தபோது ஒரு வீட்டுக் கூரை பத்திக்கிட்டு எரியுது. நாங்க கூச்சல் போட்டுக் கிட்டு ஓடினோம். நெருப்பு வச்ச போக்கிரியும் அந்த வழியா ஓடி வந்தான். மைக்கேல் அவனைப் பிடிச்சுட்டார். அவனோட கைகளைப்பின் கட்டாகக் கட்டிப் படகிலே கொண்டு வந்து

விட்டுட்டு ஓடினோம் நெருப்பையணைக்க. பெரியண்ணன் முன்னாலேயே போயிட்டார். நல்ல வேளையா நாங்க போய்ச் சேர்ந்தோம். இல்லாட்டிப் பெரியவங்களும் குழந்தை குட்டிகளும் வெந்து போயிருப்பாங்க. எல்லாரும் தூங்கிக்கிட்டு இருந்தாங்க. நாங்கபோய் அவங்களை எழுப்பிவிட்டோம். அதுக்கப்பறம் மண் வெட்டினோம், நெருப்புமேலே மண்ணைக் கொட்டி அணைச்சோம். ஜனங்க ஒரேயடியா அழுறாங்க, ஒரே அமளி, பயங்கரக் காட்சி...

"நெருப்பை அணைச்சப்புறம் படகுக்குத் திரும்பி வந்து அந்தப் போக்கிரிக்குத் தண்டனை... அவனைத் தண்ணிக்குள்ளே அமுக்கினோம். அவன் நிறையத் தண்ணியைக் குடிச்சுப் பாதி உசிருபோன நிலையிலே குத்தத்தை ஒப்புக்கிட்டான். அவனை அனுப்பினவன் கார்தோஸாவோட ஆளு கிரிகிரிலோபோ. அந்த ஆளு ஒரேயடியா அழுறான், 'நான் ஏழை, என்னை விட்டுடுங்க'ன்னு கெஞ்சினான். பெரியண்ணனுக்கு ரொம்ப இரக்க மனசு. பூரா விசயத்தையும் எழுதி அதிலே அவன்கிட்டே கையெழுத்து வாங்கிக்கிட்டு அவனை விட்டுடுங்கன்னுட்டார்... ஆனால் எனக்கு ஒரு ஆச்சரியம்..."

"என்ன?"

"பெரியண்ணனுக்கு இந்த விசயம் எப்படித் தெரிஞ்சுதுன்னு..."

"என் மூலமாத்தான்..." ஜேன் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"உன் மூலமாவா?"

"ஆமா .. நான் தான் இந்த சதித்திட்டத்தை சிஸ்டர் சோபியா கிட்டே சொன்னேன்..." ஜேன் முழுக்கதையையும் சொன்னாள்.

அவள் கூறியது அந்தோனிக்குத் தெளிவாகக் கேட்டது.

சிஸ்டர் சோபியாவா? அவள் யார்?... அவளுக்கும் பீட்டருக்கும் என்ன தொடர்பு?

யோசித்தவாறே கடற்கரை ரஸ்தாவில் நடந்தான் அந்தோனி மாலை மீன் சந்தையில் பீட்டரைச் சந்திக்க எண்ணினான். ஆனால் மீன் படகுகள் திருமபி வர இன்னும் ஒரு மணி நேரமாகும். தொலைவில் கடலில் தெரிந்த படகுகளில் பீட்டரின் படகைக் காணோம்.

அந்தோனி கடற்கரை ரஸ்தா வழியே வீட்டை நோக்கிச் சென்றான், கார்தோஸா பிரதர்ஸ் அலுவலகத்துக்கு முன்னால் இன்னும் கூட்டம் சேரவில்லை. வௌவால் போல் தோற்றமளித்த ஒருவன் நடைபாதையில் நின்று கொண்டு கைகால்களை ஆட்டியவாறு ஜோக்கிம் மாசாதோவுடன் ஏதோ பேசிக் கொண்

டிருந்தான். இதையெல்லாம் பார்த்துக்கொண்டு அந்தோனி அந்த இடத்தைக் கடந்தான்.

கடற்கரை ரஸ்தாவில் நல்ல கூட்டம். குதிரை வண்டிகள்–சாமான்களை ஏற்றிக்கொண்டு மாட்டுவண்டிகள்–கூலிகள், பாட்டாளிகள்...

அந்தோனி நெரிசலைக் கடந்து வீட்டை நெருங்கினான், அவன் சந்துக்குள் நுழைந்தபோது தபால்காரனைச் சந்தித்தான் தபால்காரன் அவனிடம் இரண்டு கடிதங்களைக் கொடுத்தான்.

இரண்டுமே வெளிநாட்டுக் கடிதங்கள்தாம். ஒன்று தடிமனான கவர். இன்னொன்று நீல நிற வெளிநாட்டு விமானக் கடிதம். மேரியிடமிருந்து கடிதமில்லை. அந்தோனிக்கு நெஞ்சில் வலி. அவன் தன் அறைக்குள் சென்று கடிதங்களைப் பிரித்தான்.

கவர் டாக்டர் சின்ஹாவிடமிருந்து வந்திருந்தது. ஈசலிறகு போல் மெல்லிய காகிதத்தில் டைப் அடித்த ஐந்து பக்கங்கள்–

"ஹைகமிஷனிலிருந்து உன் விலாசத்தைத் தெரிந்து கொண்டு எழுதுகிறேன். முக்கியமான விஷயம்... உனக்குத் தெரிந்திருக்க வேண்டும்..." இதன்பிறகு ஜீப்பேர ஊழல் பற்றி இரகசியத் தகவல்கள்–நண்பர் கிருஷ்ணமேனன் இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டிருப்பது பற்றிக் கவலை...

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தெட்டாம் ஆண்டில் காஷ்மீரிலும் ஹைதராபாதிலும் போர் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. அதற்கு நிறைய ஜீப்புகள் தேவைப்பட்டன. ஹைதராபாதுக்கு மட்டுமே இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட ஜீப்புகள் தேவை. இந்திய அரசாங்கம் இந்திய ஹைகமிஷனை ஜீப்புகள் வாங்கும்படி கேட்டுக் கொண்டது.

கிருஷ்ணமேனனுக்கு எபபோதுமே நிர்வாக இயந்திரத்தைப் பிடிக்காது. அனுமதிக்கப்பட்ட நிர்வாக வழிமுறைப்படி எந்தக் காரியமும் செய்ய அவர் விரும்புவதில்லை. இதனால்தான் சிவப்பு நாடாத் தாமதம் ஏற்படுகிறது என்பது அவரது கருத்து. ஆகவே அவர் தம் சொந்தப் பொறுப்பில் ஜீப்புகள் வாங்க ஏற்பாடு செய்தார். இ. எச். போர்ட்டர் என்ற ஆங்கிலேயர் ஆன்ட்டிமிஸ்டான்டிஸ் என்ற கம்பெனியை நடத்தி வந்தார். அவர் இரண்டாம் யுத்த காலத்து ஜீப்புகளைப் புதுப்பித்து உதிரி உறுப்புகளுடன் அனுப்ப ஒப்புக் கொண்டார். கிருஷ்ணமேனன் அவருடன் ஒப்பந்தம் கையெழுத்திட்டு அவர் கேட்டுக் கொண்டபடி முன்பணமாக எண்பத்தோராயிரம் பவுனும் கொடுத்தார். ஆகஸ்ட் மாதத்தில் முன்பணம் கொடுக்கப்பட்டது.

பழைய ஜீப்புகள் இத்தாலியில் இருந்தன. போர்ட்டரே அவற்றைப் பார்வையிடுவதற்கான ஏற்பாடுகளும் செய்தார். பார்வையிட்டவன் மோசக்காரன் என்பது பிற்பாடு தெரிய வந்தது.

வருடக்கடைசியில் ஒப்பந்தப்படி தொண்ணுத்தோராயிரம் பவுன் முன்பணம் கொடுக்கப்பட்டது. நாற்பத்தொன்பதாம் ஆண்டு மார்ச் மாதத்தில் நூற்றி ஐம்பத்தைந்து ஜீப்புகள் சென்னை துறைமுகத்தில் வந்திறங்கின.

பாதுகாப்பு இலாகா அதிகாரிகள் ஜீப்புகளைப் பார்வையிட்டு அவை உதவாக்கரை என்று கருத்துத் தெரிவித்தனர். ஒப்பந்தப் படி உதிரி உறுப்புகளும் வந்து சேரவில்லை. ஆகவே ஒப்பந்தம் ரத்து செய்யப்பட்டது. இந்திய அரசாங்கத்துக்கு ஒரு லட்சத்து நாற்பத்தி மூவாயிரத்து நூற்றியறுபத்திரண்டு பவுன் நஷ்டம். இதற்குக் கிருஷ்ணமேனனே பொறுப்பு எனக் கருதப்பட்டது. இது பற்றி இந்தியப் பாராளுமன்றத்தில் காரசாரமான விவாதம் நடந்தது. பார்வர்டு பிளாக் தலைவர் சரத்போஸ் கிருஷ்ண மேனனைக் கடுமையாகச் சாடினார். காங்கிரஸ் வலது சாரியும் சரத்போஸுக்கு ஆதரவளித்தது.

இந்திய அரசியலில் எதையும் லட்சியம் செய்யாத பேர் வழி கிருஷ்ணமேனன். அவர் யாருக்கும் அடங்கமாட்டார். அவரது ஒரே லட்சியம் இந்திய விடுதலையாக இருந்தது. அவருடைய தந்தை அவரை பாரிஸ்டராக்க முயற்சி செய்தார். ஆனால் கிருஷ்ணமேனனுக்கு அந்தத் தொழில் பிடிக்கவில்லை. இது காரணமாக அவருக்குத் தன் தந்தையுடனிருந்த தொடர்பு அறு பட்டது. அவர் இந்தியாவைவிட்டே போய்விட்டார். ஆனிபெசன்ட் டின் பண உதவி பெற்று ஆயிரத்துத் தொள்ளாயிரத்தி இருபத்து நான்காம் ஆண்டு ஜூன் மாதம் பம்பாயிலிருந்து புறப்பட்டுப் போனவர் முப்பத்திரண்டாம் ஆண்டில்தான் இந்தியா லீகின் சார்பில் ஒரு விசாரணைக்கமிஷனின் உறுப்பினராக இந்தியா வந்தார். கமிஷனின் மற்ற உறுப்பினர்கள் பிரிட்டிஷ் பாராளுமன்ற உறுப்பினர்களான மோனிகா ஒயிட்லி, எலென் வில்கின்சன், லியோனார்டு மாட்டர்ஸ் ஆகியோர்.

இந்திய விடுதலைக்கு ஆதரவை பிரிட்டிஷ் மக்களிடையே வளர்க்க அரும்பாடு பட்டவர் கிருஷ்ணமேனன். இப்பணியில் அவருக்கு இணை எவருமில்லை. அவர் புகைபிடிப்பதில்லை, மது அருந்துவதில்லை, ஆடம்பர வாழ்வு வாழவில்லை. அவர் பெண்ணுறவைத் தவிர்த்தார், புலால் உண்பதில்லை. அவர் ஓர்

அதிசயப் பிறவி. அவர் பண்டித நேருவைத் தவிர யாரையும் மதிப்பதில்லை.

ஆகையால் அரசியல் சூழ்ச்சிக்காரர்கள் அவரை வெறுத்தார்கள், அவரிடம் பயந்தார்கள். அவருக்கு நாற்புறமும் விரோதிகள். இந்தியப் பாராளுமன்றத்தில் அவர் கடுமையாகத் தாக்கப்பட்டார். கிருஷ்ணமேனன் எதிர்ப்பாளர்களை நேருவால் சமாளிக்க முடியவில்லை.

டாக்டர் சின்ஹா தம் கடிதத்தில் எழுதியிருந்தார்— "ஜீப் பேர விவகாரத்தில் குற்றம் முற்றிலும் மேனனுடையதல்ல. அப்போது லண்டனில் பாதுகாப்பு இலாகா ஆலோசகர் ஒருவர் இருந்தார். அவர் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்ட பிறகே மேனன் அதில் கையெழுத்திட்டார்."

சின்ஹா மேலும் எழுதியிருந்தார் — "இந்தக் கிருஷ்ணமேனன் எதிர்ப்பைத் தூண்டிவிடுபவர்கள் ஒரு சில இந்தியத் தொழிலதிபர்கள். பாதுகாப்பு இலாகாவைச் சேர்ந்த சில பெரிய அதிகாரிகள் அவர்களுக்கு ஆதரவளிக்கிறார்கள். இன்னொரு கம்பெனியின் தயாரிப்பான ஜீப்புகளை வாங்க விரும்புகிறார்கள் அதிகாரிகள். காரணம், அந்த வியாபாரத்தில் அவர்களுக்குக் கணிசமான கமிஷன் கிடைக்கும்..."

சின்ஹா வருத்தத்துடன் எழுதினார்— "மேனன் போன்ற உண்மையான, ஒழுக்கம் வாய்ந்த, லட்சிய ஈடுபாடும் தியாக மனப்பான்மையும் கொண்ட ஒருவரை நிர்வாகம் இப்படி அவமானப் படுத்தினால் நாமெல்லாரும் எந்த மூலை!... இங்கே விசாரணை நடக்கிறது. டில்லி பாராளுமன்றத்தில் ஏராளமான குற்றச்சாட்டுகள். நீயும் ஜாக்கிரதையாக இரு. இந்த விஷயத்தில் உன் நிலை என்ன என்பதையும் சிந்தித்துப் பார்த்துக்கொள். சென்னையையடுத்து ஆவடியில் அந்த நிராகரிக்கப்பட்ட நூற்றைம்பத்தைந்து ஜீப்புகளும் வெயிலில் காய்ந்து மழையில் நனைந்து கொண்டிருக்கின்றன. நீ உனக்குத் தெரிந்த மோட்டார் இஞ்சினீயர் யாரையாவது அழைத்துக் கொண்டு அங்கேபோய் அவற்றைப் பார்வையிட முயற்சி செய்து அவைபற்றிய உண்மை நிலையை எழுது. கிருஷ்ணமேனனைச் சமாளிக்க முடியவில்லை. அவர் வேலையை விட்டுவிட முடிவு செய்திருக்கிறார். அதில் நிறைய ஆபத்து..."

இன்னொரு கடிதத்தை எழுதியவன் அந்தோனியின் இந்தியா ஹவுஸ் நண்பன் தத்தா. அவன் எப்போதுமே ஹாஸ்ய உணர்வுள்ளவன். அவன் வேடிக்கையாக எழுதியிருந்தான்- "உன்னுடைய பறவை இப்போதெல்லாம் இன்னொரு கூண்டில் உட்

கார்ந்து கொண்டு இஞ்சியும் கொத்துக்கடலையும் தின்று கொண்டிருக்கிறது. இந்தியா ஹவுஸில் வேலை பார்ப்பவர் ஒருவருடன் அது நாடகம் சினிமா என்று சுற்றிக் கொண்டிருப்பதை அடிக்கடி பார்க்கிறேன். அந்த மனிதர் நமக்குத் தெரிந்தவர் தான்; நண்பர் கூட. இருந்தாலும் அவருடைய பெயரைச் சொல்ல விரும்பவில்லை... நான் முன்னேயே உன்னிடம் சொன்னேன், 'உன் பறவையின் காலைச் சங்கிலியால் கட்டி விடு' என்று நீ கேட்கவில்லை. எப்போது பறவை உன் கையைவிட்டுப்போய் விடுமென்று சொல்லமுடியாது. நீ உடனே வா... இங்கே ஜீப் பேர ஊழல் காரணமாக ஒரே அமளி. இங்கு வந்தபின் எல்லாம் தெரிந்துகொள்வாய்..."

அந்தோனி இரு கடிதங்களையும் வைத்துக் கொண்டு சிந்தனையிலாழ்ந்தான்...



ஆசிரியர் ஹம்சத்வனி ராகத்தில் வர்ண ஜாலங்களைச் சொரிகிறார். முத்துசாமி தீட்சிதரின் பாடல் 'வாதாபி கணபதிம் பஜேஹம்' இப்போது பாட்டின் வார்த்தைகளைப் பாடுவது முடிந்து வெறும் ராக இசை தொடர்கிறது.

இது அந்தோனிக்குப் புதிய அனுபவம். இவ்வளவு பெரிய வாத்தியத்தின் இசையை இவ்வளவு அருகிலமர்ந்து கேட்பது அவன் வாழ்க்கையில் முதல் தடவை. அவன் இந்திய சாஸ்திரீய இசை என்ற பெயரை மட்டுமே கேட்டிருக்கிறான். அவனுக்கு அது முற்றிலும் பரிச்சயமற்ற விஷயம்-லத்தீன், கிரேக்க மொழிகள் போல. ஆனால் இப்போது அது கேட்க நன்றாகத் தானிருக்கிறது. ஏன் நன்றாயிருக்கிறது என்று அவனுக்குச் சொல்லத் தெரியாது. பீட்டர் கண்களை மூடிக் கொண்டு மெய் மறந்து கேட்டுக் கொண்டிருக்கிறான். ஆசிரியரின் விரல்கள் எக்ஸ்பிரஸ் ரயிலின் வேகத்தில் தாளம் தவறாமல், லயம் தவறாமல் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அந்தோனிக்கு ஒரே ஆச்சரியம்-பார்ப்பதற்கு மிகவும் தளர்ந்தவராகக் காணப்படும் இந்த மனிதர் இவ்வளவு அழுத்தமாக எப்படி வீணை இசைக்கிறார்?

ஆசிரியர் முதலில் கண்களை மூடியவர்தான், இன்னும் திறக்கவில்லை.

ஒரு பெண்மணி சப்தம் செய்யாமல் மெதுவாக அடியெடுத்து வைத்து வந்து அந்தோனிக்கருகில் அமர்கிறாள். அவள் கொண் டையில் அணிந்திருந்த குண்டு மல்லிகைச் சரம் காற்றில் மணத்தை நிரப்புகிறது.

அந்தோனி ஓரக் கண்ணால் கவனித்தான். இளம் பெண்தான். மாநிறம். ஆனால் நல்ல அழகி. சாதாரண விலையுள்ள கோடு போட்ட மதுரைப் புடைவையணிந்திருககிறாள். அதுவே அவளுக்கு மிகவும் எடுப்பாக இருக்கிறது. அவளது மூக்கின் இரு பக்கங்களிலும் புஷ்பராக மூக்குத்திகள். அவள் உட்கார்ந்த துமே கைகளால் தாளம் போடத் தொடங்கினாள். கொஞ்சம் கொஞ்சமாக அவளுடைய கண்களும் மூடிக் கொண்டன. மேற் குப்புறத்து ஜன்னல் வழியே வெயிலின் நீண்ட கோடு அவளது முகத்தில் விழ, மூக்குத்திக் கற்கள் ஜொலிக்கின்றன. அமைதி தவழும் முகம் ....

அவளை மிகவும் பிடித்துவிட்டது அந்தோனிக்கு. வாத்திய இசை முடிந்தது. அறைக்குள்ளிருந்த வெளிச்சமும் குறைந்து விட்டது. ஆசிரியர் தலை நிமிர்ந்தார், கண்களைத் திறந்தார், கவனமாக வீணையைத் தரையில் வைத்துவிட்டு நெற்றி வியர் வையைத் துடைத்துக் கொண்டார்.

பீட்டரும் கண்களைத் திறந்தான்,"ரொம்ப சந்தோசமா இருந் தது ஐயா. நான் அப்பவே இருட்டிப் போயிருக்கும்னு நினைச் சேன். ஆனால் இப்போ தான்..."

"நீ நினைச்சதிலே ஆச்சரியமில்லேப்பா. இது அந்தி வேளைக்குரிய ராகந்தான்..." ஆசிரியரின் சளியடைத்துக் கொண் டிருந்த தொண்டையிலிருந்து வெளிவந்த குரலில் நடுக்கம் இருந்தது. அவர் இரு முறை தொண்டையைக் கனைத்துக் கொண்டு பிறகு அந்தோனியைக் கேட்டார், "உங்களுக்கு எப்படி இருந்தது?"

"ரொம்ப நல்லாயிருந்தது... ஆனால் எனக்கு இதெல்லாம் புரியாது...."

திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்து ஆசிரியர் திடுக் கிட்டார். இப்போதெல்லாம் அவருக்குக் கண் பார்வை சரி யில்லை. அதிலும் வெளிச்சம் குறைவாயிருந்தால் கேட்கவே வேண்டாம்.

அவர் கண்களைக் கசக்கிக் கொண்டு, "நீங்க, நீங்க... என்று பேசத் தொடங்கியதும் அவள் எழுந்து அவர் கால்களில் விழுந்து வணங்கிவிட்டுச் சொன்னாள், "நான் கமலா".

பீட்டர் சொன்னான், "இவங்க எங்க ஊர்ப் பள்ளிக் கூடத்துத் தலைமை ஆசிரியை மிஸ் கமலா. என்னோடயே வரதாச் சொல்லியிருந்தாங்க..." பிறகு கமலாவைக் கேட்டான், "நீங்க ஏன் லேட்டு?"

கண்களை மூடிக் கொண்டு நெஞ்சுக்குள் தடடித் தடவினார் ஆசிரியர். நகைப் பெட்டியின் வெல்வெட்டு மூடியைத்திறந்து கொண்டு இந்த முகம் எப்படி வெளியே வந்தது?

கமலா பீட்டரிடம் சொன்னாள், "நான் கிளம்பற சமயத்திலே ஸ்கூல் செயலாளர் கூப்பிட்டனுப்பினார் ஏதோ காரியமா. அங்கே கொஞ்ச நேரம் உட்கார வேண்டியதாச்சு. அதனாலே ரெண்டரை மணி பஸ்ஸைப் பிடிக்க முடியல்லே ...."

பீட்டர் ஆசிரியரிடம் சொன்னான், "வர்ற ஞாயித்துக்கிழமை வெங்கி அய்யரோட அறுபதாண்டு நிறைவு விழா. அவருக்கு சனிக்கிழமையோடே அறுபது வயசு முடியுது. இவங்க ஸ்கூல்லே விழாவை நடத்த விரும்பனாங்க. இந்தப் பிராந்தியத்திலே அவரை உங்களுக்குத் தெரிஞ்ச மாதிரி வேறே யாருக்கும் தெரியாது. அதனாலே நீங்க விழாவுக்கு வந்து அவரைப் பத்தி நாலு வார்த்தை சொன்னா....."

"கூடவே கொஞ்சம் வீணையும் வாசிக்கணும் நீங்க...." தயக்கத்துடன் கேட்டுக் கொண்டாள் கமலா. "வீணை வாசிப்பிலே உங்களுக்கு இணை இல்லே..."

முழுப்பேச்சும் ஆசிரியர் காதில் நுழையவில்லை. அவரது கவனம் எங்கோ சென்று விட்டது. அவர் மனதுக்குள் பெரும்புயல் வீசியது...

"சரி தானே? ....நாங்க விழாவன்னிக்கு வந்து உங்களைக் கூட்டிக்கிட்டுப் போறோம்...." என்றாள் கமலா.

இப்போதும் ஆசிரியரிடமிருந்து பதில் இல்லை.

பீட்டர் சொன்னான், "அப்போ நாங்க வரோம் ..."

ஆசிரியர் எப்படியோ ஒரே வார்த்தையில் பதிலளித்தார். "சரி...."

எல்லோரும் அவரை வணங்கிவிட்டு வெளியே சென்றனர். ஆசிரியர் அரையிருட்டில் தனியே இருந்தார்.

ரத்னா... இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முந்தைய அதே ரத்னா... இரண்டு மனிதர்களின் முகம் எப்படி ஒரே மாதிரி இருக்க முடியும்? ஆச்சரியம் தண்ணீர் நிரம்பித் தளும்பும் ஏரியை

யொத்த மை விழிகள். புருவங்களுக்குக் கீழேயுள்ள பகுதி சற்றுப் புடைத்திருக்கிறது. அகன்ற நாசித்துவாரம் பளபளப்பான மூக் குத்தி. சாறு நிரம்பிய ஆரஞ்சுச்சுளை போன்ற உதடுகள். அதே முகம்தான். நிறம் மட்டும் ரத்னா மாதிரி இல்லை மாநிறம் தான். இருந்தாலும் ரத்னாவையே நினைவூட்டுகிறாள். இந்தப் பெண் யார்?

முதலில் பார்த்த போது ரத்னாவென்றே தவறாக நினைத்து விட்டார் அவர்.

நெஞ்சைப் புரட்டியெடுத்துக் கொண்டு ஒரு நெடுமூச்சு அவரி டமிருந்து வெளிப்பட்டது. அவரது மனத்திரையில் ஒவ்வொன் றாகச் சித்திரங்கள்......

☆ ☆ ☆

ஆனிமாதம். நரசிம்ம ஜயந்தி விழாவை முன்னிட்டு மெலட் டூரில் பாகவதமேளா நிகழ்ச்சி. கிராமத்துக் கோவிலின் கடவு ளின் பெயர் வரதராஜசுவாமி. பெரிய கோவில் கோவிலுக்கு முன் னால் நூறடி நீளம்கொண்ட, பனையோலை வேய்ந்த பெரிய மண்டபம்.

பாகவத மேளாவுக்கு முன்னூறாண்டுப் பாரம்பரியம் உண்டு. பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சாவூரை ஆண்டு வந்த அச்சுதப்ப நாயக்கர் அந்தக் கிராமம் முழுவதையும் அதையொட்டிய நிலத் தையும் ஐந்நூறு பிராமணர்களுக்குத் தானம் செய்தாராம். தானத் தின் நோக்கம் மென்கலைகளுக்கு ஊக்கமளிப்பது. அதுமுதல் பாகவதமேளா தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

உற்சவர் கருவறையை விட்டு வெளியே வந்து அரங்கத்தில் எழுந்தருளியிருக்கிறார். அவர் அமர சிம்மாசனம் போடப்பட்டி ருக்கிறது. பேரரசரைப் போன்ற அலங்காரம் அவருக்கு. தங்கம், வெள்ளி, வைரம், முத்து நகைகள். அவற்றுக்கு மேலே பெரிய பெரிய மலர் மாலைகள்.

மண்டபத்தில் ஒரே ஜனத்திரள். எள் விழ இடமில்லை. ஒரு புறம் ஆண்கள், இன்னொருபுறம் பெண்கள். பெண்களின் தலை யில் பிச்சிப் பூ, குண்டு மல்லிகைச் சரங்கள் அரங்க மெங்கும் மலர்ப் பூங்கா போல் மணம் பரப்புகின்றன. இந்த மணத்துடன்

கோவிலின் சாம்பிராணி, ஊதுபத்தி, சந்தனத்தின் தீவிர வாசனையும் சேர்ந்து கொண்டது.

ஆனி மாதத்தின் இறுக்கத்தையும் சூட்டையும் பொருட்படுத்தாமல் அக்கம்பக்கத்து இருபத்தைந்து முப்பது கிராமத்து மக்கள் விழாவுக்கு வந்திருந்தனர். தெற்கே தொலைவிலிருந்து கூட நிறையப் பேர் வந்திருந்தார்கள். பெரும்பாலோர் கலை ரசிகர்கள், பாடகர்கள், வாத்திய இசைக் கலைஞர்கள், நடனக் கலைஞர்கள். அவர்கள் மேளா நடைபெறும் இந்த ஒரு சில நாட்களுக்காக வருடம் பூராவும் காத்திருப்பார்கள்.

இன்று சீதா கல்யாண நாடகம். இந்தப் பக்கத்தில் மிகவும் புகழ்பெற்ற பாகவதர் கோபால கிருஷ்ண சாஸ்திரியாரின் படைப்பு. மேடையில் பளபளப்பாகத் தேய்க்கப்பட்டு, சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய பெரிய பெரிய குத்து விளக்குகள், ஒவ்வொரு விளக்கிலும் அரைப்படி எண்ணெய் ஊற்றலாம். அவற்றில் மாட்டுத் தும்பு போல தடிமனான திரிகள். மண்டபத்திலிருந்து கோவில் வரையிலும் கோவிலுக்குள்ளும் எண்ணற்ற விளக்குகள்.

இரவு மணி பத்து. தீபாராதனை முடிந்து வெகு நேரமாகி விட்டது. இன்று ராமனுக்கு அரங்கேற்றம். குரு நடேசய்யர் தாமே ஒப்பனையறையில் இருந்து கொண்டு சீடனுக்கு அலங்காரம் செய்கிறார். மற்றவர்களும் ஒருவர் ஒருவராக அவரை வணங்கினர். நடேசய்யர் அவர்களனைவருக்கும் ஆசி கூறிவிட்டு அவையின் முதல் வரிசையில் வந்து அமர்ந்தார். பல புகழ்பெற்ற இசை, நடனக்கலைஞர்கள் அவருக்கருகே அமர்ந்திருந்தனர்.

ராமன் நாடகத்திலும் ராமனாக நடிக்கப் போகிறான். நடேசய்யரின் இன்னொரு சிடன் சீதையாக நடிக்கவிருக்கிறான். தசரதன், ஜனகன், விசுவாமித்திரர் பாத்திரங்களில் பல புகழ் பெற்ற நடனக்கலைஞர்கள்.

இந்த நாடகங்களில் பரத முனியின் நாட்டிய சாத்திரம் முழுமையாகக் கடைப்பிடிக்கப்படும். தூய்மையான மரபுவழி. அரங்கம்கூட நாட்டிய சாத்திர விதிகளுக்கேற்பவே அமைக்கப்படும். இந்தப் பாரம்பரியத்தைப் பாதுகாத்து வருகிறார் நடேசய்யர்.

முதன்முதலில மேடையில் கோணங்கி தோன்றுகிறான். அவன் முகத்தையும் தொளதொள உடையையும் நடையையும் பார்த்தாலே சிரிப்பு வரும். அவன் கோமாளித்தனம் செய்கிறான் வேடிக்கை வேடிக்கையாகப் பேசுகிறான்–''சீதைக்குக் கல்யாணம் நடக்கப்போகுது. எல்லாரும் சத்தமில்லாம இருந்து பார்க்

கணும். சத்தம் போட்டீங்கன்னா உங்க மாமியார் மண்டையைப் பிளந்துடுவா. சத்தம் போடற குழந்தைகள் நாளைக் காலையிலே பன்னியா மாறிடுவாங்க!...."

மேடையின் பின்புறத்தின் மங்கிய வெளிச்சத்தில் வாத்தியக் கலைஞர்களும் பின்பாட்டுக்காரர்களும் உட்கார்ந்திருக்கின்றனர்.

சங்கராபரண ராகத்தில் கடவுள் துதி பாடப்படுகிறது. வீணை, வயலின், கடம் இன்னும் பல பக்க வாத்தியங்கள். பிறகு முன்னுரையாக தசரதனின் சபையின் வர்ணனை.

ஒரு சிறு பையன் கிராமத்தைச் சேர்ந்தவன்தான் பிள்ளையார் வேடம் போட்டுக் கொண்டு மேடையில் தோன்றுகிறான். கடும் நோய்வாய்ப்பட்டவர்கள் நோன்பிருந்து இந்த வேடத்தில் நடிப்ப தாகப் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். நோய் தீர்ந்து விட்டால் அவர்கள் ஆண்டு முழுவதும் விரதம்காத்து நாடகத்தில் பிள்ளையார் வேடத்தில் நடிப்பார்கள்.

பிள்ளையார் தொந்தி குலுங்க நடனமாடி, தும்பிக்கையை ஆட்டி அவையோரை ஆசீர்வதிக்கிறார். நாடகம் இடையூறின்று நிறைவேற வாழ்த்துகிறார். சமஸ்கிருத மங்கல சுலோகத்தைப் பிழையின்றி உச்சரிக்கிறார்.

இப்போது இருவர் திரையின் இருமுனைகளைப் பிடித்துக் கொண்டு மேடையில் தோனறுகிறார்கள். திரைக்குப்பின் நாடகப் பாத்திரங்கள் ஒன்று கூடுகிறார்கள். ஒரு பாடகர் பாடல் மூலம் பாத்திரங்களை வர்ணிக்கிறார். திரை விலகுகிறது. பாத்திரங் கள் ஒவ்வொருவராக மேடையில் நடனமாடுகின்றனர். நாடகம் தொடங்கி விட்டது.

பின்னணியில் தூய்மையான கர்நாடக ராகங்கள் ஒலிக்கின் றன. காட்சிக்குப்பின் காட்சியில் நிகழ்ச்சிகளும் பாத்திரங்களின் உரையாடல்களும் பாடல்களிலேயே நிகழ்கின்றன. பாத்திரங் களின் நடனத்தில் பலவிதக்கரணங்கள், அங்கஹாரங்கள், முத்திரைகள் மூலம் வெவ்வெறு உணர்ச்சிகளின் வெளிப்பாடு.

ராமன் வில்லையொடித்தல், சீதையோடு திருமணம்....

இவ்வளவு பெரிய அரங்கம் முற்றிலும் அமைதியாக இருக் கிறது. கலையின ரசம் வெள்ளமாகப் பாய, சிறியோரும் பெரியோரும் அந்த வெள்ளத்தில் மணிக்கணக்கில் திளைக் கிறார்கள்....

திடீரென்று ராமனின் பார்வை பெண்களின் வரிசையின்மேல் விழுந்தது. மூன்றாவது வரிசையில் ரத்தினம்மாள் உட்கார்ந்தி ருக்கிறாள். சாந்தம் நிறைந்த அவளது பெரிய பெரிய கண்கள் இமை கொட்டாமல் ராமனையே பார்த்துக் கொண்டிருக்கின்றன.

நடிப்புக்கு நடுவில் அவளைப்பார்த்து ராமனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது.. இதன் விளைவு அவனுடைய நடனத்தில், தாளத்தில் சிறிது தவறு நிகழ்ந்தது. அவன் சமாளித்துக் கொண்டான்.

ராமன் நடேசய்யரின் சார்பில் தானே சிதம்பரம் போய் நாராயண சாஸ்திரியை விழாவுக்கு அழைத்து விட்டு வந்திருந் தான். அவர் சொன்னார், "எனக்கு ரொம்ப வயசாயிடத்துப்பா. ராத்திரி கண்விழிக்க முடியாது..... எனக்குப் பதிலா நடேசய் யரே பார்க்கட்டும். பார்த்து எனக்குச் சொல்லட்டும்.....நீ நல்ல ரசிகன். உனக்கு என் ஆசீர்வாதம் ....."

சாஸ்திரியால் வர இயலாது என்று ராமனுக்குத் தெரியும். ஆனால் ரத்னா வருவாளென்று அவன் கனவிலும் நினைக்க வில்லை.

நவரச கன்னட ராகத்தில் ராமரின் நவரசவெளிப்பாடு வர்ணிக்கப்படுகிறது.... "சிருங்கார க்ஷிதிநந்தினி விஹரணே .." ராமனின் மனக்கண்ணில் ரத்னாவின் சிருங்கார நடிப்புக் கோலம். ராமன் சீதையை மார்புடன் தழுவிக் கொண்டு அவளு டைய இதழ்களோடு தன் இதழ்களைப் பொருத்திக் கொள்கி றான். சீதையின் மார்பின் மேல் அவனுடைய கைகள். நடிக்கும் போதே அவனுக்குப் புரிகிறது, தன் நடிப்பு ரத்னாவின் நடிப் பைப் போல சிறப்பாக இல்லை என்று... முதல் தடவை, இரண் டாவது தடவை, மூன்றாம் தடவை "சிருங்கார க்ஷிதிநந்தினி விஹரணே".

ஊஹூம், நடிப்பு உணர்ச்சிகளை முழுமையாக வெளிப்படுத் தவில்லை, பார்வையாளர் வரிசையில் நடேசய்யரின் புருவங்கள் சிறிது சுருங்கின. ராமனுக்கு வியர்த்தது.

பாடகர்கள் அடுத்த பதத்தைத் தொடங்கினர் "காருண்யம் பலி போஜனே..." அந்தப் பதத்தை இறுகப் பிடித்துக் கொண்டான் ராமன். அவனுடைய நடிப்பில் கருணை துல்லியமாக வெளிப் பட்டது.

எப்படியும் ராமன் தொடுத்த ரசமாகிய முத்து மாலையில் ஒரு வழு ஏற்பட்டுவிட்டது.

இரவு மூன்று மணிக்கு நாடகம் முடிந்தது.

நடேசய்யர் ராமனிடம் சொன்னார் "அப்பா, நான் கத்துக் கொடுக்கக் கூடியதையெல்லாம் கத்துக் கொடுத்துட்டேன். நீயும் ரொம்பக் கஷ்டப்பட்டு நிறையக் கத்துக்கிட்டிருக்கே. ஆனால் உணர்ச்சிங்கறது உண்டாயிருந்து வருகிற விஷயம். அது தானாக வராது. அந்த ரசத்தை உணரணும், அனுபவிக்கணும். நீ சீக் கிரம் கல்யாணம் பண்ணிக்கோ. ரசிகையான ஒரு பெண்ணைப்

பாரு. இல்லேன்னா, சிருங்கார பாவத்தை மட்டும் உன்னாலே நடிப்பிலே வெளிப்படுத்த முடியாது..."

ராமன் தலைகுனிந்தான்...

☆ ☆ ☆

மறுநாளிரவு அதே அரங்கத்தில் வரதராஜ சுவாமியின் முன்னால் ரத்தினம்மாளின் பரதநாட்டியம்.

அரங்கத்தில் நல்ல கூட்டம். அதன் முதல் வரிசையில் நடேசய்யருக்குப் பக்கத்தில் ராமன் அமர்ந்திருந்தான்.

மேடையின் மேல் இருவர் ஒரு திரையைத் தூக்கிக் கொண்டு நிற்கிறார்கள். மேடையின் பின் கோடியில் பின்னணிக்குழு வயலின், வீணை, கட வாத்தியம். நடனத்துக்குப் பாடப் போகிறவள் வரதராஜ சுவாமி கோவில் தேவதாசி புஷ்பம். நடுவயதுப் பெண்மணி, பருமனான தோற்றம். அழுத்தமான கத்திரி நிறத்தில் மைசூர்ப் பட்டுப் புடைவையும் வைரத் தோடும் வைர மூக்குத்தியும் அணிந்திருக்கிறாள். கருகருவென்ற நீளக் கூந்தலைப் பின்னி அதில் பிச்சிப் பூச்சரத்தைச் சுற்றியிருக்கிறாள்.

அவள் திருஞான சம்பந்தரின் தேவாரத்தைப் பாடத் தொடங்கினாள்–"வேயுறு தோழி பங்கன் விடமுண்டகண்டன்"... பிலகரி ராகம். மிஸ்ர சாபு தாளம்.

திரையைத் தூக்கிக் கொண்டிருந்த இருவரும் நகர்ந்து விட்டனர். மேடையின் மேலே ரத்தினக் குவியலாகக் காட்சி தருகிறாள் ரத்தினம்மாள. விளக்குகளின் வெளிச்சத்தில் ரத்தினங்கள் ஜொலிக்கின்றன. அவள் தரையில் படிந்து தலைகுனிந்து கை கூப்பிக் கடவுளை வணங்குகிறாள். கொடி போல் நீண்ட மிருதுவான கைகள். தலைவகிட்டில் நெற்றிச்சுட்டி பளபளக்கிறது. நீண்ட பின்னலில் ஜரிகை வைத்துத் தைத்து அதன்மேல் குண்டு மல்லிகைச் சரம் சுற்றப்பட்டிருக்கிறது.

பாடல் தொடங்கியதும் அவள் மெதுவாக எழுந்திருக்கிறாள் வானத்தில் சூரியன் தோன்றுவது போல, கை கூப்பிய நிலையிலேயே முதலில் உடலின் மேற்பகுதி உயர்கிறது; பிறகு இடை, அதன்பிறகு தொடைப் பகுதி. அவளது உடல் முழுதுமே ஒளியால் ஆனதுபோல் கண்களைக் கூசச் செய்கிறது. அவள் புகையிலை நிறத்தில் காஞ்சீபுரம் பட்டுப்புடைவை அணிந்திருக்

கிறாள். புடவை இருகால்களையும் தனித்தனியே சுற்றியிருக் கிறது. புடவையின் அகலமான ஜரிகைக்கரை இடுப்பை ஒட்டி யாணம் போல் சுற்றிக் கொண்டிருக்கப் புடவையின் இடுப்புக் குக் கீழே விசிறி மடிப்பாக முன்னால் தொங்குகிறது ஜரிகையா லான மார்க்கச்சு. அதற்குக் கீழே வயிறு தொப்புள் வரை தெரிகிறது.

ஒரு சமயத்தில் காவேரிக் கரையில் ஒரு ஜோடி சூரியன்கள் போல் தோற்றமளித்த அவளது மார்பகங்களில் ராமனின் பார்வை விழுகிறது. அவளது கழுத்து அன்னத்தின் கழுத்தைப் போல் நீளமாயிருக்கிறது. பழுத்த குலாப் ஜாம் பழம் போன்ற முகம் ஒப்பனை செய்யப்பட்டிருக்கிறது. அமைதியான ஏரியை யொத்த கண்களில் மை தீட்டப்பட்டு ஓரங்கள் பறவையிறகு போல் நீட்டி விடப்பட்டிருக்கின்றன. மூக்கில் வைரமூக்குத்தி. காதில் தோட்டுக்குப் பதிலாக வைரஜிமிக்கிகள். கைகளிலும் கால்களிலும் மருதோன்றிச் சித்திரங்கள். இருகால்களிலும் கஜ்ஜை. அவளது உடல் முழுவதும் தீப்பிழம்பாக ஒளிர்கிறது.

அலாரிப்புடன் மெதுவான கதியில் நடனம். ஒரு சில முத்தி ரைகள். கடவுளுக்கு வணக்கம் தெரிவிக்கும் பாவனை.

புஷ்பம் நன்றாகப் பாடுகிறாள். மிக்க ஈடுபாட்டுடன் பக்திச் சுவைததும்பப் பாடுகிறாள். அவளது குரல் இனிமையாயிருக் கிறது.

இமாலயம் போல் பிரும்மாண்டமான மகாதேவரின் தோற் றத்தைப் பாட்டுக்கேற்ப அபிநயிக்கிறாள் ரத்னா. சடைமுடி யிலிருந்து பிரவகித்து விழுகிறது கங்கை. ரத்னாவின் கைமுத் திரையில் சலசலப்பொலியுடன் தண்ணீர் விழுவது தெரிகிறது. மகாதேவரின் நெற்றியில் பிறைச்சந்திரன். யோகீசுவரராக, தியானத்தில் ஆழ்ந்தவராக வீற்றிருக்கிறார் அவர். அவரது தலைக்கு மேலே சூரியன், கிரகங்கள், நட்சத்திரங்கள்.

கற்பனை எல்லை கடந்து விடுகிறது. ராமனுக்கு முன்னால் பூக்கள் பூத்துக் குலுங்கும் சம்பகச் செடி நடனமாடுகிறது. நடனத் தின் போதை ரத்னாவின் நாடி நரம்புகளில் ஊடுருவுகிறது. பாட லின் கடைசி வரி அவன் காதுகளில் விழுகிறது–"அவை நல்ல நல்ல, அடியாரவர்க்கு மிகவே", இந்த வரி திரும்பத் திரும்பம் பாடப்படுகிறது. அதற்கேற்ப நடனமாடுகிறாள் ரத்னா.

பக்கத்தில் யாரோ ஒருவர் "பிரமாதம்!" என்றார்.

இன்னொருவர் அவரை அதட்டினார், "சும்மா இருப்பா! சப்தம், வர்ணம் எல்லாம் எப்படி ஆடறா பார்ப்போம்... அந்த அபிநயந்தான் பரதநாட்டியத்துக்கு உயிர்நாடி ..."

பேசியவரின் குரல் ராமனுக்குப் பரிச்சயமானதுதான். அவர் இதே கிராமத்தைச் சேர்ந்த முதியவர் பயங்கராச்சாரியார். இசை, நடனக்கலை விமரிசன நிபுணர். இக்கலைகளை மேற் போக்காக அனுபவிப்பது அவருக்குக் கட்டோடு பிடிக்காது.

நடனத்தில் மாற்றம். இப்போது ஜதிஸ்வரம். புதிய பாட்டு, புதிய ராகம், புதிய தாளம். மத்தியமாவதி ராகம், ரூபக தாளம், இதில் சாகித்தியமில்லை ; சுரப்புரஸ் தாரந்தான். சுரத்தால் வலை பின்னுதல், ஒவ்வொரு ஜதிக்கும் ஒரு பின்னல்.

ஆறு மாத்திரையளவுள்ள ரூபா தாளத்துக்கேற்ப நடனம். இதில் குறிப்பிட்ட ஓர் உணர்ச்சிக்கு இடமில்லை. தாளம், லயம் இவை மட்டும்தான். பக்கவாத்தியத்தின் ஒலியோடு இணைந் தொலிக்கிறது கஜ்ஜை. மருதோன்றி தீட்டப்பட்ட பொன்னிறப் பாதங்கள் சுரத்தின் வர்ண ஜாலங்களை இறைக்கின்றன. அந்தப் பாதங்களில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளும் தீவிர வெறி ராமனை ஆட் கொள்ளுகிறது.

ரயில் வண்டிச் சக்கரங்கள் போல் சுழல்கின்றன ரத்னாவின் கால்கள். அவை சற்றும் சளைக்கவில்லை, ஓயவில்லை. நாட்டி யத்தின் இறுதி அடியில் காலை அழுத்தமாக வைத்து மேடை யைக் கிடுகிடுக்கச் செய்கிறாள் அவள். அவளது இந்த வெளிப் பாடு ராமன் இதுவரை அறியாததாகும். அவள் இவ்வளவு பெரிய நடனச் சிற்பி என்ற உண்மையை அவன் நாராயண சாஸ்திரியிடம் நாட்டிய சாத்திரம் கற்றுக் கொள்ளும் போது கூட அறியவில்லை. அப்போது அவள் ஒரு சாதாரணக் குடும்பப் பெண்ணாகத் தான் காட்சியளித்தாள். இப்போது ரத்னாவின் முகத்தைப் பார்த்தால் அவள் உலகத்தில் இசையையும் தாளத்தையும் தவிர வேறெதுவும் இருப்பதாகவே நினைக்க வில்லை யென்று தோன்றுகிறது.

ரத்னா ஆடிக் கொண்டே திரைக்குப்பின் போகிறாள். ஜதி ஸ்வரம் முடிந்து விட்டது.

புஷ்பம் புதிய பாடல் தொடங்குகிறாள். இப்போது சப்தம் என்ற நாட்டியப் பகுதி. காதலன் காதலி பாவம் வெளிப்படு கிறது. காதலனைப் புகழ்ந்து வர்ணிக்கும் பாடல் தோத்திரம் போல் இசைக்கப்படுகிறது. இதில் தாளம் தொடக்கத்தில் கிடையாது. மந்தமாருத ராகம்.

பிறகு திஸ்ர தாளம் சேருகிறது. மெதுவாக ஆடிக்கொண்டே மேடையில் தோன்றுகிறாள் ரத்னா. தூய்மையான சமஸ்கிருத உச்சரிப்பில் குமார சம்பவ காவியத்தின் செய்யுள். தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார் பரமசிவன். மேடை முழுவதும் சுற்றிச் சுற்றி

வந்து ஆடுகிறாள் ரத்னா. பரமசிவனின் அபிநயம் உள்ளத்தைக் கவர்கிறது. அவர் வலது காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு அதன்மேல் இடதுகாலை மடக்கிக் கொண்டு அமர்ந்திருக்கிறார். வீராசன முத்திரை. உடலின் மேற்புறம் விறைப்பாக நிமிர்ந் திருக்கிறது. கண்கள் பாதி மூடியிருக்கின்றன. விரித்த கைகள் மலர்ந்த தாமரைகள் போல் மடியைத் தொட்டுக் கொண்டி ருக்கின்றன. அசையாத தீபச் சுடர்போல் சற்றும் அசைவற்ற நிலை.

படபடவென்று மழை போல் கொட்டுகிறது சொல்லுக்கட்டு. வீணையிலும் வயலினிலும் புயல் போல் கிளம்புகின்றன இசையின் வர்ண ஜாலங்கள். அவற்றில் ஒலி ஓயும் போது ஜணக், ஜணக் என்று ஒலியெழுப்புகிறது ஜால்ரா. தா-தானம்-திமி. மின்னல் போல் ஆட்டத்தில் மாற்றம். வாத்திய இசையுடன் ஒத்து ஒலிக்கிறது கஜ்ஜை. காட்சி முற்றிலும் மாறி விடுகிறது.

இப்போது இளமைப் பருவப் பூரிப்பில் உமா தோன்றுகிறாள். அவள் கையில் ருத்திராட்ச வளையல், கழுத்தில் ருத்திராட்ச மாலை. கொண்டையிடப்பட்ட கேசத்தில் பிச்சிப் பூச்சரம் சுற்றப் பட்டிருக்கிறது. அவளது உடை-மார்கச்சு உட்பட காவி நிறப் பட்டாலானது. அவள் யோகினி; இருந்தாலும் காதலனைத் தேடு பவள் கூட. காதலனைத்தேடும் பாவத்தில் அவள் ஆடிக் கொண்டு முன்னே வருகிறாள். பிறகு பின் வாங்குகிறாள். அவள் முகத்தில், கண்களின் அசைவில், உதடுகளின் சுழிப்பில் முத்திரை– கரணம்–அங்கஹாரங்களில் இந்த ஏக்கம், இந்தத் தேடல் வெளிப்படுகிறது.

சப்தம் முடிந்து வர்ணம் ஆரம்பமானதே தெரியவில்லை ராமனுக்கு. நடனம் மாயமந்திரம் போல் சபையினரை மெய் மறக்கச் செய்துவிட்டது. சபையில் நிசப்தம். மூச்சுவிடும் அரவம்கூடக் கேட்கவில்லை. யோகினி உமா மேடையின் ஓரத்திலிருந்து ஆடிக்கொண்டு வருகிறாள். அவள் கையில் தாமரை மாலை. மறுகணத்தில் அவளே தியானத்திலாழ்ந்த பரம சிவனாகிறாள். பிறகு மறுபடியும் உமா. கணத்துக்குக்கணம் அவளது பாத்திரம் மாறுகிறது. அபாரமான நடிப்பு. இப்போது ஹிந்தோளி ராகம். தாளம் ஜம்பகம்.

திடீரென்று அகாலத்தில் வசந்த ருதுவின் தோற்றம். புஷ்பத் தின் இசையில், வீணை, வயலின், மற்ற பக்க வாத்தியங்களின் ஒலியில் வசந்தம் தவழ்ந்து வருகிறது. நாட்டியத்தின் மூலமே வசந்தத்தின் வருகை சித்திரிக்கப்படுகிறது. ஆசிரமத்தின் நாற்

புறமும் மரங்களில் கொத்துக் கொத் தாக மலர்ந்த மலர்கள், குயிலிசை, வண்டுகளின் ரீங்காரம்....

ரத்னா இப்போது மகரக் கொடியோனான மன்மதன். அவன் மலர் வில்லில் அம்பு பூட்டுகிறான். முதுகிலுள்ள அம்பறாத் தூணிலிருந்து அம்பை எடுத்து அதை நாணில் தொடுக்கும் பாணி அபார அழகு. அம்பு ராமனின் நெஞ்சில் தைத்தாற் போன்ற உணர்வு.

ராமன் மூச்சுவிட மறந்துவிட்டான். நெஞ்சின் துடிதுடிப்பும் நின்றுவிட்டது போலும்! கண்கள் மட்டும் சுறுசுறுப்பாக இயங்கு கின்றன—பாலைவனம் மழை நீரை உறிஞ்சுவது போல் அவை ரத்னாவின் அழகைப் பருகுகின்றன.

இப்போது மன்மதன் மகாதேவராக மாறிவிட்டான். மகா தேவரின் மனம் சலனப்படுகிறது. அவரது தியானம் கலைகிறது. பார்வை மன்மதன் மேல் விழுகிறது. அடுத்த கணத்தில் நெற்றிக் கண் திறந்து அதிலிருந்து நெருப்பு குபுகுபுவென்று பாய்கிறது. ரத்னாவின் கை முத்திரை பாய்ந்து செல்லும் நெருப்பை அபிநயிக்கிறது. மன்மதன் சாம்பலாகிறான்.

சரணங்களும் அங்கஹாரங்களும் ஜீவன்ததும்பும் சித்திரங் களைத் தீட்டுகின்றன. இது அபிநயத்தின் உச்ச கட்டம். புஷ்பம் துரிதசுதியில் பாடுகிறாள். வீணையும் வயலினும் சோகத்தை, தீவிர வேதனையை ஒலிக்கின்றன.

"ஐன் ஐன் ஐன்... காப்பாத்துங்க, காப்பாத்துங்க!"....

ரதியின் ஓலம். வயலினும் வீணையும் விம்மியழுகின்றன. இப்போது ரத்னா ரதி. அவளது கூந்தல் அவிழ்ந்து தொங்கு கிறது. அவள் விழுந்து விழுந்து அழுகிறாள், துடிக்கிறாள், விம்முகிறாள்...

திடுக்கிட்டான் ராமன். மேடையிலிருந்து ஒரு மலர் மாலை அவன் மடியில் வந்து விழுந்தது. யாருமறியாமல் அவன் அதை எடுத்துத் தன் நெஞ்சில் வைத்து அழுத்திக் கொண்டான்.

நாட்டியம் மந்த நிலைக்கு வந்துவிட்டது. இசையிலும் தாளத் திலும் மென்மை மேலிட்டது. இப்போது மேடையில் தோன்று கிறார் அர்த்தநாரீசுவரர். முன் போலவே தொங்கும் வலது கால், அதன் மேல் மடக்கப்பட்ட இடது கால். உடலின் வலதுபுறம் அசைவின்றி இருக்கிறது. வலது கையில் வராப முத்திரை. இடது கண் தாளத்துக்கேற்ப நடனமாடுகிறது. இடது உதடுகளில் சிரிப்பு. இடது கையில் காதலனுடன் சேரும் முத்திரை. இடது மார்பகம் சிலிர்க்கிறது.

அயர்ந்து போய்விட்டான் ராமன். கனகம்மாள் கூட இந்த நடனமாடி அவன் பார்த்ததில்லை. எவராலும் இப்படி நடனமாட முடியும் என்றும் கேள்விப்பட்டதில்லை...

☆ ☆ ☆

மறுநாள் மெலெட்டூரெங்கும் ரத்னாவின் நாட்டியத்தைப் பற்றித்தான் பேச்சு- "அபாரம்!... ரொம்ப அபாரம்!..."

பயங்கராச்சாரியாரின் மனதில் ஒரு கேள்வி-இந்தப் பெண் இந்த நடனத்தை எங்கே கற்றுக்கொண்டாள்?

ரத்னாவின் நடனம் எல்லோரையும் கவர்ந்துவிட்டது என்பதில் ஐயமில்லை. அதில் அப்பழுக்கு இல்லை-ரசவெளிப் பாட்டிலாகட்டும், நாட்டிய சாத்திர விதிகளைக் கடைப்பிடிப்பதிலாகட்டும்.

குரு நடேசய்யரின் நம்பிக்கை வீண்போகவில்லை. நாராயண சாஸ்திரியின் பேத்தி, ருக்மணி அம்மாளின் பெண் அவள். நடனக் கலை அவளது இரத்தத்தில் ஊறியிருக்கிறது.

ராமனின் மனதில் வருத்தம், பச்சாதாபம் மேகமாய்ச் சூழ்ந்திருந்தது. அவன் நாள் முழுதும் படுக்கையிலேயே கிடந்தான். வேலைக்கார மகாலிங்கம் எழுப்பியும் ராமன் எழுந்திருக்கவில்லை. ஸ்நானம் செய்து சந்தியாவந்தனம் செய்ய, சாப்பிடத் தோன்றவில்லை. அவன் மனதில் ஒலிக்கிறது- "நீ இந்தப் பெண்ணை அடைந்திருக்கலாம். உன் முட்டாள்தனத்தால் இழந்துவிட்டாய்! இப்போது எப்படி இவளுக்கு முன்னால் உன் முகத்தைக் காட்டுவாய்?"

ஒரு விஷயம் அவன் நினைவுக்கு வந்தது-ரத்னாவின் கழுத்தில் தாலி இல்லை. இன்னும் அவள் எந்த ஆணுக்கும் சொந்தமாகவில்லை...

அவன் எழுந்து முகம்கழுவிக் கொண்டு நடேசய்யரிடம் வந்தான். அப்போது அவர் மாலை சந்தியா வந்தனம் செய்யத் தொடங்கவிருந்தார்.

"என்ன ராமா, உனக்கென்ன ஆச்சு? ஒரே நாளிலே மூஞ்சி வத்திப் போயிடுத்தே?"

ராமன் முழுவரலாற்றையும் அவரிடம் கூறிவிட்டுச் சொன்னான், "ஐயா, எனக்கு ரத்னா வேணும்! என் கலை வாழ்வின்

குறையை நிரப்ப அவளால்தான் முடியும். நீங்கதான் எனக்கு உதவணும்!"

நடேசய்யர் உற்சாகத்துடன் சொன்னார், "சரி... ரசிகையான ஒரு பெண்ணோட உறவு உனக்குத் தேவை. நான் ரத்னாகிட்டே சொல்றேன். ஆனால் தாசிகள் இந்த விஷயத்திலே யாரையும் பொருட்படுத்த மாட்டாங்கங்கறது உனக்குத் தெரியும். ரத்னா வயசு வந்த பெண். நீயே அவளோட பேசேன்!... அவ நாளைக்குக் கன்னியாகுமரி போகப்போறா, நீயும் அங்கே போய் அவளைப் பார்த்துப் பேசு..."

ராமன் அவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு திரும்பினான். நடேசய்யர் அவனைப் பின்னாலிருந்து கூப்பிட்டார், "ராமா, இன்னிக்குக் காலையிலே உனக்குச் சென்னையிலேருந்து ஒரு கடிதம் வந்தது... எடுத்துக்கிட்டு போ..."

வீடுவந்து கடிதத்தைப் பிரித்தான் ராமன். பதஞ்சலி சாஸ்திரி எழுதியிருந்தார்– "கையெழுத்து நிபுணர் உன் அப்பாவோட உயிலைச் சோதித்துப் பார்த்தார். அதிலுள்ள கையெழுத்து உன் அப்பாவோடகையெழுத்தில்லை... ஃபோர்ஜரி..."

சுந்தரராஜன் பொய்யாக ஒரு உயில் தயாரித்திருக்கிறான். அதன்படி ராமன் தன் தந்தை சொல் கேளாத குற்றத்துக்காக அவனுடைய பூர்வீக சொத்தில் பங்கு கிடையாது. எல்லாச் சொத்தையும் ராமனின் தந்தை தன் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் எழுதி வைத்துவிட்டார். அவருடைய மனைவியைப் பராமரிக்கும் பொறுப்பும் அவர்களுடையதுதான்.

இந்த உயிலை எதிர்த்து ராமன் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தான். அவனுக்கு உதவி செய்தார் பிரசித்திபெற்ற வக்கீல் பதஞ்சலி சாஸ்திரி, அவர்தான் எழுதியிருந்தார்– "இந்த வழக்கில் வெற்றி நிச்சயம் உனக்குத் தான். நீ பாட்டையும் கூத்தையும் விட்டுவிட்டு உடனே சென்னைக்கு வந்து சேர்."

ஆனால் ராமன் சென்னை போகவில்லை. அவன் புறப்பட்டு விட்டான் கன்னியாகுமரிக்கு...

இரண்டு நாள் அங்கே கடற்கரையிலும் கோவில் பக்கத்திலும் அலைந்து திரிந்தான். மூன்றாம் நாள் அதிகாலையில் ரத்னாவைப் பார்க்க முடிந்தது.

கரும்பலகை நிறக்கடலின் கோடியில் சாம்பல் நிற வானத்தில் பிரும்மாண்டமான குங்குமப் பொட்டு மாதிரி சூரியன். கடற்கரையில் தீர்த்த யாத்திரைக் குழு ஒன்று சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருக்கிறது– "ஜவாகுசும சங்காசம்..."

ரத்னா சூரியனை நோக்கி, கைகளைக் கூப்பிக்கொண்டு, தியானம் செய்து கொண்டு நிற்கிறாள். தியானம் முடிந்ததும் ராமனைப் பார்க்கிறாள்.

"நீங்களா?"

"ஆமா..."

"நீங்க இங்கே எப்படி?... நீங்களும் யாத்திரையா வந்தீங்களா?...

"ஆமா... கடக்கமுடியாத பாதைகளைக் கடந்து வந்திருக்கேன்..."

இருவரும் கடற்கரையில் நடந்தார்கள்.

"ரொம்பக் கஷ்டப்பட்டு, ரொம்ப காலமா யாத்திரை பண்ணிக்கிட்டு வரேன்... தேவி தரிசனத்துக்காக..."

"சரிவாங்க, தரிசனம் பண்ணக் கோவிலுக்குப் போகலாம்...."

"என் குமரித் தெய்வம் என் கண் முன்னாலேயே..."

ஜன நடமாட்டமற்ற இடத்தில் மணற்குன்று. அருகில் கடற்கரை. நீருக்குள் பாதியமிழ்ந்த பாறைகள். அலைகள் விஷமக்காரக் குழந்தைகள் போல் அவற்றின்மேல் மோதி விளையாடுகின்றன. இந்த மோதலில் நீர்த்திவலைகள் கிளம்பி மேக மூட்டம் போல் பரவுகின்றன.

"கொஞ்சம் நில்லு, நான் தேவதைக்குப் பூஜை பண்றேன்" என்று சொல்லிவிட்டு ராமன் இருகைகளால் கடல் நீரையெடுத்து ரத்னாவின் பாதங்களில் ஊற்றினான்– "நீ கலா லக்ஷ்மி, என் பூஜைக்குரியவள்..."

"சீ சீ.... என்ன செய்யறீங்க நீங்க!... நீங்க எவ்வளவோ பெரியவங்க... நான் பாவி..."

ரத்னா ராமனின் கால்களில் முகத்தைப் புதைத்தாள். ராமன் அவளைத் தூக்கியெழுப்பி அவள் மேல் படிந்திருந்த மணலைத் தன்மேல் துண்டால் தட்டிவிட்டு அவளுடைய கண்களைத் துடைத்துவிட்டான்.

அக்கம்பக்கத்தில் நடமாடிக் கொண்டிருந்த ஓரிருவரை அவர்கள் பொருட்படுத்தவில்லை.

ராமன் சொன்னான், "கவி தம் கவிதையில் எழுதியிருக்கார் – 'தேஹி பத பல்லவமுதாரம்'னு கிருஷ்ணர் ராதைகிட்டே சொன்னாராம். இதிலே பாவமில்லே. இப்போ சொல்லு, நீ என் வாழ்க்கையைப் பகிர்ந்துக்குவியா?"

ரத்னாவின் முகம் கல்லாய் இறுகியிருந்தது. ஆரஞ்சுச் சுளை போன்ற கீழுதடு மட்டும் துடித்தது. அவளது கன்னங்களில் வழிந்த இரு சொட்டுக்கண்ணீர் ஏறும் வெயிலில் பளபளத்தது.

தூரத்தில் மீனவப் படகுகள் சித்திரம் போல் காட்சியளித்தன. கடல் நீரில் சூரியன் பிரதிபலித்தது.

"சொல்லு. இன்னிக்கு நான் உன் முடிவைத் தெரிஞ்சுக் கணும், நம்ம நாட்டோட கடைசி முனையிலே நிக்கறோம் நாம். நீ என்னை ஒதுக்கினால் என்னோட முடிவும் இங்கேயே தான். நான் திரும்பமாட்டேன்."

அவன் கடலில் குதிக்கத்தயார் செய்து கொண்டு சொன்னான், "என் உடலை இந்த அலைகள் இழுத்துப் போய்ப் பாறைமேலே மோதட்டும்..."

ரத்னா விதிர்விதிர்த்துப்போய் ராமனின் கைகளைப் பிடித்துக் கொண்டாள்...." வேண்டாம், வேண்டாம்!... நான் உங்களுக்குரியவள் தான்... ஆனால் ஒரு நிபந்தனை!... நான் ஒரு சபதம் பண்ணியிருக்கேன்... நீங்க எங்க வீட்டிலே சாப்பிடாம போனதிலேருந்து..."

"என்ன சொல்லு..."

"நீங்க என்னை மனைவியாக ஏத்துக்கணும்!... தேவதாசிகள் அதிருஷ்டம் கெட்டவங்க. சமூகத்திலே பெரிய மனுசங்க அவங்களை அனுபவிக்கறாங்க, ஆனால் கூடவே கேவலப்படுத்தறாங்க, வெறுக்கறாங்க... நீங்க என்னை மதிக்கணும், என்னைக் கௌரவமா நடத்தணும். நீங்க வேறே யாரையும் கலியாணம் பண்ணிக்கக்கூடாது. என் குழந்தைகளுக்கு சமூக அந்தஸ்து கிடைக்கணும்..."

கங்காதேவிக்குச் சந்தனு வாக்களிக்கும் காட்சியை ரவிவர்மா ஓவியமாகத் தீட்டியிருக்கிறார். அந்த ஓவியம் அங்கு உயிர் பெற்றுவிட்டது.

"சரி, வா!" என்றான் ராமன்.

கன்னியாகுமரி தேவியின் முன்னிலையில் ராமன் ரத்னாவின் கழுத்தில் தாலி கட்டிவிட்டுச் சொன்னான், "தேவி, எனக்கு வெளிப்படையான ஆசாரங்களில் நம்பிக்கையில்லை. இந்த ரத்னாதான் என் வாழ்க்கைத்துணை, ஒரே மனைவி... நீ சாட்சி!"

இருவரும் சதாமங்கலம் சென்றனர். ராமனின் அம்மா சீறினாள் "சீ சீ, வெட்கங்கெட்டவனே! தாசியை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்துட்டே! உன் அப்பாகூட இப்படிச் செய்யலே. நீ அவரையே மிஞ்சிட்டே என் வீட்டை விட்டுப்போ!"

"இந்த வீட்டிலே எனக்கும் பங்கு உண்டு. ரத்னா என் மனைவி..."

சுந்தரராஜன் வந்துவிட்டான். கண்களை உருட்டிக்கொண்டு ராமனை மிரட்டினான், "இந்தச் சொத்தை யார் அனுபவிக்க றாங்க,பார்க்கலாம்!..."

ராமனும் விடவில்லை "பார்ப்போமே!" என்றான்

சதாமங்கலத்தில் ரத்னாவுடன் வாழ்க்கை... இன்றும் ஞாபக மிருக்கிறது. வற்றிக்கிடந்த மனதில் ரசவெள்ளம். கங்கையின் பிரவாகம்போல் ரத்னாவின் காதலும் கரைபுரண்டு ஓடுகிறது. ரத்னா பரம்பரைத் தாசி. காமக்கலை அவளது இரத்தத்தில் ஊறியிருக்கிறது. அவளது காதல் வசந்த மாருதம்போல் இயற்கையானது, குற்றமற்றது. அவள் உயிருள்ள காமசூத்திரம். அவளது காதல் பெருக்கில் மிதந்து செல்வதும் மூழ்கித் திளைப்பதும் எவ்வளவு இன்பம்!

ராமன் தாய், சகோதரியின் பரிகாசத்தையும் சுந்தரராஜனின் மிரட்டலையும் பொருட்படுத்தவில்லை. அவன் ரத்னாவின் உறவில் சுவர்க்க இன்பம் துய்க்கிறான்.

பிறகு அவன் ரத்னாவை வீட்டில் கனகம்மாவின் பாது காப்பில் விட்டுவிட்டுச் சென்னை வந்தான். சென்னையில் அவனுக்கு நிறைய வேலைகள்–நீதிமன்ற வழக்கு, அரசியல், பத்திரிகை நடத்துதல், மாணவரியக்கம். அத்துடன் சுகுண விலாச சபையில் நாட்டிய நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்வது.

அப்போதும் படித்தவர்களிடையே நாட்டியத்துக்கு ஆதர வில்லை. சுகுண விலாச சபை படித்தவர்களால் அமைக்கப்பட்ட நாடகக் குழு. சென்னையின் மிகப் பழைய கலை நிறுவனம். அதிலிருந்த பழமை விரும்பிகள் நாட்டியத்தை அசிங்கமாக, ஒழுக்கக் கேடாகக் கருதினார்கள்.

ஆனால் ராமனும் விடாக்கண்டன். அவன் நாட்டிய நிகழ்ச்சி நடத்த முடிவு செய்து தானே பெண் வேடம் பூண்டு மேடை யேறினான்–சிவப்பு நிற மைசூர்ப்பட்டுப் புடவை, வளையல், முத்துமாலை, ஒட்டியாணம், டோப்பா வைத்த தலை வகிட்டில் சுட்டி...

யார் அது பெண் இல்லை என்று சொல்ல முடியும்? பார்த்தவர் மனதைக்கிறங்கச் செய்யும் தோற்றம்...

ராமனின் நாட்டியம் அபாரமாக அமைந்தது. நகரெங்கும் இதைப்பற்றிப் பேச்சு. ஆனி பெசன்ட் ஆசி கூறினார். கலைரசிகர்கள் பாராட்டினர். நடன எதிர்ப்பு இயக்கத்தினரின் முகத்தில் கரி. நடனம் பற்றிப் பலர் கொண்டிருந்த தப்பெண் ணம் குறைந்தது.

நடனத்துக்குப் பொது மக்களின் ஆதரவும் ஒரு கலைக்குரிய அந்தஸ்தும் தேடித்தருவதே ராமனின் நோக்கம். இந்தக் கலையைத் தலைமுறை தலைமுறையாக வளர்த்து வந்துள்ள தேவதாசி இனத்துக்கு உரிய மரியாதை கிடைக்க வேண்டும். நடனக்கலை வளர வேண்டும். இந்திய நடனம் உலகப்புகழ் பெற வேண்டும். உலகம் பாரதத்தின் கலைச் சிறப்பை உணர வேண்டும்...

இதைச் சாதிப்பதும் நாட்டுப் பணிதான். ராமன் இப்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டான்.

ஆனால் வேறுபக்கத்திலிருந்து வந்த அழைப்பையும் அவனால் தவிர்க்க முடியவில்லை....



இதனிடையே அரசியல் மேடையில் நாடகம் மாறிவிட்டது. ஆனிபெசன்டின் செல்வாக்கு குறையத் தொடங்கிவிட்டது. அவர் இப்போது தியாசபிகல் சங்கப் பணிகளில் மும்முரமாக இருந்தார். அரசாங்கம் பயங்கரவாதத்தை அநேகமாக அடக்கி விட்டது. மகாத்மா காந்தியின் சத்தியாக்கிரகமும் ஒத்துழையாமை இயக்கமும் தொடங்கின.

சென்னையில் காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடைபெற்றது. அதில் பணிபுரிய ஆயிரத்திருநூறு தொண்டர்கள் கொண்ட படை ஒன்று அமைக்கப்பட்டது. அமைப்பாளர்களுள் கமலாதேவி சட்டோபாத்தியாயா, ருக்மணி லட்சுமிபதி, கிருஷ்ணா பாய் ஆகியோர் இருந்தனர். ராமன்தான் அப்படையின் உதவிக் காப்டன்.

அதே ஆண்டு இசைச்சங்க விழா நடைபெற்றது.சி.பி. ராமசாமி அய்யர் அதைத் துவக்கி வைத்தார். விழாவில் ராமனுக்குப் பெரும் பொறுப்பு. அவனுக்கு மூச்சுவிட நேரமில்லை. வாரக் கடைசியில் ஒரு முறை சதாமங்கலம் போய்வருவான். சில வாரங்கள் அது கூடப் போக முடியாமல் போய்விடும். ரத்னாவுக்கு மிகவும் ஏக்கம்...

இதற்குள் சைமன் கமிஷன் வருகை. அதையெதிர்த்து ஆர்ப்பாட்டங்கள். "சைமனே, திரும்பிப்போ!" முழக்கம் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஆகாயத்தைப் பிளந்து கொண்டு எழுந்தது. ஆயிரக் கணக்கான மக்கள் கைகளில் கறுப்புக்கொடி ஏந்தி "சைமனே, திரும்பிப்போ!" என்று முழங்கிக் கொண்டு ஊர்வலம் சென்றனர். ஊர்வலத்தின் முன் வரிசையில் ராமன். ஊர்வலத்தைப் பலவந்தமாகக் கலைக்கும்படி அரசாங்கம் ஆணையிட்டது. போலீஸ்காரர்கள் இரத்த வெறி பிடித்த நாய்கள் போல் ஊர்வலத்தின் மேலே பாய்ந்து மக்களைத் தடிகளால் தாக்கினார்கள்.

காந்திஜியின் ஆணை – "அடி வாங்கு, திருப்பி அடிக்காதே!... அடி வாங்கு, ஆனால் நகராதே!" மக்கள் அடி வாங்கினார்கள், ஆனால் அசையவில்லை.

போலீஸ் அதிகாரி ஓர் ஆளைப் பலமாக அடித்தான். அவன் கீழே விழுந்துவிட்டான். அப்படியும் அவன் மேல் அடி விழுந்தது. அவன் மண்டையுடைந்து இரத்தம் சிதறியது. மூக்கு, காது, வாயிலிருந்தும் இரத்தம் கொட்டுகிறது. அப்படியும் அவனையடிப்பது ஓயவில்லை.

அடித்தவன் சுந்தர ராஜன். அடிபட்டவன் ராமன். சுந்தர ராஜனுக்கு ராமன் தன்னை வீட்டை விட்டு விரட்டிய ஆத்திரம். நீதிமன்றத்தில் தன் வழக்கு தோற்றுப்போன ஆத்திரம்.

தலைமேல் இடியாக விழுகிறது அடி. ராமனுக்குத்தலை சுற்றுகிறது. ரத்னா மூன்று மாத கர்ப்பிணி. சுந்தர ராஜன் ஒரு ராட்சதன். ராமன் நினைவிழந்துவிட்டான்.

மற்றவர்களுடன் ராமனும் கைதானான். அடிபட்டவர்களுள் ஒருவனாகப் போலீஸ் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டான்.

ராமனுக்குப் பலத்த காயம். ஏழுநாட்கள் வரை அவனுக்கு நினைவு திரும்பவில்லை. அவனுடைய மூளையிலும் உடம்பிலும் பல பாகங்களிலும் இரத்தப் பெருக்கு ஏற்பட்டிருந்தது. தசைகளும், இரத்தக் குழாய்களும், நாடி நரம்புகளும், சில எலும்புகளும் உடைந்திருந்தன. மருத்துவர்களால் நிச்சயமாக ஒன்றும் சொல்லமுடியவில்லை.

பிரிட்டிஷ் அரசாங்கம் ஆயுதமற்றவர்களை அடித்துக் கொல்கிறது என்ற பழி லண்டனில் பரவியது. அரசாங்கத்தின் அடக்குமுறையை அம்பலப்படுத்தினார் கிருஷ்ணமேனன்.

ராமனின் உயிருக்காகக் கடவுளுக்கும் மனிதனுக்குமிடையே போட்டி. ராமன் கடைசியில் பிழைத்துக் கொண்டான். அப்படி

யும் நினைவு முழுமையாகத் திரும்பவில்லை. நீதிமன்றத்தில் அவனை "நீ யார்? உன் பெயரென்ன?" என்று கேட்டபோது அவன் பதில் சொல்லத் தெரியாமல் மலங்க மலங்க விழித்தான்.

அவனுக்கு ஞாபகமறதி ஏற்பட்டுவிட்டது. பழைய விஷயங்கள் மறந்துபோய்விட்டன—ரத்னா, பரதநாட்டியம், ஆனிபெசன்ட், காந்திஜி, பதஞ்சலி சாஸ்திரி, சென்னை உயர்நீதி மன்றம், ஊர்வலம்... எல்லாம் வெறும் புகைப்படலமாகி விட்டன.

ராமன் மூன்றாண்டுகள் சாகாப்பிணமாகச் சிறையில் கிடந்தான்.

இதற்கிடையே வெளியில் ராமனைப் போலீஸ் கொன்று விட்டது என்ற புரளி பரவியது. அவனுக்குக் கடுமையாக அடி விழுந்ததை ஊர்வலத்திலிருந்த மற்றவர்கள் பார்த்திருந்தார்கள். இது குறித்து அரசாங்கத்துக்கு மனுக்கள் அனுப்பப்பட்டன. சில நாட்களுக்குப் பின் இந்தப் பரபரப்பெல்லாம் தானாக அடங்கி விட்டது. மூன்று வருடங்களில் எல்லோரும் ராமனை அநேகமாக மறந்தேவிட்டனர்.

மூன்றாண்டுகளுக்குப் பின் சிறையிலிருந்து விடுதலையடைந்த தன் நண்பனொருவனை அழைத்து வரச் சென்றிருந்த வெங்கி அய்யர் தன் நண்பனுடன் இன்னொருவரும் விடுதலையாகி வருவதைக் கண்டார். அந்த மனிதர் வெளியே வந்ததும் வானத்தை நோக்கி வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றார். அவர் மறந்து போன எதையோ மறுபடி ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றார். அவரது முகம் பரிச்சயமானதாகத் தெரிந்தது வெங்கி அய்யருக்கு. கடைசியில் வெங்கி அய்யர் கண்டு பிடித்து விட்டார்—அந்த மனிதர் ராமன் தான்! இல்லை, ராமனின் நிழல்!

ராமனுக்கும் கொஞ்சங் கொஞ்சமாகப் பழங்கால ஞாபகம் வந்தது. வெங்கி அய்யரையும் அவனால் அடையாளம் கண்டு கொள்ளமுடிந்தது...

☆ ☆ ☆

வெங்கடேசுவர அய்யருக்கு அறுபதாண்டு நிறைவு.

வெங்கடேசுவர அய்யர் என்ற பெயர் அவ்வளவு பிரபலமில்லை. ஆனால் தமிழ்நாட்டில் சிறியோர், பெரியோர் எல்லோருக்குமே வெங்கி அய்யரைத் தெரியும். அவர் நெடுங்கால

மாகவே காங்கிரஸ் தொண்டர். காங்கிரஸ்தான் அவரது வாழ்க்கை.

அவர் காங்கிரசுக்காகத் தன் படிப்பு, வேலை, குடும்பம், வாழ்க்கை வசதிகள் எல்லாவற்றையும் விட்டுவிட்டார். அவரது ஒரே நினைப்பு இந்தியாவின் விடுதலை.

நாடு விடுதலையடைந்து ஐந்தாண்டுகளாகிவிட்டன. டில்லியிலும் சென்னையிலும் இந்தியர்கள்தாம் இப்போது ஆட்சி செய்கிறார்கள். பிரிட்டிஷ்காரன் கப்பலேறிப் போய்விட்டான். எல்லாம் சரியாகிவிட்டது... ஆனால் ஒன்றுமே சரியாயில்லை.

சாதாரணக் குடும்பத்தில் கூட அறுபதாண்டு நிறைவு விழா விமரிசையாக நடைபெறும். உறவினர், நண்பர்கள் வருவார்கள், விருந்து இருக்கும். பெரிய மனிதராயிருந்து விட்டால் கேட்கவே வேண்டாம். விழா ஏற்பாடுகள் தடபுடலாயிருக்கும். கூட்டம், பூமாலைகள், பாராட்டுப் பத்திரம், சொற்பொழிவு, கலை நிகழ்ச்சி, விருந்து...

வெங்கி அய்யரிடம் பணமில்லை. ஆகையால் அறுபதாண்டு நிறைவை விமரிசையாகக் கொண்டாட அவரால் இயலாது. உறவினர்களையும் நண்பர்களையும்கூட அவர் அழைக்க வில்லை.

வெங்கி அய்யர் தினம் அதிகாலை நாலரை மணிக்குப் படுக்கையை விட்டு எழுவார். இன்னும் அதில் மாற்றமில்லை. பிறகு காலைக்கடன்களை முடித்துக் கொண்டு எண்ணெய்க் குளியல், பிறகு தாமே நூற்ற நூலைக் கொண்டு நெய்த கதர் வேஷ்டியும் மேலாடையும் அணிந்து கொண்டார். அவை புதிய துணிகளல்ல, உவர் மண்ணில் போட்டுத் துவைத்து உலர்த்தப் பட்டவை.

காகம் கரையும் நேரத்தில் அவர் சிவன் கோவிலுக்குப் போய் ஒரு தேங்காயை அறுபது முறை தலையில் தொட்டுவிட்டு அதைச் சதிர்த் தேங்காயாக உடைத்தார். சாதாரணமாக அறுபது தேங் காய்கள் உடைப்பது வழக்கம். ஆனால் அவர் அறுபது தேங்காய் வாங்கப் பணத்துக்கு எங்கே போவார்? பிறகு சுவாமிக்கு அர்ச்சனை செய்தார்.

கோவிலிலிருந்து அவர் சிவன் கோவில் தெருவிலிருந்த தம் வீட்டுக்குத் திரும்பி முன்னறையில் சாய்வு மேஜைக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டார். மேஜையின் மேல் நிறையக் காகிதங்கள்.

தமிழ்நாட்டின் பிரபல தினசரி ஒன்றுக்கு அவர் ரிப்போர்ட்டர். அந்த வருமானத்தில்தான் அவரது குடும்பம் நடந்தது. பூர்வீக வீட்டில் வாழ்க்கை. குடும்பம் என்றால் அவருடைய தம்பியின் மருமகளும் அவளுடைய பெண்ணுந்தான். தம்பியின் பிள்ளை

இறந்து போய்விட்டதால் அவர்களுடைய பொறுப்பு அவர் அமல் விழுந்தது.

இன்று அவரது மனதில் சஞ்சலம். யாரோ அவரைக் கேட்பது போலிருந்தது– ''ஏ வெங்கி அய்யரே, வாழ்க்கை பூராவும் காங்கிரஸ், காங்கிரஸ்னு சுத்திக்கிட்டிருந்தியே! அதனாலே உனக்கு என்ன கிடைச்சது? தேசத்துக்குத்தான் என்ன கிடைச்சது?''

கேள்வியின் அதிர்ச்சியில் மனம்குழம்பியது, முன்னாலிருந்த காகிதங்களில் அவரது கவனம் செல்லவில்லை.

''எனக்கு என்ன கிடைச்சது?... எனக்கு என்ன வேணும்?... புகழா,கௌரவமா?...''

பிரிட்டிஷ் அரசாங்கம் நடைபெற்று வந்த காலத்தில் 'வெள்ளையனே வெளியேறு!' இயக்கத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற வெங்கி அய்யர் விடுதலை பெற்று வெளியே வந்த போது திருநெல்வேலி மாவட்டமே திரண்டு வந்துவிட்டது சிறை வாசலுக்கு அவரை வரவேற்க. தூத்துக்குடி முழுதும் 'வந்தே மாதரம்' முழக்கம் எதிரொலித்தது. ஏராளமான மாலைகள் போட்டு நகரவீதிகளில் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். அப்போது வெங்கி அய்யர் இந்தப் பிராந்தியத்தின் முடிசூடா மன்னர்.

இப்போது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டாம் ஆண்டு. நாடு விடுதலை பெற்று ஐந்தாண்டுகள் முடியவில்லை. இன்று அறுபதாண்டு நிறைவு நாளில் அவரை வாழ்த்த சாதாரண மக்கள் நாலைந்து பேர்தாம் வந்தனர்.

வாழ்வு முழுதும் நாட்டுப் பணி செய்ததற்கு இது தான் பலனா? ஐந்தாண்டுகளில் நன்றி கெட்டு நாடு அவரை, அவரது சேவையை, அவரது தியாகத்தை மறந்துவிட்டது. போலீஸ் காரர்களிடம் எவ்வளவு துன்பப்பட்டிருக்கிறார் அவர்! ஆறு முறை சிறைவாசம். இதன் விளைவு மூலநோய்.

வெங்கி அய்யரின் இதயம் இடிந்துபோயிற்று, கண்கள் பனித்தன.

இதுதான் இயற்கை... இன்று எவ்வளவு பேர் சிதம்பரம் பிள்ளையையோ, ஆனிபெசன்டையோ நினைவு வைத்துக் கொண்டிருக்கிறார்கள்?

சிதம்பரம் பிள்ளையின் அழைப்பைக் கேட்டுத்தான் அவர்–கெட்டிக்கார மாணவராயிருந்தவர், பள்ளியிறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவர்–படிப்பை விட்டு விட்டு நாட்டுப் பணியில் ஈடுபட்டார்.

உட்புறத்து நிலைக்கட்டில் ஓரிளம் பெண் ஆவி பறக்கும் காபி டபரா டம்ளருடன் வந்து நின்றாள். இன்னொரு கையில் ஒரு தட்டில் முறுக்கும் லட்டுவும், வெங்கி அய்யர் அவளைக் கவனிக்கவில்லை.

"தாத்தா காபி சாப்பிடுங்க சூடாயிருக்கறபோதே..." என்று சொல்லிக் கொண்டு பக்கத்திலிருந்த பெஞ்சியின் மேல் அமர்ந் தாள் பெண், "என் முன்னாலேயே சாப்பிடணும்... நீங்க இப்பல் லாம் சாப்பிடக்கூட மறந்திடறீங்க... நீங்க சாப்பிட்டதும் நான் பாத்திரங்களை எடுத்துக்கிட்டு போகணும். எனக்கு நிறைய வேலை இருக்கு..."

"அப்படி என்ன வேலை உனக்கு...?"

"இன்னிக்கு உங்களுக்கு சஷ்டியப்த பூர்த்தி இல்லையா? சமையல்லே அம்மாவுக்கு உதவி பண்ணணும்..."

"ஓ. அதுக்காகத்தானா இதெல்லாம்...?"

"ஏன் தாத்தா, நீங்க ஏன் இவ்வளவு கருமியா இருக்கிங்க? இன்னிக்கு சஷ்டியப்த பூர்த்தி. இதையாவது கொஞ்சம் விமரிசை யாகக் கொண்டாடக் கூடாதா? நீங்க எவ்வளவு பெரிய மனுஷர்...!"

"நான் பெரிய மனுஷனா?" சிரித்துக் கொண்டே கேட்டார் அவர்.

"பின்னே என்ன? எங்கள் ஸ்கூல் ஹெட்மிஸ்டரஸ் பொய்யா சொல்றாங்க...? ஒரு நாள் 'தேச பக்தன்னா யாரு?' ன்னு கேட்டாங்க. 'மகாத்மா காந்தி, பண்டித நேரு, ராஜாஜி, வ.உ.சிதம்பரம் பிள்ளை, இவங்க மாதிரி தேசத்துக்கு சேவை பண்ணினவங்க'ன்னுசொன்னேன்...

"அவங்க என்ன சொன்னாங்க, தெரியுமா? 'உன்னோட தாத்தாவும் பெரிய தேசபக்தர். அவர் நாட்டுக்காக எல்லாத்தை யும் தியாகம் பண்ணிட்டார். அவரோட தியாகத்துக்கு இணை யில்லை. அவரோட அறுபதாண்டு நிறைவைத் தமிழ்நாடு பூராக் கொண்டாடணும்.'..."

வெங்கி அய்யருக்கு ஒரே ஆச்சரியம். அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். "அப்படியா சொன்னாங்க?" என்று கேட்டார்.

சியாமளா தன் இளந்தளிர் முகத்தையாட்டிச் சொன்னாள். "ஆமா! இன்னும் என்னென்னவோ சொன்னாங்க. எனக்கு ரொம்ப கர்வமாயிருந்தது... அதுசரி, நீங்க சிதம்பரம் பிள்ளை யோட வலது கையா இருந்தீங்களாமே? அன்னிக்கு அவரோட கதையைச் சொல்ற போது ஹெட்மிஸ்ட்ரஸ் சொன்னாங்க - 'சிதம்பரம் பிள்ளைக்கு உதவியா இருந்தவர் நம்ம சியாமளா வோட தாத்தா தான்!...' பிறகு கேட்டாள் "நீங்க இதெல்லாம் ஏன் எனக்குச் சொல்லவேயில்லை?"

வெங்கி அய்யர் காபி குடித்துக் கொண்டே சொன்னார். "எனக்கு அதெல்லாம் ஞாபகமில்லேம்மா."

சியாமளா உதட்டை இன்னும் பிதுக்கிக் கொண்டு சொன்னாள், "ஞாபகமில்லேன்னா விடமாட்டேன்! ஒரு நாள் எனக்கு எல்லாம் சொல்லத்தான் வேணும்."

அவள் காலிப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

ஞாபகமா இல்லை? பழைய தடவைகள் சிறையிலுழன்ற, அறுப தாண்டு நிறைந்த இந்த உடலில் ஏதோ சில வியாதிகள் உண்டு தான். ஆனால் மனம் சற்றும் பழுதுபடவில்லை. அது கடிகார முள் போல் எப்போதும் விழிப்புடன் ஓய்வின்றிச் செயல்பட்டு வருகிறது. அது நிற்பதில்லை, தவறு செய்வதில்லை, மறப்ப தில்லை... ஆனால் பழைய விஷயங்களை நினைவு கூர்ந்தால் மனது கஷ்டப்படுகிறது...

ஆயிரத்துத் தொள்ளாயிரத்தேழாம் ஆண்டில் சூரத் காங் கிரசில் மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்குமிடையே தகராறு. சுரேன் பானர்ஜி, ராஷ்பிகாரிகோஷ், அம்பிகா மஜூம் தார், பிரோஜ் ஷா மேத்தா, கோகலே ஆகியோர் மிதவாதிகள். அரசாங் கத்துக்கு விண்ணப்பம் செய்வது அவர்களது வழி. தீவிரவாதி களான விபின்பால், அரவிந்த கோஷ், பிரும்ம பாந்தவ் உபாத்தியாயா, சித்தரஞ்சன்தாஸ், திலகர், லஜபத் ராய், சிதம் பரம்பிள்ளை ஆகியோரின் வழி வேறு. 'விண்ணப்பம் செய்யும் காலம் மலையேறிவிட்டது, இனி யுத்தந்தான்' என்று சொன்னார் அரவிந்தர். சிதம்பரம் பிள்ளையின் முழக்கமும் அதுதான். பிரிட்டிஷ் அடக்குமுறை உச்சத்திலிருந்தது. அதற்கு மாற்று போர்தான். அந்த போர் ஆயிரத்துத் தொள்ளாயிரத்தெட்டில் தொடங்கியது. அப்போது வெங்கிக்கு வயது பதினைந்து.

சிதம்பரம் பிள்ளைக்கு ஆயுள்தண்டனை விதிக்கப்பட்டது. அவ்வளவுதான். எங்கும் கிளர்ச்சி பரவியது. சொற்பொழிவு கள், ஊர்வலங்கள், முழக்கங்கள், திருநெல்வேலி நகரில் வெங்கி மும்முரமாகச் செயற்பட்டார். அன்னிய நாட்டுத் துணிக் கடைகள் முன்னால் மறியல், அன்னியத் துணிகள் எரிப்பு, பள்ளி கள், கல்லூரிகள் கதவடைப்பு, போலீஸ் அடக்குமுறை, தடியடி, துப்பாக்கிச் சூடு. குண்டு வெங்கியின் தொடையில் பட்டது. ஆனால் அவர் உயிர் பிழைத்து விட்டார். இன்னும் அந்த காயத் தின் தழும்பு இருக்கிறது.

இதன்பின் வாஞ்சி அய்யரின் முயற்சியால் பாரதமாதா சங்கம் தோன்றியது. வெளிப்பார்வைக்கு அது சமூகப் பணி

யமைப்பு, ஆனால் உள்ளூற ஒரு பயங்கர இயக்கம். வாஞ்சி அய்யர் பார்ப்பதற்கு சாதுவாக இருப்பார். அவர் திருவாங்கூர் சமஸ்தானத்தில் காட்டிலாகாவில் குமாஸ்தா. அவர் உண்மையில் அவ்வளவு துணிவுள்ளவர் என்பது வெளிப்பார்வைக்குத் தெரியாது. அவருடைய சீடர் வெங்கி.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பதினொன்றாம் ஆண்டு ஜூன் மாதம் பதின்மூன்றாம் நாள்—மறக்க முடியாத நாள் அது. அன்று மாவட்ட காலக்டர் ஆஷ் துரை பிரயாணம் செய்த ரயிலிலேயே வாஞ்சி அய்யரும் வெங்கி அய்யரும் வந்தார்கள்.

ஆஷ் பெருங் கொடுங்கோலன். நாட்டு மக்களால் அவனுடைய கொடுமையைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. பாரமாதா சங்கம் அவனுக்கு எச்சரிக்கை விடுத்தது. இறுமாப்புப் பிடித்த ஆஷ் அதைப் பொருட்படுத்தவில்லை.

பகல் பதினோரு மணி, கடுமையான வெயில், மணியாச்சி ரயில் சந்திப்பில் மேற்குப் பக்கத்துப் பிளாட்பாரத்தில் ரயில் வந்து நின்றது. ஆஷும் அவன் மனைவியும் ரயிலிலிருந்து இறங்கினார்கள். அவர்கள் கோடைகாலத்தைக் கழிக்க கொடைக்கானல் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களுக்காக இரண்டாம் நம்பர் பிளாட் பாரத்தில் தனிப்பெட்டி நின்று கொண்டிருந்தது. பிரயாணிகள் மூன்றாம் நம்பர் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தார்கள். ஆஷ் தன் கையில் புத்தகத்தை வைத்துக்கொண்டிருந்தான். திருமதி ஆஷும் தன் பெட்டியிலிருந்து கொண்டு ஜன்னல் வழியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

படார், படார், படார்!

வாஞ்சி அய்யரின் கையிலிருந்த ரிவால்வரிலிருந்து மூன்று குண்டுகள் ஆஷ்துரையின் கழுத்தை ஊடுருவிக் கொண்டு சென்றன. வெங்கி அய்யரும் வாஞ்சி அய்யருக்கருகில் நின்று கொண்டிருந்தார். வாஞ்சி அய்யரின் துப்பாக்கி குறி தவறினால் வெங்கி அய்யர் சுடுவதென்று ஏற்பாடு, ஆஷ் தள்ளாடி விழும்போது தன் கையிலிருந்த புத்தகத்தை வாஞ்சி அய்யர் மேலெறிந்தான். ஆனால் அது அவர்மேல் படவில்லை. அவன் பிணமாகப் பெஞ்சியின் மேல் விழுந்தான். திருமதி ஆஷ் கூக்குரலிட்டாள். வாஞ்சியும் வெங்கியும் ஓடினார்கள். வாஞ்சி பிடிபட்டுவிட்டார். வெங்கி தப்பியோடினார்.

அந்த நிகழ்ச்சி திரைப்படம் போல் வெங்கி அய்யரின் மனக்கண் முன்னே விரிகிறது. வாஞ்சி அய்யர் கையில் துப்பாக்கியுடன் மிரட்டுகிறார்— "யாராவது கிட்டே வந்தீங்கன்னா சுட்டுடு

வேன்!" இன்னொரு படார்! தன்னையே சுட்டுக் கொண்டு விழுந்து விட்டார் வாஞ்சி. அவரது இரத்தம் செம்மணலில் பரவி உறைந்தது.

வெங்கி அய்யரின் மனக்கண்ணில் இந்தக் காட்சி தெளிவாகத் தோன்றியது. அன்றைய வானத்தின் நிறத்தைக் கூட மறக்க வில்லை அவர்...

"வெங்கி அய்யர் இருக்காரா?"

"யாரது?... வாங்க, வாங்க, ..."

பீட்டரும் அந்தோனியும் உள்ளே வந்தார்கள். அந்தோனியின் கையில் ஒரு பெரிய ஜரிகை மாலை. பீட்டரின் கையில் ஒரு கிண் ணத்தில் பன்னீரில் கரைத்த சந்தனம். இருவரும் வெங்கி அய்யரின் நெற்றியில் சந்தனத் திலகமிட்டார்கள். பிறகு பீட்டர் மாலையை அவர் கழுத்தில் போட்டு வாழ்த்தினான், "நீங்க நூறு வயசு வாழணும்!... நாட்டுக்கு உண்மையான விடுதலை இன்னும் கிடைக்கலே. அது கிடைக்கறதுக்கு நீங்க உயிர் வாழறது ரொம்ப அவசியம்..."

வெங்கி அய்யருக்குத் தொண்டையடைத்துக் கொண்டது. கண் கள் பனித்தன. அவர் இருவரையும் இறுகத் தழுவிக் கொண்டார். பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொன்னார், "உசிரோடே இருக்கற வரையிலே நாட்டுக்கு சேவை பண்ணத் தான் ஆசைப்பட்டேன். அது செய்ய எங்கே விடறாங்க? .." தன் னுள்ளேயிருந்து எழுந்த பெருமூச்சைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு பேச்சை மாற்றினார், "எனக்கு அறுபதாண்டு நிறை வுன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"ரோட்ரிகோதான் சொன்னார். எல்லாரோட ஜாதகமுந்தான் அவர்கிட்டே இருக்கே!..."

"அது சரிதான். இன்னிக்குக் காலையிலேயே அவர் வந்து அறுபது ரோஜாப்பூ வச்சுக் கட்டிய இந்தச் செண்டைக் கொடுத் துட்டுப் போனார்..."

பீட்டர் சொன்னான், "அதைத் தவிர, 'தேசதீபம்' பத்திரிகை யிலே உங்க சுய சரிதம் படிச்சுக்கிட்டு வந்தேன். ரொம்ப நல்லா எழுதினீங்க... அதை ஏன் பாதியிலே நிறுத்திட்டீங்க?"

வெங்கி அய்யரின் கண்களில் வேதனையின் நிழல் படர்ந்தது. ஆனால் அது ஒரு சில கணங்களுக்குத்தான். சொன்னார், "பத்திரிகையை வேறே ஒருத்தர் வாங்கிட்டார். புது முதலாளிக்கு என் சுயசரிதம் தொடர்வது பிடிக்கல்லே. என் எழுத்திலே இந்தக் காலத்துத் தலைவர்கள் சிலரோட முகத்திரை கிழிஞ்சு போச்சே... அதைத் தவிர நான் சர்க்காரைக் குறை கூறினதாலே எனக்குக் கம்யூனிஸ்ட்னு கெட்டபேர்..."

"உங்களுக்குமா?" அந்தோனி கேட்டான்.

"ஆமா... இப்போ ஆட்சி நடத்தறவங்க விமரிசனத்தைப் பொறுத்துக்க மாட்டாங்க. அந்தத்திராணி இல்லே இவங்களுக்கு..."

"ஆனால் ஜனநாயத்திலே விமரிசனம் செய்யற உரிமை, பேச்சு சுதந்திரம் எல்லாருக்கும் உண்டே!"

"போலீசை வச்சுப் பயமுறுத்தி வாயை அடைக்கலாமே! அப்படிப்பட்டவங்கதானே இப்போ ஆட்சி நடத்தறாங்க..." அவர் புன் சிரிப்புடன், ஆனால் வேதனை நிறைந்த குரலில் சொன்னார், "இது ஜனநாயகமில்லே, அதிகாரவர்க்க யதேச்சாதிகாரம், பிரிட்டிஷ் நிர்வாக யந்திரத்தின் ஆட்சி..."

☆ ☆ ☆

சியாமளா இரண்டு தட்டுக்களில் முறுக்கும் லட்டும், இரண்டு டம்ளர்களில் காபியும் கொண்டு வந்து வைத்தாள்.

வெங்கி அய்யர் கேட்டுக் கொண்டபடி அந்தோனியும் பீட்டரும் அவற்றை எடுத்துக் கொண்டார்கள்.

"அப்பாவோட உங்களுக்கு இவ்வளவு நெருங்கிய நட்பு இருந்ததுன்னு எனக்குத் தெரியாது" அந்தோனி சொன்னான்.

வெங்கி அய்யர் சொன்னார்,"காட்வின் சட்டென்று யாரையும் நம்பமாட்டார். அவர் நம்பிக்கை வச்சிருந்த ஒரு சிலரிலே நானும் ஒருவன்."

"ஆனால் உங்க வழிகள் ஒன்றுக்கொன்று நேர் எதிர்."

"வெளிப்பார்வைக்கு அப்படித்தான் தோணும். ஆனால் உள்ளுற அப்படியிலலே, இந்த ஊர் ஜனங்கள் ஏன், உங்க மீன் பறவ இனத்தார் கூட அவரைச் சரியாப் புரிஞ்சுக்கல்லே. நீங்க எப்படி உங்க சமூகத்திலேருந்து விலகியிருக்கீங்களோ, அப்படித்தான் அவரும் இருந்தார்......"

"அப்பமன்னா?" பீட்டர் கேட்டான்.

"ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தேழுக்கு முன்னாலே மீன் பறவ சமூகத்திலே பெரிய மனுஷங்க எல்லாரும் நடையுடை பாவனையிலே துரைமார்கள்தான். வெளிநாட்டுத் துணியிலே பாண்ட், கோட்டு, டை எல்லாம் போட்டுக்குவாங்க. நாற்பத்தேழுக்கப்புறம் கதர்ப் பாண்ட்டும் காந்திக்குல்லாயும் போட்டுக்க

ஆரம்பிச்சாங்க. சுதந்திரத்துக்கு முன்னால் 'வந்தே மாதரம்' கோஷத்தை அவங்க இந்துக்கள் பசு இறைச்சியை வெறுக்கற மாதிரி வெறுத்தாங்க. அவங்க பரம ராஜவிசுவாசிகள். விடு தலை இயக்கத்தை எதிர்த்தாங்க. ..ஆனால் காட்வின் எப்போதும் வேஷ்டியும் சட்டையுந்தான் அணிவார். சில சமயம் காலிலே செருப்பு இருக்கும், சில சமயம் அதுகூட இருக்காது. அவரோட சிந்தனையும் தனிதான். அவர் சொல்லுவார் 'நாட்டு மக்களுக்கு வேலை கிடைச்சு அவங்க ரெண்டு வேளை வயிறாரச் சாப்பிடணும்.... இங்கிலீஷ்காரங்க நம்மைச் சுரண்ட றாங்க. அதனாலேதான் இங்கே பஞ்சம், பற்றாக்குறை. அவங்க போயிட்டாங்கன்னாப் பாமர மக்களுக்குச் சாப்பிடச் சோறு கிடைக்கும். சோறு கிடைக்காத மனுசன் தன் மானத்தை இழந்து பிச்சைக்காரனாகவோ, திருடனாகவோ ஆயிடறான். அவனாலே சமூகத்துக்குஆபத்து....."

"அவர் பிரிட்டிஷ்காரங்களோடே தொழில் செய்தாலும் அவங்க நம் நாட்டைவிட்டுப் போயிடணும்னுதான் ஆசைப்பட்டார். அவர் யாரையும் முகஸ்துதி பண்ணித் தன் தொழிலை வளர்க் கலே; தன் கடுமையான உழைப்பாலே வளர்த்தார். சில வகைக் காரியங்களைப் பறங்கிகள் அவர்கிட்டே கொடுக்கமாட்டாங்க .. ஒரு சமயம் ஒரு மூணு லட்ச ரூபாய்க் காண்ட்ராக்ட் விஷயமாகத் தகராறு ஏற்பட்டுக் காட்வின் அம்பா சமுத்திரம் மில்லோட பெரியதுரை ஒருத்தர் முகத்திலே குத்திவிட்டார். துரையோட மூணு பல் கீழே விழுந்துடுத்து. காட்வின் கொஞ்சம்கூடப் பயப் படலே, கடைசியிலே துரைமார்கள் அவரைக் கூப்பிட்டு அவருக்கே காண்ட்ராக்டைக் கொடுத்தாங்க .....

"நாங்களும் முதல்லே அவரைச் சரியாப் புரிஞ்சுக்கலே. அதனாலே எங்களுக்கு நஷ்டமும் ஏற்பட்டது....சிதம்பரம்பிள்ளை சுதேசிக் கப்பல் கம்பெனி ஆரம்பிச்சு ரெண்டு கப்பல் வாங்கிப் பிரிட்டிஷ் கப்பல் கம்பெனியோடே போட்டி போட்டது உங்களுக் குத் தெரியும். அவரோட கம்பெனி நிலைக்காததுக்கு ஒரு கார ணம் ராஜ விசுவாகிகளான மீனவ சமூகத்தோட எதிர்ப்புதான். அப்போ எங்களுக்குக் காட்வினோட உதவி கிடைச்சி ருந்தால்....."

"அப்போ அப்பா எங்கே இருந்தார்?"

"சிலோன்லேயும், சிங்கப்பூரிலேயும் தொழிலைக் கவனிச்சுக் கிட்டிருந்தார்... பயங்கரவாதம் பலமாயிருந்த காலம். வெள் ளைக்காரங்க கொலை செய்யப்பட்டாங்க. செய்திப் பத்திரிகை களிலே இந்த மாதிரி செய்தி நிறைய வரும். வெள்ளைக்காரங்க

அரண்டு போயிட்டாங்க. வந்தேமாதரம்னா நடுங்குவாங்க. நாங்க திருநெல்வேலியிலேருந்து தூத்துக்குடிக்கு ஊர்வலமா வந்தோம். எல்லாத் தெருக்களிலும் வந்தே மாதர முழக்கம். தூத்துக் குடியிலே இருந்த வெள்ளைக்காரங்க பயந்து போய்த் தங்கள் குடும்பங்களைக் கூட்டிக்கிட்டு ஹோர்த்தீவுக்குப் போயிட்டாங்க. அவங்க கலெக்டருக்குச் செய்தி அனுப்பினாங்க-'நாங்க இந்த மாதிரி ஆபத்திலே இருக்கோம். எங்களைக் காப்பாத்துங்க' ன்னு. ஆனால் செய்தி கலெக்டருக்குப் போய்ச் சேரலே. புரட்சிக் காரங்க தந்திக் கம்பிகளை அறுத்திருந் தாங்க... அந்த சமயத் திலே இந்த மீனவங்க தான் வெள்ளைக் காரங்களுக்கு வேண் டிய உணவுப் பொருள், தண்ணி, மருந்து எல்லாம் கொண்டு வந்து கொடுத்து அவங்களைக் காப்பாத்தினாங்க. அது மட்டுமில்லே. நேரா போய்க் கலெக்டருக்கு விஷயத்தைச் சொன் னாங்க. கலெக்டர் படையை அனுப்பி வெள்ளைக் காரங்களைக் காப்பாத்தினார். அவர் அப்படிக் காப்பத்தல் லேன்னா அவங்க ஹோர்த் தீவிலேருந்தே பிரிட்டனுக்குக் கப்பலேறிப் போயிருக் கணும்.... அந்த சமயத்திலே உங்க அப்பா இங்கே இருந்திருந்தால்....

"உண்மையான காட்வினை நாங்க புரிஞ்சு கொண்டது ஆயி ரத்துத் தொள்ளாயிரத்து முப்பதிலே. காந்தி-இர்வின் ஒப்பந்தம் தோல்வியாயிடுத்து. ஒரு நாள் நான், சிதம்பரம் இன்னும் சில பேர் பேசிக் கொண்டிருந்தோம். அப்போ காட்வின் அங்கே வந்தார். சிதம்பரத்துகிட்டே சொன்னார் 'புலியாயிருந்த நீங்க ஏன் பூனையாயிட்டீங்க? இது வெட்கக் கேடு! நீங்க இந்த அஹிம் சையைக் கை விட்டுட்டுப் போரிலே இறங்குங்க. வெள்ளைக்கா ரனை விரட்டுங்க. உங்களுக்குத் தேவையான பணத்தை நான் தரேன்......' அதிலேருந்து எங்க இயக்கத்துக்குப் பண உதவி செய்ய ஆரம்பிச்சார் அவர். இந்த விஷயம் யாருக்கும் தெரியாது.

இதுவரை மௌனமாகச் கேட்டுக் கொண்டிருந்த பீட்டர் சொன்னான்,"நான் ஒண்ணு கேட்பேன், தவறாக நினைச்சுக்க மாட்டிங்களே?"

"கேளேன்...."

"உங்ககிட்டே பணமில்லேங்கறதுக்காப் போன தேர்தல்லே காங்கிரஸ் உங்களை வேட்பாளராக நிறுத்தலேன்னு கேள்விப் படறேன். நிசந்தானா?"

வெங்கி அய்யரின் முகம் சிவந்து விட்டது. அடுத்தகணமே வெளிறிப் போய்விட்டது. அவர் தலையைக் குனிந்து கொண்டு சற்று நேரம் பேசாமலிருந்துவிட்டுப் பிறகு உடைந்த குரலில்

சொன்னார், "நிசந்தான். என் உடல் நிலை சரியில்லேங்கற காரணம் வெறும் சாக்குதான்..."

பீட்டரால் வெங்கி அய்யரை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. கேள்வி கேட்பவர், பதில் சொல்பவர் இருவருமே கூச்சப்படுவதை அந்தோனி கவனித்தான்.

"அப்பமன்னா நீங்க ஏன் காட்வின் ஐயாகிட்டே இதைப் பத்திப் பேசலே?" பீட்டர் கேட்டான்.

வெங்கி அய்யரின் கண்களில் நீர் நிறைந்தது. அவர் சொன்னார், "என்னால் பேச முடியவில்லை. இவ்வளவு காலம் நாட்டுக்கு உழைச்சப்புறம்....." அவரால் தன் பேச்சை முடிக்க முடியவில்லை. அவர் தன் நெஞ்சை இறுக அழுத்திக் கொண்டார்.

இப்போது அவர் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகக் கொட்டியது. "இவ்வளவு நாள் எனக்கு என்னைப்பத்திக் கர்வம் இருந்தது. நான் நாட்டுக்காக, காங்கிரசுக்காக உண்மையா உழைச்சிருக்கேன். அதனாலே காங்கிரஸ் மேலே எனக்கும் உரிமை இருக்கு. சுதந்திர இந்தியாவிலே திட்டங்கள் தீட்டற வேலையிலே எனக்கும் ஒரு பங்கு இருக்கும்னு நினைச்சேன்...."

"அவங்க எவ்வளவு செலவாகும்னு சொன்னாங்க?"

"பத்தாயிரம் ரூபாய், காசு கொடுத்து ஒட்டு விலைக்கு வாங்கணுமாம். சுவரொட்டிகள் தயாரித்து ஒட்டணுமாம். தொண்டர்களுக்குப் பணம் கொடுக்கணுமாம்.... எனக்குச்சீன்னு போயிட்டது. இந்த மாதிரி தேர்தல்லே ஜெயிச்சு மந்திரியாகிற எண்ணம் எனக்கு என்னிக்குமே கிடையாது...

ஒரு பெருமூச்சு விட்டார் வெங்கி அய்யர். பிறகு சொன்னார், சுதந்திர நாட்டின் முதல் தேர்தலை என் கண்ணாலேயே பார்த்தேன், தலைவர்களையும் பார்த்தேன். அவங்களைப் பத்தி எனக்கிருந்த உயர்ந்த அபிப்பிராயம் போயிட்டுது. என் நெஞ்சு உடைஞ்சு போச்சு, பீட்டர்!.....நான் இன்னிக்குக் காலையிலேதான் கடவுள்கிட்டே சொல்லிக்கிட்டிருந்தேன் நான் இன்னிக்கு நடுக்கடல்லே விழுந்து உயிரை விட்டேன்னா அதுக்காக என்னைத் தண்டிக்காதே! நான் இந்த விடுதலைக்காக என் வாழ்க்கையோட முக்கியமான வருஷங்களைச் செலவிடல்லே .........." சொல்லும் போது அவரது குரல் நடுங்கியது. கண்களிலிருந்து நீர் பெருகியது.

"தாத்தா, எங்க ஸ்கூல் ஹெட்மிஸ்ட்ரெஸ் வந்திருக்காங்க!......" உள்ளேயிருந்து சியாமளாவின் குரல் கேட்டது.

வெங்கி அய்யர் மூக்கைச் சிந்திவிட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

தலைமை ஆசிரியை ஒரு பெரிய பூச்செண்டை அவர் கையில் கொடுத்துவிட்டு அவரை வணங்கினாள். "என் அதிருஷ்டம். இந்த விசேஷ நாளிலே உங்களுக்கு வணக்கம் செலுத்தற வாய்ப்புக் கிடைச்சது....."

வெங்கி அய்யர் கமலாவுக்கு ஆசி கூறிவிட்டுக் கேட்டார், "இங்கே எவ்வளவு காலமா இருக்கீங்க?"

"ஆறுமாசமா .... மதுரையிலே பி.எட். பாஸ் பண்ணினதும் இங்கே வேலை கிடைச்சு வந்தேன்?"

"சொந்த ஊர்?"

"ஸ்ரீ வைகுண்டம்"

"தூத்துக்குடி பிடிச்சிருக்கா?"

"இந்த ஊர் ஸ்கூல்லே வேலை பார்க்கறது பெருமைக்குரிய விஷயம். இது சிதம்பரம்பிள்ளை வாழ்ந்த ஊர், நீங்க இப்பவும் வசிக்கிற ஊர். தமிழ் நாட்டின் புனிதத்தலம் இது......"

"இதையெல்லாம் மறக்கிற காலம் வந்துருச்சு. நாங்க செஞ்சதெல்லாம் முட்டாள்தனமென்று இப்ப தோணறது. அந்தக் காலத்திலே தேச பக்தியுணர்வு அதிகமாயிருந்தது. நாங்க புதை மணல் மேலே நின்னுக்கிட்டுப் போராடிக்கிட்டிருக்கோம்னு அப்போ புரியல்லே. இப்போ காலுக்குக் கீழே உறுதியான கரையைக்காணோம்....."

"ஏன் இப்படியெல்லாம் பேசறீங்க?"

"அந்தக் காலத்திலே ஒத்தைக் கண்ணுள்ள மான் மாதிரி மூர்க்கமாப் போராடினோம் வெள்ளைக் காரனைக் கொல்றது, தூக்கு, சிறை, போலீஸ் சித்திரவதை, வந்தே மாதரம் ......"

கமலாவின் பெருமூச்சு தெளிவாகவே கேட்டது. பீட்டரும் அந்தோனியும் அவள் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள்.

வெங்கி அய்யர் தமக்குத் தாமே பேசிக் கொள்பவர் போல் சொல்லிக் கொண்டு போனார்-'கிராமங்களிலே, மலைகளிலே, காடுகளிலே, கடற்கரையிலே, குடிசைகளிலே வசிக்கிற கோடிக்கணக்கான மனுஷர்கள்தான் நாடுங்கற விஷயம் எங்களுக்கு அப்போ தெரியாமே போச்சு. அவங்களோட நிலையிலே முன்னேற்றம் ஏற்பட்டால்தான் நாடு முன்னேறும் என்ற உண்மையை நாங்க புரிஞ்சுக்கல்லே. பிரிட்டிஷ்காரன் சுரண்டல் ஒழிஞ்சால் எல்லாச் சுரண்டலும் ஒழிஞ்சு போயிடாதுங்கறதும் புரியல்லே. இப்போ புரியறது..."

"எங்க ஊரிலே சாதாரண ஜனங்களோட நிலைமை இன்னும் மோசமாகிக்கிட்டு வரது ......" கமலா சொன்னாள்.

"ஸ்ரீவைகுண்டம் மட்டுந்தானா? அம்பா சமுத்திரம், சேரன் மாதேவி, தென்காசி, பாபநாசம், கல்லிடைக்குறிச்சி, பாளை யங்கோட்டை.. கடற்கரைக் கிராமங்களிலே எல்லாம் இதே நிலை தான். நான் அங்கேயெல்லாம் சுத்தி விவரங்கள் சேகரித்து ஒரு ரிப்போர்ட் தயார் பண்ணியிருக்கேன் பத்திரிகைக்கு அனுப்ப. அன்றாடங்காய்ச்சிகளோட நிலை பயங்கரமாயிருக்கு. கடும் பஞ்ச நிலைமை தான்!...."

"பஞ்சம்னு சொன்னாலே சர்க்காருக்குக் கோபம் வந்துடும்" என்றான் பீட்டர்.

"வெள்ளைக்காரங்க வெளியேறுனபோது ரெண்டு மணு அரிசி விலை இருபது இருபத்திரண்டு ரூபாய். போன வருஷம் இருபத்தேழு ரூபாய் ஆச்சு. இந்த வருஷ ஆரம்பத்திலேயே முப்பத்தொன்பது நாற்பது ரூபாய்! ஒரு சாதாரண மனிதனோட அன்றாட வருமானம் அதிகமாப் போனால் ஒரு ரூபாய். அவன் குடும்பத்திலே அஞ்சு பேர் இருந்தால் எப்படிச் சாப்பிடுவாங்க?" என்று கேட்டான் பீட்டர்.

"நீ சம்பாதிக்கறவங்களைப் பத்திப் பேசறே... வேலையில் லாமே இருக்கற ஆயிரக் கணக்கானவங்களோட நிலைமை என்ன?"

"எனக்கு ஆச்சரியமாத்தான் இருக்கு. அவங்க எப்படிப் பசியைத் தீர்த்துக்கறாங்க?" கமலா கேட்டாள்.

அந்தோனி சொன்னான், "பிரிட்டிஷ்காரங்க கடந்த நூத்தைம் பது வருசமா நம்மை உறிஞ்சிச் சக்கையாத்துப்பிட்டாங்க. இந்த நிலைமை திருந்தக் கொஞ்ச காலம் ஆகத்தான் ஆகும்...."

"வாஸ்தவந்தான். ஆனால் இந்த அஞ்சு வருஷமா ஆட்சி நம்ம கையிலேதானே இருக்கு? இப்போ வேறே யாரையும் குத்தஞ் சொல்ல முடியாது. இந்த அஞ்சு வருஷங்களிலே நாம என்ன செஞ்சிருக்கோம்? தெரியுமா உனக்கு?"

"நம்பிக்கையிழக்கும் படியா அப்படியொண்ணும் நான் கேள்விப்படலியே?" அந்தோனி சொன்னான்.

"நீ என்னோட ஒரு வாரம் கிராமங்களிலே சுத்திப்பாரு. நாட் டோட உண்மையான நிலை தெரியும். சும்மா பட்டினங்களைப் பார்த்து முடிவு செய்து விடாதே.... நம்ம ஜில்லாவுக்கு பேரு திருநெல்வேலி–அதாவது நெல் வயல்கள் நிறைந்த இடம். தாமிர வருணி ஆற்றுப் பாசனம். ஆனால் இங்கேயே இப்போ பஞ்சம். தஞ்சாவூர் ஜில்லாவைத் தமிழ் நாட்டின் களஞ்சியம்னு சொல்

லுவாங்க. அங்கேயே இந்த மாசம் சோறில்லாமே இருபது பேர் செத்துப் போயிருக்காங்க. தஞ்சாவூர் மட்டுமில்லே, தமிழ் நாட்டின் வெவ்வேறு இடங்களிலேருந்து பட்டினிச் சாவுச் செய்திகள் வந்து கொண்டிருக்கு. ஆந்திராவிலே கூட இதே நிலைதான்...... நான் செய்திகள் அனுப்பிக் கொண்டுதானிருக்கேன். ஆனால் பேப்பர்லே போடுவாங்களோ இல்லையோ!....'

"ஏன்?" அந்தோனி கேட்டான்.

"பேப்பர்லே போட்டால் சர்க்காருக்குக் கோபம் வரும். பேப்பருக்கு சர்க்கார் விளம்பரம் கிடைக்காது. பேப்பருக்கு வரும்படி குறைஞ்சு போகும்....."

"நெல் விளைச்சல் ஒண்ணும் குறைச்சலில்லையே! ஜனங்கள் பட்டினியாலே சாவானேன்?" கமலா கேட்டாள்.

"நில உடைமையாளர்கள், வியாபாரிகளோட பேராசைதான் காரணம். இவங்க ஓநாய்களை விடப் பயங்கரமானங்க. அவங்களோட கிடங்குகளிலே தானியம் நிறைஞ்சிருக்கு. ஆனால் இல்லே இல்லேன்னு சொல்லி விலையை உசத்துறாங்க. ஆகாசத்தை எட்டற அளவுக்கு லாபம் சம்பாதிக்கறாங்க...."

"சர்க்கார் ஒண்ணும் சொல்றதில்லையா?" அந்தோனி கேட்டான்.

திடீரென்று இடியிடியென்று சிரித்து விட்டான் பீட்டர். அந்தோனி வியப்புடன் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தான்.

வெங்கி அய்யர் சொன்னார், "ஒண்ணரை வருஷத்துக்கு முன்னாலே நடந்த நிகழ்ச்சியைக் கேளு..... பீட்டருக்கும் ஞாபகமிருக்கும்....."

நிகழ்ச்சியை விவரித்தார் வெங்கி அய்யர்.

ஐம்பதாம் ஆண்டு ஜூன் மாதம் திருநெல்வேலி கலெக்டர் ஆபீஸில் உணவுக் கமிட்டியின் கூட்டம். வெங்கி அய்யரும் அந்தக் கமிட்டியின் ஓர் உறுப்பினர். மாவட்டத்தின் மற்ற இடங்களிலிருந்தும் உறுப்பினர்கள் வந்திருந்தனர். கலெக்டர் ஆர். எஸ் சுப்பையா பிள்ளைதான் கமிட்டித் தலைவர்.

வெங்கி அய்யர் முதன்முதல் அறிக்கை சமர்ப்பித்தார். ஒவ்வொரு கிராமத்தையும் பற்றிய அறிக்கை. நிலைமை மோசமாயிருக்கிறது. ஓரிடத்திலும் கண்ட்ரோல் விலையில் அரிசி கிடைக்கவில்லை. அது விற்கிற விலையைக் கொடுக்க சாதாரண மக்களால் இயலாது. ஒவ்வொரு கிராமத்திலும் ஓலம்....

வேறு பல உறுப்பினர்களின் அறிக்கைகளும் இதே மாதிரி தான்.

ஆனால் மாவட்ட காங்கிரஸ் தலைவரின் கருத்து வேறு மாதிரியாக இருந்தது. அவர் நிதானமாக, நிறுத்தி நிறுத்திப் பேசினார் "நிலைமை ஒண்ணும் அவ்வளவு மோசமில்லை. அய்யா ரொம்ப மிகைப்படுத்திச் சொல்றார்...... ஆனால் அரிசி, பருப்பு, புளி, எண்ணெய் விலையெல்லாம் முந்தியை விடக் கொஞ்சம் ஏறியிருக்கு. அவ்வளவுதான்!....."

கூட்டத்தில் கடுமையாக விவாதம் நடந்தது. பங்கீட்டு முறை அமுலுக்கு வர வேண்டும் என்றொரு கருத்து தெரிவிக்கப்பட்டது. ஆனால் தானியம் கையிருப்பில் இல்லாமல் பங்கீட்டு முறையை அமுல் செய்வது எப்படி? அப்போதிருந்த கையிருப்பு ஒரு வாரத்துக்குத் தான் காணும்.....

"வெளி ஜில்லாக்களிலிருந்து அரிசி கொண்டுவர வேண்டும்" என்று தீர்மானம் கொண்டு வந்தார் வெங்கி அய்யர்.

கமிட்டி உறுப்பினர்களில் பெரும்பாலோருக்கு அரசாங்கத்தின் கருத்துக் கெதிராகச் செயற்படத் துணிவில்லை. ஆனால் பழைய காங்கிரஸ்காரர் முத்துசாமி வெங்கி அய்யரை ஆதரித்தார். பங்கீட்டு முறை அமுலாக வேண்டும். போதிய அரிசி வெளியிடங்களிலிருந்து தருவிக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால் அரிசி, மற்ற உணவுப் பண்டங்களின் விலை உச்சாணிக்குப் போய்விடும்.

வெங்கி அய்யர் மறுநாள் சென்னைக்குப் போய் முதலமைச்சர் குமாரசாமி ராஜாவைச் சந்தித்துப் பேசுவதென்று முடிவாயிற்று. வெங்கி அய்யருக்கு அவரை நன்றாகத் தெரியும். ஒரு காலத்தில் இருவரும் ஒன்று சேர்ந்து பணி புரிந்தவர்கள் ........

நள்ளிரவில் வெங்கி அய்யரின் வீட்டுக்கு வந்தான் பீட்டர், "வெங்கி அய்யா இருக்கீங்களா?"

"என்னப்பா விஷயம்?"

"நம்ம நாட்டுக்கே ஆபத்து!.......என்னோட கொஞ்சம் துறை முகத்துக்கு வாங்க ...."

"என்னத்துக்கு ?"

"வந்தால் தானே தெரியும்!"

இருவரும் துறைமுகத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள், அங்கே படகுத் துறையில் பெரிய பெரிய தோணிகளில் ஏராளமான அரிசி மூட்டைகள் ஏற்றப்பட்டுக் கொண்டிருந்தன. முப்பது லாரிகளில்

வந்திருந்தன அரிசி மூட்டைகள்.

போலீசுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. போலீஸ் வந்து பட கோட்டிகளையும் மற்ற ஊழியர்களையும் கைது செய்தது. இந்தக் கள்ள வியாபாரம் யாருடைய ஏற்பாடு என்பதை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ள முடியவில்லை.

வெங்கி அய்யர் வீடு திரும்பிப் படுக்கையில் படுத்துச் சற்று நேரமே ஆகியிருக்கும். யாரோ ஒருவன் சைக்கிளில் வந்து அவர் வீட்டுக் கதவைத்தட்டி அவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான். ஆங்கிலத்தில் டைப் அடிக்கப்பட்ட மொட்டைக் கடிதம்-"நீங்க கௌரவப் பட்டவங்க. இந்த விஷயங்களிலே தலையிடாதீங்க. தலையிட்டீங்கின்னா உங்களுக்கு ஆபத்து. ஊரை விட்டே ஓடக் கூட நேரலாம். ஆனால் இது சம்பந்தமாக வேறே விதமான ஏற்பாட்டுக்கு வரத் தயாராயிருந்தால் பெஞ்சமின்பெர்னாண்டோ கிட்டே பேசுங்க....."

பெஞ்சமின் பெர்னாண்டோ போலீஸ் உளவாளி! அப்படியானால் போலீஸ் இதில் சம்பந்தப்பட்டிருக்குமோ?

உடனே சென்னைக்குப் போய் முதல் மந்திரி குமாரசாமி ராஜாவைச் சந்தித்தார் வெங்கி அய்யர். ஆனால் இந்தக் குமாரசாமி ராஜா பழைய குமாரசாமி ராஜா அல்ல. வெங்கி அய்யரிடம் அவர் நடந்து கொண்ட விதமும் முன்பு மாதிரி இல்லை. பழைய நெருக்கம் இல்லை. மேலெழுந்த வாரியாகப் பல்லைக் காட்டிச் சிரித்தார். "எப்படி இருக்கீங்க?" என்று கேட்டார். அரசியல் வாதியின் சிரிப்பு, பேச்சு வார்த்தை. வெங்கி அய்யர் விஷயத்தைச் சொல்லியதும் புருவத்தைச் சுருக்கிக் கொண்டு அலட்சியமாகப் பேசினார் குமாரசாமி ராஜா-"நாடு முழுதும் பிரும்மாண்டமான காரியங்கள் நடத்துக்கிட்டிருக்கு. இதுகளுக்கு இடையிலே ஏதாவது சில தவறுகள் நடக்கத் தான் செய்யும், அதைப் போய்ப் பெரிசு படுத்திகிட்டிருந்தால் எப்படி?.... நீங்க தேசத்திலே காங்கிரஸ் கட்சியைப் பரப்புங்க. கம்யூனிஸ்டுகளை விரட்ட உதவுங்க..."

வெங்கி அய்யருக்குக் கண்கள் சிவந்து விட்டன. அவர் உணர்ச்சி வசப்பட்டு எழுந்து நின்றார்-"அப்படீன்னா நூத்துக் கணக்கான மக்கள் அரிசி கிடைக்காமே சாக வேண்டியது தானா...? கள்ள மார்க்கெட்காரங்களுக்கு தண்டனை கிடையாதா...?"

"அப்படி ஏதாவது பெரிய மோசடி நடந்தால் போலீஸ் கவனிச்சுக்கும்... சரி, நான் வரேன், எனக்கு ஒரு முக்கியமான

மீட்டிங்இருக்கு....'' என்று சொல்லிவிட்டு அந்த அறையிலிருந்தே போய்விட்டார் முதல் மந்திரி.

அரசாங்கத் தலைமை அலுவலகத்தின் அகலமான வராந்தாவில் உடைந்த மனதுடன் நடந்து வந்தார் வெங்கி அய்யர். ஒரு டம்ளர் காபி குடிக்க வேண்டும் போலிருந்தது அவருக்கு.

அப்போது எதிரில் வந்தார் பழைய நண்பர் செல்வ விநாயகம். அவர் ராமநாதபுரத்தைச் சேர்ந்த நாட்டுக் கோட்டைச் செட்டியார். விடுதலைப் போராட்டக் காலத்தில் வெங்கி அய்யருடன் சிறையிலிருந்தவர். முதல் நம்பர் போக்கிரி, பெண்பித்துப் பிடித்தவர், சிறையிலிருந்தபோது கூட அவருக்கு எப்படியோ பெண் உறவு கிடைத்து விடும்.

ஆனால் அவர் எப்படி இருந்தாலும் அவருக்கு வெங்கி அய்யர் மேல் மிகுந்த மதிப்பு. வெங்கி அய்யர் முதல் மந்திரியின் அறையிலிருந்து வருவதைக் கண்டு செல்வவிநாயகம் அவரைக் கேட்டார், ''என்ன அண்ணே, இந்தப் பக்கம் எங்கே இப்படி அபூர்வமா?....''

இருவரும் காண்டீனுக்குப் போய்க் காபி குடித்தார்கள். வெங்கி அய்யர் நடந்த விஷயங்களை, முதல் மந்திரியின் பதில் உட்பட விவரித்துவிட்டுச் சொன்னார், ''இந்த மாதிரி தொடர்ந்து நடந்தால் நாடு சீரழிஞ்சு போயிடும். கறுப்புச் சந்தைக் காரங்களை விளக்குக் கம்பத்திலே தூக்குப் போடணும்னு நேரு சொன்னாரே! இப்போ எப்படி நிலைமை?.......அரசாங்கம்னு ஒண்ணு இருக்கா இப்போ ?.......''

செல்வத்துக்கு இதையெல்லாம் கேட்டு ஆச்சரியமேற்படவில்லை. அவர் சிரித்துக் கொண்டு சொன்னார் ''நீங்க கொஞ்சங் கூட மாறல்லே, அண்ணே!.....நீங்க இவ்வளவுநாள் நாட்டுக்கு உழைச்சீங்க, ஜெயிலுக்குப் போனீங்க. தடியடி பட்டீங்க.... இப்போ மிச்சக்காலத்தை அமைதியாக் கழியுங்களேன்! ஆயுசு பூரா சன்னியாசியா இருந்திட்டீங்க. இப்போ ரெண்டு காசு சம்பாதிச்சுக்கிட்டு சுகமா இருங்க.... யார் பட்டினி கிடக்காங்கறதைப் பத்தி நீங்க ஏன் கவலைப்படறீங்க?....''

வெங்கி அய்யர் ஆச்சரியத்துடன் செல்வத்தைப் பார்த்தார்.

செல்வம் தொடர்ந்து பேசினார், ''நீங்களே இதெல்லாம் செய்ய முடியாதுன்னு எனக்குத் தெரியும். என்கிட்டே ஒரு வார்த்தை சொல்லுங்க. நான் உங்களுக்கு ஒரு ரேஷன் கடை லைசென்ஸ் வாங்கித் தரேன். இந்தத் தொழில் ரொம்ப சுலபம்.

கொஞ்சம் உண்மையான கார்டும் நிறையப் போலிக் கார்டும் வச்சுக்கங்க. போலி கார்டுகளுக்குள்ள அரிசியை உங்க இஷ்டத்துக்கு வித்துட லாம்.... இதைவிட லாபம் வர்ற தொழில் தேவைப்பட்டால் சொல்லுங்க. அதுக்கும் ஏற்பாடு பண்ணறேன். வெளிநாட்டி லேருந்து இயந்திரங்கள் இறக்குமதி பண்ண லைசென்ஸ் வாங்கித் தரேன். உங்களுக்குக் கிடைக்கற லாபத்திலே மூணிலே ஒரு பங்கு எனக்குக் கொடுத்தால் போதும். தொழிலுக்கு வேண்டிய முதலுக்கும் நான் பொறுப்பு. பாங்கியிலே கடன் கொடுப்பாங்க உங்களை நம்பி. என்னை இப்போ யாரும் நம்ப மாட்டேங்கறாங்க. இல்லேன்னா நானே இந்தத் தொழில்லே இறங்கியிருப்பேன். நீங்க ஆறுமாதத்திலே லட்சாதிபதி ஆயிடலாம். ரொம்ப ஒழுங்கான தொழில் இது. இன்னுங் கொஞ்சம் குறுக்கு வழியிலே போக நீங்க தயாராயிருந்தால் கோடீசுவரனாக ஆயிடலாம். அதுவும் ரொம்பக் கஷ்டமொண்ணுமில்லே உங்களுக்கு. உங்க கிட்டங்கிலேருந்து சர்க்கார் கிட்டங்கிக்குப் போய் அங்கே கொஞ்ச நாள் காத்து வாங்கிட்டு மறுபடி உங்க கிட்டங்கிக்கே வந்து சேர்ந்துடும். நடுவிலே பாங்கிக் கணக்கிலே உங்களுக்கு வரவு ஏகமா ஏறிவிடும். இதுக்காக சர்க்கார் அதிகாரிகளோட செய்ய வேண்டிய ஏற்பாடெல்லாம் நானே செய்யறேன்...."

வெங்கி அய்யருக்குக் காபி புரையேறி விட்டது. அதைச் சமாளித்துக் கொள்ளும் முயற்சியில் அவருடைய கண்களில் தண்ணீர் வந்து விட்டது. அவர் சொன்னார், "நம்ம ஜனங்களைக் கொஞ்சம் பாரு, செல்வம். அவங்களுக்குச் சாப்பிடச் சோறு இல்லே, கல்வி இல்லே, ஆரோக்கியம் இல்லே... அவங்களோட வரிப் பணத்திலே இந்த மாதிரிக் கொள்ளை..."

"நீங்களும் கொள்ளையடியுங்களேன்! நாட்டைப் பத்தித் தலைவர்கள் கவலைப்படட்டும், சர்க்கார் கவலைப்படட்டும். இந்தக் காலத்திலே தலைவனாகிறதுக்கும் பணம் வேணும்.... ஜனங்க பட்டினி கிடக்காங்கன்னு கத்தறாங்களே, அவங்களுக்குப் பதவி கிடைச்சால் அவங்களுந்தான் இந்த மாதிரி கொள்ளையடிப்பாங்க.... உங்க மாதிரி பிழைக்கத் தெரியாத மனுசரை நான் பார்த்ததேயில்லே. எல்லாரும் அவனவனுக்காகக் கவலைப் படறாங்க. நீங்க என்னன்னா மத்தவங்களுக்காக கவலைப் படறீங்க... முதல் மந்திரியோடே பேச வந்திருக்கீங்களே நீங்க! தூத்துக்குடியிலே அரிசி கடத்தற ஆளை எனக்கு நல்லாத்

தெரியும். அவன் உணவு மந்திரிக்கு பக்கத்து வீட்டுக்காரன். அவங்க ரெண்டு பேரும் ஒரே ஜாதி. உணவு மந்திரி ரொம்ப மரியாதைப்பட்ட மனிசர். கள்ளத்தோணி பிடிபட்ட அன்னிக்குக் கடத்தல்கார ஆள் தன் பெண்டாட்டியை மந்திரி வீட்டுக்கு அனுப்பிட்டான். அவள் போய் மந்திரிகாலிலே விழுந்து கெஞ்சினா. பெண்பிள்ளை அழுறதைப் பார்த்து மந்திரிக்கு இரக்கம் வந்திருச்சு. உடனே போலீசுக்கு டெலிபோன் பண்ணிட்டார். நீங்க கையுங் களவுமாகப் பிடிச்ச ஆளுங்க இப்போ போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு விருந்து வைகக்றாங்க. அரிசி, சிலோனுக்கும் சிங்கப்பூருக்கும் போயிக்கிட்டு இருக்கு...."

வெங்கி அய்யர் இதற்கு ஏதாவது பரிகாரம் செய்ய வேண்டும் என்ற தீர்மானத்துடன் தூத்துக்குடிக்குத் திரும்பினார்.

ஐம்பதாம் ஆண்டு ஜூலை, ஆகஸ்ட், உணவு நிலைமை இன்னும் மோசமாகி விட்டது. ஏராளமான மக்கள் பஞ்சத்தில் மடிந்து கொண்டிருந்தார்கள். கம்யூனிஸ்ட் பத்திரிகைகள் இந்தச் செய்திகளைக் கொட்டையெழுத்துக்களில் பிரசுரித்தன. அரசாங்கம் அவற்றை மறுத்தது.

வெங்கி அய்யர் டில்லிக்கு விண்ணப்பம் அனுப்பினார். மத்திய உணவு மந்திரி கே.எம். முன்ஷி கல்விமான்; எழுத்தாளர்; தேச பக்தரும் கூட. அவர் சென்னை வந்து குமாரசாமி ராஜாவுடன் கலந்து பேசினார். ஆனால் பலனேதும் இல்லை.

வெங்கி அய்யர் ஓய்ந்துவிடவில்லை. அவர் மக்கள் கருத்தைத் திரட்டும் முயற்சியில் ஈடுபட்டார். இரவும் பகலும் உழைத்து செப்டம்பர் மாதம் நடுவில் திருவல்லிக்கேணி உயர்நிலைப் பள்ளியில் ஒரு பொதுக் கூட்டம் ஏற்பாடு செய்தார். கூட்டத்துக்குத் தலைமை வகித்தவர் மகாகவி சுப்பிரமணிய பாரதியின் சீடரும் சுதேசமித்திரன் செய்திப் பத்திரிகையின் ஆசிரியருமான சி.ஆர். சீனிவாசன். பங்கீட்டு முறையும் விலைக்கட்டுப்பாடும் அமுலிலிருந்தும் ஏழை மக்களுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்காதது பற்றியும், நில உடைமையாளர்களிடமிருந்து போதிய அளவு உணவுப் பொருள்களைக் கொள்முதல் செய்ய அரசாங்கம் தவறியதையும் சீனிவாசன் குறிப்பிட்டு இதை மக்கள் இனிப் பொறுக்கமுடியாது என்று அரசாங்கத்தை எச்சரித்தார்....

"இந்த மாதிரி நான் நடத்திய கூட்டங்கள் பற்றிய செய்திகள் என்கிட்டே இருக்கு, பார்க்கிறியா?" என்று அந்தோனியைக் கேட்டார் வெங்கி அய்யர். அந்தோனி தலை குனிந்து உட்கார்ந்

திருந்தான். பீட்டரும் அவ்வாறே. கமலாவின் கண்களில் தீப்பொறி பறந்தது.

"இந்த ரெண்டு வருஷத்திலே நிலைமை இன்னும் மோசமாயிடுத்து. கொள்ளையடிக்கறவங்க பாடு கொண்டாட்டம். இதென்ன அரசங்கம்!" இதற்கு மேல் பேசமுடியவில்லை வெங்கி அய்யரால்.

"இந்த சர்க்காரை ஒழிக்கணும். நீங்க எதிர்த்து நில்லுங்க. நாங்க உங்களுக்கு உதவி பண்றோம்" கமலா கோபத்துடன், ஆனால் அடங்கிய குரலில், சொன்னாள்.

"சர்க்காரை எதிர்த்து நிக்கறது அவ்வளவு சுலபமில்லேம்மா. சர்க்காருக்கு அபார பலம். அதன் அடக்குமுறையிலே எதிராளி கள் நசுங்கிப் போயிடுவாங்க..." வெங்கி அய்யர் சொன்னார்.

"சர்க்காரை மாத்த முடியல்லேன்னாப் போராடிச் சாவோம்!. .. என்னோட அப்பா பிரிட்டிஷ் காரனோட சண்டை போட்டு அடிப்பட்டுச் செத்துப் போனது இந்த சுதந்திரத்துக்காகவா?..." என்றாள் கமலா.

"உன் அப்பாவோட பேர் என்ன?"

"கோதண்டராமன்... அவரைப் போலீஸ்காரங்க கொன்னுட் டாங்களாம்... அது நான் பிறக்கறதுக்கு முன்னாலே நடந்த நிகழ்ச்சி..."

வெங்கி அய்யர் யோசித்துப் பார்த்தார். ஊஹூம், ஸ்ரீவைகுண் டத்தில் கோதண்ட ராமன் என்று யாரையும் அவருக்குத் தெரியவில்லை... இந்த பெண்ணின் உள்ளத்தில் தீ எரிகிறது. அது இவளுடைய தாய் தந்தையரிடமிருந்துதான் இவளிடம் வந்திருக்க வேண்டும்...

"நீங்க நாளை சாயங்காலம் எங்க ஸ்கூலுக்கு வரீங்க. ஞாபகம் இருக்கா?"

"நிச்சயம் வரேம்மா."



மறுநாள் பள்ளியில் வெங்கி அய்யரின் அறுபதாண்டு நிறைவு விழா நடைபெற்றது. அரங்கம் மலர்களாலும் வண்ணக்காகிதத் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதே ஊரில் சமூக சேவை செய்து வந்த சாரதாம்மாள் என்ற பெண்மணி விழாத் தலைவியாக மேடையில் அமர்ந்தார். பள்ளியின் செயலா ளர் டாக்டர் ஷண்முக சுந்தரமும் மேடைமேல் இருந்தார். நடுநாயக

மாக வீற்றிருந்தார் வெங்கி அய்யர். அரங்கம் நிரம்பியிருந்தது. முதல் வரிசையில் பீட்டரும் அந்தோனியும் உட்கார்ந்திருந்தனர். விழாவில் கலந்து கொண்ட மற்றொரு மீன்பறவர் ரோட்ரிகோ மட்டுமே. அவர் மேடைமேல் வெங்கி அய்யருக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தார்.

விழாவில் கலந்து கொள்ள வந்த ஆசிரியரையும் மேடை மேல் அமர வைத்தனர். விழா இன்னும் தொடங்கவில்லை. கமலாவும் மற்ற ஆசிரியைகளும் விழா ஏற்பாடுகளில் மும்முரமாயிருக்க, மாணவித் தொண்டர்கள் விழாவுக்கு வந்தவர்களைக் கவனித்துக் கொண்டார்கள்.

ரோட்ரிகோ ஆசிரியரிடம் சொன்னார், "ராஜாஜி நம்ம ஜனங்களோட குணத்தையே சீர்திருத்தணும்னு பார்க்கறார். முதல்லே குடியை ஒழிச்சார். இப்போ தேவதாசி முறையை ஒழிக்க மசோதா கொண்டுவரப்போறாராம்... ஹா, ஹா, ஹா... ஆடல் பாடல் கிடையாது, பழைய பண்பாடு கிடையாது..."

இதைக் கேட்டுத் திடீரென்று உணர்ச்சிவசப்பட்டார் ஆசிரியர், அவர்தம் இருக்கையிலிருந்து எழுந்து நின்று கொண்டு கத்தத் தொடங்கினார், "முடியாது, முடியாது! இப்படி செய்யக் கூடாது! ராஜாஜி தேவதாசி முறையை வெறும் விபசாரமா நினைச்சால் அது பெரிய பிசகு. நான் அவரோட திட்டம் நிறைவேறவிடமாட்டேன்!..."

ஆசிரியரின் பதட்டத்தைப் பார்த்து எல்லாருக்கும் வியப்பு.

ஆசிரியர் கத்தினார்– "வெங்கி, நீ என்னை சென்னைக்குக் கூட்டிக்கிண்டு போ. ராஜாஜி தன் இஷ்டப்படி நடக்கவிட மாட்டேன், ஒரு போதும் மாட்டேன்!..."

பீட்டர் மேடை மேலேறி வந்தான். வெங்கி அய்யர் எழுந்திருந்து ஆசிரியரைப் பிடித்துக் கொண்டார். ஆசிரியர் தம் நினைவிழந்து வெங்கி அய்யரின் தோளின் மேல் சாய்ந்துவிட்டார்.

டாக்டர் ஷண்முக சுந்தரம் ஓடிவந்தார். யாரோ ஒருவர் அவரிடம் மருந்துப் பையை நீட்டினார். டாக்டர் ஆசிரியரின் நெஞ்சின் மேல் ஸ்டெதெஸ்கோப்பை வைத்துப் பார்த்தார். பிறகு நாடியையும் கண்களையும் தொட்டுப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினார்– "இறந்துவிட்டார்."

ஐந்தே நிமிடங்களில் எல்லாம் முடிந்துவிட்டது. அப்போது தான் கமலா ஆசிரியரின் வீணையை மிகவும் ஜாக்கிரதையாக அரங்கத்துக்குள் எடுத்து வந்து கொண்டிருந்தாள்.

கேரளத்தைச் சேர்ந்த, சுமார் இருபத்திரண்டு வயதுள்ள கத்தோலிக்கக் கன்னிகாஸ்திரீ ஒருத்தி நாகர் கோயிலுக்கருகிலுள்ள ஒரு கன்னிமார் மடத்தில் இருந்தாள். அவள் ஒரு வாலிபப் பள்ளி ஆசிரியனைக் காதலித்தாள். கன்னிகாஸ்திரீயின் முக்காட்டு உடைக்குள்ளே ஒரிளம் இதயத்தில் காதல் பொங்குவது கண்டு இளைஞனுக்கு ஒரே ஆச்சரியம். இருவரும் இரகசியமாகச் சந்திக்கத் தொடங்கினர். கடைசியில் சென்னைக்கோ அல்லது அதைவிடத் தொலைவிலோ ஓடிப்போய்த் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தனர்.

ஒரு நாள் நள்ளிரவில் திட்டமிட்டிருந்தபடி இளைஞன் கன்னிமார் மடத்துச் சுவருக்கு வெளியே காத்துக் கொண்டிருந்தான். அவனுடைய காதலி சுவர் மேலேறினாள். அவள் சுவரின் உச்சியில் நின்று கொண்டிருந்தபோது யாரோ பார்த்துவிட்டுத் 'திருடன், திருடன்' என்று கத்த, காவற்காரனும் மற்ற கன்னிமார்களும் ஓடிவந்தார்கள். கண்டுபிடிக்கப்பட்ட அதிர்ச்சியில் அந்தப் பெண்ணின் கால் வழுக்கி சுவரின் மேலேயே விழுந்துவிட்டாள். சுவரின் மேல் கூர்மையான இரும்பு ஈட்டி அவளது தொண்டையை ஊடுருவிவிட்டது. பெண்ணின் உயிர் போய்விட்டது.

உள்ளூர்ச் செய்திப் பத்திரிகைகளில் இந்தச் செய்தி வெளியாகிப் பெரும் பரபரப்பை விளைவித்தது. கன்னிமடத்துப் பொறுப்பாளர்கள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திச் சென்னைப் பத்திரிகைகளில் இந்தச் செய்தி வெளியாகாமல் தடுத்துவிட்டனர்.

'பாவத்துக்கேற்ற தண்டனை' என்று கன்னிமடத்துக் கன்னிமார் திருப்திப் பட்டுக் கொண்டனர்.

காலையில் மருத்துவமனையில் ஒரே கூட்டம். சோபியாவுக்குச் சரியான வேலை. நோயாளிகளைக் கவனித்து அனுப்பப் பகல் பன்னிரண்டரை மணி ஆகிவிட்டது. அவள் உள்ளூர்ப் பத்திரிகையை எடுத்ததும் இந்தச் செய்திதான் கண்ணில்பட்டது. திடுக்கென்றிருந்தது சோபியாவுக்கு, முகம் வெளிறிவிட்டது. தன்னையே அந்தப் பெண்ணாக நினைத்துக் கொண்டாள் அவள். அவள் நெஞ்சிலும் ஈட்டி பாய்ந்தாற் போன்ற உணர்வு. கையில் பத்திரிகையை வைத்துக் கொண்டு அதிர்ந்துபோய் உட்கார்ந்திருந்தாள் அவள்.

வெளியுலகத்தின் கவர்ச்சி எவ்வளவு தீவிரமானது, எவ்வளவு பயங்கரமானது என்பது சோபியாவுக்குத் தெரியும்.

கடைசிக் காலத்தில் எப்படித் துடித்திருப்பாள் அந்த அதிருஷ்டம்கெட்ட பெண்!

"ஏம்மா நீ திருட்டுத்தனமாக ஓட முயற்சி பண்ணினே?" என்று பெருமூச்சுவிட்டாள் சோபியா. "காதலிப்பதில் வெட்கமேன்? பயமேன்?... நீ வாழ்க்கையிடம் தோத்துப் போயிட்டே!... வெளி வேஷக்கார மனுசங்ககிட்டே, குருட்டு மனுசங்ககிட்டே தோத்துப் போயிட்டே!" அவள் பார்த்தேயிராத அந்தப் பெண்ணுக்காக சோபியாவின் நெஞ்சு குமுறியது. கண்கள் நீர் சொரிந்தன.

சோபியா கல்லூரி வகுப்புக்குப் போகாமல் இரண்டு மணி பஸ்ஸில் பாளையங்கோட்டைக்குப் போனாள். பஸ்தாவிலிருந்து சரளைபோட்ட பாதையில் ஒரு மைல் நடந்தால் மாதா கோவில். பாதையின் இருபக்கங்களிலும் வரிசையாக மருதமரங்கள். பாளையங்கோட்டை நகரத்தின் கலகலப்பும் பரபரப்பும் இங்கு கிடையாது. இருபுறமும் நெல் வயல்கள். மாதா கோவிலுக்குப் பின்னால் தாமிரவருணியாறு.

பாதிரியார் அமலநாதன் விக்டோரியாவின் வயது எழுபதைத் தொட்டுக் கொண்டிருந்தது. வெளுத்த நிறம், ஒற்றை நாடி உடம்பு, தலைமுடியும் தாடியும் வெள்ளை வெளேர். கூர்மையான பார்வையில் அமைதி குடி கொண்டிருக்கும்.

கோவில் வாசலுக்கு இருபுறமும் பெரிய பெரிய கொங்கையின் விலியாச் செடிகள். அவற்றின் இலைகள் கூடத் தெரியாதபடி சிவப்புப் பூக்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துத் தொங்கிக் கொண்டிருந்தன. பாதிரியார் அங்கே நின்று கொண்டு பூக் கொத்துக்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார்.

"ஏம்மா உன் முகம் சுண்டிப் போயிருக்கு பாப்பி?"

'பாப்பி' அவர் சோபியாவுக்கு வைத்திருந்த செல்லப் பெயர். அவர்களிருவரும் தனியேயிருக்கும்போது மட்டும் இந்தப் பெயரால் சோபியாவை அழைப்பார்.

"உங்க உடம்பு பார்க்க நல்லாயில்லையே!" என்றாள் சோபியா கவலையோடு.

"கொஞ்ச நாளா இன்புளூயன்சாக் காய்ச்சல் வந்திருந்தது... இந்தப் பக்கம் இப்பல்லாம் இந்தக் காய்ச்சல் ரொம்ப இருக்கு."

"நீங்க ஏன் எனக்குச் சொல்லியனுப்பல்லை? நான் உடனே வரமாட்டேன்!... இந்த வயசிலே ஃப்ளூ எவ்வளவு ஆபத்து, தெரியுமா? நான் உங்களோடே பேசப்போறதில்லே!" சோபியா கோபித்துக் கொண்டு திரும்பினாள்.

"வா, வா... கோவிச்சுக்காதே..." பாதிரியார் அவளுடைய முதுகின்மேல் கையை வைத்தார்.

சோபியாவின் கோபம் தணிந்துவிட்டது. அவள் பாதிரியாரின் கன்னங்களில் முத்தமிட்டாள். பிறகு தன் கைப்பையிலிருந்து ஒரு சிறு போத்தலை எடுத்தாள். அதில் ஓர் இரத்தச் சிவப்புத் திரவம் இருந்தது.

"இந்தாங்க, நானே தயார் செய்த ஒயின்..."

"பலே, பலே... இதைக் குடிச்சாலே நான் சொஸ்தமாயிடு வேன். நீ கவலைப் படாதே!"

வாசலிலிருந்து செம்மண் பாதையில் இருவரும் கோவிலை நோக்கி நடந்தார்கள். பாதையின் இருபுறமும் விதவிதமான, பல நிறப் பூச்செடிகள். கார்னேஷன், ஜினியா, ஜெரேனியம் பூக்கள் செழிப்பாகப் பூத்திருந்தன. பிடுனியா, ஃபிளக்ஸ், பெகோனி யாச் செடிகள் அவ்வளவு நன்றாக வளரவில்லை.

சிறிய கோவில். அதற்குப் பக்கத்தில் பாதிரியாரின் வீடு. அந்த வீட்டில் பாதிரியாரோடு அவருடைய பணியாளர் வேத நாயகமும் தோட்டக்காரரும் வசிக்கிறார்கள்.

வீட்டுக்கு முன்னாலிருந்த புல்வெளியில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் இருவரும் எதிரெதிரே உட்கார்ந்து கொண்டபின் பாதிரியார் கேட்டார், "இப்போ சொல்லு, உனக்கு என்ன ஆச்சு?"

"நீங்க இன்றையத் தமிழ்ப் பேப்பர் பார்த்தீங்களா?"

"இல்லையே, நான் சென்னையிலேருந்து வர்ற இங்கிலீஷ் பேப்பர் இந்தியன் எக்ஸ்பிரஸ்தான் படிக்கிறேன்..."

"இதைப் படிச்சுப் பாருங்க..." சோபியா தன் கைப்பையி லிருந்து தமிழ்ப் பத்திரிகையை எடுத்துக் கொடுத்தாள்.

பாதிரியார் தம் சட்டைப் பையிலிருந்து மூக்குக் கண்ணாடியை எடுத்துப் போட்டுக் கொண்டு படிக்க ஆரம்பித்தார். படிக்கப் படிக்க அவரது முக பாவம் மாறியது. படித்து முடித்துவிட்டு அவர் தம் கண்களை மூடிக் கொண்டார். அவரது முகத்தில் வேதனையின் நிழல்.

இருவரும் சற்று நேரம் எதுவும் பேசவில்லை.

பிறகு பாதிரியார் ஒரு பெருமூச்சுவிட்டார். நெஞ்சுக்கு மேல் சிலுவையடையாளத்தைக் கைகளால் செய்தார். அவர் கண் திறந்தபோது கண்களில் ஈரம்.

"அவ ஏன் திருட்டுத் தனமா ஓட முயற்சி பண்ணினா?"

சோபியா பதிலளித்தாள், "நேர் வழியிலே போனால் ஆபத் துன்னுதான்... அவ தன் காதலை வெளியிட்டிருந்தால் அவளைக் கொன்னுபோட்டிருப்பாங்க... அந்தப் பையனையும் தான்!..,"

பாதிரியார் பேசவில்லை.

சோபியா தொடர்ந்தாள், "அப்புறம் அவளுக்குக் கெட்ட பேர்... இது ரொம்ப விசித்திரமான நாடு! இங்கே அன்புகூட, காதல்கூட வெட்கப்பட வேண்டிய விஷயம்!"

பாதிரியார் திடீரென்று கேட்டார், "நீ யாரையாவது காதலிக்கிறியா?"

சோபியா தலை குனிந்து கொண்டு கால்விரலால் புல்லை நோண்டினாள். சற்று நேரங் கழித்து அவள் தலை நிமிர்ந்த போது அவளது முகம் சிவந்திருந்தது, கண்கள் பனிந்திருந்தன.

"அய்யா, நான் என்ன செய்வேன்?" என்று கேட்டுக் கொண்டே சோபியா எழுந்து பாதிரியாரின் முன்னால் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு தன் முகத்தை அவருடைய மடியில் புதைத்துக் கொண்டாள்; விம்மி விம்மியழுது கொண்டே சொன்னாள், "நான் என்ன செய்வேன்... என் மனசு சஞ்சலப்படறதே!..."

பாதிரியார் ஒன்றும் பேசாமல் அவளுடைய மென்மையான குட்டை முடியை மெதுவாக வருடினார். அவளுடைய அழுகை சற்றுக் குறைந்ததும் சொன்னார், "கவலைப் படாதேம்மா! உன் மனசே உனக்குச் சொல்லும், நீ என்ன செய்யணும்னு. அது சொல்றபடி நீ செய். வெட்கம், அருவருப்பு, பயம் ஒண்ணையும் பொருட்படுத்தாதே!..."

அப்போது வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நிற்கும் அரவம் கேட்டது. சோபியா எழுந்து தன் முகத்தைத்துடைத்துக் கொண்டு தன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். பாதிரியார் எழுந்து வாசல் பக்கம் போய், "வா, வா,... நீ வருவேன்னு நான் தினம் எதிர்பார்த்துக்கிட்டிருக்கேன்.. உனக்குத்தான் வர நேரமே கிடைக்கல்லே..." என்றார்.

வந்தவன் அந்தோனி. விதவிதமான பூச்செடிகளைப் பார்த்து அவனுக்கு மிக்க மகிழ்ச்சி. "எவ்வளவு அழகழகான பூக்கள் வளர்த்திருக்கீங்க!... இது தெரிஞ்சிருந்தால் முன்னாலேயே வந்திருப்பேனே... நான் தாமதமா வந்ததுக்கு மன்னிக்கணும். உண்மையிலே வேலையொண்ணுமில்லே எனக்கு. இன்னைக்குப் போகலாம், நாளைக்குப் போகலாம்னு நினைச்சுக்கிட்டே தானிருந்தேன்... நீங்க ரோஜா வளர்க்கலியா?"

"கோவிலுக்குப் பின்னால் ஒரு ரோஜாப்பாத்தி இருக்கு. ஆனால் அதைப் பராமரிக்கறது இந்தப் பெண்தான்... இவளைத் தெரியுமா உனக்கு? இவதான் சிஸ்டர் சோபியா. தூத்துக்குடி கன்னிமார் மடத்திலே இருக்கா... இவர் வந்து...

"இவரை எனக்குத் தெரியுமே!" என்றாள் சோபியா.

அந்தோனிக்கு வியப்பு. பிறகு சட்டென்று ஞாபகம் வந்தது. அன்றிரவு ஜேன் கூறிய செய்தியைப் பீட்டருக்கு அனுப்பினாளே அவள் தான்... அப்படியானால் பீட்டர் இவளைத்தான்..."

பீட்டர் சோபியாவை நன்றாகப் பார்த்தான். நல்ல அழகி தான். நீண்ட கண்களில் சோகமான, சற்றுக்களைத்த பார்வை. கன்னி காஸ்திரீயின் உடுப்பை மீறிக் கொண்டு ததும்பும் இளமை.

"நான் காட்வின் ஐயாவோட கடைசிக்காலத்திலே அவர் பக்கத்திலே இருந்தேன்" சோபியா சொன்னாள்.

"காபி நேரம் கடந்து போயிக்கிட்டிருக்கு. நீ காபிபோட்டுக் கிட்டுவா" என்றார் பாதிரியார்.

சோபியா வீட்டுக்குள் போனாள்.

"தூத்துக்குடி எப்படி இருக்கு?" பாதிரியார் கேட்டார்.

"நாட்டோட நிலைமையைப் பார்த்தால் மனசுக்குக் கஷ்டமா யிருக்கு. ஏழை மக்களோட நிலைமை நான் பதினாலு வருஷத் துக்கு முன்னால் பார்த்தமாதிரிதானிருக்கு, அதிலே மாறுதல் ஒண்ணுமில்லே..."

பாதிரியார் புன்சிரிப்புடன் கேட்டார், "நீ என்ன மாதிரி மாறு தலை எதிர்பார்த்தே?"

"பாமர மக்களுக்கு ரெண்டு வேளை வயிறு நிறையச் சாப் பாடு. நல்ல ஆரோக்கியம், படிப்பு, மூடநம்பிக்கைகளை விடும் மனப்போக்கு..."

"மாதா கோவிலுக்குப் போறது மூட நம்பிக்கைன்னு நினைக் கிறியா?"

பாதிரியாரின் கேள்வியில் சற்று வியப்படைந்தான் அந்தோனி. பிறகு சொன்னான், "ஒருவிதத்திலே மூடநம்பிக்கை தான்.."

கடகடவென்று சிரித்துவிட்டார் பாதிரியார். "நீ கோவிலுக்கு வரதில்லேன்னு தூத்துக்குடிப் பாதிரிமார் புகார் செய்யறாங்க..."

வீட்டுக்குள்ளிருந்து வறுத்த காபிக்கொட்டை அரைக்கப்படும் ஒலி கேட்டது. கூடவே வந்தது காபியின் மணம்.

"விஷயம் உங்க வரையிலே வந்துட்டதா?"

"கொஞ்சம் கொஞ்சம் காதிலே விழுந்தது... நீ கடவுளை நம்பல்லியா?

"எனக்குப் புரியாத ஒண்ணை எப்படி நம்பறது?"

"கம்யூனிஸ்டுகள் கடவுளை நம்பறதில்லே... நீ கம்யூனிஸ்டா?"

"நான் ஒரு அரசியல் கட்சியிலும் சேர்ந்தவனில்லே. ஆனால் எனக்கு மார்க்ஸ் தத்துவம் பிடிக்கும்."

சோபியா காபிக் கோப்பைகளும் வறுத்த முந்திரிப்பருப்பும் ஒரு தட்டில் வைத்து எடுத்துக் கொண்டு வந்தாள்.

காபியை ருசித்துவிட்டு அந்தோனி சொன்னான், "காபி பிரமாதம்!...என்ன மணம்!..."

"இருந்தாலும் நம்ம நாட்டிலே எல்லோருக்கும் நல்லாக் காபி போடத் தெரியாது. அய்யர்கள் அய்யங்கார்கள்தான் இந்தக் கலையிலே ரொம்பத் தேர்ந்தவங்க. நான் அவங்ககிட்டே தான் காபி போடக் கத்துக்கிட்டேன். சோபியா என்கிட்டே கத்துக் கிட்டா..."

சோபியா ஏதோ நினைவில் காபி குடித்துக் கொண்டிருந் தாள். தன் பெயர் காதில் விழுந்ததும் தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

"அப்போ நீ மார்க்ஸ் கொள்கையை நல்லாப்படிச்சுப் புரிஞ்சிக்கிட்டிருப்பே?..."

"ஏதோ சுமாராப் புரிஞ்சிக்கிட்டிருக்கேன்."

"ஆனால் மார்க்ஸ் தத்துவமே முடிவானதில்லே... வகுப்புப் பிரிவுகளற்ற சமூகத்திலே மனிதனுக்கு விடுதலை கிடைச்சுடுமா? எனக்கு நம்பிக்கையில்லே... ஆனால், பொறாமை, தன்னலம் இதெல்லாம் மனிதனோட அடிப்படைக் குணங்கள். இதுகளை அவன் ஒரு நாளும் விட்டுட முடியும்னு தோணலே எனக்கு..."

"மார்க்ஸ்–எங்கெல்ஸ் கொள்கை விஞ்ஞானத்தை அடிப்படை யாகக் கொண்டது. அதிலே போலித்தனம் இல்லே..."

"போலித்தனம் இல்லாமலிருக்கலாம், ஆனால் ஓட்டைகள் இருக்கு.. மார்க்ஸும் எங்கெல்ஸும் தங்கள் தத்துவத்தை அந்தக் காலத்தில கண்டுபிடிக்கப்பட்ட டார்வினின் பரிணாமவாதத்தின் அடிப்படையிலே முறைப்படுத்தினாங்க. ஆனால் அதுக்கப்பறம் மெண்டெல் பாரம்பரியத் தத்துவத்தைக் கண்டுபிடித்தார். டிவ்ரைஸ் 'மியூட்டேஷன்' தத்துவத்தைக் கண்டுபிடித்தார். இப்போ 'ஜீன்' கண்டுபிடிக்கப்பட்டபிறகு எல்லாப் பழைய கொள்கைகளும் சிதறிப்போயிட்டன... அதனால் தான் மார்க்ஸ் கொள்கையே முடிவானதில்லேன்னு சொன்னேன். எனக்குப் புரியாததை நம்பமாட்டேன்னு சொல்றது சரியில்லே... புரியாத விஷயங்களை ஆராய்ஞ்சு பார்க்கணும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் காரண–காரியத் தொடர்பு மனிதன் பார்வையிலே படறதில்லே. அதுக்காகக் காரணமே இல்லேன்னு சொல்லிடமுடியுமா?... ஒரு வேடிக்கை பார்க்கிறியா? இங்கே வா..."

பாதிரியார் அவர்களைக் கோவிலின் பின்பக்கம் அழைத்துச் சென்றார். அங்கே ஒரு சிறிய அறை. அதில் தட்டு முட்டு சாமான்

கள் எதுவும் இல்லை. அங்கு தரையில் ஒரு பெண் படுத்திருந்தாள். அவள் தலை மாட்டில் ஒரு தண்ணீர்க்குடம். பிணம் மாதிரி கிடந்தாள் அவள். அவள் முகத்தை ஒரு துணி மூடியிருந்தது.

"இவ யாரு? இவளுக்கு என்ன ஆச்சு?" அந்தோனி கேட்டான்.

"இவ பேரு சீதம்மா. தாழ்ந்த ஜாதி இந்துப் பெண். தாசித் தொழில் செய்யறவ, போன சனிக்கிழமையிலேருந்து இன்னி வரை எட்டு நாளாச்சு, வெறும் தண்ணிமட்டும் குடிச்சுக்கிட்டு இப்படியே கிடக்கறா... அசையறதில்லே, எழுந்திருக்கறதில்லே. எப்போ மலஜலங்கழிக்கறான்னு தெரியல்லே..."

"ஏன் இப்படிக்கிடக்கா?"

"பிழைக்க வழிதேடறா.... இவளுக்குக் கடுமையான வியாதி. தன் சக்திக்கு மீறி மருத்துவம் பண்ணிப் பார்த்துட்டா. டாக்டர்கள் கைவிட்டுட்டாங்க..."

"இப்படியே கிடந்தால் வியாதி சொஸ்தமாயிடுமா?"

"ரொம்பக்கேஸ் இந்த மாதிரி சொஸ்தமாயிருக்கு... வியாதி வந்தவங்க இங்கே வந்து இப்படிப்பழிகிடந்து கடவுளை வேண்டறாங்க..." திரும்பி வந்து கொண்டே பாதிரியார் சொன்னார். "இதுக்கெல்லாம் மார்க்ஸ் கொள்கையிலே விளக்கம் கிடைக்காது. மார்க்ஸ் வாதிகளுக்கு இதிலெல்லாம் நம்பிக்கையில்லே. ஆனால் அவங்க நம்பினாலும் நம்பாவிட்டாலும் இந்த மாதிரி நிகழ்ச்சிகள் நடந்துக்கிட்டுதானிருக்கு. நம்ம அறிவுக்கு மிஞ்சிய விஷயங்கள் பல இருக்கு இந்த உலகத்திலே. அதுகளை நாம் தெய்வீகம்னு சொல்றோம், அற்புதம்னு சொல்றோம். விஞ்ஞானம் இந்த அற்புதங்களுக்கு விளக்கம் காணும் முயற்சியிலே முன்னேறிக்கிட்டிருக்கு".

பாதிரியாரின் பேச்சைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சோபியா சொன்னாள், "ஆனால் கடவுள் பேராலே சமூகத்திலே நடக்கற தில்லுமுல்லுகளைப் பார்த்தால் கடவுள் மேலே நம்பிக்கை வைக்கறது கஷ்டம்தான். பகுத்தறிவை நம்பறவங்க கடவுளை நம்பமுடியாத நிலை ஏற்பட்டிருக்கு..."

ஒரு கன்னிகாஸ்திரீயின் வாயில் இந்தப் பேச்சைக் கேட்டு வியப்படைந்தான் அந்தோனி. அவன் சொன்னான், "இன்னொரு விஷயம்–கடவுளை நம்பறதுன்னா ஏதாவதொரு மதத்தை நம்பியாகணும். மதங்களுக்குள்ளே எவ்வளவு வேற்றுமைகள், எவ்வளவு சண்டைகள்! நாடு முழுவதும் மதங்களின் பேராலே பிளவுபட்டுப் போச்சே!..."

சோபியா சொன்னாள், "உலகத்திலேருந்து எல்லா மதத்தையும் விரட்டிவிடணும். மாதா கோவில், மசூதி, இந்துக் கோவில் எல்லாத்தையும் ஒழிச்சுடணும்..."

பாதிரியாருக்குக் கோபம் வரவில்லை. அவர் புன்சிரிப்புடன் அவர்களுடைய பேச்சைக் கேட்டவாறே அந்தோனியின் கோப்பையில் இன்னும் கொஞ்சம் காபி ஊற்றினார். முந்திரிப் பருப்புத் தட்டை அவன் பக்கம் நகர்த்தினார். பிறகு அமைதியாகச் சொன்னார், "எல்லா மனிதர்களுக்கும் ஒரே மாதிரி உறுதியான மனசு இல்லே. எல்லா விஷயங்களையும் தாங்களாகவே புரிஞ்சுக்கற சக்தி ரொம்பப் பேருக்குக் கிடையாது. அவங்களுக்கு மதம் தேவையாயிருக்கு. உன் மாதிரி ஆட்கள் மாதா கோவிலுக்குப் போகாட்டிப் பரவாயில்லை... உன்னோட அப்பா... சரி, மதவிசாரணைபோதும். இதுக்கு முடிவே கிடையாது. நான் உன்னை வரச் சொன்னது வேறே காரணத்துக்காக..." என்று சொல்லிவிட்டுப் பாதிரியார் சோபியா பக்கம் திரும்பிப் பார்த்தார்.

சோபியா காபிப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் போய்விட்டாள்.

பிறகு பாதிரியார் தொடர்ந்தார்— "உன்னோட அப்பா சாகறதுக்கு முன்னாலே என்கிட்டே பாவமன்னிப்பு வாங்கிக்கிட்டார். அவரோட வாழ்க்கை ரொம்ப விசித்திரமானது. அவர் ஒரு போர் வீரனாயிருந்தார். சின்னச் சின்னப் பாவ புண்ணியங்கள், ஆசார அனுஷ்டானங்களை அவர் பொருட்படுத்தலே. ஆனால் அவர் தம் வாழ்க்கை முழுவதும் ஒரு பாவத்துக்குப் பிராயச்சித்தம் பண்ணிக்கிட்டிருந்தார். அந்தக் குற்ற உணர்வு அவரைக் கடைசி வரையிலே குத்திக்கிட்டு இருந்தது..."

"என்ன அது?"

"நிறையப் பணம் சம்பாதிச்சதுதான் அந்தப் பாவம். அவர் சாகறதுக்கு முன்னாலே என்னைக் கேட்டுக்கிட்டார், நான் உசிரோடே இருக்கிறவரையிலே அவரோட சொத்து நல்ல காரியங்களுக்குப் பயன்படணும்னு. அதனாலே அவரோட உயிலுக்கு என்னை சாட்சியாக வச்சுக்கிட்டார். ஏசுகிருஸ்து புனிதப் பீட்டரை அடிக்கல்லாக வச்சுத்தம் மதத்தை நிறுவினார். அந்த மதம் இப்போ இல்லே. உன் அப்பா மோஸஸ் ஃபெர்னாண்டோவோட பிள்ளை பீட்டரை இந்தக் காலத்துப் புனித பீட்டராக நினைச்சார். மனிதனோட நலம்தான் இந்தப் பீட்டரோட மதம், தெய்வம் எல்லாம். மனித நலத்துக்காகத்தான் உன் அப்பா தன் சொத்தையெல்லாம் பீட்டர்பேரிலே எழுதிவச்சார். நீ அவரோட

ஆத்மாவைத் திருப்திப் படுத்தணும்னா பீட்டரோடே சேர்ந்துக்கிட்டுப் பணி செய்யணுங்கறது அவரோட விருப்பம்..."

☆ ☆ ☆

சோபியா ஒரு போட்டோப் பைத்தியம். மரங்கள், மலைகள், மிருகங்கள், பறவைகளைப் போட்டோ பிடிப்பதில் அவளுக்கு நிறைய ஆர்வம். மானுவல் அவளுக்குக் கொடுத்திருந்த விலை யுயர்ந்த காமிராவை வைத்துக் கொண்டு அவள் அடிக்கடி போட்டோ எடுத்துத் தன் ஆல்பங்களில் வைத்திருந்தாள்.

அவளுடைய வெகு நாளைய விருப்பம்–ஓர் அகலக் கோணம் பொருந்திய லென்ஸ், ஒரு டெலி லென்ஸ் இந்த இரண்டும். இவை யிரண்டையும் எடுத்துக் கொண்டு தேக்கடிக் காட்டுக்குப் போய், பெரியாறில் படகிலிருந்து கொண்டே யானைகள் மந்தைமந்தை யாக நீரிலிறங்கி நீந்தி விளையாடுவதைப் போட்டோ எடுக்க அவளுக்கு ஆசை. யானைக்குட்டிகள் சுவாரசியமானவை. காட்டெருமைகள், மான்களையும் போட்டோ எடுக்க அவளுக்கு விருப்பம்.

சோபியா இப்படி ஆசைப்படுவது மானுவலுக்குத் தெரியும். அகலக்கோண லென்ஸ், டெலி லென்ஸ் இரண்டுமே அவனுக்கு இன்று கிடைத்துவிட்டன.

கார்தோஸா பிரதர்ஸ் கம்பெனியின் விருந்தினர் மாளிகையில் உட்கார்ந்துகொண்டு இந்த இரண்டு லென்ஸ்களையும் வைத்துக் கொண்டு சிந்தனையிலாழ்ந்திருந்தான் மானுவல். சில நாட் களுக்கு முன் இந்தச் சிந்தனையைக் கிரிகரிதான் அவனுடைய மனதில் தூண்டிவிட்டிருந்தான். அவனுடைய ஆண்மைக் குறைக் குப் பக்கா மருந்து ஒரு கன்னிகையோடு உடலுறவுதான் என்று சொன்னான் கிரிகரி. ஒரு கன்னிகாஸ்திரியை விடச் சிறந்த கன்னிகை எங்கே கிடைப்பாள்?

உடனே அவனுக்கு சோபியாவின் ஞாபகம் வந்தது. அவளு டைய அழகான முகம் மனக் கண்ணில் தோன்றியது. பார்ப் பவர்களைப் பித்தாக்கும் சோபியாவின் தோற்றம்.

மானுவலின் மனதில் இந்தச் சில நாட்களாக சோபியாவின் நினைவு தான். நாகர்கோயில் கன்னிகாஸ்திரீ பற்றிய நிகழ்ச்சி அவனுக்கு உற்சாகமளித்தது. தவிரவும், அங்கங்கே கன்னி

மாரின் காரியங்களைப் பற்றி அவனுக்குத் தெரியாமலில்லை. இந்த விஷயத்தில் அவனுடைய அண்ணா சுஸான் பெரிய கில்லாடி. சிஸ்டர் ஜோசபைன் இப்போதும் சில சமயம் சுஸானிடம் வருவதுண்டு. அவள் தானே தயாரித்த ஒயினை சுஸானுக்குக் கொடுத்துவிட்டு அவன்மேல் விழுந்து விழுந்து வம்பளப்பாள்.

மானுவல் சோபியாவுக்குக் கடிதம் எழுதினான்– "இன்னிக்கு சாயந்திரம் வந்து என்னை ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போங்க... அகலக் கோண லென்ஸ், டெலி லென்ஸ் ரெண்டும் வந்திருக்கு. அதுகளையும் வந்து பாருங்க...." கடிதத்தை ஒரு பையனிடம் கொடுத்தனுப்பினான்.

அன்றிரவு லிண்டாவுக்கு லேடீஸ் கிளப்பில் ஏதோ அலுவல். அவள் இரவு பத்து மணிக்கு முன் வீடு திரும்ப மாட்டாள். மானுவல் ஆறரை மணிக்கே வீடுதிரும்பிவிட்டான்.

கிளப்புக்குப் புறப்பட ஏற்பாடு செய்து கொண்டிருந்த லிண்டா ஆச்சரியத்துடன் "என்ன இவ்வளவு சீக்கிரம்?" என்று கேட்டாள்.

"உடம்புசரியில்லே..."

"யாரையாவது கூப்பிட்டுக் கை காலைப் பிடிச்சுவிடச் சொல்லு. ராகேலா சினிமாவுக்குப் போயிருக்கா."

"அதெல்லாம் வேண்டாம். நான் கொஞ்ச நேரம் தனியா இருக்கேன். யாரும் இங்கே வரவேண்டாம்."

"ரொம்ப சரி, நான் போறேன்." லிண்டா பிரமாதமாக அலங்காரம் செய்து கொண்டு கிளம்பிவிட்டாள்.

சரியாக ஏழு மணிக்கு வந்துவிட்டாள் சோபியா. வழக்கம் போல் நேரே லிண்டாவின் படுக்கையறைக்குள் நுழைந்தாள். அங்கே மானுவல்தானிருந்தான். "வாங்க சிஸ்டர்" என்று அவளை வரவேற்றான்.

"மிஸஸ் கார்தோஸா எங்கே?"

"மாதா கோவிலுக்குப் போயிருக்கா. இதோ வந்துடுவா. அது வரையிலே இதுகளைப் பாருங்க..." மானுவல் இரண்டு லென்ஸ்களையும் உறையிலிருந்து எடுத்துக் கொடுத்தான்.

சோபியா அவற்றையெடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டே கனவு காணத் தொடங்கினாள்–தேக்கடிக்காடு, பெரியாறு, யானை மந்தை, காட்டெருமைகள்...

பின்புறத்திலிருந்து இரண்டு முரட்டுக்கைகள் அவளை இறுக்கமாகக் கட்டிக் கொண்டன. உடையோடு சேர்த்து அவளது மார்பகங்கள் மானுவலின் முஷ்டிகளுக்குள். கூச்சல்போட வாயெடுத்த சோபியா தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். கூச்சல் போட்டுப் பயனில்லை.

"சோபி, யூ ஆர் மை டார்லிங்... மை எவரிதிங் இஸ் ஃபார் யூ.."

அவனிடமிருந்து திமிறிக் கொண்டு விடுபட்டுக் கொள்வது இயலாத காரியம்.

மானுவல் அவளைப் படுக்கையின் மேல் தள்ளினான். அவளுடைய கால்களிரண்டும் கட்டிலுக்கு வெளியே தொங்கின. அவளுடைய இஸ்திரி செய்யப்பட்ட குல்லாய் படுக்கையில் விழுந்தது.

"உன்னோட கவுனை அவுத்துடு... இல்லாட்டி அதோட இஸ்திரியெல்லாம் கசங்கிப் போயிடும்..." என்று சொல்லிக் கொண்டே அங்கியின் முடிச்சுக்களைத் தேடினான் மானுவல். அவனுடைய கைகள் இரண்டு தடவைகள் அங்கிக்குள்ளே நுழைந்து உள்ளாடையைப் பிடித்திழுத்தன.

சோபியாவின் கண்கள் மூடியிருந்தன. மேல்வரிசைப் பற்கள் கீழுதட்டை அழுத்தமாகக் கடித்துக் கொண்டிருந்தன. அவள் என்ன நினைத்தாளோ! அவளது முகம் வியர்த்து விட்டிருந்தது. மூச்சு வாங்கியது அவளுக்கு.

மானுவலின் கைக்கு ஒரு முடிச்சு தட்டப் பட்டுவிட்டது. ஆனால் அதை எளிதில் அவிழ்க்க முடியாமல் திணறினான்.

திடீரென்று சோபியா அவன் நெஞ்சில் பலமாக உதைத்தாள். அவன் எகிறிக்கீழே விழுந்தான்.

அடுத்த கணம் சோபியா அங்கிருந்து வெளியே ஓடி ரஸ்தாவுக்கு வந்தாள், எதிரிலேயே ஒரு குதிரை வண்டி கிடைத்தது. அதில் ஏறிக் கன்னிமார் மடத்துக்கு வந்து தன் அறைக்குப் போய்ச் சேர்ந்தாள். நல்லவேளை, இரவு நேரமாயிருந்ததால் கன்னிமார் அவரவர் அறைகளிலிருந்தார்கள். யாரும் அவளைப் பார்க்கவில்லை.

சோபியா அழுதாள். கன்னிகாஸ்திரீயாக இருந்தும் ராட்தர்களிடமிருந்து அவளுக்கு விடுதலை இல்லை. இதற்குப் பழிவாங்கத்தான் போகிறாள் அவள்!...

கடலில் வலையை விரித்துப் போட்டுவிட்டுப் பீட்டர் படகில் உட்கார்ந்திருந்தான், கூடவே அந்தோனியும் இருந்தான். இப்போதெல்லாம் அந்தோனியும் பீட்டருடன் கடலுக்கு வந்து கொண்டிருந்தான். பரந்துகிடந்த வானத்துக்குக் கீழே கடலலைகள் ஆடி வருவதைப் பார்க்க அவனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அவனுடைய வாழ்க்கையில் இது ஒரு புதுவகைச் சுவை.

தொலைவில் இரண்டு கப்பல்கள் நின்றுகொண்டிருந்தன. எந்த நாட்டிலிருந்து வந்திருக்கின்றனவோ தெரியாது. இருட்டுக்கு நடுவே அவை பிரகாசமாகத் தெரிகின்றன. பீட்டரின்

படகு நங்கூரம் போடப்பட்டு நிற்கிறது. பீட்டர் தண்ணீரில் எதையோ பார்க்கமுயற்சித்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய நான்கு சீடர்கள் மௌனமாக இருக்கிறார்கள். ஐந்தாவது சீடன் நாதன் ஹோர்த்தீவில் இறங்கிவிட்டான். கடல் அமைதியாக இருக்கிறது. அதன் சிற்றலைகள் படகில் மோதும்போது மென்மையான சலசலப்பு ஏற்படுகிறது. பீட்டர் போட்டிருந்தது மிதப்பு வலை.

அன்று மாலையில் தூண்டிலில் சில பெரிய சூர்மா மீன்கள் அகப்பட்டன. சந்தைக்குப் கொண்டு போகுமளவு நிறைய இல்லை. பீட்டர் சிலவற்றைத் தனக்கு வைத்துக் கொண்டு மீதியைக் கப்பல்காரர்களிடம் விற்றுவிட்டான். நான்கு பங்கு விலை கிடைத்தது அவனுக்கு.

"ஒரு தோணி வருது, பெரியண்ணே". சிங்கராயன் சொன்னான்.

பீட்டர் உரக்கக் கத்தினான், "இடதுபக்கம் திரும்பிப் போ!... இங்கே வலைவிரிச்சிருக்கு..."

தோணி—சிறிய தோணிதான்—வலைக்குமேலேயே வந்துவிட்டது. அதனால் வலை அறுந்து போகாது தான். ஆனால் மீன் கூட்டம் கலைந்து ஓடிப்போய்விடும்.

"ராஸ்கல் சொன்னாக் கேக்கமாட்டேங்கறானே! தோணியைப் பிடி!" பீட்டர் சொன்னான்.

மற்றவர்கள் படகின் நங்கூரத்தை எடுத்துவிட்டுப் படகை வேகமாகச் செலுத்தித் தோணியைப்பிடித்துவிட்டார்கள். தோணிக்குள்ளிருந்து ஒரு பெண்ணின் அழுகைக் குரல் கேட்டது. பீட்டர் முயல் போல் காதுகளை விறைத்துக் கொண்டு உன்னிப்பாகக் கேட்டான். பிறகு மைக்கேலைக் கூப்பிட்டு ஏதோ இரகசியமாகப் பேசினான். அந்தோனிக்கு ஒன்றும் புரியவில்லை.

படகு தோணியின் பின்பக்கத்தை உரசிக்கொண்டு நின்றது. தோணியின் விளிம்பு படகைவிட உயரத்திலிருந்தது. மைக்கேல் கொக்கி பிணைத்த கயிறொன்றைத் தோணியின் மேல் வீசினான் கொக்கி தோணிவிளிம்பில் மாட்டிக் கொண்டது. பீட்டர் மற்ற ஆட்களிடமும் ஏதோ சொன்னான்.

சிங்கராயன் கயிற்றைப் பிடித்துக் கொண்டு சுண்டெலி மாதிரி தோணியிலேறினான். மைக்கேலும் அவனுக்குப் பின்னால் ஏறினான். இருவர் இடுப்பிலும் கத்திகள் செருகப்பட்டிருந்தன. பிறகு மற்ற இரண்டு ஆட்களுடன் பீட்டரும் தோணியில் ஏறிவிட்டான்.

இப்போது அந்தோணி மட்டும்தான் படகிலிருந்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. பீட்டர் கடலில் கொள்ளையடிக்க ஆரம்பித்துவிட்டானா என்ன?

தோணியிலிருந்து அடிதடி, சண்டை அரவம் கேட்டது. வெகு நேரங்கழித்துப் பீட்டர் தோணியிலிருந்து கூப்பிட்டான்.

"அந்தோனி, இருக்கியா?"

"இருக்கேன்."

"இதை வாங்கு..."

பீட்டரும் மைக்கேலும் தோணியிலிருந்து ஒரு பெண்ணின் உடலைக் கீழே இறக்க, அந்தோனி அதை வாங்கிக் கொண்டான். உடனே பீட்டரும் மற்றவர்களும் தோணியிலிருந்து படகின் மேல் குதித்தார்கள். படகைத் தோணியோடு பிணைத்திருந்த கயிறு அறுக்கப்பட்டது. பீட்டர் சுக்கானைப் பிடித்துப் படகை ஹோர்த் தீவின் பக்கம் திருப்பினான். படகு செல்லத் தொடங்கியது.

இருட்டில் பெண்ணின் முகம் சரியாகத் தெரியவில்லை, ஆனால் வாலைக் குமரியாக இருப்பாள் என்று தோன்றியது. பதினேழு பதினெட்டு வயதுதானிருக்கும்.

"உன் பேரென்ன?" பீட்டர் கேட்டான்.

"சூஸி,... என்னோட அப்பா சாலமன் ஃபெர்னாண்டோ".

"குட்டை சாலமன்".

குட்டை சாலமனைப் பீட்டருக்குத் தெரியும். இரவும் பகலும் குடித்துவிட்டுப் படுத்துக்கிடப்பான். சுத்த உதவாக்கரை. அவனுடைய பெண்டாட்டி சந்தையில் மீன் வியாபாரம் செய்வாள். அவர்களுக்கு ஏராளக் குழந்தைகள். அம்மா குழந்தைகளை அடித்துக் கொண்டேயிருப்பாள்.

பெரிய பெண் இவ்வளவு வளர்ந்து விட்டாளா?

"தோணிக்கு எப்படி வந்தே?"

"தோணிக்கார லூயிஸ் எனக்குக்கப்பல் காட்டறேன்னு என்னைக் கூட்டிக்கிட்டு வந்தான். இவ்வளவு நேரம் என்னைத் தோணியிலே அடைச்சு வச்சிருந்தான். பிறகு தோணியை எங்கேயோ எடுத்துக்கிட்டுப போனான்..." விம்மி விம்மியழுதாள் பெண்.

"பயப்படாதே! நான் நாளைக் காலையிலே உன்னை வீட்டிலே கொண்டுபோய்விடறேன்" பீட்டர் அவளைத் தேற்றினான். "வீட்டிலேருந்து எப்போ கிளம்பினே?"

"காலம்பற..."

"ஏதாவது சாப்பிட்டியா?"

"இல்லே, அவங்க எனக்குச் சாப்பிட ஒண்ணும் கொடுக்கலே. நான் சத்தம் போட்டேன்னா என்னை வெட்டிக் கடல்லே எறிஞ்சுடுவோம்னு பயமுறுத்தினாங்க.."

ஹோர்த்தீவில் நள்ளிரவில் எல்லோரும் சாப்பிட்டார்கள். நாதன் நன்றாகச் சமைத்திருந்தான்—தேங்காய், புளி, பச்சை மிளகாய், மல்லி, மசாலா சாமான்கள் போட்டு அரைத்து சூர்மா மீன் கறி. சிவப்பாகக் குழகுழவென்று ருசியான குழம்பில் பெரிய பெரிய தான்கள். மசாலா சேர்த்த சூர்மா மீன் வறுவல். சிவப்புப் புழுங்கலரிசிச் சாதம்....

பீட்டர் சூஸியைத்தன் பக்கத்திலமர்த்திக் கொண்டு சாப்பிடச் செய்தான். "நல்லாச் சாப்பிடு... இன்னும் ரெண்டு மீன் துண்டு போட்டுக்க... இன்னும் கொஞ்சம் சாதம் போட்டுக்க... கவலைப் படாதே! நாளைக்கு உன்னை வீட்டிலே கொண்டு போய்ச் சேர்த்துடறேன்.. சமையல் எப்படி இருக்கு?... நீ இந்த மாதிரி சமைப்பியா?"

சூஸி இப்போது தன்னிலைக்கு வந்துவிட்டாள். "ஓ, சமைப்பேனே!"

பிறகு அவள் மணலிலேயே படுத்துத் தூங்கி விட்டாள். மற்றவர்கள் பாழடைந்த வீட்டின் மறுபக்கத்தில் படுத்துக் கொண்டார்கள். மைக்கேல் வந்து தூங்கும் சூஸியின் தலைக்கடியில் மணலை மேடாக்கி வைத்து விட்டுப்போனான். அந்தோனியும் பீட்டரும் படகில படுத்துக் கொண்டார்கள்.

"ஒரு கதை கேக்கறியா அந்தோனி?" பீட்டரின் குரல் சீரியஸாக இருந்தது.

இந்தக் குரல் அந்தோனிக்குப் பழக்கமானதுதான். முக்கியமான அல்லது உள்ளத்தைத் தொடும் விஷயத்தைப் பற்றிப் பேசும்போது பீட்டர் இந்தக் குரலில் பேசுவான்...

"ஒரு கெட்டிக்கார மீனவன். கைதேர்ந்த ஈட்டிக்காரன். கடல் நீரை ஒரு கையில் எடுத்துப்பார்த்து அந்த இடத்தில் மீன் இருக்குமா இல்லையா என்று சொல்லிவிடுவான். 'நான் உலகத்திலே வேறே எதைப் பத்தியும் நினைக்காமே மீன்களைப் பத்தியே நினைப்பேன். அப்போ எனக்கு மீன்பிடிக்க அபாரத் திறமை ஏற்படும். நான் மீனையே தியானம் பண்ணிக்கிட்டிருந்தால் மீன் என்கிட்டேவராமே எங்கே போகும்?... கடலோட சண்டை போடணும். அதுக்கு நல்ல பலம் வேணும். மண் குதிரையை நம்பி ஆத்திலே போகலாமா? சமுத்திரங்கறது லேசுப்பட்ட இடமில்லே. அதோடே போராடணும். கஞ்சா, கள்ளு குடிச்சு, ராவும் பகலும் பொம்பளையோடே புரண்டுகிட்டு

உடம்பைக் கெடுத்துக்கக் கூடாது...' அப்பமுன்னு சொல்லுவான் அவன். ஒரு சொட்டுக் கள்ளு குடிச்சதில்லே, பெண் பிள்ளை களை நெருங்கின தில்லே..."

பீட்டர் தன் தந்தையின் கதையைச் சொல்கிறான் என்று அந்தோனி நினைத்தான்.

"அவன் ஒரு நாள் ஜனவரி மாசக் கடைசியிலே வலை, கயிறு, தூண்டில் முள் எல்லாம் எடுத்துக்கிட்டுக் கடலுக்குப் போனான். ஆகாசத்திலே பிசிர்பிசிரா மேகங்கள், கடல் தண்ணி குழம்பி யிருந்தது. புயல் அடிக்க ஆரம்பிச்சது. பெரிசு பெரிசா அலை கள் கிளம்பின. அவன் தனியா இருந்தான், வீட்டிலே அவனோட பிள்ளை தனியா இருந்தான். பிள்ளையின் அம்மா அவன் குழந்தையாயிருந்த போதே செத்துப் போயிட்டா... பிள்ளை இப்போ வாலிபன்–வயசு முப்பது, முப்பத்திரண்டு இருக்கும். 'அப்பா, நானும் உன்னோட வரேன்'னு சொன்னான். 'வேண் டாம்'னு சொல்லிட்டு அப்பன் கடலுக்குப் போயிட்டான்...

புயல் வர்றதைப் பார்த்துப் பிள்ளைக்கு ரொம்பக் கவலை... ரெண்டு நாள் கழிச்சு அப்பன் திரும்பினான். வலை, கயிறு, தூண்டில் எல்லாம் திரும்பி வந்தது. ஆனால் மீன் ஒண்ணு கூட இல்லே.

...'இந்தமாதி அலைமோதற கடல்லே மீன் இருக்குமா? நீ போயிருக்கவே வேண்டாம்...' என்றான் பிள்ளை.

வலையைச் சுருட்டி வச்சுக்கிட்டு அப்பன் பதில் சொன்னான், 'நான் மீன் பிடிக்கப் போகலியே!'

'பின்னே எதுக்குப் போனே இந்தப் புயல்லே?'

'உன்னோட அம்மாவைக் கொலை பண்ண!'

பையனுக்கு ஆச்சரியம், 'என் அம்மா உசிரோடே இருக் காளா?'

'ரொம்ப நல்லா இருக்கா! அவ உடம்பு நிறைய நகை!' என்று சொல்லிப் பயங்கரச் சிரிப்பு சிரித்தான் அப்பன், 'அவவீடு நிறையத் திருட்டு சாமான்கள்–கடிகாரம், ரேடியோ...'

'அம்மா உசிரோட இருக்கா... ஆனால் நீ இவ்வளவு நாள் என் கிட்டே சொல்லவேயில்லே!...'

அப்பனின் கண்கள் இரத்தம் போல் சிவந்திருந்தன. அவனுக்கு நல்ல போதை. அவன ஆகாசத்தைப் பார்த்து உரக்கத் திட்டினான், 'தேவடியா முண்டை!...'

அன்றிரவு முழுதும் பையனுக்கு உறக்கம் வரவில்லை–அவன் மனசிலே ஏதேதோ சிந்தனை.

வீட்டுக்கு வெளியே அப்பன் போதையில் புலம்பினான்.

'நான் எந்தக் கெட்ட வேளையிலே தான் மணப்பாடு சந்தையிலே மீன் விற்கப் போனேனோ! போன இடத்திலே தேவடியா முண்டை உன்னைப் பார்த்தேனோ!... பால்குடிக்கற குழந்தையைக் கைவிட்டுட்டு ஓடிப்போக உனக்கு எப்படீடி மனசு வந்தது? உன் நெஞ்சைப் பிளந்து பார்க்கணும்போலே இருக்குடீ எனக்கு! எந்தக் காதலனோடே கப்பல் பார்க்கப் போனேடீ நீ? காசுக்காக உன் மானத்தை வித்துட்டியேடீ!...'

மறுநாள் காலை பையன் படகிலேறிக் கடலில் போனான் கடலில் அலைகள் பெரிசுபெரிதாக எழும்பிக் கொண்டிருந்ததையும் அவன் பொருட்படுத்தவில்லை. அவன் மணப்பாடுபோய் அவனோட அம்மாவை தேடிக் கண்டு பிடிக்கப்போறான். அவ வேசியானாலும் அவனோட அம்மா.

பனைமர உசரத்துக்கு அலை எழும்பறது கடல்லே. அவன் மனசிலேயும் அதேமாதிரி எண்ண அலைகள். அவன் சற்றுக் கவனக் குறைவாயிருந்தபோது அலை மோதிப் படகு கவிழ்ந்து போச்சு. கொந்தளிக்கும் கடல்லே திணறிக்கிட்டு நீஞ்சினான் அவன். நீஞ்சி நீஞ்சிக் களைச்சுக் கடைசியிலே மயக்கமாயிட்டான். ரெண்டு நாள் அப்படியே கடல்லே மிதந்தான் அவன்.

அவனுக்கு நினைவு வந்தபோது அவன் நாகர்கோயில் ஆஸ்பத்திரியிலே இருந்தான். அலைகள் அவனோட உடலை ஒரு மணல் மேட்டிலே ஒதுக்கியிருந்ததாம். சில மீனவங்க அவனைப் பார்த்து ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கிட்டு வந்தாங்களாம்..."

"அதுக்கப்பறம் நீ உன் அம்மாவைப் பார்த்தியா?" அந்தோணி கேட்டான்.

"பார்த்தேன்" என்று சொல்லிவிட்டு மௌனமானான் பீட்டர். அவனிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. அவனுடைய கண்களில் நீர் நிறைந்திருந்தது. அவனுடைய குரலும் உடைந்து போயிருந்தது. சற்று நேரத்துக்குப்பின் அவன் சொன்னான், "என் அம்மா ரொம்பக் கஷ்டப்பட்டவ. அவவயித்துக்குச் சோறு இல்லே. கட்ட ஒரு முழத்துணியில்லே. ஆரோக்கியமில்லே. எண்ணெயே படாத தலையிலே ஒரு கூடைப் பேன். காய்ஞ்சு கட்டையாப்போன உடம்பு. போக்கிரிகள் அவளுக்குக் கப்பலைக் காட்டறதாச் சொல்லிக் கூட்டிக்கிட்டுப் போய்க் கெடுத்துட்டாங்க. அவங்க பணங் கொடுத்து அவளுக்கு ஆசை காட்டினாங்க. இதுக்குப் பதிலா சமூகத்தோட எளக்காரம் அவளுக்குக் கிடைச்சது. இந்த அவமானத்தை, இந்த இகழ்ச்சியைத் தாங்கிக்கிட்டு என் அம்மா உசிரோட இருக்கா. இந்தக் கடற்கரையிலே

எல்லா மீனவச் சேரிகளிலேயும் அவளைப் பார்க்கலாம். அதோ பார் மணல்லே படுத்துக்கிட்டுத் தூங்கறா அவ!.."

சூஸியைச் சுட்டிக்காட்டினான் பீட்டர்.

☆ ☆ ☆

படகிலிருந்து கரையில் இறங்கியதும் அந்தோனிக்கு அந்த இடம் மிகவும் பரிச்சயமானதாகத் தோன்றியது. கொஞ்சம் கொஞ்சம் மாறுதலிருந்தாலும் வடக்குப் பகுதியிலிருந்து சாக்கடைத் தண்ணீரைக் கொண்டு வரும் அந்த வாய்க்கால் முன் போலவே இருந்தது. பட்டணத்திலிருந்து வரும்போது மீன் வள அலுவலகத்தைத் தாண்டியதும் இந்த வாய்க்கால் எதிர்ப்படும். அந்த இடம் வாய்க்காலுக்கு வடக்கே.

"இந்த இடத்துக்கு என்ன பேரு?" அந்தோனி பீட்டரைக் கேட்டான்.

"தெரெஸாபுரம்."

அந்த இடத்தில் கால் வைத்ததுமே ஒரு கடுமையான நாற்றம் மூக்கில் நுழைந்து வயிற்றைக் குமட்டியது.

"அப்பா, என்ன நாத்தம்!"

"நாத்தமாத்தானிருக்கும். சங்கோட தசைப்பகுதியை இந்தப் பக்கந்தானே எறியறாங்க... தவிர இந்தச் சாக்கடைவேறே..."

சாக்கடையின் அடிப்பக்கம் கன்னங்கரேலென்று சேறு, அதற்குமேல் அழுக்குத் தண்ணீர் ஓடுகிறது. அதன் கரையில் சிறுவர்களும் கிழவர்களும் மலங்கழிக்க உட்கார்ந்திருக்கிறார்கள். மலத்தைத் தின்னத்தயாராக நாய்களும் பன்றிகளும் நிற்கின்றன. சில இடங்களில் நாய்களுக்கும் பன்றிகளுக்குமிடையே மலந்தின்பதில் போட்டி, சண்டை. அந்தோனிக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. அவன் அவசர அவசரமாக அந்த இடத்தைக் கடந்தான். பீட்டர் இதையெல்லாம் பொருட்படுத்தவேயில்லை. அவன் சூஸியுடன் பேசிக் கொண்டே நிதானமாக நடந்தான்.

சாக்கடை வாய்க்காலுக்கு மறுபுறத்தில் மணல்மேட்டின் மேல் அமைந்திருந்தது மீனவச் சேரி. நாற்புறமும் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. நாலைந்து மூங்கில்கள் அல்லது பனங் கட்டைகளை நட்டு அவற்றைச் சுற்றியும் மேலேயும் பனையோலை

வேய்ந்த சிறுசிறு குடிசைகள் வரிசையாக இருபுறமும் இருந்தன. அவற்றுக்கு நடுவே இருந்த குறுகலான பாதையில் சில இடங்களில் மீன்வற்றல், வலைகள் வெயிலில் உலர்த்தப்பட்டிருந்தன. அங்கங்கே பன்றிகள், நாய்கள், கோழிகளின் நடமாட்டம்.

ஓரிடத்தில் ஒரு கிணற்றைச் சுற்றிப் பெண்கள் கூட்டம். அவர்களில் குமரி யார், கிழவி யார் என்று ஒரு பார்வையில் சொல்ல முடியாதபடி அவர்களுடைய உடம்பு வற்றியுலர்ந்து கட்டையாகியிருந்தது, எண்ணெய்படாத, கோணல் மாணலாக முடிந்துவிடப்பட்ட தலைமுடி. முழங்கால் மட்டும் நீண்ட கிழிந்த புடவைகளை அணிந்திருந்தார்கள் அவர்கள் சிலரது புடவைகள் மார்பை மூடுமளவுக்கூட நீளமில்லை

அந்தப் பெண்கள் முகங்களைக் கோணிக் கொண்டு ஒருவரையொருவர் திட்டிக் கொண்டும் அடித்துக் கொண்டுமிருந்தார்கள்.

ஒரு நடுவயதுப் பெண் அசிங்கமாகத் திட்டிக் கொண்டே ஓரிளம் பெண்ணின் மேல் பாய்ந்தாள். இளம் பெண்ணின் உடம்பு ஓரளவு வாளிப்பாக இருந்தது. கலாப்புடவையும் ரவிக்கையும் அணிந்திருந்தாள். புடவை அழுக்காயிருந்தாலும் முழுமையாக இருந்தது.

மற்ற பெண்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து இந்த இருவரின் சண்டையைத் தூண்டி விட்டார்கள்.

இவ்வளவு நேரம் பன்றிகளுடனும் நாய்களுடனும் சேர்ந்து விளையாடிக் கொண்டிருந்த சேரிச் சிறுவர்கள் ஓடி வந்து அந்தோணியைச் சூழ்ந்து கொண்டனர். அவனுடைய வெள்ளை வேஷ்டி, சட்டையிலிருந்து அவன் பெரிய மனிதன் என்று அவர்கள் புரிந்து கொண்டு ஆவலுடன் அவனை உற்றுப் பார்த்தார்கள்.

"ஏ மாரியம்மா, ஏ பேத்தேலா! விடிஞ்சதுமே சண்டைபோட ஆரம்பிச்சுட்டீங்களா?... என்ன சண்டை?" என்று கேட்டுக் கொண்டே சூஸியுடன் அங்கே வந்தான் பீட்டர்

நடுத்தர வயதுக்காரி அவன்மேல் சீறிவிழுந்தாள். "நீ பாட்டுக்குப் போ... இங்கே ஒண்ணும் மத்தியஸ்தம் பண்ண வர வேணாம்..." இப்போது அவள் இளம் பெண்ணைவிட்டு நகர்ந்து விட்டாள். இளம் பெண் மூச்சிரைக்கத் தன் உடைகளைச் சரி செய்துகொண்டாள்.

"தேவடியா முண்டை! நீ தான் கெட்டுப் போயிட்டே! மத்த பெண்களையும் கெடுக்கப்பாக்கறியா? நீ என்னதான் நினைச்சுக்கிட்டிருக்கே?... அதிலே வேறே எல்லாருக்கும் முன்னாலே தண்ணி எடுத்துக்கிட்டுப் போகணுமாம்!..."

அந்தோனி சிறுவர் சிறுமியரைப் பார்த்தான். எல்லாருமே அம்மணம். ஒரு சாண் துணிகூட இல்லை அவர்கள் உடம்பில். கைகால்கள் குச்சி குச்சியாக இருந்தன. மார்பின் எலும்புகளை எண்ணிவிடலாம். வயிறுகள் முதுகுகளுடன் ஒட்டிக்கிடந்தன சிலருக்கு. வேறு சிலரின் வயிறுகள் டமாரம் போல் உப்பி யிருந்தன. அவற்றில் நிச்சயம் புழுக்கள் குடியிருக்கும்.

இந்தக் குழந்தைகளுக்கு யாரோ சூடுபோட்டு மனிதக் கூட்டத்துக்குள் விரட்டிவிட்டிருக்கிறார்களென்று அந்தோனிக் குத் தோன்றியது. சொறிபிடித்த உடம்புகள் அவர்களுக்கு. உணவுப் பற்றாக் குறையாலும் நோய்களாலும் பீடிக்கப்பட்டு அவர்கள் முகம் சுருங்கி, உடல் கிழண்டுபோய்....

"வா, வா" என்று அந்தோனியை அழைத்துக் கொண்டு சூஸியுடன் முன்னேறினான் பீட்டர்.

ஓரிடத்தில் நான்கு பேர் வட்டமாக உட்கார்ந்து கொண்டி ருந்தார்கள். அவர்களுக்கு நடுவில் போத்தல்கள், ஒரு துண்டில் பொரியும் கொத்துக் கடலையும்.

பீட்டரின் குழு அவர்களை அணுகியதும் கள்ளின் தீவிர நெடி குப்பென்று அடித்தது. அவர்கள் அவனைக் கண்டதும் எழுந்து நின்றனர். ஒருவன் விளக்கினான், "நேத்து ராத்திரி ரொம்ப வேலை. அதுதான் இப்போ கொஞ்சம் மருந்து சாப்பிடறோம்."

திடீரென்று இன்னொருவன் கூச்சலிட்டான், "பீட்டர், இது உன்னோட வேலைதானா? என்னோட வயசுப் பெண்ணைக் கூட்டிக்கிட்டுப் போயிட்டியே!"

பேசினவன்தான் குட்டை சாலமன். அவன் கண்கள் சிவந்திருந்தன. அவன் சூஸியின் மேல் பாய்ந்து அவளுடைய தலைமுடியைப் பிடித்துக் கொண்டான். "எந்த மூஞ்சியோடே மறுபடி என் முன்னாலே வந்து நிக்கிறே? தொலைஞ்சுபோ, ஓடிப்போ!..." என்று கத்திக் கொண்டே அவன் சூஸியைப் படார் படாரென்று அடித்தான், உதைத்தான், அறைந்தான்.

அந்தோனி பிரமித்துப் போய் நின்றான்.

பீட்டர் பொங்கியெழுந்தான், "சாலமன், கபர்தார்! அவமேலே கைவச்சியோ நான் உன்னை..."

சாலமன் சூஸியை விட்டு விட்டு இரைக்க இரைக்க மூச்சு விட்டான். பிறகு கூச்சலிட்டான், "லூயி, லூயி... இங்கே வந்து பாரு! உன் பெண் ஆசைநாயகனோடே மஜா பண்ணிட்டு வந்திருக்கா..."

அடுத்த கணம் பீட்டர் அவனுடைய கன்னத்தில் ஒரு பேயறை அறைந்தான். அறை வாங்கிக் கொண்ட சாலமன் வாயை மூடிக் கொண்டான்.

அருகிலிருந்த குடிசையின் கதவைத் திறந்து கொண்டு வந்தாள் ஒரு ஸ்திரீ – எலும்பும் தோலுமான உடம்பில் வயிறு மட்டும் பீப்பாய் மாதிரி. முழங்கால் மட்டுமே மறைக்கும் கந்தை யுடை; திறந்த மார்பகங்கள்; ஊசலாடும் குச்சிக்கால்கள்...

அவள் கழுத்து நரம்பு புடைக்கக் கத்தினாள், "தேவடியா முண்டை! உன்னோட கள்ளக் காதலன் எங்கே? அவனோட பதினாலு தலைமுறையை..." ஒரு அசிங்கமான திட்டு வந்தது.

அந்தோனிக்கு ஆச்சரியம். நடைபிணமாக இருப்பவளால் எப்படி இவ்வளவு பலமாகக் கத்த முடிகிறது? அடேயப்பா, என்ன கோபம்! அவளுடைய வார்த்தைகள் இயந்திரத் துப்பாக்கி யிலிருந்து கிளம்பும் வெடி குண்டுகள் மாதிரியல்லவா இருக்கின் றன!

அவள் நிமிஷத்துக்கு நூறு திட்டுத்திட்டுகிறாள். சால்போன்ற தன் வயிற்றை முன்னும் பின்னும் ஆட்டுகிறாள். பார்க்க அசிங் கமாக இருக்கிறது.

அந்தோனிக்குத் தலை சுற்றுகிறது. பீட்டர் மௌனம். சூஸி தன் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மி விம்மி யழுகிறாள்.

லூஸி ஒரு துடைப்பத்தை எடுத்துக் கொண்டு சூஸியை அடிக்க வந்தாள். சூஸி பயத்தில் கதறிக் கொண்டு பீட்டருக்குப் பின் போய் நின்று கொண்டாள்.

பீட்டர் புலிபோல் உறுமினான், "போதும், நிறுத்திக்கோ!"

லூஸி அப்படியே நின்றுவிட்டாள். ஆனால் சிறிது நேரத்துக் குப்பின் மறுபடி திட்டத் தொடங்கினாள்

"சூஸி வா... நாம போகலாம்" என்றான் பீட்டர்.

"ஆமா, நாம போயிடலாம்" அந்தோனியும் ஆமோதித்தான்.

அவர்கள் வந்த வழியே திரும்பினர். பீட்டர் சூஸியின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தான்.

"போ, போ!... கள்ளக் காதலனோடே ஒழிஞ்சுபோ! மறுபடி யும் இங்கே உன் மூஞ்சியைக் காமிச்சே, உன் மூக்கை அரிவா மணையாலே நறுக்கிடுவேன்!..." லூஸி கத்தினாள். குட்டை சாலமன் கள்ளை வாயில் ஊற்றிக் கொண்டே வாய் குழறச் சொன்னான், "துப்புக் கெட்டவளே, தொலைஞ்சுபோ!.. என் பெண்ணாயிருந்துக்கிட்டு நீ இப்படி..."

சேரியை விட்டு வெளியேறியதும்தான் அந்தோனிக்கு நிம்மதி. "அடேயப்பா, இடமும் நரகம், ஜனங்களும் பிசாசுகள்!" என்றான் அவன்.

பீட்டர் அவனை நிமிர்ந்து பார்த்துச் சொன்னான், "மனிதன் சுற்றுச் சூழலோட பாதிப்பாலே பிசாசா ஆகிறான். இவங்கதான் நம்ம சமூகத்தோட கீழ்மட்டத்திலே இருக்கற பாட்டாளிகள். இவங்களோட நிலையைப் பார்த்தியா?"

"பார்த்தேன்... ஆனால் இவங்க மேலே எனக்கு அனுதாபம் ஏற்படலே..." என்று அருவருப்புடன் சொன்னான் அந்தோனி.

"ஆனால் இவங்களுக்காகத்தாம்பா உழைக்கணும். இவங்களை மனுசங்களாக ஆக்கணும்... உன்னாலே இந்தச் சேரியிலே வசிக்க முடியுமா?"

"முடியாது. ஒரு நிமிஷங்கூட முடியாது. அங்கே இருக்கற போது எனக்கு மூச்சு முட்டிச்சு..."

"அப்பமுன்னா உன்னாலே ஒரு காரியமும் ஆகாது. நீ சேத்தை எடுத்துத் துப்புரவு பண்ணணும்னா சேத்திலே கை வைக்கத் தான் வேணும். உன்னாலே முடியாதுன்னா நீ லண்டனுக்குத் திரும்பிப்போ..."

அந்தோனி பதில் பேசவில்லை.

பீட்டர் சொன்னான், "ஒரு விஷயம் ஞாபகம் வச்சுக்க. அந்த சுத்தமான, பளபளக்கற லண்டன் ஒரே நாளிலே உண்டாயிடலே. அங்கே இருக்கற ஜனங்கள் ஒரே நாளிலே நாகரீகமுள்ளவங்களா, கண்ணியமானவங்களா ஆயிடலே. நான் அவங்களோட சரித்திரத்தைப் படிச்சிருக்கேன். முன்னூறு வருசத்துக்கு முன்னாலேகூட அவங்க நம்ம மாதிரிதான் இருந்தாங்க. அப்புறம் கடுமையான உழைப்பாலே கல்வியாலே அவங்க தங்க சமூகத்தை இந்த நிலைக்கு கொண்டு வந்திருக்காங்க.... ஆனால் நாம நம்ம பொறுப்பைத் தட்டிக் கழிச்சிட்டு அவங்க தயாரிச்ச தேனடையிலே உட்கார்ந்து கிட்டுத் தேனைக் குடிக்கிறோம். வெளிநாட்டிலே இருந்துக்கிட்டு ஆர்ப்பாட்டம் பண்ணற நம்ம இனத்து மக்களாலே என்ன பிரயோசனம்!"

"இங்கே இருந்துக்கிட்டுத்தான் நம்ம ஜனங்களுக்கு உதவணுமா? வெளிநாட்டிலே இருந்துக்கிட்டு உதவி செய்ய முடியாதா?"

"இவங்களோடே சேர்ந்து வாழ்ந்துகிட்டு இவங்களோட சுகதுக்கங்களைப் பகிர்ந்துகிட்டு வாழறது வேறே ; வெளியிலே இருந்துக்கிட்டு உதவி செய்யறது வேறே..."

"எப்படி வேறே?"

"வெளியிலேருந்து உதவறதுன்னா பிச்சைபோடறதுன்னா அர்த்தம். அவங்களுக்குப் பிச்சைபோட உனக்கு ஒரு உரிமையும் இல்லே. அதனால்தான் உன் அப்பாவும் அந்த மாதிரி உதவ முன்வரல்லே, உன் அப்பா மீனவராயிருந்தாலும் அந்த சமூகத் தைச் சேர்ந்தவராக வாழலே. இந்த உண்மை அவருக்குத் தெரியும். அதனால்தான் அவர் இந்தப் பொறுப்பை என்கிட்டே விட்டுட்டுப் போயிருக்கார்... வா சூஸி, நாம திரும்பிப் போவோம்..." என்று சொல்லியவாறு வேறு பக்கம் திரும்பினான் பீட்டர்.

"எங்கே போறே?" அந்தோனி கேட்டான்.

"தெராஸாபுரத்துக்கு... அங்கே இன்னும் என் அப்பாவோட குடிசை முளைகள் நின்னுக்கிட்டிருக்கு..."

"இந்தப் பெண்ணைப் புலிவாயிலே..."

"இவளை என்கிட்டேயிருந்து பிடுங்கிக்கிட்டுப் போக யாரா லும் முடியாது!... தவிர, ஒரு ராத்திரிலேயே மைக்கேலுக்கு இவளை ரொம்பப் பிடிச்சுப் போச்சு. நான் நாளைக்கே இவளை மைக்கேலுக்குக் கலியாணம் பண்ணிவச்சுடுவேன்... என்ன சூஸி, உனக்கு சம்மதந்தானே?"

சூஸி வெட்கத்தோடு தலை குனிந்தாள்.

"நாம மாதா கோவிலுக்குப் போக வேண்டாம். ஆர்ப்பாட்டம் பண்ணவேண்டாம். பாண்டு வாத்தியம் வேண்டாம். மைக்கேல் உன் கழுத்திலே தாலி மட்டும் கட்டுவான், சரிதானா?"

சூஸி தலையசைத்துச் சம்மதம் தெரிவித்தாள்.

"மைக்கேல் கலியாணத்திலே விருந்து சாப்பிடுவோம். சூஸி தான் சமையல். அந்தோனி, மைக்கேல் வந்து உன்னை விருந் துக்கு அழைப்பான். இஷ்டமிருந்தால் வா..."

இதைச் சொல்லிவிட்டுப்பீட்டர் விடுவிடென்று தெராஸா புரத்தை நோக்கி நடந்தான்.

அந்தோனி சற்று நேரம் மௌனமாக அங்கேயே நின்றான். பிறகு தன்வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

☆ ☆ ☆

அந்தோணி கால்டுவெல் பள்ளியின் வடக்கேயுள்ள புதுத் தெருவின் முனைக்கு வந்தபோது செபாஸ்டியன் கொரேரா வைச் சந்தித்தான்.

"குட்மார்னிங், மிஸ்டர் ஃபெர்னாண்டோ! எங்கே போயிருந் தீங்க?"

"பீட்டரோட கடல்லே போயிந்தேன். ரெண்டு நாள் கழிச்சுத் திரும்பி வரேன்."

"அப்பமூன்னா ஊரிலேயே ரொம்ப சுவையான செய்தியை மிஸ் பண்ணிட்டீங்க."

"என்ன விஷயம்?"

"உங்க வீட்டுக்கு வந்து சொல்றேன். வாங்க, போகலாம்... உங்களுக்குத் தொந்தரவு ஒண்ணும் இல்லையே?"

"இல்லே இல்லே."

இருவரும் பேசிக்கொண்டே நடந்தார்கள். செபாஸ்டியனிட மிருந்து அந்தோனிக்குப் பல விஷயங்கள் தெரியவந்தன.

"அன்னிக்கு ராத்திரி கூலியாட்களோட சேரியிலே நெருப்பு வச்சவன் பேரு உசேன். போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் நம்ம பக்கத்துப் பையன்தான். நம்ம ஜாதிதான். நல்லா அந்த ஆளை உதைச்சான். அடிபட்டவன் உண்மையைக் கக்கிட்டான். ஆனால் போலீஸ் இன்ஸ்பெக்டர் கேசைக் கம்ப்ளீட்டா மாத்திட் டான். அவன் பேனி மிராண்டா, கார்தோஸா சகோதரர்களுக்கு ரொம்ப வேண்டியவன்.... ஆனால் பழமொழி இருக்கே, 'அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்?....சரியான வார்த்தை. கடவுளோட தண்டனை சரியான தண்டனை. அதிலேயிருந்து தப்பிக்க முடியாது...."

அந்தோனியின் வீடு வந்து விட்டது. உள்ளே போய் உட்கார்ந்த தும் செபாஸ்டியன் சொன்னான், "முதல்லே ஒரு கப் காபி."

அந்தோனி உள்ளே காபிக்குச் சொல்லிவிட்டுத் தன் உடைகளை மாற்றிக் கொண்டு வெளியறைக்கு வந்தான்.

செபாஸ்டியன் காபியைக்குடித்துக் கொண்டே சொன்னான், "மானுவல் கார்தோஸா தற்கொலை பண்ணிக்கிட்டான்."

"நிசமாவா?"

"ஆமா... முந்தாநாள் ராத்திரி அவனோட மனைவி லிண்டா கிளப்பிலே ஏதோ விழாவுக்குப் போயிருக்கா. ரொம்ப நேரங் கழிச்சுத்தான் திரும்பியிருக்கா. படுக்கையறையை ஒட்டிய பாத் ரூம் கதவைத்திறந்தால் ஒரு பயங்கரக் காட்சி-மானுவல் தூக்குப் போட்டுக்கிட்டுத் தொங்கறான். கண்முழிகள் வெளியே வந்து, நாக்கு தொங்கிக்கிட்டிருக்கு...."

அந்தோனி ஒரே ஒரு முறைதான் மானுவலையும் லிண்டாவை யும் பார்த்திருக்கிறான். அவர்களுடன் பழகியதில்லை. இருந்தா லும் கேட்டான், "தற்கொலைக்குக் காரணம் என்ன?"

"பெண்சாதியோடே மனவேற்றுமை தான் காரணமாயிருக் கணும்... அவன் ஆண்மையற்றவன்னு கேள்வி. குழந்தை குட்டி கிடையாது. அத்தோடு லிண்டாவின் நடத்தை...."

சிகரெட் குடித்தவாறே ஏதோ யோசித்தான் செபாஸ்டியன். பிறகு சொன்னான், "அவனோட அண்ணன் சுஸானையும் நம்ப முடியாது. தொழில் லாபத்திலே தம்பிக்குப் பங்கு கொடுக்கா மலிருப்பதற்காக அவனே தம்பியைக் கொன்னு கயித்திலே தொங்க விட்டிருக்கலாம். யாரையும் நம்பமுடியாது..."

ஹாஹா வென்று சிரித்தான் செபாஸ்டியன்.

பிறகு அந்தோனியைக் கேட்டான், "கடைசியிலே நீங்க என்ன முடிவு பண்ணினீங்க? இங்கேயே தங்கிடுவீங்களா?"

"இன்னும் முடிவு பண்ணலே. மூணுமாச லீவிலே இன்னும் ரெண்டு வாரம் பாக்கி. அதுக்குள்ளே ஏதாவது முடிவு பண்ண ணும்."

காவல்கார மறவன் கடிதங்களைக் கொண்டு வந்து கொடுத் தான். அவற்றில் ஒன்று மேரியின் கடிதம் என்பதை அந்தோனி கவனித்தான். உடனே அதைப்பிரித்துப் படிக்க விரும்பியும் அப் படிச் செய்யவில்லை அவன்.

செபாஸ்டியன் பேசிக் கொண்டே போனான், "அந்த பேனி மிராண்டா இருக்கானே, அவனும் ஒரு பயங்கரமான ஆள். ஒண் ணாம் நம்பர் கொலைகாரன். ஊரிலே நடக்கற கொலைகளை யெல்லாம் விசாரிச்சுப் பார்த்தால் அதுகளுக்குக் காரணம் பேனி அல்லாது சுஸான் என்கிறது புரியும்..." செபாஸ்டியன் குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னான், "நீங்க கொஞ்சம் ஜாக்கிர தையா நடமாடுங்க. பீட்டர் உங்க சிநேகிதன்னு அவங்களுக்குத் தெரிஞ்சு போனதாலே அவங்க உங்களையும் சும்மா விட மாட்டாங்க.... அதனால்தான் நான் முன்னாலேயே உங்ககிட்டே சொன்னேன், இங்கே இருக்காதீங்க, போயிடுங்கன்னு...."

"ஏனிப்படிச் சொல்றீங்க?... இதுஉங்க யூகம்தானா, இல்லே, ஏதாவது கேள்விப் பட்டீங்களா?"

"கார்தோஸாக் கம்பெனி மானேஜர் கிரிகரிலோபோ இருக் கானே, அவன் தனுஷ்கோடி நாடார் கடையிலே தனுஷ்கோடி கிட்டே உங்களைப் பத்தி ஏதோ குசுகுசுன்னு பேசிக்கிட்டிருந் தான். நான் அங்கே போகவும் பேச்சை நிறுத்திட்டான்."

செபாஸ்டியன் இப்போது அந்த முஸ்லிம் பெண்ணுடன் குடும்பம் நடத்துகிறான். அவனுடைய பிள்ளைகள் தகராறு செய்தார்கள். ஒரு நாள் இரண்டு இளைஞர்கள் போய் அவர்களைக் கண்டித்து விட்டு வந்தார்கள். இப்போது செபாஸ்டியனுக்குப் பீட்டரின் உதவி தேவை. அவன் பீட்டரைப் பற்றி விசாரித்தான்.

செபாஸ்டியன் சென்றபின் அந்தோனி மேரியின் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். முதலிலேயே அவள் புகார் செய்திருந்தாள் "உங்கிட்டேயிருந்து இப்போ எல்லாம் கடிதமே இல்லே... ஊரிலே உனக்கு நல்ல சிநேகிதி ஒருத்தி கிடைச்சுட்டதாகக் கேள்விப்படறேன். நான் இனியும் காத்திருக்க முடியாது. நான் மே மாசம் லீவு எடுத்துக்கிட்டு ரிவியரா போகப் போறேன். நீ வந்தால் நல்லது, இல்லாட்டி எனக்கு வேறே துணைக்குப் பஞ்சமில்லே..."

கடிதத்தைப் பார்த்து மனதுக்குக் கஷ்டமாயிருந்தது. ஏதாவது செய்யத்தான் வேண்டும். ஆனால் இங்கே என்ன ஏற்பாடு? நாட்டுக்கு அவனுடைய கடமை...தந்தையின் கடைசி விருப்பம்... பீட்டரின் அழைப்பு...

சேரியின் சித்திரம் அவனுடைய மனக்கண்களில் தோன்றியது. நினைத்தாலே மூச்சுத்திணறுகிறது. சேரிவாசிகளுடன் கூட இருந்துகொண்டு வேலை செய்யச்சொல்கிறான் பீட்டர். அது முடியாத காரியம்.

நாடு இப்போதிருக்கும் நிலைமையில் அதற்கு சேவை செய்வது மிகவும் அவசியம்தான். ஆனால் அதற்காக அந்த மாதிரி இடத்தில் போய் இருந்துகொண்டு... இரண்டு நாள் அங்கு தங்கியிருந்தால் அவனுக்கு வியாதி வந்து விடும்...

அந்தியின் மங்கிய வெளிச்சத்தில் வராந்தாவில் இங்குமங்கும் நடந்தான் அந்தோனி. அவன் மனதில் இப்போது ஒரு பெரும் விவாதம். நாட்டுப் பற்று என்ற கவர்ச்சி மிக்க உணர்ச்சிக்கு எதிரில் நாட்டின் நிலையாகிய கசப்பான உண்மை. இது ஒரு கடினமான சவால். அதன் தோற்றம் பயங்கரமாயிருக்கிறது...

ஒரு தொழு நோயாளி. அவன் உடலெங்கும் தோல் வெமுண்டு போய்ப் புண்ணாயிருக்கிறது. புண்களின் வலி தாங்காமல் அவன் பைத்தியமாகிவிட்டான். அவன் வாயில் அசிங்கமான திட்டுக்கள். அவனுக்கு மருத்துவம் செய்ய வருபவனையே அவன் அடிக்க வருகிறான். கடிக்க முற்படுகிறான். அப்படிப்பட்டவனை மடியில் வைத்துக் கொண்டு அவனுடைய புண்களுக்கு மருந்திட்டு அவனுக்கு சேவை செய்ய வேண்டும்....

அந்தோனிக்குத்தலை சுற்றியது... ஊஹூம் . இதைச் செய்ய அவனால் முடியாது! அவன் ஏசு அல்ல, புனித ஆத்மாவுமல்ல.

தன்னுள்ளே தடுமாறினான் அந்தோனி. இந்த மாதிரி சேவை வாழ்வை மேற்கொள்ள ஓரளவு முன்னேற்பாடு தேவை. அதற்கு நீண்ட காலம் பிடிக்கும். குழந்தைப் பருவம் முதல் வேறு விதமாக வளர்ந்தான் அவன்... பீட்டரின் எதிர்பார்ப்பு நடை முறைக்கு உதவாது. சேரிவாசிகளுடன் வாழ்ந்தால்தான் அவர்களைத் திருத்தலாமாம்! ஏன்? டாக்டர் நோயாளிகளைத்தன் மடியிலே வைத்துக்கொண்டா அவர்களுக்குச் சிகிச்சையளிக்கிறார்?

பீட்டரின் மூளையில் சில அசட்டு எண்ணங்கள். பல்கலைக் கழகத்திலே படிக்காததாலே அவனிடம் சில தவறான கருத்துக் கள் தோன்றியிருக்கின்றன. ஒரேயிடத்திலே இருந்ததால் கிணற் றுத் தவளையாக ஆகிவிட்டான் அவன். அவனோடு சேர்ந்து வேலை பார்ப்பது ரொம்பக் கஷ்டம்...

அப்புறம் மேரி... அவள் இந்தியாவரச் சம்மதித்தாலும் அவளைச் சேரியில் கொண்டு வந்து வைத்துக் கொள்ள முடியாது.

ஆனால் அவனுடைய தந்தையின் இந்த வீடு இப்போது அவனுக்குச் சொந்தமல்லவே!.. அந்தோனி குழம்பினான்.

"ஐயா"... ஆஞ்செலா மேலே வந்து அவனைக் கூப்பிட்டுத் தணிந்த குரலில் சொன்னான், "அந்த வெக்கங்கெட்ட பொம்பளை உங்களைப் பார்க்க வந்திருக்கா. அவளை மேலே கூட்டிக்கிட்டு வரவா? அல்லது நீங்க கீழே வரீங்களா?"

"யாருவந்திருக்கா?"

"பாத்திமா..." ஆஞ்செலா தோட்டத்துக்கு அப்பால் இடிந்த சுவரின் பக்கம் கை காட்டினான்.

"கீழே உக்காரச் சொல்லு. நான் வரேன்..." அந்தோனி சட்டை யணிந்து கொண்டு முன்னறைக்கு வந்தான். அங்கே சோபா முழுவதையும் அடைத்துக் கொண்டு உடம்பைப் பரத்திக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் பாத்திமா. பிரும்மாண்டமான உடம்பு. கழிந்து கொண்டிருந்த இளமையைப் பிடித்து இழுத்து வைத்துக் கொண்டிருந்தாள் அவள். பிரமாதமான அலங்காரம். கண்களில் மை, உதடுகளில் இரத்தச் சிவப்புச் சாயம், அழுத்த மான பச்சை நிற ஜாக்கெட் புடவை, ரவிக்கை, கழுத்தில் விலையுயர்ந்த முத்து மாலை, முகத்தில், கழுத்தில், மார்பில் அழுத்தமான பவுடர்ப்பூச்சு....

"நான் ரெண்டு நாள் வந்துட்டுத் திரும்பிப்போனேன். நான் தான் உன் சிக்கி [illegible]க்கச்சிலேதான் இருக்கேன்..." பற்களைக்

காட்டிக் கொண்டு சிரித்தாள் பாத்திமா. "உன்னோட அம்மா எனக்கு அக்கா முறை. உன்னோட அப்பா என்கிட்டே ரொம்பப் பிரியமா இருந்தார். அவர் இறந்து போனதிலே எனக்கு மனசு உடைஞ்சுபோச்சு. இந்த வீட்டுக்குள்ளே நுழையவே பிடிக்கலே..." பாத்திமாவின் தொண்டையடைத்துக் கொண்டது. அவள் கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அறைமுழுதும் வெளிநாட்டு சென்டின் தீவிர மணம் பரவியது.

"....தினம் நினைச்சுக்கறேன் 'பாவம், பையன் தனியா இருக்கான். அவனைக் கவனிச்சுக்க ஒருத்தரும் இல்லே' ன்னு.. ஆனால்... நான்தான் சொன்னேனே, வீட்டுக்குள்ளே நுழையவே மனசுக்குப் பிடிக்கலே... எப்படி இருந்தது, எப்படி ஆயிடுச்சு!...."

அந்தோனிக்கு அவளைக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. இருந்தாலும் மரியாதைக்காக "கொஞ்சம் காபி சாப்பிடுங்க..." என்றான்.

பாத்திமா சிரித்துக் கொண்டு சொன்னாள்."உன் அப்பா இருந்தால் என்னைக் காபிகுடிக்கச் சொல்லமாட்டார். வெளி நாட்டுப் போர்ட் ஒயின், ஷெர்ரி இதையெல்லாம் கொடுத்துக் குடிக்கச் சொல்லுவார்... உம், அந்த சுகமெல்லாம் போச்சு!..." என்று பெருமூச்சு விட்டாள் அவள்.

பாத்திமாவின் நோக்கமென்ன என்று புரியவில்லை அந்தோனிக்கு.

"சித்தின்னு பிரியத்தைக் காண்பிக்க ஆசையாயிருந்தால் ஒரு கிளாஸ் சர்பத் கொடு."

அந்தோனி ஆஞ்செலாவை சர்பத் கொண்டுவரச் சொன்னான்.

பாத்திமா இன்னும் தாராளமாக உடம்பைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்தாள். "ஒரு சின்ன விஷயத்துக்காக உன்கிட்டே வந்தேன்... உன் அப்பா ரொம்ப நாள் படுத்தபடுக்கையாக் கிடந்தார். கெட்ட வியாதி. யாரும் கிட்ட நெருங்கறதில்லே. நான் மட்டுந்தான்—அதாவது என்னை மட்டுந்தான் அவர் கிட்டே வர விட்டார். எனக்குப் பயமில்லை. நான் தான் அவருக்குக் கடைசி வரையிலே சேவை பண்ணினேன். ஒரு நாள் அவர் சொன்னார், 'பாத்திமா, நீ எனக்குச் செஞ்ச உபகாரத்துக்குப் பிரதியா என்ன செஞ்சாலும் போதாது. என்பிள்ளையோ எங்கேயோ ஓடிப்போயிட்டான். உனக்கும் வீடு வாசல் ஒண்ணுமில்லே. என் தோட்டத்திலே ஒரு பகுதியை நான் உனக்குத் தரேன். நீ அதிலே வீடு கட்டிக்கிட்டு இருந்துக்கோ...' சுஸான் கார்தோஸாவை சாட்சியா

வச்சு அவர் தோட்டத்திலே ஒரு பகுதியை என் பேரிலே எழுதிவச்சிருக்கார். அந்தப் பத்திரம் என்கிட்டே இருக்கு..."

"எனக்கு இதெல்லாம் தெரியாது. வக்கீல் ராமச்சந்திரய்யருக்குத்தான் இதைப்பத்தி... தவிர, எனக்கு தெரிஞ்சவரையிலே, அப்பா உயில் எழுதியிருக்கார், யார்யாருக்கு என்ன கொடுக்கணும்னு அதிலே எழுதியிருக்கும் அதோடு புரோபேட் எடுத்தப்புறம் அதிலே உள்ளபடி அவங்கவங்களுக்கு உரிய பங்கு கிடைக்கும்...."

"ஆனால் சாகிற சமயத்திலே மனுசங்களுக்குப் புத்திபிசகறதில்லையா? நான் சொன்ன விஷயம் அந்த சமயத்திலே அவருக்கு ஞாபகமில்லாமபோயிருக்கலாமே!..."

"நீங்க வக்கீல்கிட்டே பேசுங்க..."

"அது பேசத்தான் போறேன்... இருந்தாலும் நீ நம்ம ஆளு. அதனாலே உன்கிட்டே முன்னாலேயே பேசிவச்சுக்கறேன்... சரி, நீ தனியா நாள் முழுக்க என்னதான் செய்யறே? நீ இந்தச் செவிரைத்தாண்டி வந்தால் என் வீடுதான். எப்போவிருப்பமோ வாயேன்! நான் உன் சித்திதானே!.... சரி, நான் வரேன் இப்போ..."

பாத்திமா எழுந்தாள். எழுந்து கொண்டேசொன்னாள், "உன் அம்மா காதிலே வைரஜிமிக்கி போட்டுக்கிட்டிருந்தா. அவ இறந்து போனப்புறம் ஒரு நாள் நான் உன் அப்பாகிட்டே 'அக்காவோட ஜிமிக்கியை எனக்குக் கொடுங்களேன்'னு கேட்டேன், கொடுக்கறேன்னு சொன்னார். அதுக்கப்புறம் இந்த விஷயத்தை நானும் மறந்துட்டேன், அவருக்கும் ஞாபகமில்லே... அது இருக்கோல்லியோ? அம்மாவோட நகை நட்டெல்லாம் சரியா இருக்கான்னு பார்த்தியா? பார்க்க உன்னாலே முடியல்லேன்னா என்னைக் கூப்பிடு. நான் வரேன்..." வாயிற்கதவுவரை சென்றவள் திரும்பிவந்து, "ஒரு விஷயம் கேள்விப்பட்டேன்... நிசமோ பொய்யோ தெரியாது... உன் அப்பா அந்த உதவாக்கரை பீட்டர் ஃபெர்னாண்டோ பேரிலே எல்லாச் சொத்தையும் எழுதிவச்சுட்டாராமே?" என்று கேட்டாள்.

அந்தோனி மௌனமாக அவளைப்பார்த்துக் கொண்டு நின்றான்.

"நீ இருக்கறபோது உனக்குரிய சொத்தை அந்தப்பிசாசு எடுத்துக்கிட்டுப் போறதா! என்னாலே இதைப்பொறுத்துக்க முடியாது! நீ கேஸ்போடு, நானும் சுஸான் கார்தோஸாவும் உனக்காகச் சாட்சி சொல்கிறோம்..."

வாசலை நோக்கிப் போய்க்கொண்டே அவள் சொன்னாள், "அந்தப் பீட்டர் ஒரு சைத்தான். அவனை இந்த வீட்டுப்பக்கம் அண்டவிடாதே!"

இந்த நிகழ்ச்சிக்கு மூன்று மணி நேரத்துக்குப்பின் வாசல் பக்கத்தில் ஏதோ அரவம் கேட்டது. சாப்பிட்டுக் கொண்டிருந்த காவற்காரன் சாப்பாட்டை விட்டுவிட்டு ஓடிப்போய்ப் பார்த்தான். வாசலுக்கு முன்னாலுள்ள சந்தில் மங்கிய இருட்டில் குப்புற விழுந்து கிடந்தான் ஒருவன். அவனுடைய நெஞ்சுக்கு கீழே திட்டுத் திட்டாக இரத்தம்.

காவற்காரனின் கூக்குரல் கேட்டு வீட்டுக்குள்ளிருந்து வேலைக் காரர்கள் விளக்கையெடுத்துக் கொண்டு ஓடி வந்தார்கள். விழுந்திருந்தவனைப் புரட்டிப் பார்த்தார்கள்.

அவன் மைக்கேல்தான். நெஞ்சுக்கருகில் கத்தியால் குத்தப் பட்டிருந்தான். வெட்டுக் காயத்திலேருந்து இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

செய்தி கேட்டு அந்தோனி ஓடிவந்து மைக்கேலை மருத்துவ மனைக்குக் கொண்டு சென்றான். பீட்டருக்கும் செய்தி போயிற்று. மருத்துவமனை போகும் வழியிலேயே மைக்கேலின் உயிர் பிரிந்து விட்டது.

பிறகு சவசோதனை... போலீஸ் விசாரணை... போலீஸ் நாய் மோப்பம் பிடித்துக் கொண்டு முதலில் பாத்திமா வீட்டுக்கும் பிறகு கார்தோஸா அலுவலகத்துக்கும் போயிற்று. ஆனால் அங்கேயெல்லாம் சந்தேகத்துக்குரிய தடயமெதுவும் கிடைக்க வில்லை. பிறகு நாய் கடற்கரைக்கு ஓடி அங்கே ஓரிடத்தில் மணலை முகர்ந்து கொண்டு நின்றது. அங்கே மணலைத் தோண் டியதில் இரத்தக் கறைபடிந்த ஒரு கத்தி கிடைத்தது.

இரவு முழுவதும் போலீஸ் ஸ்டேஷனில் கழிந்தது. பிறகு அந்தோனி வீட்டுக்குத் திரும்பினான். அங்கே பீட்டர் உட்கார்ந் திருந்தான். அந்தோனி திரும்பியதும் நாய் எங்கெங்கே போயிற்று என்று பீட்டர் அந்தோனியைக் கேட்டான். அந்தோனி எல்லா விஷயங்களையும் விவரமாகச் சொன்னான். அதை யெல்லாம் பீட்டர் காதில் வாங்கிக் கொண்டானா என்பது புரியவில்லை. "கொலை காரங்க என்னைக் கொல்லத் தான் வந்திருக்காங்க. இருட்டிலே நான்தான்னு நினைச்சு மைக்கேலைக் குத்திட்டாங்க... அவனோடே குடித்தனம் நடத்த னும். சூஸி காண்ட கனவு கலைஞ்சு போச்சு!... என் வலது கை ஒடிஞ்சு போச்சு!..." சிறு குழந்தைபோல் அழத் தொடங்கினான் பீட்டர்.

பிறகு சட்டென்று அழுகையை நிறுத்தி விட்டுத் துண்டால் கண் களைத் துடைத்துக் கொண்டு எழுந்து நின்றான் பீட்டர். இப்போது அவனுடைய முகத்தில் ஏதோ ஒரு பயங்கரத் தன்மை தோன்றியிருந்தது. அவன் தணிந்த குரலில் சொன்னான், "ஊஹூம். இவங்களை இனி மன்னிக்க முடியாது!"

"நீ என்னதான் பண்ணப்போறே?" என்று கேட்க விரும்பினான் அந்தோனி. ஆனால் அவன் வாயிலிருந்து சொற்கள் வர வில்லை. சிறிது நேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள். பிறகு அந்தோனி சொன்னான், "சவப்பரிசோதனை முடிந்து உடல் கிடைக்க சாயங்காலமாயிடும். அது வரையிலே ஒண்ணும் செய்ய றதுக்கில்லே, போலீஸ் விசாரணை..."

"அதிலே ஒரு பிரயோசனமுமில்லே. கொலையாளி பிடிபட மாட்டான்... என் அப்பா விஷயத்திலும் இது மாதிரி தான் நடந் தது. கொலையாளிகளை நான் தான் தண்டிக்கணும். தண்டித்து தீருவேன், என் உயிர் மேலாணை!..." பீட்டரின் கண்கள் தீப்பிழம் பாக ஜொலித்தன.

வெளியே இன்னும் இருள் பிரியவில்லை. பொழுதுவிடிய இன் னும் ஒரு மணி நேரமிருந்தது.

காவல் காரன் ஒரு தந்தியைக் கொண்டு வந்து அந்தோனி யிடம் கொடுத்தான்.

ஹைகமிஷனர் கிருஷ்ணமேனன் எழுதியிருந்தார்– "உடனே வாருங்கள். நீங்கள் இங்கே இருப்பது மிகவும் அவசியம்."

அந்தோனி தந்தியைப் பீட்டரிடம் கொடுத்தான். பீட்டர் அதைப் படித்துவிட்டுக் கேட்டான், "எப்போ புறப்படப்போறே?"

அந்தோனி சற்று யோசித்துவிட்டுச் சொன்னான், "காலை யிலேயே கிளம்பிடறேன், காரிலே திருவனந்புரம் போய் அங்கேயிருந்து பிளேன்லே சென்னை, சென்னையிலே லண்ட னுக்குப் பிளேன் பிடிச்சுக்கறேன்..."

"நல்லது, போ" என்றான் பீட்டர். அவன் மனதில் வேறு ஏதோ நினைவு...

☆ ☆ ☆

சிஸ்டர் சோபியா இரண்டு நாட்கள் கடற்கரையில் வடக்கி லிருந்து தெற்கு வரை பீட்டரைத் தேடினாள். அவனைக்

காணோம். அவளிடமிருந்து கடிதத்தை எடுத்துக் கொண்டு ஹோர்த்தீவுக்குச் சென்ற பையனும் அங்கு பீட்டரைக் காணாமல் திரும்பி வந்துவிட்டான். அவனுக்காக ஏங்கிக் கொண்டிருந்தாள் சோபியா.

இரண்டு நாட்களுக்கு முன் அதிகாலையில் அவள் ஒரு கனவு கண்டாள்—அவளுடைய மார்பில் பால் குடித்துக் கொண்டிருக்கிறது ஒரு குழந்தை. அந்த மகிழ்ச்சியின் போதையில் மெய்மறந்திருக்கிறாள் அவள். திடீரென்று குழந்தை பால் குடிப்பதை நிறுத்திவிட்டாற்போன்ற உணர்வு. தூக்கத்திலேயே திடுக்கென்றிருந்தது அவளுக்கு. அவள் குழந்தையைத் தூக்கிப்பார்க்கிறாள். குழந்தையின் உயிர் போய்விட்டது. அவள் அழத் தொடங்குகிறாள்....

அந்த அழுகையின் ஒலியிலேயே அவளது உறக்கம் கலைந்துவிட்டது. சீ, சீ, என்ன வெட்கக்கேடு!... அந்தக் குழந்தையின் முகம் பீட்டரின் முகத்தை உரித்து வைத்தாற் போலிருந்தது.

அது முதல் பீட்டரைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருந்தாள் அவள்.

கடைசியில் அலங்காரத்திட்டின் மேட்டில் அவனைக் கண்டுபிடித்தாள். வடக்குப்புற மீனவச்சேரியைத் தாண்டி அலங்காரத் திட்டு. கடலிலிருந்து முத்தெடுக்கப்பட்ட காலத்தில் இங்கு தான் முத்துச் சந்தை கூடும். இப்போது இது வெறும் பொட்டல்.

மணல் மேட்டில் கடலைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான் பீட்டர். மாலை வெயிலின் கடைசிக்கதிர்கள் அவன் மேல் விழுந்தன. சற்றும் அசையாமல் தியானத்திலாழ்ந்தவன் போல் நின்றான் பீட்டர். அவனுடைய அடர்த்தியான தலை முடியைக் கடற்காற்று அளைந்து கொண்டிருந்தது.

சோபியா அவனுக்குப் பின்னால் போய்ச் சற்று நேரம் நின்றாள். அப்போது; அவன் அசையவில்லை, பிறகு அவள் அவனருகில்போய் நின்று "நான் வந்துட்டேன்" என்றாள்.

அவன் அவள் பக்கம் திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் ஜீவனில்லை.

"மைக்கேல் இல்லை, சோபியா".

"தெரியும்.... ஆஞ்செலாகிட்டே எல்லா விஷயமும் கேள்விப்பட்டேன். அவங்க நீன்னு நினைச்சு மைக்கேலைத் தவறுதலா..."

"ஆமா..."

"நீ அவங்களைப் பழிவாங்கமாட்டாயா?"

"நிச்சயம் பழிவாங்குவேன்!"

"அப்படீன்னா இதை வச்சுக்க..." சோபியா தன் உடைக்குள்ளிருந்து ஒரு ரிவால்வரை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

இப்போது இருட்டிவிட்டது. கடல் சோகமாயிருக்கிறது. அலங்காரத்திட்டின் கரையில் அலைகள் மோதும் ஒலி. இடையிடையே மேகத்தின் உறுமல்போல் காற்றின் அரவம். இருவரும் அருகருகே அமர்ந்திருந்தனர். சோபியா தன் மென்மையான கைகளால் பீட்டரின் தழும்பேறிய முரட்டுக் கைகளைப் பிடித்துக் கொண்டு தடவிக் கொடுத்தாள்.

"நீ ரொம்ப காலமா என்னை உனக்குத் துணைவியாக வரச் சொல்லிக்கிட்டிருக்கே. நான் அப்போ அதுக்குத்தயாராயில்லே. பலவிதமான பயம், வெட்கம், இன்னும் என்னென்னவோ... இன்னிக்கு நான் தயார்! நான் உன்கிட்டே வந்துட்டேன்!....

ஒளியிழந்த பீட்டரின் கண்களில் சட்டென்று ஒளி பிறந்தது.

"என்னை ஏத்துக்க... என் முக்காட்டை அவிழ்த்தெறி என்னை மறைச்சிருக்கற எல்லாப் போர்வைகளையும் எடுத்துடு. இதெல்லாம் போட்டுக்கிட்டிருக்க எனக்குப் பிடிக்கலே. எல்லாத்தையும் எடுத்தெறிஞ்சுட்டு நீ என்னை ஏத்துக்க... உனக்கு என்ன இஷ்டமோ அதைச் செய்..."

பீட்டர் மெதுவாக சோபியாவின் கைகளை எடுத்துத் தன் நெஞ்சின்மேல் வைத்துக் கொண்டான்—ஆசிரியர் தன் வீணையை எடுத்து வைத்துக் கொள்வாரே, அது போல.

இரவின் முதல் யாமம். வானத்தில் வைரங்களும் மாணிக்கங்களும் சிதறிக்கிடந்தன. மையைக் கரைத்த மாதிரி கறுத்திருந்தது கடல் நீர். கரையோரத்தில் நீளக்கோடாக நக்டலூகா எனப்படும் ஜந்துக்களின் மங்கிய ஒளி. பக்கத்துப் புதரிலிருந்து ஒநாயின் ஊளை. இருவரும் தங்களை மறந்திருந்தனர்.

தீடீரென்று பீட்டர் எழுந்து கொண்டு ரிவால்வரை சோபியாவிடம் திருப்பிக் கொடுத்தான்— "இது உன்கிட்டேயே இருக்கட்டும். நீ எங்கேயும் போகாதே. நான் திரும்பிவர வரையிலே இங்கேயேஉட்கார்ந்திரு..."

"திரும்பி வரலேன்னா?... நீ திரும்பிவரலேன்னா நான் என்ன செய்யணும்?..." சோபியா வந்த அழுகையை அடக்கிக் கொண்டுகேட்டாள்.

"நான் திரும்பிவரலேன்னா, பிடிபட்டுட்டேன்னு அர்த்தம். அப்போ பழிவாங்கற பொறுப்பு உன்னுடையது..."

பீட்டர் இருளில் மறைந்தான்.

இரண்டு நாட்கள் கழித்து லண்டனில் ஹைகமிஷனர் அலுவலகத்தில் இடைவேளையில் அந்தோனி அப்போதுதான்

வந்திருந்த ''இந்து'' பத்திரிகையைப் பிரித்துப் படித்தான். கண்ணில்பட்டது. 'தூத்துக்குடியில் இரட்டைக் கொலை' என்ற தலைப்பு. அதன் கீழே எழுதியிருந்தது– ''தூத்துக்குடி மீன் பறவ சமூகத்தலைவர்களும் தொழிலதிபர்களுமான சுஸான் கார்தோஸாவும் பேனி மிராண்டாவும் கார்தோஸா கம்பெனியின் விருந்தினர் இல்லத்தில் கொலையுண்டு கிடந்தனர். அவர்களுடைய கழுத்துத் திருகப்பட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். கொலைகாரன் காலுறைகளும் கையுறைகளும் அணிந்து கொண்டு பின் புறக்கதவு வழியே நுழைந்திருக்கிறான். அவன் எந்தத் தடயமும் விட்டுச் செல்லவில்லை. போலீஸ் நாயால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை...''

படிக்கும்போது மூச்சு முட்டியது அந்தோனிக்கு. படித்து முடித்ததும் நிம்மதியாக மூச்சுவிட்டான் அவன். சபாஷ், பீட்டர் கடைசியில் பழிவாங்கிவிட்டான்!

பீட்டருக்காக அவன் மனம் ஏங்கியது. அவனுள்ளத்தில் ஏதோ உறுத்தல்– ''என்னால் முடியவில்லை. உன்னால் முடிந்தது... உன்னால்தான் முடியும்!...''

Printed at Beauty Print, 10/8020 Multani Dhanda, Paharganj, New Delhi-55